கழக வெளியீடு: ௮௨௧

பவணந்தி முனிவர் செய்த

# நன்னூல் மூலமும்

சங்கர நமச்சிவாயப் புலவர் இயற்றி
சிவஞானமுனிவர் திருத்திய

## விருத்தியுரையும்

கழகப் புலவர்குழுவினரால்
திருத்தி ஒழுங்கு செய்யப்பெற்றன.

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

செந்தமிழியற்கை சிவணிய நம் நாட்டில் தோன்றிய இலக்கண நூல்கள் பல. அவற்றுள் காலக்கோட்பாட்டால் வீழ்ந்தன சில; காணாதன பல. வீழா ஞாயிறென அன்றும் இன்றும் என்றும் மிளிர்வது தொல்காப்பியமென்னும் ஒல்காப் பெருநூல். அதன் அடியொற்றி எழுந்த நூல்களில் சிறந்தவொன்று, நன்னூலெனப் பெயரிய இந்நூல். இது, நுண்கருத்துக்களையும் காலத்துக்கேற்ற சொற்களையும் விதிகளையும் பிறநல்ல அமைப்பு முறைகளையும் கொண்டு திகழ்வதால், தமிழுலகில் முதற்கண் நூற்பயிற்சி செய்வார்க்கு அரிய வழிகாட்டியாகத் திகழுவதாகும்.

இச்சிறிய நூலுக்கு உரைவகுத்தார் பலர்; அவருள் சிறந்தவர், மயிலைநாதர், சங்கரநமச்சிவாயப் புலவர், இராமாநுசக்கவிராயர், விசாகப்பெருமாளையர் என்னும் நால்வராவர். ஆசிரியநிகண்டியற்றிய ஆண்டிப்புலவர் என்பவரும் இதற்கு உரைசெய்திருந்ததாக அறிஞர் கூறுவர். அவ்வுரை கிடைத்திலது.

நன்னூல் உரைகளில் சிறந்த கருத்தமைதி கொண்ட உரை, நெல்லை சங்கரநமச்சிவாயப் புலவர் இயற்றிய இவ் விருத்தியுரையாகும். இதன் சிறப்புக்கருதி முற்காலத்துச் சைவசமயத் தலைமணியாக விளங்கிய மாதவச் சிவஞான முனிவரிடம் மாணவர்களும் புலவர்களும் இவ்வுரையை நனகு திருத்தியமைத்துத் தரவேண்டுமென்று கேட்டுக் கொண்ட வேண்டுகோட்கிணங்கி, இவ் விருத்தியுரையை நன்கு திருத்தியும், இடையிடையே தம் அரிய கருத்தைத் தனியாக அமைத்தும் சங்கரநமச்சிவாயர் உரைகளுக்கு இடையே பாலொடு தேன்கலந்தாலொப்பத் தம் நுண் கருத்துரைகளை வழங்கியும் ஆக்கி உதவினர்.

பல்வகை வெளியீட்டகங்களிலிருந்து முன் வெளிப் போந்த பதிப்புக்களில் சிவஞானமுனிவர் உரை இது, சங்கரநமச்சிவாயர் உரை இது வெனக் காண்டற்கியலாது ஒன்றுபட்டு விரவிக்கிடந்தன. சிவஞானமுனிவர் உரை

இன்றிச் சங்கரநமச்சிவாயர் உரையைமட்டும் கொண்டு பதித்து வெளிவந்துள்ள டாக்டர், உயர்திரு. உ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பினை வைத்துக்கொண்டு ஏனைய பதிப்புக்களையும் ஒப்புநோக்குவார்க்கு இது, தெற்றெனப் புலனாகும். ஆகவே, தனியே 'சிவஞானமுனிவர் விளக்க'மெனத் தலைப்புக்கொடுத்து உரையை விளங்கச் செய்தும், இத்தலைப்பில்லாத பகுதிகளைச் சங்கரநமச்சிவாயர் உரையென்பதை உய்த்துணர்தற்கு வாய்ப்பாகத் தலைப்பில்லா தமைத்தும் இருக்கின்றோம்.

அன்றியும் கற்கும் மாணவர்க்கும் பிறர்க்கும் தெளிவு கொள்ளற்பொருட்டாக நூற்பாக்களுக்கு இயற்கையான புணர்ப்புக்களைப் பிரித்தும், அவ்வந் நூற்பாக்கள் இன்னவற்றை விளக்குகின்றன என்பதைப் படித்தறிதற்கு முன்னரே அறிந்துகோடற்கு ஏற்றனவாகத் தலைப்புக்கள் கொடுத்தும், எடுத்துக்காட்டுக்களுக்கு வரும் செய்யுட்களுக்கும். சொற்றொடர்களுக்கும் இன்ன நூலில் உள்ளன வென்று அடிக்குறிப்பு அமைத்து விளக்கியும் உள்ளோம்.

இதில், நூலாசிரியரான பவணந்திமுனிவர் வரலாறு, உரையாசிரியரான சங்கரநமச்சிவாயப் புலவர் வரலாறு, இவ்வுரையைத் திருத்தியும் புதுக்கியும் செம்மைசெய்த மாதவச் சிவஞானமுனிவர் வரலாறு, மேற்கோள்விளக்க நூல்களின் அகரவரிசை, அருஞ்சொற்பொருள் அகரவரிசை, அருந்தொடர் அகரவரிசை, வினாக்கள் முதலிய இன்றியமையாதவைகளையும் எழுதிச் சேர்த்துள்ளோம்.

இவ்வாறமைத்து மொழிவளர்ச்சி ஒன்றே கருதிக் கையடக்கமாக இதனை நல்ல தாளில் அச்சிட்டு அழகிய கட்டடஞ்செய்து, தமிழுலகில் வெளியிட்டுள்ளோம்; கற்போரும், புலமையாளரும், ஆராய்ச்சியாளரும் வாங்கிக் கற்று மொழித்திறத்தின் முதன்மையறிந்த பேரறிஞர்களாகத் திகழ்வார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# அணிந்துரை

[கழகப்புலவர், செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமிபிள்ளை]

**தோற்றுவாய் :**

கனியினும் கட்டிபட்ட கரும்பினும் நனி சுவையுடையது நம் தமிழ்மொழி; அது காலத்தால் முற்பட்டது; மெல்லிய இனிய சொற்குழுமமுடையது; இனியது; நறுவியது; கேட்பினும் கருதினும் படிப்பினும் உள்ளமுருக்கும் உயர் பண்புடையது; இலக்கண இலக்கியப் பெருக்கமிக்கது; இப் பண்பு மேம்பாட்டினால் என்றும் மாறா இளமையும் வளமையும் செழுமையும் வாய்ந்தது, எந்தமிழ் மொழி. இம்மொழித் திறத்தின் முட்டறுத்து, செந்தமிழாகச் சிறந்தொளிர வழி கோலிய வெழுந்த இயல் நூல்கள் பல.

அவற்றுள் காலத்தால் முற்பட்டது, அகத்தியனாரால் யாக்கப்பட்ட அகத்தியம் எனனும் இயல் நூல் என்ப. அது, காலக் கோட்பாட்டால் வழக்கு வீழ்ந்து அருகி மாள்கிற்று; ஆங்காங்கே, சிற்சில நூற்பாக்கள் கிடைத்துள்ளன அன்றி, முறையோடு பயிலற்கேற்ற ஒருங்கமைந்த கோவைப்படக் கிடைக்கவில்லை. ஆகவே, அதன்பின் வழி நூலாகத் தமிழ் மொழி, கலை, தமிழர் நாகரிகம், அகப்புற ஒழுகலாறுகள்யாவற்றையும் ஒருங்கே முற்றமுடிய எடுத்து விளக்கும் முழு வைரமணிப் பேழையாக இலகுறுவது, ஒல்காப்பெருமைத் தொல்காப்பிய இயல்நூ லொன்றேயாம். இதன் கூரிய சீரிய கருத்துக்கள் அஃகி ஆன்றவிந்த கொள்கை நுண்மாண் நுழைபுலத்தார்க்கன்றி ஏனையோர்க்கு அரிதினும் அரிதாம. இதனைத் தொல்காப்பியர்க்குப் பின் தோன்றிய அலகிலாலறிவிற் புலமையாளர் நன்குணர்ந்தவர். உணர்ந்த குறிக்கோளாகப் பலப்பல இயல் நூல்களும வகுத்தமைத்தனர்.

அவைகளுள் நேமிநாதம், இலக்கணவிளக்கம், வீரசோழியம முதலிய ஐந்திலக்கணங்களை விளக்கும் நூல்

களும்: அகப்பொருள் விளக்கம், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற அகப்பொருள், புறப்பொருள்களாகிய 'பொருள்' ஒன்றையே விளக்கும் நூல்களும்; மாறனலங்காரம், தண்டியலங்காரம் போன்ற 'அணி' ஒன்றையே விளக்கும் நூல்களும், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை போன்ற 'யாப்பு' ஒன்றையே விதந்தெடுத்தோதும் நூல்களும் தொல்காப்பியம் போன்ற பெரும் இயல்நூலுக்கு விரிவுரை போன்று வகுத்தும் தொகுத்தும் மிகப் பலபட விரித்துக் கூறும் நூல்களேயாம்.

இவ்வாறு வகுத்தும் தொகுத்தும் எளிமையும் புதுமையும் ஒருசேர அமைக்கப்பட்டதே நன்னூலெனப் பெயரிய இந் நூல்.

இஃது இயற்றியோர் யார்? இதைச் செய்வித்தோர் எவர்? ஏன் இஃதாக்கப்பட்டது? என்று கேட்டு அதற்கு விடை காண விழைவது ஒவ்வொரு அறிஞர்களின் இயற்கையாகும். அவற்றை நாம் அகப்புறச் சான்று கொண்டு ஒருவாறு காண்பதே சால்பு.

**ஆசிரியர், பவணந்தி முனிவர்**

இந் நன்னூலை இவ்விருலகத்துக்கு இன்னுயிர்போல நனிசீர்மை கொண்டு ஆக்கி நன்னூற்பெயரின் வகுத்தவர், பல்கலைக் குரிசில் பவணந்தி முனிவர் என்னும் பண்பினராவர். இப்பெயர், 'பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி என்னும் நாமத்து இருந்தவத்தோன்' என்னும் இந்நூற் பாயிரத்தால் அறியக் கிடக்கின்றது.

இவர் இருந்த காலம், இற்றைக்கு ஏறக்குறைய எழுநூறு ஆண்டுகட்கு முற்பட்டதென ஆராய்ச்சி வழி கொண்டு அறிஞர்கள் கருதுகின்றனர். அஃதெற்றாற் பெறுதுமெனின்? சீயகங்கனே இந்நூல் செய்தற்குக் காரணமாக இருந்தான் ஆகலான், அவன் காலத்தைக் கொண்டு காண அமைகின்றது.

இந் நூலாசிரியரான பவணந்தியார் சமண் சமயத்தைச் சார்ந்தவராவர் இந்நூல் எழுத்ததிகாரக் கடவுள்

வணக்கத்திலும சொல்லதிகாரக் கடவுள வணக்கத்திலும் இவர் முறையே, 'பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த நான்முகன்' என்றும, 'முச்சக நிழற்று முழுமதி முக்குடை அச்சுதன்' என்றும் குறித்தலானும், மொழிக்கு முதற் காரணம் அணுத்திரள் எனனும் கொள்கையானும், உயிர் களை ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிர் ஈறுகக் கூறியிருக்கும் முறையானும், பவணந்தி எனனும பெயரானும் இவர் சமண சமயத்தாரேயாமெனக் கொள்க. இவர் துறவற நெறி ஒழுக்கில் நின்ற பெரியாரென்பது, 'பவணந்தி என் னும் நாமத்து இருந்தவத்தோனே' என்னும சிறபபுப்பாயிர ஈற்றடியால் அறியலாம். அன்றியும சமண சமயத்தில் துற வறம பூண்டோர் நந்தி என்றே வழங்கப் பெறுவர். அச்ச ணந்தி, வச்சணந்தி முதலிய பெயர்வழக்குகளைக் கொண்டு தெளிவுற அறியலாம். இவர் தன்மையை, இவர்கட்கு இப்பெயர்கள வழங்குவதைப் பரசமய கோளரியாக இலங் கிய ஆளுடைய பிளளையார் தாம் அருளிய தேவாரத் திரு மறையில்,

[1] 'கனகநந்தியும் புட்பநந்தியும் பவணநந்தியும் குமணமா
சுனகநந்தியும் குனகநந்தியும் திவணநந்தியும் மொழிகொளா
அனகநந்தியர் மதுவொழிந்தவ மேதவம்புரி வோமெனும்
சினகருக்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே.'

என, அருளியவாற்றான் இவ்வழக்குண்மை காண்க.

இவர் பிறந்திருந்த நகர் சனகாபுரம எனவும், தந்தை யார் பெயர் சன்மதி முனிவர் எனவும் இந்நூற சிறப்புப பாயிரச் செய்யுளடிகள உணர்த்துகின்றன. 'பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள் பன்னருஞ் சிறப்பிற் பவ ணந்தி' என்பது காண்க.

ஆகவே, சன்மதி முனிவர் வாழ்ந்திருந்த இடம் சனகை யெனத் தெரிகின்றது. இதனை இந்நூல் உரையாசிரிய ருள் ஒருவரான மயிலைநாதர் தம் உரையில் சனநாதபுரம எனக் கூறுகின்றார். இதனைச் சனகாபுரம் எனவும் வழங்கு

1. திருஞானசம், தேவாரம், பதிகம்: ௨௬௭: ௬.

வர். சன்மதி முனிவரே யல்லாமல் அவர்தம் புதல்வரான இந் நூலாசிரியருடைய ஊரும் அவரைப் பாராட்டி இந் நூலை ஆக்கஊக்குவித்தசீயகங்கன் ஊரும் இச் சனகையே யென்பது பின் வருகின்ற சதகச் செய்யுட்களால் தெரிகின்றது. இவ்வூர் யாண்டுளது? எம்மண்டிலத்தைச் சார்ந்த தென்பது தெற்றெனா அறிதற்கில்லை. தொண்டைமண்டல சதகத்தார் தொண்டைமண்டலத்தது என்கின்றூர்; கொங்குமண்டல சதகத்தார் கொங்குமண்டலத்தது என்கின்றூர். தொண்டைமண்டிலத்தில் வேலூர் மாவட்டத்தைச் சேர்ந்த அரக்கோணம் வட்டத்தில் சோளசிங்கபுரம் என்னும் ஊரினை யடுத்துச் சனகாபுரம் எனப் பெயரிய ஓர் ஊர் உளது. தொண்டை மண்டிலத்தைச் சார்ந்த காஞ்சிபுரத்தினும் திருவல்லத்தினும் பவணந்தி முனிவரை இந் நூலைச் செய்துதர வேண்டிய சீயகங்கனைக் குறித்தும் அவன் மனையாளான அரியபிள்ளை யென்பாளைக் குறித்தும் கல்வெட்டுகள் உள்ளன,[1]

தொண்டை மண்டலச் சதகச் செய்யுளில்.

'தன்னூர்ச் சனகையிற் சன்மதி மாமுனி தந்தமைந்தன்
நன்னூல் உரைத்த பவணந்தி மாமுனி நற்பதியும்
சின்னூல் உரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்
மன்னா புரத்திரு அன்னமின் னேதொண்டை மண்டலமே.'

என்பதால், சனகாபுரமே இவர் வாழ்ந்திருந்த ஊரென்பதும், இவர் தந்தை சன்மதி மாமுனிவர் என்பதும் நன்கு புலனுகின்றது. இவ்வாறிருப்ப, சன்முதி முனிவர் இவருக்கு ஆசிரியர் எனவும், ஆசிரியரை அறிவுத் தந்தை யென்றும், மாணுக்கரை அறிவுப் புதல்வர் என்றும் வழங்கும் வழக்கினுல், இவர், 'சன்மதி மாமுனி தந்த மைந்தன்' எனக்

---

1. ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு முப்பத்து நாலாவது அமராபரண சீயகங்கனம்பிராட்டியான '**அரிய பிள்ளை**' திருவல்லமுடைய நாயனுர்க்கு வைத்த சந்திவிளக்கு ஒன்றும் நாச்சியார்க்கு வைத்த சந்திவிளக்கு ஒன்றும் இவ் விளக்கு இரண்டுக்கும் ........South Indian Inscriptions, Vol. III Part 1. Pages, 122-123.

கூறப் பெற்றனர் என்றும் சிலர் கூறுவர். அது பொருந் தாமை, 'சன்மதி மாமுனி தந்த மைந்தன' என்ற சொற் றொடரே விளக்குதல் காண்க. மாணுக்கனைத், 'தந்த மைந்தன்' என்று கூறுவது சான்றோர் வழக்குக்கு ஒவ் வாமையும் அறிக.

இஃது இவ்வாறு கூறக் கொங்குமண்டல சதகச் செய்யுள் கூறுவதாவது:

'கங்கக் குருசில் உவக்கநன் னூலைக் கனிந்துபுகல்
துங்கப் புலமைப் பவணந்தி மாமுனி தோன்றிவளர்
கொங்கிற் குறும்பு தனிலாதி நாத குருவிளங்கு
மங்குற் பொழிற்சன காபுர மும்கொங்கு மண்டலமே.'

என்பதாம். கொங்குமண்டலம் என்பது பவணந்தி முனி வரைப் பாராட்டிய சீயகங்கனது கங்க நாட்டுக்கு அண்மை யது; அது அவனது ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. கொங்குமண்டிலத்தில் உள்ள நாடுகளில் ஒன்ருய குறும்பு என்னும் நாட்டில் சனகாபுரம் என்னும் ஊர் ஒன்றுளது. அஃது, இக்காலத்தே சீனபுரமென வழங்குகின்றது. இதில் சமணக்கோயில் ஒன்றுமுளது. ஆகவே, அங் குளதே இச் சனகாபுரம் எனக் குறிக்கின்றது. எனவே, இச் சனகாபுரம் இருமண்டிலத்துக்கும் சார்ந்த ஒன்ருமோ என, ஐயுறக் கிடக்கின்றது. அறிஞர் ஆய்ந்து முடிபு கொள்க.

**சீயகங்கன்:**

இந்நூலைச் செய்வித்தோனுகிய சீயகங்கன் என்பான், கங்கர் குடித்தோன்றல்; மூன்ருங் குலோத்துங்க சோழன் ஆட்சிக்குக் கீழ் அடங்கி வாழ்ந்தவன்; வீர மேம்பாடுடைய வன்; அருங்கலை வாணன்; அமர் அணி பூண்டோன்; இவன் மரபினரை, [1]'நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி, துன்னரும் கடுந்திறல் கங்கன் கட்டி' என, அகத்தினும், [2]'கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர், பங்களர் கங்கர்

1. அகம்: சசு. 2. சிலப். உ௫: க௫௬-எ.

பல்வேறு கட்டியர்' எனச் சிலப்பதிகாரத்தினும் ஆன்றோர் கூறுவர். இவரைக் கங்கன், கங்கர் என ஒருமையினும் பன்மையினும் குறித்தலான், கங்கர் என்பார் ஒரு மரபினர் விரமிக்க குடியினராக இருந்தது பெறப்படும். அகநானூற்று(சச) விளக்கவுரையில், 'நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை என்போர் சேரன் படைத்தலைவர்கள்' எனக் குறிப்பர், நாட்டாரவர்களும், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளையவர்களும்; கங்கர், கட்டியர் என்பவற்றிற்கு 'தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு சிற்றரசர் மரபினர்' எனக் குறிப்பர், டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள்.

ஆகவே, இக் கங்கர் மரபினர், வீரக்குடியின ரெனபதும் சிற்றரசர் என்பதும் தெளியப் பெறும். இக் குடியிற் பிறந்த ஒருவனைத் 'துன்னருங் கடுந்திறல் கங்கன்' எனக் குறித்தலாலும், இவனை 'அமரா பரணன் எனச் சுட்டுதலாலும் இவர்கள் மரபு மேம்பாடு விளங்கும். கங்கம் என்பது, ஒரு நாட்டின் பெயராகவும் வழங்கப் பெறும். "கங்கர் இவர் ஐயகரு நாடர் இவர் ஐய' என்றவிடத்து நாடென்பது அறிக. ஆகலான், இவன் கங்க நாட்டுக்குரியவனாகவும் கொள்ளலாம்.

கங்கநாடு சைனாசாரியர் ஒருவரால் நாட்டப்பட்டதென்பர். கங்கர்குடி வழியினர் பலர், சைனசமயத்தைத் தழுவி யொழுகின ரெனவும் கூறுவர். சீயகங்கனைக் குறிக்கும் கல்வெட்டுக்கள் பல, அவனை, ஸ்ரீமத் குவளாலபரமேச்சுவரன்' என்றும், 'கங்ககுலோற்பவன்' என்றும், 'அமராபரணன்' என்றும் புகழ்ந்து கூறுகின்றன. கி. பி. கஉ0நு-இல் செதுக்கிய கல் வெட்டு ஒன்றில், இவனுக்குத், 'திருவேகம்பமுடையார்'னென்றும் ஒரு பெயருண்டென்பது தெரிகின்றது. குவளாலபுரம் என்னும் நகர், தற்காலம் மைசூர் மாநிலத்திலுள்ள கோலார் என, அறியக் கிடக்கின்றது இது, வடமொழியில் கோலாகலபுரமெனக் கூறப்படுகின்றது.

---

1. திருவிளை, மெய்க்காட்டிட்ட: கூ0.

நூற்சிறப்பு :

இந்நூல், சூத்திரமென வழங்கும் நூற்பாக்களால் இயன்றது. இது, முன்னோர் நூலின வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன் என இந்நூற் சிறப்புப் பாயிரத்தே கூறப்படுதலால் இது முதனூலின் பாற்படாது, வழி நூலாமெனக் கொள்க. இது, தொல்காப்பியத்துக்குப பின் தோன்றிய இயல்நூல்கள் ஏனையவற்றையும காட்டில், சிறந்ததாக அமைந்துள்ளது; இதன் சிறப்புக்கு நாட்டில், தொல்காப்பியங் கற்பவர் இந்நூல் தோன்றிய காலமுதல் இற்றைநாள்வரை முதற்கண் இதனைப் பயிலும் பெருமை பெற்று நிற்றலொன்றுமே சாலும்.

பல்கலைத் தேர்ச்சிப் பண்பறி புலவரான பவணந்தி முனிவர், இந்நூலை ஆக்குங்காலத்து எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் ஐவகை இலக்கணத்தை யும் ஒருங்கே அமைத்தனராவர். இதனை இந் நூற்பாயிரச் செய்யுளில் 'அரும்பொருள் ஐந்தையும் யாவரும் உணரத் தொகைவகை விரியில்..........நன்னூற் பெயரின் வகுத்த னன்' என்றமையால் அறியலாம். ஆனால் அவர் இயற் றிய காலத்தில் இந்நூல் முழுதும் இருந்து பின்னர் ஏதோ காரணத்தால் சிதைந்து அழிந்துபோய் இப்போதுள்ள எழுத்தும் சொல்லும் ஆகிய இரண்டுமே கிடைத்திருக்க லாம். ஆதலால், இற்றைநாள் நமக்கு நன்னூலில் கிட்டி யிருப்பன இவ்விரண்டிலக்கணமுமேயாம்.

இந்நூலின் நூற்பாக்கள் யாவும் பவணந்தி முனிவரா லேயே ஆக்கப்பட்டனவல்ல. தானெடுத்து மொழிதலாக இடையிடையே தொல்காப்பியம் முதலிய பழைய நூல்களி லிருந்து இன்றியமையாத இடங்களில் சில நூற்பாக்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இதிலுள்ள பொதுப்பாயிர நூற் பாக்கள் இறையனாரகப்பொருட் பாயிரத்திலும் தொல்காப் பியப பாயிரத்திலும் வேறுபாடுடனும வேறுபாடின்றியும் நூற்பா வடிவினும் உரைநடை வடிவினும் காணப்படு கின்றன. அவற்றுள் (எ, கசு, கஎ) ஆகிய மூன்று நூற்

பாக்கள் தொல்காப்பியமாகும். க0-முதல் கச-வரையுள்ள நூற்பாக்கள் பாடலனார்[1] ஆக்கியன.

'பூமலி அசோகின்' என்று தொடங்குவது முதலாக நூலில் வரும் நூற்பாக்கள் பவணந்தி முனிவரால் ஆக்கப் பட்டனவாகும். அவற்றுள்ளும் (கூ0, உ௫உ, ௩௧௭, ௩௯௯, ௪0௪, ௪0௮, ௪௩௯) ஆகிய ஏழு நூற்பாக்களும் தொல்காப் பியத்திலிருந்து எடுத்தாளப் பெற்றவையாகும்.

இந் நன்னூலை எழுத்ததிகார மெனவும் சொல்லதி காரமெனவும் இருவகையாகப பகுத்து, அவற்றுள், எழுத்தை முதல் சார்பு எனத் தொல்காப்பியர் வகுத்த வாறே வகுத்தும், அவற்றின் எழுத்தின் அகத்திலக்கண மாக எண், பெயர், முறை, பிறப்பு, உருவம், மாத்திரை, முதல்நிலை, ஈற்றுநிலை, இடைநிலை, போலி, பதம், புணர்பு எனப் பன்னிருவகையாகப் பகுத்தும் எண் முதல் போலி வரையுள்ள பத்து வகைகளையும் ஓரியலாக எழுத்தியல் என வகுத்து அமைத்தும், புறத்திலக்கணமாகப் பதம் என்பதை ஓரியலாகப் பதவியலென வகுத்தமைத்தும், புணர்பு என்பதை உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபு புணரியல் என முப்பகுப்பாக்கி வகுத்து அமைத்தும் எழுத்திலக்கணத்தைக்கூறி முற்றுவித்திருப் பதும், தொல்காப்பியர் எழுத்திலக்கணத்தை ஒன்பது இயல்களாக வகுத்ததை இதனுள், ஐந்து இயல்களுக்குள் அமையச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலாகிய அழகு பொதுள எடுத்து மொழியப்பட்டுள்ளதும் இதன் சிறப்பை விளக்குவதாகும்.

தொல்காப்பியக் குற்றியலுகரப்புணரியலில் அமைந்த விதிகளை (கஅக)-ஆம் நூற்பா முதலியவற்றினும் தொல் காப்பியச் சொல்லதிகாரத்துள் வேற்றுமையியல், வேற் றுமை மயங்கியல், விளிமரபு ஆகிய மூன்றுக்கும் இந்நூலில் (உகக)-ஆம் நூற்பா முதலியவற்றிலும் அடக்கிக்காட்டி யிருப்பது இந்நூலின் தனிச்சிறப்பாகும். அந் நூலில்

1. யா. கா. ஒழிபியல் : அ- உரை.

நன்கு தெளிவுபடாது கிடக்கும் கால இடைநிலை காலங் காட்டும் விகுதி முதலியவற்றை விரித்துக் கூறி விளக்கி யிருப்பது கற்பார்க்கு விளக்கந் தருவதாகும. வடமொழிச் சொற்கள் தமிழில் பெரும்பகுதி இவர் காலத்தில் வழக் காற்றுக்கு வந்தமையால், அதை விளக்குதற்குத் தனிப் பகுதியாகச் சில நூற்பாக்கள் யாத்தமைத்தும், நட, வா, மடி, சீ, விடு முதலிய வினைப்பகுதிகட்கும், அன், ஆன், அள், ஆள் முதலிய பால் காட்டும விகுதிகட்கும் நூற்பா வாய்பாடு முறையில் அமைந்திருப்பது இந் நூலின் எளி மையைத் தெற்றெனக் காட்டுவதாகும்.

இந் நூற்கண் தொல்காப்பியர் காலத்தில் வழங்கிய சொற்கள் இந் நூற் காலத்து வழக்காறற்றொழிந்து இருப் பதை இறந்தது விலக்கல் என விலக்குதல் செய்தும், வழக்கில் புதிதாக வந்தவற்றை எதிரது போற்றல் ஆகிய உத்திவகையினால் தன்னகத்தே தாங்கியும் இயன்றிருப் பது போற்றற்குரியதாகும். இதன்கண் பதவியல் என ஒன்று அமைந்திருப்பது எதிரது போற்றற்கு எடுத்துக் காட்டாக இருப்பினும் அது தமிழாக்கம பெறற்கு ஏற்ற தன்று. இவர் இவ்வாறுக்கினமையால் இவர்க்குப் பின் வந்தோர் 'ஒன்றே ஆயினும் தமிழ்ச்சொல் உண்டோ?' எனக் கூறி வழுக்கி மயங்க நேர்ந்தது.

பல்வகையானும் நல்வகைகொண்ட இந்நூலின் உட் பொருள்களையும் இதன் பெயரையும் தமமகத்துக்கொண்டு எழுந்த நூல்கள் பல. அவற்றுட் சில.

[1] 'எண்முதலா கப்பகரும் ஈரா றெனும்பருவம்
மண்முதலோர் செய்து வளர்க்குங்கால்.'

[2] 'குறில்வழி லகரம் தனிநிலை ஆயும்
கூடிய தகரமுன் எழுத்தேன்
றறிதுறி வடிவம் திரிதல்போல் நந்தி
அடல்விடை மெய்திரிந் துறினும்
நறுமலர் விழியில் கண்டவர் எல்லாம்
நந்தியே என்றுளம் மகிழ்ந்தார்.'

1. தமிழ்விடு தூது: உ௬. 2. பிரபுலிங்க லீலை, அக்கமா: உ௮.

என்பன, இந்நூற்கருத்துக்களை உள்ளடக்கிக் காட்டுவனவாம்.

[1]'பேரதிகா ரங்களைத்தான் பேணும் திருத்தணிகை
ஊரதிகா ரன்தேர்வந் துற்றிடலும்—காரிகையும்
நன்னூ லிடையயம் நண்ணிப் பணிந்தெழுந்து
முன்னூ லுரையகல மோகித்தாள்—பன்னூலும்
ஓதா துணரும் உயர்புலவீர் மெய்யினுயிர்
போதா திருக்கப் புணர்ப்பதுண்டோ—தாதாரும்
ஆய்தம் குறுகி அரைமாத் திரையினுடல்
தேய்தந்த தென்விதியோ செப்பிடீர்—வாய்தமிழ்சேர்ந்து
ஏறும் உயிரளவாய் ஏய்ந்தஉடல் அவ்வளவும்
மாறி அழிந்த வகைஎன்னே—கூறிடீர்
வல்லினத்துள் ஓரிரண்டு மற்றை மருங்கான
மெல்லினத்துக்கேபகையாய் விட்டதென்னோ-புல்லொருசார்
அல்வழியும் வேற்றுமையே ஆகி மதிமருட்டும்
சொல்வழிவா ராததென்ன சூழ்ச்சியோ—நல்ல
இயற்கைக் குயில்மொழிதான் என்னோ மிகுத்த
செயற்கைக் கொழிபதனைச் செப்பீர்—பயிற்சிபெறு
நேமிநா தத்தால் நிலைதெரியாச் சொற்புணர்ச்சி
காமர்நன்னூற் சூத்திரத்தால் காட்டிடீர்.'

எனவும்,

[2]'சேவியல் ஆர்கொடி யெம்மான் சிராமலைத் தேமலரார்
காவியல் ஆரும் அளிகாள்! நுமக்குக் கழறுவதென்
பாவியல் ஆருநற் காரிகை ஓதியின் பாலமர்ந்து
மேவியல் ஆருநன் னூலிடை ஆயா விதமதென்னே.'

எனவும் வருவன, நூலின்பெயரும், நூலினிடை வரும் பொருள்கள்குறித்த கருத்துக்களும் சிலேடை யுணர்த் தோன்றக் குறித்திருப்பதறிக.

ஏறக்குறைய இருநூறாண்டுகட்கு முன்பிருந்த சாமிநாத தேசிகரென்பார் தாமியற்றிய இலக்கணக்கொத்தென்னும் நூலில்,

---

1. திருத்தணிகை யுலா: 2. சிரகிரிக்கோவை: அ.

[1] 'முன்னோ ரொழியப் பின்னோர் பலரினுள்
நன்னூ லார்தமக் கெந்நூ லாரும்
இணையோ என்னும் துணிவே மன்னுக'

என்று கூறி இந்நூற் சிறப்பை விளக்கிக் காட்டினார்.

இலக்கண விளக்க நூலாசிரியர் தம்முடைய நூற்கண் இந் நன்னூலி லிருந்து ஏறக்குறைய இருநூற்றைம்பது நூற்பாக்கள்வரை ஒரெழுத்துங்கூட மாற்றாமல் எடுத்தாண்டுள்ளனர். ஆசிரியர் சிவஞானமுனிவர், இலக்கண விளக்கத்தை அணுக்கும் மறுப்பாகத் தாம் ஆக்கிய இலக்கண விளக்கச் சூறாவளியில், 'சொற்பல்கச் சூத்திரஞ் செய்தற்கு அஞ்சாதார்க்கு ஈண்டை விதிகளை நன்னூலார்போலச் சாலவும் சொற்சுருங்கச் சூத்திரித்தும்..................சிலவற்றை ஆசிரியர் தொல்காப்பியனார்போலச் சாலவும் சொற்பல்கச் சூத்திரித்தும் ஒருவழிப்பட நில்லாராயினார்' என்றார்.

இற்றை ஞான்றும் நன்னூற் பெருமை உணராத புலவர் எவரும் இரார் என்பது திண்ணமாம். இதனைப் பயிலாதவர், தமிழ்ப் புலவராக மதிக்கப்படுபவரல்லர்; அன்றியும் அவர் எந்நூலையும் பயிலற்கியலாதோரே.

ஆகவே, இந் நன்னூல் தோன்றிய நாள்முதல் இற்றைநாள்வரை தமிழ்கூறு நல்லுலகில் அறிஞர் நாவகத்தும் கையகத்தும் நடமின்றாடும் தொன்னூல், இந் நன்னூலொன்றே யாமெனின், அது மிகையன்று.

இவ் வான்ற பெருமை அறிவு நன்னூலாகிய இதனைப் பயிலாதவர், புத்தகமே சாலத் தொகுத்தும் பொருளறியாரென்பதொருதலை. இது, நம் தமிழ்நாட்டின் வற்றாத வான்பெருஞ் செல்வம்; அறிவுக் கேணி; யாற்றொழுக்கு; அறங்காட்டும் ஆடி; பொருள்பொதிந்த கருவூலம்; அறிவுத் திறவுகோல்; எழுத்தும் சொல்லும் காட்டும் இயற்கைப் பொழில்; இதனைத் துருவி ஆய்ந்து செழுங் கலைச் செல்வர்களாகத் திகழ்வது நம் தமிழ்நாட்டு மக்களின் கடப்பாடாகும்.

---

1. இலக்கணக் கொத்து.

# சங்கரநமச்சிவாயப் புலவர் வரலாறு

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகில் வழக்காறுப் பயிலும் இத் தொன்னூலாகிய நன்னூற்கு உரைகண்ட பெரியார்களில் சிறந்தோர், மயிலை நாதர், சங்கரநமச்சிவாயப் புலவர், இராமாநுசக் கவிராயர், விசாகப்பெருமாள் ஐயர் என்னும் நால்வராவர். ஆசிரிய நிகண்டியற்றிய ஆண்டிப் புலவர் என்பாரும் நன்னூற்கு ஓர் உரை வரைந்திருந்தனரென அறிஞர் கூறுப.

மயிலைநாதரென்பார் சமணர்; இவரே நன்னூற்கு முதல்முதல் உரை செய்தாரெனத் தெரிகின்றது. இதனை பின் பல உரைகள் எழுந்தன. இம் மயிலைநாதர் உரைக்கும் பிற்கால உரைகட்கும் வேறுபாடு பல வுண்டு. இம் மயிலைநாதர் உரையை இவர்க்குப் பிற்பட்ட உரையாசிரியர்கள் யாவரும் மறுத்துள்ளனர். இவருக்குப் பிற்பட்டவரே சங்கரநமச்சிவாயப் புலவராவர்.

**ஊர், மரபு**

போதும பொன்னும் உந்தித் தமிழ்ப்பாட்டிசைக்கும் தரங்கம் திரண்டு உருண்டுவரும பொருநையாறு வற்ரு வளங்கொழிக்கும் தென்னாட்டில் பொன்னாடாக இலகுவது, திருநெல்வேலி; அது பல பேரறிஞர்களைப் பெற்றெடுத்த பேறுபெற்றது. இந் நகரில் தோன்றியவரே நம் சங்கர நமச்சிவாயப் புலவர்; இவர் அந்நகரில் தடிவீரன் கோயில் தெருவில் வாழ்ந்து வந்தார். இவர் மரபு, பாண்டிநாட்டு வேளாளர் மரபு; இவர் சைவசமயத்தைச் சார்ந்தவர்; இவர் இளவல் பெயர் சண்முகம்பிள்ளை; அவர் புராணச் சொற்பொழிவாளராக இருந்தவர்; சங்கர நமச்சிவாயருக்கு முத்துக்குமாரபிள்ளை யென்னும் புதல்வர் ஒருவர் உண்டெனத் தெரிகின்றது.

**பாடங் கேட்டல்**

இச்சங்கரநமச்சிவாயர் நெல்லை ஈசான மடத்தின்கண் இருந்த சாமிநாததேசிகரிடம் தொல்காப்பியம முதலிய இலக்கண நூல்களையும் சங்கமருவிய பத்துப்பாட்டு,

எட்டுத்தொகை நூல்களையும், வடமொழி நூல்களில் சில வற்றையும் ஐயந்திரிபறக் கற்றுத் தெளிந்தார்; அவற் ரோடு தேவாரத் திருமுறைகள், சைவசித்தாந்த நூல்கள், திருவாய்மொழி, கம்பராமாயணம் போன்ற அரிய சமய, இலக்கிய நூல்களினும் இவர் நன்கு பயிற்சிபெற்றிருந்தார்.

சாமிநாததேசிகரே யல்லாமல் இலக்கண விளக்க ஆசிரியரான வைத்தியநாத தேசிகரும் இவர்கள் போன்ற ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்ேறார் பலரும் வீற்றிருந்தனர் அதனால் இப்பேரறிஞர்களுடன் அளவ ளாவி அவர்களுடன்குழுமி நூல்கள் பல ஓதியும் கேட்டும் உரையாடியும் இருக்கும் பேறுற்றார். இச்சிறப்பினால் இந் நூலுக்கு உரைவரையும் ஆற்றல் பெறுவது இவருக்கு எண்மையிற் கைகூடியது.

### இந்நூற்கு உரை

நன்னூல் நூற்பாக்களில் விருப்ப மிக்கவர் இவர்தம் ஆசிரியர் சாமிநாததேசிகர்; அந் நன்னூலுக்கு மயிலை நாதர் செய்த உரை சிறந்ததன்றென்பது அவர் உட் கிடக்கை. ஆகலான், அவர் சங்கரநமச்சிவாயரை நோக்கி 'நன்னூலுக்குச் சிறந்ததோர் உரை நீர் செய்திடுக' என்று கட்டளையிட்டமையானும், 'முத்தமிழ்ப்புலமையும் முறையர சுரிமையும், இத்தலத் தெய்திய இறைமகன்' எனப் பாராட்டுரிமைபெற்ற ஊற்றுமலைக் குறுநிலமன்னர், மருதப்பதேவர் வேண்டுகோளானும் இந்நூலுக்கு நல்ல தொரு புத்துரையை வகுத்தமைப்பாராயினர்.

### உரைச் சிறப்பு

இவர் இந்நூற்கு உரை வகுக்குங்கால் மயிலைநாத ருரையை உட்கொண்டிருப்பினும் அவராற் காண்டற்கரிய அரிய நுண்கருத்துக்கள் இவருரையில் கொள்ளக்கிடக் கின்றன. இவர் அவர் உரையை மறுக்குங்கால் மறுத்தற் குரிய சான்றுகள்கொண்டு நிறுவிக் கற்போர் உளங்கொள் ளச் செய்கின்றார். அன்றியும் 'கூறுவாரு முளர்' என்று குறிப்பரேயன்றி, அவர் பெயர் முதலியவற்றைச் சுட்டிக் காட்டார். இதனால் இவர்தம், அடக்கமும், உயர்குடிப்

பிறப்பின் ஒண்மையும் புலனுதல் அறியலாம். இவர் சொற்பொருள் வரைந்து செல்வதினும், பொருள்களை நுட்பமாகச் சான்றுடன் விளக்குவதினும் உவமைத்திறங் காட்டுதலினும் பிறவற்றினும் சிறந்திருப்பதால் இவருரை மயிலைநாதருரையினும் மாண்புமிக்கதாகும்.

இவர், மயிலைநாதர் எடுத்துக்காட்டுபவற்றை யல்லாது தொல்காப்பிய நூற்பாவுக்கும் நன்னூல் நூற்பாவுக்கும ஆங்காங்கே அமைந்திருக்கும் ஒற்றுமை வேற்றுமைகளைத் திறம்பட எடுத்துக்காட்டுவதோடு, தொல்காப்பிய நூற்பாவையே மேற்கோளாகக் காட்டி உணர்த்துவார்.

உயிரளபெடையைக் குறித்தோ ஒற்றளபெடையைக் குறித்தோ தனித்தனியாகத் தொல்காப்பியர் விளக்கிற்றிலர். பொதுப்படையாக,

[1] 'நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்.'

என்றும்,

[2] 'குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே.'

என்று நூற்பாக் கூறியிருப்ப, நன்னூலார் 'இசை கெடின்........குறியே' (எழுத்தியல்: ௯௬) என்று கூறிய நூற்பாவுக்கு விளக்கங் கூறுங்கால், குறியே யென்பதற்கு 'நெடிலது விகாரமாய் ஓரொலியாய்ப் பிறக்கும் அளபெடையை இரண்டெழுத்துக்கூடி மூன்றுமாத்திரையாயிற்றெனக் கொள்ளின், இரண்டெழுத்தொலி அங்ஙனமின்மையானும், அளபெடை யென்னும் பெயர் ஏலாமையானும் அவ்வாறு கொள்ளாது அறிகுறியே என்று கோடற்குக் குறியே யென்முர்' என்றுகூறி மேற்காட்டியுள்ள தொல்காப்பிய மொழிமரபு நூற்பாவை எடுத்துக்காட்டியிருப்பது இவர்தம் பரந்துபட்ட நுண்மாணுழைபுலச் சால்புக்கு எடுத்துக்காட்டாகும்.

---

1, 2. தொல். எழுத்து. நூன்மரபு, ௬; தொல். எழுத்து. மொழி: ௮.

இந்நூற்குள் வரும் இலக்கணங்கட்கு இவர் பல எடுத்துக்காட்டுகள் திருக்குறளிலிருந்தே காட்டுகின்றார். காட்டாகக், கீழென்னுஞ் சொற்கு விளக்கங் கூறுங்கால், 'கீழிருந்துங் கீழல்லார் கீழல்லவர் என்றாற்போலக் கீழென் பது பண்பாகு பெயராய், இத்தொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாமென்க' எனவும், இந்நூல் எழுத்ததி காரக் கடவுள் வணக்கச் செய்யுட்கு விளக்கங் கூறுங்கால், 'படைப்பு முதலிய ஐந்தொழிற்கு முரிய எல்லாக் கடவு ளாகியும் நின்றான் ஒருவனே என்பார், அருகனை நான்முக னென்றுங் கூறினர். இவ்வாறு வள்ளுவ நாயனாரும்,

[1] 'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்'

என, வரையாது கூறுதல் காண்க' எனவும் வரைதலால் இவர் திருக்குறள் நூலில் மிக்குபயிற்சியும் பற்று முள்ளவராதலை யறியலாம.

இவர், சைவசமய நுண்கலைத் தேர்ச்சிமிக்கா ரென் பதை அறிதற்கு 'இடுகுறி காரணப் பெயர் பொதுச் சிறப் பின' (எழுத்தியல்: எ) என்னும் நூற்பாவிற்கு விளக்கம் கூறுங்கால், இவற்றுள், 'முக்கணன் என்னும் பெயர் ஆனைமுகக் கடவுள் முதலியோர்க்கும் மூன்று கண்ணுள' என்றும், ஆக்கச்சொல்லுக்கு இலக்கணங் கூறுங்கால், 'வேட்டுக்குமரன் தன் பெயர் முட்டை யென்றற்றொடக்கத் தன இடுகுறி ஆக்கந் தொடர்ந்தன' (பெயரியல்: கஎ) என்றும், ஒற்றளபெடைக்கு எடுத்துக்காட்டுரைக்குங்கால் (எழுத்தியல்: ௯எ) சிவபெருமானைக் குறித்து 'இலங்கு வெண் பிறைசூ டீசனடியார்க்கு' என்றும் 'மடங்கலந்த மனனே' என்றும் தொடங்கும் இருகுறள வெண்பாக் களைக் காட்டியிருப்பனவும் நன்கு விளக்குவனவாம்.

பிறபிற இடங்களில் பற்பல நூல்களிலிருந்து செய் யுட்கள் எடுத்துக்காட்டி யிருப்பதும், எடுத்துக்காட்டு களுக்கு விளக்கங் கூறும்போது உவமங்களை யெடுத்துக் கூறுவதும் உரைநடை யாற்றொழுக்கெனத் தட்டுத் தடை

1. திருக்குறள், கஎ௩.

யின்றி இயன்று செல்வதும் இவர் பன்னூற் பயிற்சியில் பல்காலும் தோய்ந்து நுணுகி ஆய்புலம் ஆன்ற அறிஞர் என்பது புலனும்.

இத்தகைய தவலருந்தொல் கேள்வித் தன்மைசான்ற சங்கரநமச்சிவாயப் புலவரையும் அவர்தம் இந் நன்னூலுரையையும் நன்மதிப்புக் கொடுத்து அவர்காலத்து வாழ்ந்த பேரறிஞர் ஒருவர் தந்த உரைப்பாயிரம் பாராட்டுதலை அறிஞர்கள் கண்டறிக.

## உரைச் சிறப்புப்பாயிரம்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

நன்னூலுட் கருத்துலகோர் அறியவுரை
செய்கவென நரேந்திர சிங்கம்
தென்னூற்று மலைமருதப் பன்புகலப்
பொருள் விளங்கச் செய்தான்; பாரில்
எந்நூற்கும் எழுத்தொடுசொற் பொருளறிசங்
கரநமச்சி வாயன் என்னும்
பன்னூற்செந் தமிழ்ப்புலவன் சைவசிகா
மணிநெல்லைப் பதியி னனே.

அகத்தியந்தொல் காப்பியமே முதலியமுன்
நூல்கள்பல ஆய்ந்து முப்பால்
பகுத்ததிரு வள்ளுவரே முதல்ஞான
நூல்களெலாம் பகல்செய் வான்போல்
இகத்திலுரை செயவலசங் கரநமச்சி
வாயனெனும் இயற்பேர் பெற்ற
தகைப்புலவன் நன்னூலுக் குரைவகுத்த
தொருவியப்போ தமிழ்வல் லோரே.

முன்னூற்கும் மலயமுனி தன்னூற்கும்
புவியிடத்து முதியோ ராற்சொல்
எந்நூற்கும் தமிழ்க்கடலுள் இனியயற்றும்
நூற்கும்வகை இதனுல் காட்டி
நன்னூற்கு விரித்துரைசெய் தான்திகாந்
தத்தளவும் நடாத்தும் கீர்த்தித்
தென்னூற்று மலைமருதப் பன்சொலச்சங்
கரநமச்சி வாயன் தானே.

# சிவஞான முனிவர் வரலாறு

நாடுகளில் சிறந்த பெருமையுடைய நாடு, நம் இந்திய நாடு. அவற்றுள்ளும் சிறந்தது, நம் தென்றமிழ் நாடு. அந்நாட்டில் சிறந்த மேன்மை பெற்றது சான்றோர் பலரும் தோன்றிய வான்றோய் செல்வத் திருநெல்வேலித் திருநகர்.

இந் நகருக்கு அணித்தாக அணிசெய்துகொண்டிருக்கும் மலை, பொதியிலாகும்; வெண்துகிலென நுடங்கி இழிதரும் பாலருவி, அம் மலையில் தோன்றிச் செந்நெலும் கன்னலும் தெங்கும் கமுகும் செம்மையுற வளர்த்துப் பயன்தரும் சிறப்பு மிக்கது, பாவநாசத்திருப்பதி; அதையடுத்து விளங்கும் சிற்றூர் விக்கிரமசிங்கபுரம்.

இவ்வூரிடத்தே ஏறக்குறைய இருநூறாண்டுகட்கு முன்னர், அவ்வூரில் ஏழுதலைமுறை வரையும் அருட்புலமை கால்கொள அகத்திய முனிவர்பால் அருள வரம் பெற்ற சைவ வேளாளர் மரபு ஒன்றுண்டு; அம்மரபிலே, சிவபெருமானிடத்தும் அவர்தம் அடியாரிடத்தும் வற்ரு அன்பும் வான்பெருங் கல்வியும மிக்குடைய ஆனந்தக் கூத்தரென்பார் ஒருவர் இருந்தனர்; அவர் மனைத்தக்க மாண்புடை இல்லறக்கிழத்தியார், மயிலம்மையார் என்னும் பெயரினர்; இவர் விருந்துபுறந்தரூஉம்பெருந்தண் வாழ்க்கையர்: தம் கணவர் குறிப்பறிந்தொழுகும் நெறியினர். இத்தகைய இல்லறக்கிழமைபூண்ட இவ் விருவர் செய்த தவப்பயனால், அலகில் பல கலைத்துறை தழைப்ப அருஞ் சைவ நெறி உயர ஒரு நற்புதல்வர் தோன்றினர்.

நன் மகனாராகத் தோன்றிய இவரைக்கண்டு பெற்றோர் பெருமகிழ்பூத்தனர்; சிவாகம முறைப்படி பிறப்புக் குறிப்பு எழுதுதல் முதலிய சடங்குகளைச் செய்தனர். இவர்க்கு முக்களாலிங்கர் எனப் பெயர் சூட்டினர்; இன்புற்றனர்; அன்புடன் பேணி வளர்த்து வந்தனர்; இத்தகைய நன்மகனார்க்கு ஐந்தாம் அகவை நிரம்பிற்று;

மனம் முகிழ்த்த சுருள்நீக்கி மலர்விக்கும் கல்வி கற்கப் பள்ளிக்கு வைத்தனர். முக்களாலிங்கர் நாள்தோறும் பள்ளிக்குத் தவறாது சென்று கல்வி பயின்று வந்தார்; ஒருநாள் பள்ளிக்குச்சென்று கல்வி பயின்றபின் வீட்டுக்குத் திரும்பி வந்தார்; அப்போது காவியுடையணிந்த திருவாவடுதுறை மடத்துத் தம்பிரான்களில் சிலரைக் கண்டார்; பெருமகிழ்கொண்டார்; அவர்கள்பால் சென்றார்; வணங்கினார்; அவர்களை நோக்கி, 'அடிகளே எங்கள் இல்லத்துக்கு எழுந்தருளுதல் வேண்டும்; எங்கள் இல்லில் திருவமுது செய்தருளவேண்டும்,' என இரந்து வேண்டிக் கொண்டார்.

தம்பிரான்கள் இவர் வேண்டுகோட்கு இசைந்தனர்; இவர் வழிகாட்டி முன்செல்லப் பின்தொடர்ந்தனர்; வீடு வந்து சேர்ந்தனர்; அப்போது இவர் தந்தையார் ஆனந்தக்கூத்தர் வெளிச்சென்றிருந்தனர்; உடனே முக்களாலிங்கர் தம் அரும்பெறற் றாயரிடம் சென்றார்; தாம் தம்பிரான்களை அழைத்துவந்ததைக்கூறி அவர்கட்கு உணவளிக்கவேண்டுமெனக் கூறினார்: தம் புதல்வரின் நற்பண்பை வியந்தார்; அவர் வேண்டியவாறே தம்பிரான்களிடம் போந்து, தம் இல்லத்தில் அமுதுண்ணவேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்; உணவமைத்தார்; கடிதில் அமுதுபடைத்தார்; அவர்களும் திருவமுதுண்டனர்; பின்னர் முக்களாலிங்கரிடமும் அம்மையாரிடமும் விடைபெற்று அவ்வூர்க்கண்ணுள்ள திருமடமொன்றில் தங்கியிருந்தனர்.

அதன்பின்னர் ஆனந்தக்கூத்தர்வந்து இச் செய்தி தெரிந்து மகிழ்ந்தார்; தம் புதல்வரை மார்புறத் தழுவி முத்தமிட்டார். அப்பால் தம் புதல்வரோடு தம்பிரான்கள் தங்கியிருக்கும் திருமடத்துக்குச்சென்று அவர்களை வணங்கினார்.

அப்பொழுது முக்களாலிங்கர், தம்பிரான்களுடன் மடத்தில் தங்கி அங்கு மெய்யறிவு நூல்களைக் கற்றுத் துறவறநிலை பெறவேண்டுமென்னும் கருத்தைத் தம்

தந்தையார்க்குக் கூறினர். அவர் தம் புதல்வரைப் பிரிய முதற்கண் தயங்கினாராயினும் தாம் நற்செயலுக்கு உடன் படுதலே நன்றெனக் கருதினர்; தம் புதல்வரைத் தம் பிரான்களிடம் ஒப்படைத்தார்; தம் இல்லத்திற்குச் சென்றார்; தம் மனைவியாரிடம் கூறினர்; அவர் அதுகேட்டு முதலில் வருந்தினரேனும் பின்னர்த் தம் கணவனார் கருத் துக் கிசைந்து மனந்தெளிவுற்றார்.

தம்பிரான்கள் அதன்பின்னர், முக்களாலிங்கரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு சுசீந்திரத்திலிருக்கும் ஈசானமடத்தைச் சேர்ந்தனர்; அம்மடம் திருவாவடுதுறை யைச் சேர்ந்தது. அம் மடத்தில் சின்னப்பட்டத்து எழுந் தருளியிருந்த வேலப்பதேசிகரைக் கண்டு வணங்கினர்கள். தம்பிரான்கள் முக்களாலிங்கரை அவர்க்கு அறிமுகப் படுத்தி, நிகழ்ந்தவற்றையும் விளக்கிக் கூறினர்கள்.

வேலப்பதேசிகர், முக்களாலிங்கரின் முதிர்ந்த அறிவை வியந்தார்; பாராட்டினர்; அவருக்குச் சமய தீக்கை, சிறப்புத் தீக்கைகளைச் செய்தார்; காவியுடை உதவினர்: துறவு நெறியை யடைவித்தார்; மெய்யறிவு நூல்களை இவர்க்கு ஐயந்திரிபற உணர்த்தினர். அப்பால் முக்களாலிங்கர் வடமொழி தென்மொழிச் சைவசித்தாந்த நூல்களைக் கற்றறிந்தார்; மெய்யுணர்வு பெற்றார்; துறவற நெறி திறம்பாத நன்னெறியில் ஒழுகினர்.

இவர்தம் சிறப்பைக் கண்ட வேலப்ப தேசிகர் இவ ருக்கு நிருவாண தீக்கை முதலியன செய்து 'சிவஞானம்' என்னும் தீக்கைப்பெயர் வழங்கினர்; மெய்கண்ட நூல் களையும், பண்டார நூல்களையும் அறிவுறுத்தினர்; வீட்டு நெறிபெற வழிகாட்டியருளினர். அதுமுதல் இவருக்குச் சிறப்புப் பெயராகச் சிவஞானமுனிவர் என்னும் பெயர் வழங்கி வரலாயிற்று.

அதன் பின்னர்ச் சிவஞான முனிவர், திருவாவடு துறைத் திருமடத்தில் தங்கியிருந்துவந்தார். அக்காலத்தே 'பஞ்சாக்கரதேசிகர் மாலை' என்னும் சமயநூலைப் பாடியருளி னர். நண்பர்கள் சிலரும், மாணாக்கர்களும் வேண்டிக்

கொண்டதற்கிணங்கி நெல்லைச் சங்கரநமச்சிவாயப் புலவர் இயற்றிய இந் நன்னூலுரையை ஆராய்ந்து பார்த்து, அதில் தமக்குப் பிழையெனத் தோன்றியவற்றைத் திருத் திச் செப்பஞ்செய்து உதவினர். வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்கம் என்னும் இலக்கண நூலை ஆராய்ந்தார்; அதிற்கண்ட பிழைகளைக் குறிப்பிட்டு, 'இலக்கண விளக்கச் சூறாவளி' என்னும் ஓர் இலக்கண நூல் செய்தருளினர்.

இவர், சைவசித்தாந்த நுண்கலைகளில் வல்லுநரன்றி இலக்கண இலக்கிய நுண்ணிய கலைகளினும் மிக வல்லுநர். இவர் இலக்கண நூலில் தேர்ந்த புலமையுடையவரென்ப தற்கு இவர் சங்கரநமச்சிவாய ருரையை நன்கு திருத்தியும் புதுக்கியும் அமைத்த திறப்பாடே சான்றாக அமையும். அதன்கண் தாமே இன்றியமையாத இடங்களில் விளக்கஞ் செய்தெழுதியிருப்பதுடன், சங்கரநமச்சிவாயர் உரை யிடையேயும் ஒன்றுசேர இடையிடையே கலந்தெழுதி யிருப்பதும், இவர்தம் இலக்கணப்புலமைக்கு அளவு கோலாகும். இஃதன்றி 'தொல்காப்பியச் சூத்திர விருத்தி'யென்னும் நூலை ஆக்கியிருப்பதும், இலக்கண விளக்கச் சூறாவளியெனப் பெயரிய நூல் எழுதியிருப்பதும் இவர்தம் இலக்கணப் புலமைத்திறத்தைக் குன்றிடை யிட்ட விளக்கெனத் தெற்றென விளக்குவதாகும்.

மெய்கண்டதேவர் அருளிச்செய்த 'சிவஞானபோதம்' என்னும் அரிய சைவசித்தாந்த நூலுக்குப் பாடியமாக அரிய உரை வகுத்திருப்பதும், அதில் சில்வகை எழுத் தைக்கொண்ட சிறிய சொற்றொடரைத் தனித்தனி அதி கரணமாக்கி அவற்றுக்கு இவர் விளக்கங்கூறிச் செல்வ தும் இலக்கண வரம்பினின்று காட்டும் எடுத்துக்காட்டு களும் இவர்தம் இலக்கண இலக்கிய நூற்பயிற்சிக்குக் கலங்கா விளக்கங்களாயமைவனவாம்.

சிவஞானபோதத்து, 'அவனவள் அது வெனும்' என்று தொடங்கும் முதல் நூற்பாவில் கழகப்பதிப்பு ௭0-ஆம் பக்கத்தில் இலக்கணக் குறிப்புரைக்குங்கால்,

'எனும் என்பது இடைச்சொல்லடியாகப் பிறந்த பெய ரெச்சமாய், இவ்வாறு என்னும் பொருள் குறித்து நின்றது. வடமொழிச் சூத்திரத்தில் ஆதி என்றதும் அப்பொருட்டு. அவை என்பது தொகுதி. அஃறிணைப் பன்மைச் சுட்டுப் பெயரெனக் கொள்ளின், உள எனப் பிரித்துப் பயனிலையாக் கித் தாம் என்பது அசையாகக் கொள்க. வினைமை - வினை யுடைமை. உடைமை - உடைத்தாம் தன்மை.

அவ்வக்காலத்தன்றி மூவினையும் ஒரு காலத்துப் படுதல் கண்டிலம் என்பாரை நோக்கித் தன்மையில் வைத்து ஓதினர்'

என்பதாம்.

தொல்காப்பிய முதற் சூத்திரவிருத்திக்கண் நூன் மரபு என்பதை விளக்குமிடத்து,

'மலை, கடல், யாறு, குளம் என்றற் றொடக்கத்து உலக மரபு பற்றிய பெயர்போலாது ஈண்டுக் கூறப்படும் எழுத்து, குறில், நெடில், உயிர், மெய் என்றற் றொடக்கத்துப் பெயர்கள், நூலின்கண் ஆளுதற்பொருட்டு முதனூல் ஆசிரி யனால் செய்துகொள்ளப்பட்டமையின், இவை நூன் மரபு பற்றிய பெயராயினவென்று அறிக. ஏனை ஓத்துக்களின் விதிக்கப்படும் பெயர்களும் நூன் மரபு பற்றிவரும் பெய ராதல் உய்த்துணர்ந்து கோடற்கு இது முன் வைக்கப் பட்டது'

என்பனவும், இவைபோல்வனவாக வருவன பிறவும் சிவ ஞானமுனிவர்தம் செந்தமிழ் இலக்கணப் புலமையைத் தெளிவுபடுத்துதல் காண்க.

இவ்வாறு உரைவன்மையிற் சிறந்தவராதலன்றிச் செய்யுள் ஆக்கும் திறனில் சிறந்திருந்தாரென்பதற்குக் காஞ்சிப்புராணம் முதற்காண்டம், சோமேசர் முதுமொழி வெண்பா, குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி போன்ற நூல்களும் பிறவும் சான்றுவனவாம்.

சிவஞான முனிவர்பால் மாணக்கராக அமர்ந்து பல நூல்களைக் கற்றுத்தேறிய புலவர்பெருமக்களும் பலராவர்.

இத்தகைய முனிவரர், தமிழ்கூறு நல்லுலக மக்கட்கு இந் நன்னூல் சங்கரநமச்சிவாயப் புலவருரையைப் புதுக்கியும் விளக்கியும் தம் புலமைச்சாணையில் திறம்படத் தீட்டி ஒளிர் வைரமணியாக்கித்தந்த கைம்மாறுபேணுக் கடப்பாட்டுக்கு என்றும் தமிழுலகம் நன்றிசெலுத்தும் கடமைகொண்டுளது.

சிவஞான முனிவர் வணக்கம்

பூவடு வண்துறைப் பொழில்சுலாம் பொன்னிநாட்டு
ஆவடு துறைச்சிவ ஞான அடிகள்
சேவடி பரவுதூஉம் சித்திபெறற் பொருட்டே.

# மேற்கோள்நூல் விளக்க அகரவரிசை

| | |
|---|---|
| அகநா. | —அகநானூறு |
| அரிச்சந்திர. | —அரிச்சந்திர புராணம் |
| இ. கொ. | —இலக்கணக் |
| இ. வி. | —இலக்கண விளக்கம் |
| இறை. | —இறையனாரகப்பொருள் |
| ஐங்குறு. | —ஐங்குறுநூறு |
| ஐந். | —ஐந்திணை ஐம்பது |
| கம்ப. | —கம்பராமாயணம் |
| கலி. | —கலித்தொகை |
| கள. | —களவழி நாற்பது |
| களவழி | —களவழி நாற்பது |
| குறுந். | —குறுந்தொகை |
| | —திருக்குறள் |
| சிந்தாமணி. | —சீவக சிந்தாமணி |
| சிலப். | —சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | —சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | —சீவக சிந்தாமணி |
| சூளா. | —சூளாமணி |
| தண்டி. | —தண்டியலங்காரம் |
| திணைமாலை | —திணைமாலை நூற்றைம்பது |
| திரி. | —திரிகடுகம் |
| திருமுருகு. | —திருமுருகாற்றுப்படை |
| திருவா. | —திருவாசகம் |
| தொல். | —தொல்காப்பியம் |
| நள. | —நளவெண்பா |
| நற். | —நற்றிணை |
| நன். | —நன்னூல் |
| நாலடி. | —நாலடியார் |
| நான்மணி. | —நான்மணிக் கடிகை |
| நேமி. | —நேமிநாதம் |
| பதிற். | —பதிற்றுப்பத்து |

| | |
|---|---|
| பரி. | —பரிபாடல் |
| பிரபு. | —பிரபு லிங்கலீலை |
| பிரயோக. | —பிரயோக விவேகம் |
| பு. வெ. | —புறப்பொருள் வெண்பாமாலை |
| புறநா. | —புறநானூறு |
| பெரிய. | —பெரிய புராணம் |
| பெருங். | —பெருங்கதை |
| பெரும்பாண். | —பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | —பொருநராற்றுப்படை |
| பொருள். | —பொருளதிகாரம் |
| மணி. | —மணிமேகலை |
| மலைபடு. | —மலைபடுகடாம் |
| முருகு. | —திருமுருகாற்றுப்படை |
| யா. கா. | —யாப்பருங்கலக் காரிகை |
| யாப். வி. | —யாப்பருங்கல விருத்தி |

இத்தகைய முனிவரர், தமிழ்கூறு நல்லுலக மக்கட்கு இந் நன்னூல் சங்கரநமச்சிவாயப் புலவருரையைப் புதுக்கியும் விளக்கியும் தம் புலமைச்சாணையில் திறம்படத் தீட்டி ஒளிர் வைரமணியாக்கித்தந்த கைம்மாறுபேணுக் கடப்பாட்டுக்கு என்றும் தமிழுலகம் நன்றிசெலுத்தும் கடமை கொண்டுளது.

சிவஞான முனிவர் வணக்கம்

பூவடு வண்துறைப் பொழில்சுலாம் பொன்னிநாட்டு
ஆவடு துறைச்சிவ ஞான அடிகள்
சேவடி பரவுதூஉம் சித்திபெறற் பொருட்டே.

# நன்னூல் விருத்தியுரை

## சிறப்புப் பாயிரம்

மலர்தலை உலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவி ருளிரிய மாண்பொருள் முழுவதும்
முனிவற வருளிய மூவறு மொழியுளுங்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையின் இருந்தமிழ்க் கடலுள்
அரும்பொருள் ஐந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியில் தருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணம்
திசைதொறு நிறுவிய [1]திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை விநோதன் அமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னு நாமத் திருந்தவத் தோனே.

என்பது பாயிரம்.

---

(பாடம்) 1. தெறலுறு.

மலர்தலை உலகிற் பல நூ லாய்ந்து
செய்வதும் தவிர்வதும் பெறுவது முறுவதும்
உய்வது மறியே னொருபொரு ளாக
நன்னெறி பிறழா நற்றவத் தோர்பெறுந்
தன்னடித் தாமரை தந்தெனை யாண்ட
திருவா வடுதுறைத் தேசிக னாகிய
கருணையங் கடலையென் கண்ணைவிட் டகலாச்
சுவாமி நாத குரவனை யனுதினம்
மனமொழி மெய்களிற் றொழுதவ னருளாற்
பொன்மலை யெனவிப் புவிபுகழ் பெருமை
மன்னிய ஊற்று மலைமரு தப்பன்
முத்தமிழ்ப் புலமையு முறையர சுரிமையும்
இத்தலத் தெய்திய இறைமக னாதலின்
நன்னூற் குரைநீ நவையறச் செய்து
பன்னூற் புலவர்முன் பகர்தியென் றியம்பலின்
நன்னூ வலர்முக நகைநா ணுமே
என்னு லியன்றவை யியற்றுமிந் நூலுள்,

இப்பாயிரம் என்னுதலிற்றோவெனின்:—

"வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்படர் ஒழுக்கமுந்
திங்க ளன்ன கல்வியுந் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும் யாவதும்
அஃகா அன்பும் வெஃகா உள்ளமுந்
துலைநா வன்ன சமநிலை உளப்பட
எண்வகை உறுப்பின ராகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையுந் தாஅ ளாண்மையும்
உலகியல் அறிதலு நிலைஇய தோற்றமும்
பொறையு நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவும் உருவும் ஆற்றலும் புகழுஞ்
சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்வன் மையுங்

(பாடம்) 1. பரமகுரவனைப் பணிந்தவன் அருளால் பொன்
மலை.

கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலும்
இன்னோர் அன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பின் நல்லா சிரியர்
அறனே பொருட்பயன் இன்பெனு மூன்றின்
திறனறி பனுவல் செப்புங் காலை
முன்னர்க் கூறிய எண்வகை உறுப்பினுள்
ஏற்பன உடைய ராகிப் பாற்படச்
சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலும்
சொல்லிய பொருளொடு சூழ்ந்துநன் குணர்தலும்
தன்னோர் அன்னோர்க்குத் தான்பயப் படுதலும்
செய்ந்நன்றி அறிதலுந் தீச்சார் பின்மையும்
மடிதடு மாற்ற மானம்பொச் சாப்புக்
கடுநோய் சீற்றங் களவே காமம்
என்றிவை இன்மையுஞ் சென்றுவழி படுதலும்
அறத்துறை வழாமையுங் குறிப்பறிந் தொழுகலும்
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்
மீட்டவை வினவலும் விடுத்தலும் உரைத்தலும்
உடைய ராகி நடையறிந் தியலுநர்
நன்மா ணாக்கர் என்ப மண்மிசைத்
தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே.''

என, ஆத்திரையன் பேராசிரியன் கூறிய பொதுப்பாயிரத்தானே பன்னருஞ் சிறப்பி னல்லாசிரியனையுணர்ந்து வழிபட்டு ஒரு நூல் கேட்பான் புகுந்த நன்மாணாக்கர்க்கு, அந்நூலான் நுவலப் படும் பொருளும், அந்நூல் கேட்டலாற் பெறப்படும் பயனும், கேட்டற்குரிய அதிகாரிகளாவார் இவரென்பதூஉம், இன்னது முற்றிய பின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்னும் இயைபும் உணர்ந்தன்றி, நூல் கேட்டற்கண் மனவூக்கஞ் செல்லாமையின், இன்றியமையாச் சிறப்பினவாய இந்நான்கும் ஒருதலையாக முன்னர் உணர்த்தல் வேண்டும்; இந்நான்கு முணர்ந்தவழியுங் கற்றுவல்ல சான்றோரல்லாராற் செய்யப்பட்ட நூலாயிற் கூறியது கூறல் முதலிய குற்றமுடைத்தாமன்றே யெனவும், கற்றுவல்ல சான்றோரும் மற்றோர் கோட்பாடுபற்றிச் செய்யின் முனைவனூலொடு மாறுமன்றே யெனவும் ஐயுற்று ஊக்கஞ் செல்லாமையின், அவ்வையம் நீக்குதற்பொருட்டு ஆக்கியோன் பெருமையும், நூற்பெருமையும், அந்நூல் வழங்கு நிலமும், அதன் முதனூலும் இவையென்பது தோன்ற, ஆக்கியோன் பெயரும் வழியும் எல்லையும் நூற்பெயரும்

**உணர்த்தல் வேண்டும். ஆகலின், இவ்வேட்டும், இவ்வேட்டுடனே காலங் களங் காரணமென்னு மூன்றுங் கூட்டிப் பதினொன்றுந் தெரிப்பதே சிறப்புப்பாயிரத்தின் இலக்கணமென மேல் வகுக்கப்படும். ஆக்கியோன் பெயர் முதலியன உணர்த்துதல் நுதலிற்று.**

(இதன்பொருள்:) *மலர் தலை உலகின்-பரந்த இடத்தை யுடைய உலகத்தின்கண்ணே, மல்கு இருள் அகல-நிறைந்த கண்ணிருள் கெட, இலகு ஒளி பரப்பி - விளங்குங் கதிரை விரித்து, யாவையும் விளக்கும் - கட்பொறிக்கு விடயமாகிய உருவமனைத்தினையுங் காட்டும், பரிதியின்-சூரியனைப்போல, ஒரு தான் ஆகி - உலகுக்கெல்லாந் தானொரு முதலேயாகி, முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த - தோற்றமும் ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்புமாகியவற்றை இயல்பாகவே நீங்கி நிற்றலால் தலைவனாகிய, அற்புத மூர்த்தி - ஞானமே திருமேனியாகவுடையான், தன் அலர் தரு தன்மையின் - தனது விரிந்த தன்மையாகிய கருணையினாலே, மன இருள் இரிய - உயிர்களின் மனத்திருளாகிய அவித்தை கெட, மாண் பொருள் முழுவதும் - மாட்சிமைப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கு பொருளையும், முனிவு அற அருளிய - விருப்புடன் அருளிச்செய்த, மூவறு மொழியுளும் - பதினெண்நிலத்து மொழிகளுள்ளும், குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின் இருந்தமிழ்க் கடலுள் - இந்நான்கெல்லையினையுடைய நிலத்து மொழியாகி இயலிசை நாடகமென்று பெயர் பெற்ற பெரிய தமிழென்னுங் கடலுள், அரும்பொருள் ஐந்தையும் - அவ்வறமுதற்பொருணான்கையும் உணர்தற்குக் கருவியாய் அருமையவாகிய இயற்றமிழின் பாகுபாடான எழுத்துச் சொற் பொருள் யாப்பணியென்னும் ஐந்து பொருளையும், யாவரும் உணர - அவ்வியற்றமிழுணர்தற்கு முன்னரே உயர்ந்தோர் செய்யுளிடத்தாராய்ச்சி யுடையராய் அவ்வாராய்ச்சியான் வலியோரேயன்றி எளியோரும் உணர, தொகை வகை விரியின் தருக என - வழியினெறியாகிய நால்வகையுள் தொகுத்தும் வகுத்தும் விரித்துமாக்கப்படும் யாப்பினாற் பாடித் தருகவென, துன்*

ஞர் இகல் அற நூறி - பகைவாது பகைமைகெட அவரைத் துணித்து, இருநிலம் முழுவதுந் தனது எனக் கோலி - பெரிய பூமி யனைத்தினையுந் தன்னுடையதாகப் பற்றிக் கொண்டு, தன் மத வாரணம் திசைதொறும் நிறுவிய திறல் உறு தொல் சீர் - தன் மதயானைகளை எட்டுத்திக்கினுந் திசைக்களிறுகள்போல நிறுத்திய வெற்றி மிகுந்து தன்னளவேயன்றித் தன்தாதை மூதாதை முதலியோரைத் தொட்டு வருங்கீர்த்தியினையும், கருங்கழல் - பெருமை பொருந்திய வீரக்கழலினையும், வெண்குடை - வெண் கொற்றக் குடையினையும், கார்நிகர் வண்கை - மேகம் போலக் கைம்மாறு கருதாது கொடுக்குங் கையினையும், திருந்திய செங்கோல் - கோடாத செங்கோலினையும் உடைய, சீயகங்கன் - சிங்கம்போன்ற கங்கன், அருங்கலை வினோதன் - அரிய நூல்களை ஆராய்தலே பொழுதுபோக்கும் விளையாட்டாகவுடையான், அமர் ஆபரணன் - தன் னகத்து விழுப்புண்பட அமர்செய்தலையே ஆபரணமாக வுடையான், மொழிந்தனன் ஆக - சொன்னாக, முன்னோர் நூலின் வழியே - தொல்லாசிரியர் நூலின்வழியே, நன்னூற் பெயரின் வகுத்தனன் - நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன், பொன்மதிற் சனகை - பொன்மதில் சூழ்ந்த [1]சனகாபுரத்துளிருக்கும், சன்மதிமுனி அருள் - சன்மதிமுனிவன் பெற்ற, பன்னருஞ் சிறப்பின் பவணந்தி என்னும் நாமத்து - சொல்லுதற்கரிய ஞானவொழுக்கச் சிறப்பினையும் பவணந்தியென்னும் பெயரினையுமுடைய, இருந்தவத்தோன் - பெரிய தவத்தினையுடையோன் என்றவாறு.

## க. சிவஞான முனிவர் விளக்கம்

இதனுள், பவணந்தியெனவே ஆக்கியோன்பெயரும், முன்னோர் நூலின் வழியெனவே வழியும், நான்கெல்லையெனவே எல்லையும், நன்னூலெனவே நூற்பெயரும், அரும்பொருளைந் தெனவே நுதலிய பொருளும், அவற்றை யாவருமுணர வெனவே முன்னர் நிகண்டு கற்றுச் செய்யுள் ஆராய்ச்சி யுடையார்க்கே அவற்றையாராய்வுழி அவற்றின்கண் உள

(பாடம்) 1. சனநாதபுரம்—மயிலைநாதர்.

வாகிய செய்கை வேறுபாடுகளுஞ் சொன்முடிவு பொருண்முடிவு வேறுபாடுகளும் இன்னவென்று துணியப்படாமையின், அவற்றைத் துணிந்தறியவேண்டி இவ்வியற்றமிழ் நூல் கேட்டறிதலின்கண்ணே ஊக்கஞ்செல்லுமாகலின் அவையாராய்ந்த பின்னர் இது கேட்கற்பாற்றென்னும் யாப்பும், அவை யாராய்ந்தோர் இது கேட்டற்குரியா ரென்னுங் கேட்போரும், அவர் அப்பொருளைத் தினையுமுணர்ந்து மொழித்திறத்தின் முட்டறுத்தலின் மொழித்திறத்தின் முட்டறுத்தலென்னும் பயனும், சீயகங்கன் மொழிந்தனனாக நன்னூற்பெயரின் வகுத்தன னெனவே அவன் காலத்துப் பாடப்பட்டு அவனதவைக்களத்து அரங்கேற்றியதெனக் காலமுங் களனும், சீயகங்கன் மொழிந்தமையானும் யாவரிடத்தும் இரக்கமுடைமையானும் வகுத்தமையாற் காரணமும் பெறப்பட்டன.

இனி, இந்நூற் கால முதலிய மூன்றும் நூல்செய்தார் காலத்து நிகழ்ந்தன: ஆக்கியோன் பெயர் முதலியவெட்டும் நூல் செய்தார்காலத்தும் நூல் வழங்குங்காலத்தும் ஒப்ப நிகழ்வன; இவை தம்முள் வேற்றுமை கழிந்தவற்றை யுணர்தலாற் பெரும்பயனின்மையின் அவை ஒருசாராராற் கொள்ளப்பட்டன: ஆக்கியோன் பெயர் முதலியன ஒருதலையா னுணரவேண்டுதலின் அவை எல்லா ஆசிரியரானுங் கொள்ளப்பட்டன.

வடநூலோர், யாப்பை ஆனந்தரியமென்றும், நுதலியபொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும், பயனைப் பிரயோசனமென்றுங் கூறுப. அவருள் ஒருசாரார், ஆனந்தரியப் பொருள் நூலைப் பயப்பித்தற்குக் காரணமாய்க் கேட்போரை விசேடித்து நிற்றலின் வேறு கூறவேண்டா வென்னுங் கருத்தால், ஆனந்தரிய நீக்கிச் சம்பந்தமொன்று கூட்டி, நான்கென்பா ராயினர். சம்பந்தமென்பதும் யாப்பென்னும் பொதுச்சொல்லாற் கொள்ளப்படும். அது, நன்னூற் பெயரின் வகுத்தனனெனவே நூற்கும் நூல் நுதலிய பொருட்கும் வகுப்பதூஉம் வகுக்கப்படுவதூஉமாகிய சம்பந்தமென்பது பெறப்பட்டது. யாப்பு, இயைபு, தொடர்ச்சி என்பன ஒருபொருட்கிளவி.

ஈண்டுக் கேட்டல் பாடங்கேட்டல்; அது "கேள்வி விமரிசம்[1] பாவனை" என்பதனானும், "கேட்டவை நினைத்தலும் பாடம்

1. விமரிசம்—சிந்தித்தல். விமரிசனமெனினு மொக்கும்.

போற்றலும்" "ஒருகுறி கேட்போன் இருகாற் கேட்பின்" என்பவற்றானுமுணர்க.

இவ்வெட்டும் உணர்ந்ததற்குப் பயன் நூல்பயிலுதற்கண் ஊக்க முண்டாதல். ஊக்கம் - உள்ளக்கிளர்ச்சி.

இனி, வாய்ப்பக்காட்டலென்பதனானே இத்துணைச் சிறப்பில்வாய் அவ்வவற்றிற்கு இனமாய்க் காட்டப்படுவனவுமுளவென்பது பெற்றாம். அவை ஆக்கியோன் பெயரேயன்றி ஆக்கு வித்தோன் பெயர் கூறுதலும், வழியேயன்றி அதன்வகை யாகிய தொகுத்தன் முதலிய நான்கனுள் ஒன்றாமாறு கூறு தலும், தன் முதனூற்கு வழி கூறுதலும், அது வந்த மரபுவழி கூறுதலும், பொதுவெல்லை கூறுதலேயன்றிச் செந்தமிழ் முதலியவற்றின் சிறப்பெல்லை கூறுதலும், நூற்பெயரே யன்றிப் படலப்பெயர் ஓத்தின்பெயர் கூறுதலும், நூற்கு இயைபு கூறுதலேயன்றி நூலினுட் படலமுதலியவற்றிற்கு இயைபுகூறுதலும், சம்பந்தங்காட்டுவார் மதத்தின் நூற்கும் நூல்நுதலிய பொருட்குங் கிழமை கூறுதலேயன்றி நூல்நுத லிய பொருட்கும் பயனுக்குங் கிழமை கூறுதலும், நூற்கும் நூல் செய்தோனுக்குங் கிழமை கூறுதலும், நூல்நுதலிய பொருளேயன்றிப் படல நுதலியதூஉம் ஓத்து நுதலிய தூஉஞ் சூத்திர நுதலியதூஉங் கூறுதலும், கேட்போரே யன்றிக் கேட்பிப்போரைக் கூறுதலும், பயனேயன்றிப் பயனுக்குப் பயன் கூறுதலுமாம்.

இவ்வெட்டனுள், சீயகங்கனெனவே ஆக்குவித்தோன் பெயரும், தொகைவகை விரியெனவே வழியின் வகையும், மாண் பொருண்முழுவதுமெனவே பயனுக்குப் பயனும் பெறப் பட்டன. ஏனைய இந்நூலுள் வந்துழி வந்துழிக் காண்க.

பயனுக்குப் பயனாவது :

வெண்பா

"எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்."

என்பதனாற் காண்க.

எனவே, முதனூற்பொருளுணர்தற்கு முறையானே இது கருவி நூலென்பது பெறப்பட்டது. முதனூலென்றது அற

முதலிய நான்கினையும் உணர்த்தும் நூலையெனவறிக. எழுத்தென்றது இயற்றமிழை. அது: "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப" என்பதனானுமுணர்க. இசைத்தமிழும் நாடகத்தமிழும் இவ்வியற்றமிழ்போல முதனூற்பொருளுணர்தற்குக் கருவியன்மையின், இயற்றமிழொன்றுமே கூறினார்; அன்றி, இயற்றமிழை அரும்பொருளைந்தெனக் கூறினமையின், இந்நூலுட் கூறிய பொருள் யாப்பணிகளென்னு மூன்றதிகாரங்களும் அக்காலத்துள்ளன போலும்

என்னுக் கேட்டோர் இயற்றமிழ் வல்ல ஆசிரியர். படலமுதலியது இவ்வதிகாரம் என்னுதலிற்றோவெனின் என்பது. ஓத்து முதலியது இப்போத்தென்னுதலிற்றோவெனின் என்பது சூத்திர முதலியது இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின் என்பது. படலத்திற்கியைபு மேலையதிகாரத்தோடு இயைபுடைத்தாயிற்றென்பது. ஓத்திற்கியைபு மேலையோத்தினோடு இயைபுடைத்தாயிற்றென்பது. சூத்திரத்திற்கியைபு மேலைச் சூத்திரத்தோடு இயைபுடைத்தாயிற்றென்பது. இவை, நூன்முகத்துக் காட்டப்படுதலேயன்றிப், படலமுகத்தும் ஓத்துமுகத்தும், சூத்திரமுகத்துங் காட்டப்படும். இவையெல்லாம் பாயிரமேயாம். பிறவும் இவ்வாறே கண்டுகொள்க.

அற்றேல், கேட்போர் மாணாக்கருங் கேட்பிப்போர் ஆசிரியருமாகலான், இவ்விரண்டும் பொதுப்பாயிரத்தாற் பெறப்படுமாலோவெனின்;—அற்றன்று: பொது வகையான் ஆசிரியர்க்கும் மாணாக்கர்க்கும் இலக்கணம் பெறப்பட்டன வல்லது, இந்நூற்கின்னாரென்னுஞ் சிறப்புவகை ஆண்டுப் பெறப்படாமையின், இஃதீண்டுக் காட்டப்படும். இது காட்டாக்கால், சிற்றறிவோர் பெருநூலும், பேரறிவோர் சிறுநூலும், முத்தமிழுள் ஒரு நூற்குரியார் ஏனையிரண்டு நூலும், அறம் பொருள் இன்பம் வீடென்னு நான்கனுள் ஒன்றற்குரியார் ஏனை மூன்று நூலுங் கேட்பான் புக்கு இடர்ப்பட்டு மயங்குபவாகலின், இஃது ஒருதலையாற் காட்டல் வேண்டுமென்பது. இதுபற்றியன்றே, பொதுவெனவுஞ் சிறப்பெனவும் பாயிரம் இருபகுதிப்பட்டதூஉமென்க.

1. அரங்கேற்றுழிக் கேட்போரைக் கேட்போர் என்பவர்கள் இறையனார் அகப்பொருளுரைகாரரும், மயிலைநாதரும், இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும், இலக்கண விளக்க உரைகாரருமாம்.

இக்கருத்தறியாத உரையாசிரியரை[1] யுள்ளிட்டோரெல்லாரும், நூலரங்கேறும் அவைக்களத்துக் கேட்டாரைக் கேட்போ ரென்றும், தொகுத்தன் முதலிய வழியின் வகையினை யாப் பென்றுங் கூறினார். ஆக்கியோன் பெயர் முதலிய பொரு ளென்பனபோல இறந்தகாலத்தாற் கூறாது கேட்போரென எதிர்காலத்தாற் கூறியதே அஃதுரையன்மைக்குச சான்று மாகலானும், காலங் களத்துளடங்குதலின் வேறு கூற வேண்டாமையானும், ஆக்கியோன் பெயர் முதலியனபோல நூல் வழங்குங்காலத்து நிகழ்வதன்றாகலின், அவற்றோடு ஒருங்கு வைத்தெண்ணல் பொருந்தாமையானும், கேட்டற் குரிய அதிகாரிகளாவாரை ஒருதலையாக உணர்த்தல் வேண்டுமாகலானும், தொகுத்தன் முதலியன வழியுள் அடங்குதலானும், இயைபும் ஒருதலையானுணர்தற்பாலதாக லானும், யாங்கூறியதே வடநூலார்க்கும் உடன்பாடாக லானும் அவருரை போலியுரை யென்க.

வழியின் வகையாகிய நால்வகை யாப்பினுள் தொகை விரியாப் பென ஒன்று போந்ததன்றித் தொகை வகை விரியெனப் போந்ததில்லையாலோவெனின் :—நடுநின்ற வகை. பின் னின்ற விரியை நோக்கின் தொகையாகவும், முன்னின்ற தொகையை நோக்கின் விரியாகவும் அடங்குதலின், இது தொகைவிரி யாப்பென்றதன்பாற் படுமென்க; எனவே, தொகைவிரியென இரண்டாய் வரினும், மரத்தினது பாரையினின்றுங் கவடு கோடு கொம்பு வளார் பலவாய் ஒன்றோடொன்று தொடர்பட் டெழுந்து நிற்றல்போல் தொகையினின்றும் ஒன்றோடொன்று தொடர்படப் பகுக் கப்பட்டுப் பலவாய் வரினுந் தொகைவிரி யாப்பேயா மென்க.

இப்பாயிரம் ஒருநூற்குரித்தாகலிற் சிறப்புப்பாயிரமா மென்க.

## சிறப்புப் பாயிரம் முற்றிற்று.

1. ஈண்டு உரையாசிரியரெனப்பட்டார் இளம்பூரணர்; ஆதி இலக்கணமாகிய தொல்காப்பியத்திற்கு முன்ன ருரைசெய்தமை யால் இவருக்கு உரையாசிரியர் என்னும் பெயர் வழங்குவ

## உரைச்சிறப்புப் பாயிரம்

தன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை செய்கவென
நரேந்திர சிங்கந்
தென்னூற்று மலைமருதப் பன்புகலப் பொருள்விளங்கச்
செய்தான் பாரின்
எந்நூற்கு மெழுத்தொடுசொற் பொருளறிசங் கரநமச்சி
வாய னென்னும்
பன்னூற்செந் தமிழ்ப்புலவன் சைவசிகா மணிநெல்லைப்
பதியி னானே.

அகத்தியந்தொல் காப்பியமே முதலியமுன் னூல்கள்பல
வாய்ந்து முப்பால்
பநத்ததிரு வள்ளுவரே முதன்ஞான நூல்களெலாம்
பகல்செய் வான்போல்
இகத்திருரை செயவலசங் கரநமச்சி வாயனெனு
மியற்பேர் பெற்ற
தகைப்புலவ னன்னூலுக் குரைவகுத்த தொருவியப்போ
தமிழ்வல் லோரே.

புன்னூற்கு மலையமுனி தன்னூற்கும் புவியிடத்து
முநியோ ராற்சொல்
எந்நூற்குந் தமிழ்க்கடலு ளினியியற்று நூற்கும்வகை
யிதனூற் காட்டி
நன்னூற்கு விரித்துரைசெய் தான்றிகாந் தத்தளவு
நடாத்துங் கீர்த்தித்
தென்னூற்று மலைமருதப் பன்சொலச்சங் கரநமச்சி
வாயன் றானே.

உரைச்சிறப்புப் பாயிரம் முற்றிற்று.

# பொதுப் பாயிரம்

*பாயிரத்தின் பெயர்கள்*

க. முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

என்பது சூத்திரம் என்னுதலிற்றோவெனின், பாயிரத்திற்கு வருஉங் காரணக்குறிகள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *பாயிரத்தின் இலக்கணங்களை முன்னுணர்ந் தல்லது நூல்களைச் செய்தலும் அவற்றை யீதலும் ஏற்றலு முடியாமை கருதி முன்னுரைத்தலின் முகவுரையென்றும், "பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்—தொகுதி யாகச் சொல்லுத லாகும்'' என்பவாகலின்; மேல் வகுக்கும் ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப் பொருளையுந் தொகுத்துச் சொல்லுதலிற் பதிகமென்றும், நூலினது பெருமை முதலிய விளங்க அணிந்துரைத்தலின் அணிந் துரையென்றும், முகவுரையென்றாற்போல நூன்முகமென் றும், நூல் நுதலிய பொருளல்லனவற்றை உரைத்தலிற் புறவுரையென்றும், நூற்குள்ள நுதலிய பொருளல்லன வற்றை அதற்குத் தந்துரைத்தலின் தந்துரையென்றும், அணிந்துரையென்றாற்போலப் புனைந்துரையென்றும், பாயி ரத்திற்குப் பெயராம் என்றவாறு.*

பாயிரம் என்பது வரலாறு.

*பாயிரங் கூறப்புகுந்தார் நிகண்டுபோல அதன் பெயர் விகற் பங்களைக் கூறியது என்னையெனின்:—இப் பாயிரம், பதிகமாகிய புறவுரையாய்த் தந்துரைக்கப்படுவதேனும், நூற்கு இன்றியமை யாத அணியாய் முன்னுரைக்கப்படுவதென்பது இக் காரணக் குறிகளான் விளங்குதலின் என்க.* (க)

*பாயிர வகை*

உ. பாயிரம் பொதுச்சிறப் பெனஇரு பாற்றே.[1]

1. இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் இலக்கண விளக்க உரைகாரரும் இங்ஙனமே கொள்வர். (தொல். சிறப்பு. உரை ; இ. வி. பொதுப் பாயிரம்.)

எ - னின். மேற்பாயிரமென்றதனை வகுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்பாயிரமென்றது பொதுப்பாயிரமுஞ் சிறப்புப்பாயிரமும் என இருவகையினை உடைத்து எ - று.

பொதுப்பாயிரம் இன்னதென்பது

௩. நூலே நுவல்வோன் நுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றாம் ஐந்தும்
எல்லா நூற்கும் இவைபொதுப் பாயிரம்.

எ - னின். இருவகைப் பாயிரத்துள் பொதுப்பாயிரத்தை விரித்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நூலினது வரலாறும், ஆசிரியனது வரலாறும், அவ்வாசிரியன் நூலை மாணுக்கர்க்குச் சொல்லுதலின் வரலாறும், மாணுக்கனது வரலாறும், அவன் கேட்டலின் வரலாறும் என்னும் ஐந்தும் எல்லா நூற்குமாம் ஆதலின், இவ் வைந்து வரலாற்றையும் விளங்க உணர்த்துவது பொதுப் பாயிரமாம் எ - று.

திறன் கூற்று என்றது வரலாற்றையாதலின், அதனை ஏனையவற்றுள்ளுங் கூட்டுக. ஆம் என்பதனை எல்லா நூற்கும் ஆமெனக் கூட்டுக.

"[1]ஈவோன் றன்மை ஈத லியற்கை—கொள்வோன் றன்மை கோடன் மரபென—ஈரைந் தென்ப பொதுவின் றொகையே" என்பாரும் உளராலோவெனின்:—பாயிரங் கூறுதல் நூல்கட் கன்றிப் பிறவற்றிற் கன்றே; அங்ஙனமாதலின், நூல்களின் வரலாறொன்றுமே கூறவேண்டும்; அதனோடு ஆசிரியன் வரலாறு முதலிய நான்கினையும் உடன் கூறுதல், வரலாற்று முறைமையின் வாராதார் நூல்களைக் கற்பிக்கவும் கற்கவும் புகின் "[2]பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப் — பேதை வினைமேற் கொளின்" என்றவாறேயாய், நூல்கள் அருமையும் பெருமையுங் கெட்டுப் பயன்படாவாம் என்பது கருதியென்க.

உ. சிவஞான முனிவர் விளக்கம்

அங்ஙனமாயின், நூன்முகத்துரைக்கப்படும் பாயிர வுறுப்பினுள் நூலைக் கூறுவது பொருந்தாதெனின்:—இவ் விலக்கணத்

1. தொல். பாயிரம். 2. திருக்குறள், ௮௩௬.

தான் அமைபவன், ஆசிரிய னென்றாற்போல இவ்விலக்கணத் தான் அமைவது நூலென்றதன்றிப் பாயிரத்துள் நூலைக் கூறியதன்றாம் ஆதலின், ஆசிரியர் தொல்காப்பியர் நூலின் இயல்பை ஒத்துறுப்பாகிய மரபியலுள் கூறினாற்போல, இவ் வாசிரியர் பாயிரவுறுப்பினுள் கூறினாரென்க.

## க. நூலினது வரலாறு

### நூல் இன்னதென்பது

௪. நூலின் இயல்பே நுவலின் ஓரிரு
பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்
நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி
ஐயிரு குற்றமும் அகற்றிஅம் மாட்சியோ
டெண்ணான் குத்தியின் ஓத்துப் படலம்
என்னும் உறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.

எ-னின். மேற்கூறிய ஐந்தனுள் நூலினது வரலாறுணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய ஐந்தனுள், நூலினது வரலாற்றைச் சொல்லின், இருவகைப் பாயிரத்தையும் முன்னுடைத்தாதல் முதலாக இங்ஙனம் விகற்பித்த பதின்மூன்று விகற்பநடைகளைப் பெற்று வருவ எ - று. (௪)

### மூவகை நூல்

௫. முதல்வழி[1] சார்பென நூல்மூன் றாகும்.

எ - னின். நூலினது வரலாற்றைத் தொகுத்துக் கூறினார்; அவற்றுள் 'ஓரிருபாயிர'த்திற்கு வகை போந்து கிடந்தமையின் அதனை யொழித்து, ஏனையவற்றை வகுத்துக் கூறுவான் தொடங்கி, [2]'மும்மையினொன்றாய்' என்றதனை வகுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதனூல், வழிநூல், சார்புநூலென மூன்று கூற்றதாம் நூல் எ - று. (௫)

---

1. புடை என - மயிலைநாதர். 2. நன்னூல், கு. ௪.

முதனூல் இன்னதென்பது

௬. அவற்றுள்,
வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

எ-னின். நூல்மூன்றனுள் முதனூலாமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினையின் நீக்கி விளக்கப்படும் அறிவினை யுடைய உயிர்கட்கு, வினையின் நீங்கி விளங்கிய அறிவினை யுடைய முதல்வன் ஆதிக்கண்ணே செய்தது யாது, அது, முதனூலாம் எ - று. (௬)

வழிநூல் இன்னதென்பது

௭. முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்.

எ - னின். வழிநூல் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தொல்லாசிரியர் நூல்களின் பொருண் முடிபு முழுவதுமொத்து, வழிநூல் செய்வோன் முதனூ லுளதாகவுந் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக வேண்டிய விகற்பங்களையும் உடன்கூறி, அவ்விகற்பங்கள் உணர்வுடையோர் பலர்க்கும் ஒப்ப முடிந்தமையின், அழியாது உலகத்து நின்றுநிலவும் மரபினையுடையது வழிநூலாம் எ - று.

பின்னோன் வேண்டும் விகற்பங் கூறலாவது: [1]"பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல" என்றவற்றை, இறந்தது விலக்கல் எதிரது போற்றல் என்னும் உத்திகளான், விலக்கியும், போற்றியுங் கூறுதல் முதலியன.

'முனைவன் கண்டது முதனூலாகும்' என ஒருமையாற் கூறினார் ஈண்டு முன்னோர் நூலெனப் பன்மையாற் கூறியது, இறைவன் நூலையும் அவனருள்வழிப்பட்டுத் தத்தம் மரபின் வருங் குரவர் பலர் நூலையுந் தழீஇக்கோடற்கென்க; எனவே, முதனூல்

1. நன்னூல், ௪௬௨.

மாத்திரையாய் நிற்பது இறைவன் நூலும், வழி நூல்மாத்திரையாய் நிற்பது இறுதி நூலுமன்றி, இடைநிற்கு நூல்களெல்லாம், ஒருவற்கு மைந்தனாயினான் மற்றொருவற்குத் தந்தையாயினாற்போல, முதல் நூலாயும் வழி நூலாயும் நிற்குமென்பது பெற்றாம்.

சார்புநூல் இன்னதென்பது

அ. இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

எ - னின். சார்புநூல் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதனூல் வழிநூலென்னும் இருதிறத்து நூல்கட்கும், பொருள்முடிபு ஒருபுடையொத்து, ஒழிந்தன வெல்லாம் ஒவ்வாமையையுடையது சார்புநூலாம் எ - று.

எனவே, முதனூற்கு, வழிநூலுஞ் சார்புநூலும், ஒருவற்கு மைந்தனும் மருமானும் போலுமென்க.

ஒருநூல், தனக்கு வழிநூலை நோக்கின் முதல்நூலாகவும், முதல்நூலை நோக்கின் வழிநூலாகவும், அயல்நூலை நோக்கிற் சார்புநூலாகவும் நிற்குமாயினும், இம்முத்திறத்தினுள் ஒருதிறத்தின்கண் மற்றொரு திறமின்மையின், 'மும்மையினொன்றாய்' என்றார். (அ)

வழிநூலுக்குஞ் சார்புநூலுக்கும்
எய்தியதன்மேற் சிறப்புவிதி

க. முன்னோர் மொழி[1]பொருளே அன்றி அவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவம் என்பதற்கும்-முன்னோரின்
வேறுநூல் செய்துமெனும் மேற்கோளில் என்பதற்குங்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்.

எ-னின். வழிநூற்குஞ் சார்புநூற்கும் எய்தியதன்மேற் சிறப்பு விதியுணர்த்துதல் நுதலிற்று; முன்னோர் நூலின் பொருண்முடிபு முழுவது மொப்பவும் ஒருபுடையொப்பவுங் கூறுவதன்றியும், அந்நூற் சூத்திரங்களையும் ஒரோவழியெடுத்துக் கூறுகவென்றலின்.

(இ - ள்.) முன்னோர் மொழிந்த பொருளையேயன்றி அவர் மொழியினையும் பொன்போலப் போற்றிக்கொள்வ

(வே. பா.) 1. பொருளுமன்றி.

மென்பதற்கு இலச்சினையாகவும், முன்னோர் நூலையே கூறாது அந்நூலினின்றும் வழிநூல் சார்புநூல் செய்தோ மாயினும் ஆசிரியவசனங்களை ஒரோவழி யெடுத்து உடன் கூறுதல் வழிநூற்குஞ் சார்புநூற்கும் இலக்கணமாதலின் இந்நூலகத்து ஆசிரிய வசனமில்லையெனக் குற்றங் கூறுவ ராதலின், அக்குற்றம் ஒழிதற்காகவும், பழஞ்சூத்திரத்தின் கோளைக் கூறு எ - று.

ஆசிரியவசனமெனினும், மேற்கோளெனினும், பழஞ்சூத்திரத் தின் கோளெனினும் ஒக்கும்.

முன் போற்றுவம் செய்தும் என உளப்பாட்டுத் தன்மைப் பன்மை முற்றாகவும், பின்னர்க் கூறு என முன்னிலை யேவ லொருமையாகவும் கூறினமையின், வழிநூலுஞ் சார்புநூலுஞ் செய்வோர் பலர் குழீஇ ஒருவர்க்கொருவர் கூறுங் கூற்றாக, இச் சூத்திரஞ் செய்யப்பட்டதெனக. (௯)

### நாற்பொருட் பயன்

௧௦. அறம்பொருள் இன்பம்வீ டடைதல்நூற் பயனே.

என்-னின். நாற்பொருட்பயனென்றதனை வகுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறமும், பொருளும், இன்பமும், வீடடை தலுமாகிய இந்நான்கும் நூல் தழுவப்படும் பயனும் எ - று.

### ௩. சிவஞான முனிவர் விளக்கம்

வீடு என வாளா கூறாது 'வீடடைதல் என்றார்,' வீடென்பது பேரின்பமாகிய சாத்தியமாகலின். நான்கும் என்னுஞ் செவ்வெண்ணின் தொகையோடு உம்மை விகாரத்தால் தொக்கன. (௧௦)

### எழுமதம்

௧௧. எழுவகை மதமே உடன்படல் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோள் ஒருதலை துணிவே
பிறர்நூற்[1] குற்றங் காட்டல் ஏனைப்
பிறிதொடு படாஅன் தன்மதம் கொளலே.

(வே. பா.) 1. பிறநூற்.

எ - னின். எழுவகை மதமென்றதனை வகுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் எழுவகை மதமென்று சொல்லப்பட்டன, இங்ஙனம் பிறர் மதத்தை உடன்படல் முதலியவாக விதந்தனவாம் எ - று.

நூல்தழுவிய மதங்கள் பலவாயினும், தலைமை பற்றிய மதம் எழென்பது நூல்வழக்காமென்க. குற்றம் பத்து, அழகு பத்து, உத்தி முப்பத்திரண்டு என்பனவும் அன்ன.

இவ்வெழுவகை மதங்கட்கும், பதப்பொருளோடு உதாரணம் விளங்க, இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. (கக)

பத்துக் குற்றம்

கஉ. குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
கூறியது கூறல் மாறுகோளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தல் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தல் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுதல் நின்றுபயன் இன்மை
என்றிவை ஈரைங் குற்றம் நூற்கே.

எ - னின். பத்துக்குற்றமென்றதனை வகுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) நூற்குப் பத்துக் குற்றங்களாவன, குன்றக் கூறல் முதலிய இவைகளாம் எ - று.

நூல்கள் இக்குற்றங்கள் சாராது வருதல் காண்க. (கஉ)

பத்து அழகு

கஙு. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை ஆழமுடைத் தாதல்
முறையின் வைப்பே உலகமலை யாமை

விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுதல் நூலிற் கழகெனும் பத்தே.

**எ-னின். பத்தழகென்றதனை வகுத்துணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) *நூலிற்கு அழகென்று சொல்லப்படும் பத்தாவன, சுருங்கச்சொல்லல் முதலியவாம் எ - று.*

*நூல்கள் இப் பத்தழகோடுங் கூடி வருதல் காண்க.* (கந)

*முப்பத்திரண்டு உத்தி*

கச. நுதலிப் புகுதல் ஓத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டல் முடிவிடங் கூறல்
தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்
சொற்பொருள் விரித்தல் தொடர்ச்சொற் புணர்த்தல்
இரட்டுற மொழிதல் ஏதுவின் முடித்தல்
ஒப்பின் முடித்தல் மாட்டெறிந் தொழுகல்
இறந்தது விலக்கல் எதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தல் முடிந்தது முடித்தல்
உரைத்து மென்றல் உரைத்தாம் என்றல்
ஒருதலை துணிதல் எடுத்துக் காட்டல்
எடுத்த மொழியின் எய்த வைத்தல்
இன்ன தல்ல திதுவென மொழிதல்
எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்
பிறநூல்[1] முடிந்தது தானுடன் படுதல்
தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்
சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்
ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்
உய்த்துணர வைப்பென உத்திஎண் ணைன்கே.

(பாடம்) 1. *பிறர்நூல்.*

எ - னின். முப்பத்திரண்டுத்தியென்றதனை வகுத்துணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) முப்பத்திரண்டுத்தியாவன, நுதலிப்புகு தல் முதலியவாம் எ - று.

இவற்றுள் ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல் என்ப தோர் உத்தி. உய்த்துணரவைப்பென்பதனை உத்திக்கடையாக்கி, உய்த்துணரவைப்பெனுமுத்தி யெண்ணுன்கே எனப் பாடமோதி, அதனை இரண்டுத்தியாக்கினும் அமையும்.

இவ்வுத்திகட்குப், பதப்பொருளோடு உதாரணம் விளங்க, இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க.

மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தி யுள்ளுங் கூறியதென்னையெனின்:—கொள்கை வகையான் மத மென்றும், சிறப்புவகையான் அழகென்றும், இம்மதம் அழகு முதலிய வெல்லாம் புத்திநுட்பத்தமையும்வகையான் உத்தி யென்றுங் கூறப்படுமென்க. அங்ஙனமாயின், மதம் அழகெல்லா வற்றையும் உத்தியின் பாற்படுத்துக் கூருது, சிலவற்றைக் கூறிய தென்னையெனின் :—வரம்பின்றி வரும் உத்தியுள் தலைமைபற்றிக் கூறுமுப்பத்திரண்டின் வந்தன கூறினுரென்க. (கச)

உத்தி இன்னதென்பது

கரு. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி அறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துதல் தந்திர உத்தி.

எ - னின். மேல் தொகுத்தும் வகுத்துங் கூறிய உத்திக்கிலக் கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஓரிலக்கண நூலால் உணர்த்தப்படும் பொருளை நூல்வழக்கோடும் உலகவழக்கோடும் பொருந்த வுணர்த்தி, அப்பொருளை, மற்ருேரிலக்கிய நூற்கண்ணும், ஏற்குமிடமறிந்து, இவ்விடத்திற்கு இஃதாமெனக் கருதித் தக்க வகையாகச் செலுத்துவது தந்திரவுத்தியாம் எ - று.

தந்திரமென்பது நூல். உத்தியான் அமைக்கும் பொருளை உத்தியென்றது ஆகுபெயர். (கரு)

ஓத்து இன்னதென்பது

கசு. [1]நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை ஒருவழி வைப்ப
தோத்தென மொழிப உயர்மொழிப் புலவர்.

எ - னின். இருவகையுறுப்பினுள் ஓத்துறுப்பாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒரு சாதியாயுள்ள மணிகளை முறையே பதித்தாற்போல, ஒரு சாதியாயுள்ள பொருள்களை ஒரு வழிப்படக் கூறுவது ஓத்துறுப்பாமெனச் சொல்லுவர், உயிர்க்குறுதி பயக்கும் மெய்ம்மொழிகளையுடைய புலவர் எ - று.

நேர்தல் - ஒன்றுபடுதல்.

இவ்வாறு வருதல் இந்நூலுறுப்பினுட் காண்க. (கசு)

படலம் இன்னதென்பது

கஎ. ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரின் அதுபடலம் ஆகும்.

எ - னின். படலவுறுப்பாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருவழிப்படாது விராய பொருளோடு பொருந்திப் பலபொருளை உணர்த்தும் பொதுச் சொற்கள் ஒரோவழியன்றித் தொடர்ந்துவரின், அது படலவுறுப்பாம் எ - று.

படலவுறுப்பினையுடைய காப்பியங்களுட் பாட்டுடைத்தலைவனது சரிதையேயன்றி மலை கடல் நாடு முதலிய பல பொருட்டிறங்களும் விரவிவருதலும், பலபொருளை யுணர்த்தும் பொதுச்சொற்கள் ஒரோவழியன்றித் தொடர்ந்து வருதலுங் காண்க. (கஎ)

---

(பாடம்) 1. இச்சூத்திரமும் அடுத்த சூத்திரமும் இந்நூலாசிரியரால் தொல்காப்பியத்தினின்றும் எடுத்தாளப்பட்ட ஆசிரிய வசனம். (தொல். செய்.-கஎக-௨.)

### சூத்திரம் இன்னதென்பது

௧௮. சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வன் ஆடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்.

எ - னின். சூத்திரமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சிறிய கண்ணாடியிற் பெரிய சரீரமுதலிய வற்றின் சாயை செவ்வையாகச் செறிந்து இனிதாக விளங்கினாற்போலச் செவ்வாகச் செறிந்து இனிதாக விளங்கச், சில்வகையெழுத்துக்களான் இயன்ற யாப்பின்கட் பல்வகைப்பட்ட பொருள்களைச் செவ்வாகச் செறித்து இனிதாக விளக்கி, அப் பல பொருள் திண்மையும் நுண்மையுஞ் சிறந்து வருவன சூத்திரங்களாம் எ - று.

திட்பம் - குற்றமின்மையின் அலைவற நிற்றல்.

இவ்வாறு வருதல் இச்சூத்திரத்துள்ளுங் காண்க. (௧௮)

### சூத்திர நிலை

௧௯. ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத் திரநிலை.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மேற்கூறிய சூத்திரங்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கு நிலைகள், ஆற்றொழுக்கு முதலிய நான்கையும் போலும் எ - று.

இவ்வாறு நிற்றல் இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. (௧௯)

### சூத்திரங்களுக்குக் காரணவகையால் வரும் பெயர் வேறுபாடு

௨௦. பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) பிண்டமெனவும், தொகையெனவும், வகையெனவும், குறியெனவும், செய்கையெனவும், இவற்றை அலைவறக் கொண்டு இவற்றின் புறத்து அடையாய் வரும் புறனடை யெனவுங் கூறுங் கூற்றினையுடையவாம் மேற்கூறிய சூத்திரங்கள் எ - று.

இவற்றுள், **பிண்டமாவன**, 'பன்னிருபாற்றதுவே' என்றற்றொடக்கத்துத் தொகைபோலாது 'நன்கியம்புவனெழுத்தே' என்றற்றொடக்கத்துப் பொதுப்பட வருவன. தொகையும், வகையும், புறனடையும் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. விரி வகையின்பாற்படுதலிற் கூறாராயினார். **குறியாவன**, இவை உயிர், இவை ஒற்று, இவை பெயர், இவை வினை என்றற்றொடக்கத்து அறிதன்மாத்திரையாய் வருவன. **குறியென்பது**, அறிதலை யுணர்த்திய முதனிலைத் தொழிற்பெயர். **செய்கையாவன**, பதமுன் விகுதியும் பதமும் உருபும் புணரும் புணர்ச்சிவிதி அறிந்து, அங்ஙனம் அறிதன்மாத்திரையாய் நில்லாது, அவ்வாறு வேண்டுழிப் புணர்த்தலைச் செய்தலும், பெயர் வினை முதலிய கொள்ளும் முடிபுவிதி அறிந்து, அங்ஙனம் அறிதன்மாத்திரையாய் நில்லாது, அவ்வாறு வேண்டுழி முடித்தலைச் செய்தலு முதலியன. இப் பிண்ட முதலிய ஆறு பெயரும், அப்பொருளை யுணர்த்துஞ் சூத்திரஙகட்கு ஆகுபெயராய் வந்தன.

எல்லாச் சூத்திரங்களும் பிண்டந் தொகை வகை புறனடை யென்னு நான்கனுள் அடங்குமன்றே, அங்ஙனமாகக் குறியினையுஞ் செய்கையினையும் வேறோதியது, எல்லா நூலுள்ளுஞ் சொல்லப்படுவன அறிவதுஞ் செய்வதுமன்றி வேறின்மையின், பிண்டமாக்கியுந் தொகுத்தும் வகுத்தும் புறத்தடை கொடுத்துங் கூறப்படுவன குறியுஞ் செய்கையுமே யென்பது தோன்றற்கென்க. இங்ஙனங் கூறவே, எல்லா நூலுள்ளும் வரும் எல்லாச் சூத்திரங்களும், குறிச்சூத்திரஞ் செய்கைச் சூத்திரமென இரண்டாய் அடங்குமென்பது பெற்றாம்.

இவ்வாறன்றிக், குறியென்பதற்குப் பெயர்களையுணர்த்துஞ் சூத்திரமென்றும், செய்கை யென்பதற்கு எழுத்துப்புணர்ச்சியை யுணர்த்துஞ் சூத்திரமென்றும், பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங் கூறின், வினையிலக்கணங்களைக் கூறுஞ் சூத்திரங்களையும் விதந்து கூறவேண்டும், அவையின்மையானும், பெயரும் புணர்ச்சியும் இவ்விலக்கண நூற்கன்றிப் பொதுப்பாயிரமாய் எல்லா நூற்கும் பொருந்தாமையானும், அது பொருளன்றென்க. (௨௦)

உரையினது பொதுவிலக்கணம்

உக. பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை உதாரணம் வினாவிடை விசேடம்
விரிவதி காரந் துணிவு பயனொ
டாசிரிய வசனமென் றீரே ழுரையே.

எ - னின். மேற் காண்டிகையுரை விருத்தியுரை யென்றார், அவற்றையுணர்த்துவான்றொடங்கி, உரையினது பொதுவிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பதினான்கு வகையான் உரைக்கப்படும் நூற்குரை எ - று.

இவற்றுள், விசேடமாவது, சூத்திரத்துட் பொருளன்றி ஆண்டைக்கு வேண்டுவன தந்துரைத்தல். விரிவாவது, வேற்றுமை முதலிய தொக்கு நின்றனவற்றை விரிக்க வேண்டுழி விரித்துரைத்தல். அதிகாரமாவது, எடுத்துக்கொண்ட அதிகாரம் இதுவாதலின், இச்சூத்திரத்ததிகரித்த பொருள் இதுவென அவ்வதிகாரத்தோடு பொருந்த உரைக்கவேண்டுழி உரைத்தல். துணிவாவது, ஐயுறக்கிடந்துழி, இதற்கிதுவே பொருளென உரைத்தல். ஏனைய, பொருள் விளங்கிக் கிடந்தன.

இப்பதினான்கும் இவ்வுரையுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. (உக)

காண்டிகையுரை இன்னதென்பது

உஉ. கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை ஆக்க லானும்
சூத்திரத் துட்பொருள் தோற்றுவ காண்டிகை.

எ-னின். காண்டிகையுரையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய பதினான்கினுட் கருத்துரையும் பதப்பொருளும் உதாரணமுமாகிய மூன்றனையும் உரைத்தலானும், அம்மூன்றனோடு வினாவிடையென்னும் இரண்டனையுங் கூட்டி உரைத்தலானும், சூத்திரத்துட் பொருளை விளக்குவன காண்டிகையுரைகளாம எ - று. (உஉ)

விருத்தியுரை இன்னதென்பது

உரு. சூத்திரத் துட்பொரு ளன்றியும் ஆண்டைக்
கின்றி [1]யமையா யாவையும் விளங்கத்
[2]தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐயம் அகலவைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை எஞ்சா திசைப்பது விருத்தி.

எ - னின். விருத்தியுரையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) காண்டிகையுரைபோற் சூத்திரத்துட் பொருள் விளக்குதன் மாத்திரையின் நில்லாது, அவ்விடங் கட்கு இன்றியமையாத பொருள்கள் யாவையும் விளங்கத், தானுரைக்கும் உரையானும், ஆசிரிய வசனங்களானும், மேற்கூறிய காண்டிகையுறுப்பைந்தனுனும், ஐயந்தீரச், சுருங்காது, மெய்ம்மைப் பொருளை விரித்துரைப்பது விருத்தியுரையாம் எ - று.

சூத்திரத்துட் பொருளன்றியும் என்றமையான், மேற்கூறிய பதினொன்குறுப்புங் கொண்டது விருத்தியுரை யென்பது பெற்றும். (உரு)

நூலென்னும் பெயர்க்காரணம்

உச. பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூல்முடியும் ஆறு.

எ - னின். நூலென்னும் பெயர் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நூல் முடியுமாறு இதுவாதலின், நூலென்றது உவமையாகுபெயராம் எ - று. (உச)

(பாடம்) 1. அமையாதி. 2. தானுரை.

உரு. உரத்தின் வளம்பெருக்கி உள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா-மரத்தின்
கனக்கோட்டம் தீர்க்குநூல் அஃதேபோல் மாந்தர்
மனக்கோட்டம் தீர்க்குநூல் மாண்பு.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) *அந் நூல்போற் செப்பஞ்செய்தலானும், நூலென்றது உவமையாகுபெயராம் எ - று.*

*புரத்தினது உரத்தின் வளம் பெருக்கி உள்ளிய தீமை வளமுருக்கியெனக் கூட்டுக. புரம் - உடம்பு. உரம் - நெஞ்சு.*

*பின்பு தீமை வளமென்றமையான், முன்பு நல்வளமெனத் தந்துரைக்க.* (உரு)

## உ. ஆசிரியனது வரலாறு

*நல்லாசிரிய ரிலக்கணம்*

உசு. குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகிய லறிவோ டுயர்குணம் இனையவும்
அமைபவன் நூலுரை ஆசிரி யன்னே.

எ - னின். நிறுத்த முறையானே ஆசிரியனது வரலா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *இவ் வியல்பினையுடையார் கற்பிக்குமாசிரியராவார் எ - று.* (உசு)

உஎ. தெரிவரும் பெருமையும் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி அளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பா கும்மே

எ - னின். மேற்கூறிய உவமையை விரித்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நிலத்தினது மாட்சிமை இதுவாதலின், இஃதுவமையாயிற்று எ - று. (உஎ)

உஅ. அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மலையினது மாட்சிமை இதுவாதலின், இஃதுவமையாயிற்று எ - று. (உஅ)

உகூ. ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) நிறைகோலினது மாட்சிமை இதுவாதலின், இஃதுவமையாயிற்று எ - று. (உகூ)

௩0. மங்கல மாகி இன்றி யமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மலரினது மாட்சிமை இதுவாதலின், இஃதுவமையாயிற்று எ - று.

இவ் வுவமைகளினது மாட்சிமைபோலப் பொருளினது மாட்சிமையும் விரித்துரைத்துக் கொள்க. (௩0)

ஆசிரியராகாதவ ரிலக்கணம்

௩௧. மொழிகுணம் இன்மையும் இழிகுண இயல்பும்
அழுக்கா றவாவஞ்சம் அச்சம் ஆடலும்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் கொப்பென முரண்கோள் சிந்தையும்
உடையோர் இலரா சிரியரா குதலே.

எ-னின். ஆசிரியராகார் இவரேன வுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இக் குற்றங்களேயுடையோர் கற்பிக்கு மாசிரியராகார் எ - று. (௩௧)

௩௨. பெய்த முறையன்றிப் பிறழ உடன்றரும்
செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.

எ - னின். மேற்கூறிய உவமையை விரித்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கழற்பெய்த குடத்தின் குற்றம் இது வாதலின், இஃதுவமையாயிற்று எ - று. (௩௨)

௩௩. தானே தரக்கொளின் அன்றித் தன்பால்
மேவிக் கொளக்கொடா இடத்தது மடற்பனே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மடற்பனேயின் குற்றம் இதுவாதலின், இஃதுவமையாயிற்று எ - று. (௩௩)

௩௪. அரிதிற் பெயக்கொண் டப்பொருள் தான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) பருத்தி பெய்த குண்டிகையின் குற்றம் இதுவாதலின், இஃதுவமையாயிற்று எ - று. (௩௪)

௩௫. பல்வகை உதவி வழிபடு பண்பின்
அல்லோர்க் களிக்கும் அதுமுடத் தெங்கே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) முடத்தெங்கினது குற்றம் இதுவாதலின், இஃதுவமையாயிற்று எ - று.

இவ் வுவமைகளின் குற்றம்போலப் பொருளின் குற்றமும் விரித்துரைத்துக் கொள்க. (௩௫)

## ௩. பாடஞ்சொல்லலினது வரலாறு

௩௬ ஈதல் இயல்பே இயம்புங் காலைக்
காலமும் இடனும் வாலிதின் நோக்கிச்
சிறந்துழி இருந்துதன் தெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்தவன் உளங்கொளக்
கோட்டமில் மனத்தின்நூல் கொடுத்தல் என்ப.

எ - னின். நிறுத்த முறையானே ஆசிரியன் கற்பிக்குமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *கற்பிக்குமாறு இவ்வாறெனச் சொல்லுவர் புலவர் எ - று.* (௩௬)

---

## ௪. மாணாக்கனது வரலாறு

*மாணாக்க ரிலக்கணம்*

௩௭. தன்மகன் ஆசான் மகனே மன்மகன்
பொருள்நனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே.

எ - னின். நிறுத்தமுறையானே மாணாக்கனது வரலாறுணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) *இவ் வறுவர்க்குஞ் சொல்லப்படுவது நூல் எ - று.* (௩௭)

௩௮. அன்னம் ஆவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடம்ஆ டெருமை நெய்யரி
அன்னர் தலைஇடை கடைமா ணாக்கர்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மேற்கூறிய அறுவருள், அன்னமும் பசுவும் போல்வார் தலைமாணாக்கர்; மண்ணுங் கிளியும்போல்வார் இடைமாணாக்கர்; இல்லிக்குடமும் ஆடும் எருமையும் நெய்யரியும் போல்வார் கடைமாணாக்கர் எ - று.

இவ்வுவமைத் திறமும் பொருட்டிறமும் விரித்துரைத்துக் கொள்க. (௩அ)

மாணாக்கராகாதவ ரிலக்கணம்

௩கூ. களிமடி மானி காமி கள்வன்
பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் தறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே.

எ - னின். மாணாக்கராகார் இவரென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இக் குற்றங்களையுடையார்க்கு நூலைச் சொல்லார் ஆசிரியர் எ - று. (௩கூ)

## ரு. பாடங்கேட்டலின் வரலாறு

௪0. கோடல் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன்குறிப் பிற்சார்ந்
திருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவன் அன்னஆர் வத்த னாகிச்
சித்திரப் பாவையின் அத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகிக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போதல் என்மனார் புலவர்.

எ - னின். நிறுத்தமுறையானே மாணாக்கன் நூலைக் கற்றுமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கற்குமாறு இவ்வாறெனச் சொல்லுவர் புலவர் எ - று. (௪0)

௪க. நூல்பயில் இயல்பே நவலின்வழக் கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை அமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினயவை விடுத்தல் என்றிவை
கடனாக் கொளினே மடம்நனி இகக்கும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்வாறு நூலைப் பயின்றவர்க்கு அறியாமை மிகுதியும் போம் எ - று. (௪க)

௪உ. ஒருகுறி கேட்போன் இருகாற் கேட்பிற்
பெருக நூலிற் பிழைபா டிலனே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) ஒருகாற் கேட்ட துணையானே அமையாது இருகால் கேட்பானாயின், அந்நூலின்கண் பிழைபாடு மிகுதியுமிலன் எ - று. (௪உ)

௪௩. மூக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மூக்கால் கேட்டானாயின், ஆசிரியன் கற்பித்த முறைபறிந்து உரைப்பன் எ - று. (௪௩)

௪௪. ஆசான் உரைத்த தமைவரக் கொளினும்
காற்கூ றல்லது பற்றலன் ஆகும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) ஆசிரியன் கற்பித்தனவற்றைத் தன்னறிவின்கண் அமையக் கற்றானாயினும், புலமைத் திறத்தில் காற்கூறல்லது பற்றான் எ - று. (௪௪)

சரு. அவ்வினை யாளரோடு பயில்வகை யொருகால்
செவ்வியின் உரைப்ப அவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) *தன்போலியரோடு பயிலும் வகையாற் காற்கூறும், அக்கல்வியைத் தன்மாணுக்கர்க்கும் அவைக் களத்தோர்க்கும் உணர விரித்துரைத்தலான் அரைக் கூறுமாகக், குற்றமற்ற புலமை நிரம்பும் எ - று.* (சரு)

சசு. அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி
நிழலின் நீங்கான் நிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசான் உவக்கும் அத்திறம்
அறத்தின் திரியாப் படர்ச்சி வழிபாடே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) *இவ்வாறு ஒழுகுதல் வழிபாடாம் எ - று.* (சசு)

போதுப்பாயிரம் முற்றிற்று.

# சிறப்புப்பாயிரத் திலக்கணம்

*சிறப்புப் பாயிரத்துக்குப் பொதுவிதி*

சஎ. ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனொ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.

எ - னின். 'பாயிரம் பொதுச்சிறப்பு' என மேல் நிறுத்த முறையானே 'மலர்தலையுலகின்' என்றற்றொடக்கத்தனவாய்எல்லா நூற்கண்ணும் வருஞ் சிறப்புப் பாயிரங்களினது பொதுவிலக்கண முணர்த்துதல் நுதலிற்று. இதனையும் பொதுப்பாயிரத்துள் கூறினார், பொதுவைந்தனுள் நான்முகத்தினது இலக்கணமாதலின் என்க.

*(இ - ள்.) இவ்வெட்டுப் பொருளையும் விளங்க உணர்த்துவது சிறப்புப்பாயிரத்து இலக்கணமாம் எ - று.*

*ஆக்கியோன் பெயரே என்றற்றொடக்கத்தனவற்றுள் சிறப் பென்பது தோன்றினமையிற், பாயிரம் என வாளா கூறினா ரென்க.* *(சஎ)*

சஅ. காலங் களனே காரணம் என்றிம்
மூவகை யேற்றி மொழிநரும் உளரே.

எ - னின். இதுவும் அது.

*(இ - ள்.) அவ்வெட்டனொடு இம்மூன்றனையுங் கூட்டிப், பதினொன்றாகக் கூறுவாருமுளர் எ - று.* *(சஅ)*

*நூற்பெயருக்குச் சிறப்புவிதி*

சகூ. முதனூல் கருத்தன் அளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் தன்மைமுதல் நிமித்தினும்
இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே.

எ - னின். மேற்கூறிய பதினொன்றனுள் நூற்பெயருக்குச் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதனூல் முதல் தன்மை யீறாகக் கூறிய ஏழும் பிறவுமாகிய காரணங்களானும், இடுகுறியானும், நூற்குப் பெயர் வரும் எ - று.

வரலாறு. முதனூலால் பெயர்பெற்றன ஆரியப்படலம் பாரதம் முதலாயின. கருத்தனால் பெயர்பெற்றன அகத்தியந் தொல்காப்பியம் முதலாயின. அளவினால் பெயர்பெற்றன பன்னிருபடலம் நாலடி நானூறு முதலாயின. மிகுதியால் பெயர் பெற்றன களவியல் முதலாயின. பொருளால் பெயர் பெற்றன அகப்பொருள் முதலாயின. செய்வித்தோனால் பெயர் பெற்றன சாதவாகனம் முதலாயின. தன்மையால் பெயர் பெற்றன சிந்தாமணி. நன்னூல் முதலாயின. இடுகுறியால் பெயர் பெற்றன நிகண்டு. கலைக்கோட்டுத்தண்டு முதலாயின. பிறவுமன்ன. (சக)

வழியின்வகையாகிய நூல்யாப்புக்குச் சிறப்புவிதி

ருo. தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப.

எ - னின். வழியின் வகையாகிய நூல்யாப்பினுக்குச் சிறப்பு விதி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நூல்யாப்பு இந் நான்கு கூற்றதாம் என்று சொல்லுவர் புலவர் எ - று.

வெண்பா முதலிய யாப்பினோடு இவற்றிற்கு வேற்றுமை தோன்ற, நூல்யாப்பு என்றார். (ருo)

சிறப்புப்பாயிரஞ் செய்தற்குரியார் இவரென்பது

ருக. தன்ஆ சிரியன் தன்னொடு கற்றோன்
தன்மா ணாக்கன் தகும்உரை காரனென்று
இன்னோர் பாயிரம் இயம்புதல் கடனே.

எ - னின். இவ்விலக்கணங்களையுடைய சிறப்புப்பாயிரங் கூறுதற்குரியார் இவரெனவுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருவன் கூறிய நூற்கு இந்நால்வருள் ஒருவர் சிறப்புப்பாயிரங்கூறுதல் முறைமையாம் எ-று. (ருக)

சிறப்புப்பாயிரம் பிறர் செய்தற்குக் காரணம்

௫௨. தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்தற் புகழ்தல் தகுதி அன்றே.

எ - னின். சிறப்புப்பாயிரம் பிறர் கூறுதற்குக் காரண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தோன்றாத நுட்பங்களையெல்லாந் தோற்றிப் பல துறைப்பட்டு விரிந்த நூலைச்செய்து முடித்தானாயினும், தன்னைத் தான் புகழ்தல் தகுதியன்றாம்; ஆகலின், நூல் செய்தானது புகழாகிய சிறப்புப்பாயிரத்தைப பிறர் கூறவேண்டும் எ - று. (௫௨)

தற்புகழ்ச்சி குற்றமாகாத இடங்கள்

௫௩. மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும்
தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்
மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் புகழ்தலும் தகும்புல வோர்க்கே.

எ - னின். தற்புகழ்ச்சியும் ஒரோவழிக் குற்றம் அன்றென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விடங்களாயின், தன்னைப் புகழ்தலுந் தகும் புலவோர்க்கு எ - று.

புகழ்தலும் என்ற உம்மையான், இவ்விடங்களினுந் தன்னைப் புகழாமையே தகுதியென்பது பெற்றாம். (௫௩)

பாயிரம் நூலுக்கு இன்றியமையாச் சிறப்பினதென்பது

௫௪. ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே.

எ - னின். இருவகைப் பாயிரங்களும் நூற்கு இன்றியமையா தனவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆயிரம் உறுப்புக்களான் விரிந்த நூலாயினும், பாயிரம் இல்லாதது நூலன்று எ - று. (௫௪)

௫௫. மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோள் நல்லார்க் கணியும்போல்-நாடிமுன்
ஐதுரையா நின்ற அணிந்துரையை எந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது.

எ-னின். மேற்பாயிரமில்லது பனுவல் அன்றென்றார், அஃது அன்றதற்குக் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) *அறிவுடையோர், மாடம் முதலிய மூன்றற்கும் சித்திர முதலிய மூன்றும்போலக் கருதி, அழகிதாகிய பொருளை உணர்த்தாநின்ற இருவகைப் பாயிரங்களையும் உரைத்து, எவ்வகைப்பட்ட பெரிய நூல்கட்கும் முன்னர்ப் பெய்துவைத்தார் பெரும்பாலும்; ஆதலின் பாயிரமில்லது பனுவலன்றாம் எ-று.* (௫௫)

சிறப்புப்பாயிரத் திலக்கணம் முற்றிற்று.

---

# முதலாவது

# எழுத்ததிகாரம்

## ச. சிவஞானமுனிவர் விளக்கம்

எழுத்ததிகாரமென்பது, எழுத்தினது அதிகாரத்தையுடையதென அன்மொழித்தொகையாய், அப்படலத்திற்குக் காரணக் குறியாயிற்று.

எழுத்தென்றது, அகரமுதல னகர இறுவாய்க் கிடந்த முதலெழுத்து முப்பதும், உயிர்மெய் முதலிய சார்பெழுத்துப் பத்துமாம். அவற்றிற்கு எழுத்தென்னுங்குறி 'மொழிமுதற் காரணம்' என்னுஞ் சூத்திரத்தால் ஓதுபவாகலின், ஈண்டு எதிரதுபோற்றி ஆளப்பட்டது.

அதிகாரம் - அதிகரித்தல். அஃது இருவகைப்படும். அவற்றுள், ஒன்று, வேந்தன் இருந்துழியிருந்து தன்னிலமுழுவதும் தன்னாணையின் நடப்பச் செய்வதுபோல, ஒருசொல் நின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல ஓத்துக்களும் தன்பொருளை நுதலிவரச் செய்வது. ஒன்று, சென்று நடாத்துந் தண்டத்தலைவர்போல, ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடுஞ் சென்றியைந்து தன் பொருளைப் பயப்பிப்பது. இவற்றிற்கு, முறையே, வடநூலார் யதோத்தேசபக்கம் எனவுங் காரியகாலபக்கம் எனவுங் கூறுப. இது சேனாவரையர் உரையானுமுணர்க. அவற்றுள், ஈண்டு அதிகாரமென்றது முன்னையது; அதனை உடையதெனவே, எழுத்தை நுதலி வரும் பல ஓத்தினது தொகுதி எழுத்ததிகாரம் என்றாராயிற்று.

எழுத்தினது அதிகாரத்தையுடையது என்புழி, ஆறாவது, வினைமுதற் பொருண்மையின்கண் வந்த காரகம்.

இப்படலத்துள் விதிக்கப்படுவனவெல்லாங் கருவியுஞ் செய்கையும் என இருவகைப்படும். அவற்றுள் கருவி எழுத்தியல் பதவியல் என்னும் இரண்டு ஓத்தானும், செய்கை உயிரீற்றுப் புணரியல் முதலிய மூன்று ஓத்தானுங் கூறப்படும். கருவி பொதுவுஞ் சிறப்பும் என இருவகைத்து. முதலிரண்டு ஓத்தினுங் கூறப்படுவன பொதுக்கருவி. உயிரீற்றுப்புணரியல் முதற்கண் புணர்ச்சி இன்னதெனக் கூறப்படுவனவும், உருபுபுணரியலின் இறுதிக்கண் சாரியைத் தோற்றங் கூறப்படுவனவும், செய்கை ஒன்றற்கே உரிய கருவியாகலின் சிறப்புக் கருவி.

---

# க. எழுத்தியல்

## கடவுள் வணக்கமும் அதிகாரமும்

ருகூ. பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த
நான்முகற் றொழுதுநன் கியம்புவன் எழுத்தே.

எ - னின். கடவுள் வணக்கமும் அதிகாரமும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பூக்கள் மலிந்த அசோகமரத்தினது அலங் கரிக்கும நிழலின்கண் எழுந்தருளியிருந்த நான்கு திரு முகங்களையுடைய கடவுளை வணங்கி, நன்றாகச் சொல்லு வன் எழுத்திலக்கணத்தை எ - று.

எல்லா நூலும் மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டு தலின் பூமலியென்றும், எல்லாச் சமயத்தோராலும் வணங்கப் படும் படைப்பு முதலிய ஐந்தொழிற்குமுரிய எல்லாக் கடவுளா கியும் நின்றான் ஒருவனே என்பார் அருகனை நான்முகன் என்றுங்

இவ்வாறு வள்ளுவ நாயனாரும்,

"[1] மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என வரையாது கூறுதல் காண்க.

எழுத்து என்பது ஆகுபெயர். ஏகாரம் ஈற்றசை.

எல்லாம் வல்ல கடவுளை வணங்கலான் இனிது முடியும் என்பது கருதி நன்கியம்புவன் என்று புகுந்தமையின், இது நுதலிப்புகுதல் என்னும் உத்தி. (க)

## எழுத்திலக்கணத்தின் பகுதி

ருஎ. எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதலீ றிடைநிலை போலி என்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.

---

1. குறள்-ா.

எ - னின். அவ்வெழுத்திலக்கணம் இத்துணைத்து என்ப துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பன்னிரு பகுதியினையும் உடைத்து அவ்வெழுத்திலக்கணம் எ - று.

என்று என்பது, எண்ணிடைச்சொல்.

இச் சூத்திரந் தொகுத்துச் சுட்டல் என்னும் உத்தி: மேல் வருவனவெல்லாம் வகுத்துக்காட்டல். (உ)

## க. எண்

### எழுத்து இன்னதென்பதும் அதன்வகையும்

௫அ. மொழிமுதற் காரணம் ஆம்அணுத் திரள்ஒலி
எழுத்தது முதல்சார் பெனஇரு வகைத்தே.

எ - னின். 'பன்னிருபாற் றதுவே' என்றவற்றுள், எழுத்தின் அகத்திலக்கணமாகிய பத்தையும் ஓரியலாகவும், அதன் புறத்திலக்கணமாகிய பதம் புணர்பு என்னும் இரண்டனுள் அவ்வெழுத்தாறு தம் பதத்தை ஓரியலாகவும், அப் பதம் புணரும் புணர்ப்பை மூன்றியலாகவும், ஓத்து முறைவைப்பு என்னும் உத்தியான் வைக்கப் புகுந்து, முதற்கண் வைத்த எழுத்தியலின் எழுத்தினது எண்ணினை நிறுத்தமுறையான் உணர்த்துவான்தொடங்கி, எழுத்து இன்னதென்பதூஉம் அதன் வகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மொழிக்கு முதற்காரணமாய் அணுத்திரளின் காரியமாய் வரும் ஒலியாவது எழுத்து; அது முதலெழுத்து என்றும் சார்பெழுத்து என்றும் இருவகையினை உடைத்து எ - று.

எனவே, மொழிக்கு முதற்காரணம் எழுத்தானாற்போல, எழுத்திற்கு முதற்காரணம் அணுத்திரள் என்பது பெற்றாம்.

ஆம் என்னும் பெயரெச்சம் ஒலி என்னும் பெயரோடு முடிந்தது.

முற்கு[1] வீளை[2] முதலியவற்றிற்கு முதற்காரணமாய் அணுத் திரளின் காரியமாய் வரும் ஒலி எழுத்தாகாமையின், மொழி முதற்காரணமாம் ஒலி யென்றார். சிதலது நீர்வாய்ச் சிறுதுக ளால் பெரும் புற்றுருவமைந்த பெற்றிய தென்ன ஐம்புலப் பேருரு வைந்தும் ஐந்தணுவாய் இம்பரில் சமைவது யாவரு மறிதலின், அநாதிகாரணமாகிய மாயையினை ஈண்டுக் கூறாது, ஆதிகாரணமாகிய செவிப்புலனும் அணுத்திரளை எழுத்திற்கு முதற்காரணம் என்றார். இவ்வாசிரியர்க்கு மாயை[3] உடன்பா டன்று. அணுத்திரள்[4] ஒன்றமே துணிவெனின் பிறிதொடு படாஅன் தன்மதங்கொளல் என்னும் மதம் படக் கூறினார் என் றுணர்க. ஈண்டு அணு என்றது ஒலியினது நுட்பத்தை. (௩)

## முதலெழுத்தின் விரி

௩௬. உயிரும்[5] உடம்புமாம் முப்பது முதலே.

எ - னின். முதலெழுத்தின் விரியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிரும் உடம்புமாகும் முப்பதெழுத்தும் முதலெழுத்தாம் எ - று. (௪)

---

1. முற்கு - முக்குதலின் ஒலி.

2. வீளை - நாவை மடித்துச் செய்யப்படும் சீழ்க்கை யென் னும் ஒலி: அது 'சீட்டி' என இக்காலத்து வழங்கும். (குறிஞ் சிப்-161) முற்கு வீளை இலதை யென்பன. அடிநாவடியிற் காட் டப்படும் ஒலிக்குறிப்பென்பர் இராமாநுச கவிராயர்.

3. "தமக்கு மாயை யுடன்பாடுண்மையின் மொழிக் காரணமா நாதகாரிய வொலி எழுத்து" எனச் சூத்திரிப்பர், இலக்கண விளக்க நூலார்.

4. "அணுத்திரள் என்றது நாதம்; ஒலி என்றது அதன் காரியவொலி; அணு என்ற ஒலி நுட்பத்தை" என்பர், இராமாநுச கவிராயர்.

5. "ஊதியத்திற்கு முதற்பணம் என்றதுபோலச் சார் பெழுத்திற்கு முதலெழுத்து காரணங்காட்டி நின்றது. இதைச் சார்ந்து வருதலால் சார்பெழுத்தெனப்பட்டது. முப்பது முதல் எண் வரையாது கூறியது உரைத்தல் என்னும் உத்தி" என்பர் இராமாநுச கவிராயர்.

## சார்பெழுத்தின் வகை

கூ௦. உயிர்மெய் ஆய்தம் உயிரளபொற்றளபு
அஃகிய இஉ ஐஒள மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத் தாகும்

எ - னின். சார்பெழுத்தின் விரி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பத்துஞ் சார்பெழுத்தாம் எ - று.

அஃகுதல் - சுருங்குதல். தனிநிலை - ஆய்தம்.

உயிர்களோடும் மெய்களோடுங் கூடியுங் கூடாதும் [1]அலி போலத் தனிநிற்றலின் தனிநிலை யெனப்படும்.

உயிர்மெய் உயிரும் மெய்யுங் கூடிப் பிறத்தலானும், ஆய்தம் உயிர்போல,

[2]"அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு"

என அலகுபெற்றும்; மெய்போலத்,

[3]"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்

என அலகு பெறாதும், ஒருபுடையொத்து, அவற்றினிடையே சார்ந்து வருதலானும், ஏனைய தத்தம் முதலெழுத்தின் திரிபு விகாரத்தாற் பிறத்தலானும், சார்பெழுத்தாயினவெனக் கொள்க.

### ரு. சிவஞானமுனிவர் விளக்கம்

அவ்வாறன்றி, உயிர்மெய்யொழிந்தன, அகர முதலியனபோல் தனித்தானும், ககர முதலியனபோல உகரமொடு சிவணி யானும், இயங்கும் இயல்பின்றி, ஒருமொழியைச் சார்ந்து வருதலே தமக்கு இலக்கணமாக உடைமையிற் சார்பெழுத் தாயின எனக் கோடலுமா மென்க.

---

1. ஆய்தத்தை அலியெழுத்தென்பார், பாட்டியலுடையார்.
2. குறள்-௯௪௩.
3. குறள்-௨௩௬.

இனி, ஆசிரியர் தொல்காப்பியர் செய்கை ஒன்றனையும் நோக்கிச் சார்பெழுத்து மூன்றெனக் கருவி செய்தாராகலின், இவ் வாசிரியர் செய்கையுஞ் செய்யுளியலும் நோக்கிச் சார் பெழுத்துப் பத்தெனக் கருவி செய்தாரென்பதும் உய்த் துணர்க. (ங)

சார்பெழுத்தின் விரி

சுக. உயிர்மெய் இரட்டுநூற் றெட்டுயர் ஆய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறேழ் அஃகும் இம்முப் பானேழ்
உகரம் ஆறு றைகான் மூன்றே
ஔகான் ஒன்றே மஃகான் மூன்றே
ஆய்தம் இரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபான் என்ப.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) உயிர்மெய் இருநூற்றுப் பதினாறு; குறு காத ஆய்தம் எட்டு; உயிரளபெடை இருபத்தொன்று; ஒற்றளபெடை நாற்பத்திரண்டு; குற்றியலிகரம் முப்பத் தேழு; குற்றியலுகரம் முப்பத்தாறு; ஐகாரக்குறுக்கம் மூன்று; ஔகாரக்குறுக்கம் ஒன்று; மகரக்குறுக்கம் மூன்று; ஆய்தக்குறுக்கம் இரண்டுடனே சார்பெழுத்தி னது மிகுந்தவிரி முந்நூற்று அறுபத்தொன்பதாம் என்று சொல்லுவர் புலவர் எ - று.

இவை இத்துணையவாதல் பிறப்பதிகாரத்துட் காண்க.

இவ்வாறு உயிர்மெய் ஒழிந்தனவற்றையும் விரித்தல் தொல் நெறி என்பார், என்ப என்றார். (சு)

## உ. பெயர்

பெயர்க்கெல்லாம் பொதுவிலக்கணம்

சுஉ. இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.

எ - னின். நிறுத்தமுறையானே எழுத்தின் பெயராமாறுணர்த்துவான் தொடங்கிப், பெயர்க்கெல்லாம் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்) இடுகுறிப்பெயருங் காரணப்பெயரும் ஆகிய இரண்டும்; பல பொருட்குப் பொதுப்பெயராயும் ஒரு பொருட்குச் சிறப்புப்பெயராயும் வருவனவாம் எ - று.

ஒரு பொருளைக் குறித்தற்குக் கடவுளானும் அறிவுடையோரானும் இட்டகுறியாகிய பெயர் இடுகுறிப்பெயர். காரணத்தான் வரும் பெயர் காரணப்பெயர்.

(உதாரணம் மரம் என்பது இடுகுறிப் பொதுப்பெயர். பனை என்பது இடுகுறிச் சிறப்புப்பெயர். அணி என்பது காரணப் பொதுப்பெயர். முடி என்பது காரணச் சிறப்புப்பெயர்.

இனி, இரட்டுறமொழிதல் என்னும் உத்தியான், இச்சூத்திரத்திற்கு, இடுகுறியென்றுங் காரணமென்றுஞ் சொல்லப்படும் இலக்கணங்களையுடைய பெயர்கள், இடுகுறி காரணம் என்னும் இரண்டற்கும் பொதுவாயும், இடுகுறிக்கே சிறப்பாயும், காரணத்திற்கே சிறப்பாயும் வருவனவாம் என்றும் பொருளுரைத்துக்கொள்க.

எ - டு: பரம் என்பது இடுகுறிப் பெயர். பரமன் என்பது காரணப்பெயர். முக்கணன், அந்தணன், மறவன், முள்ளி, கறங்கு, மொழி, சொல் என்பன காரணவிடுகுறிப்பெயர்.

இவை காரணவிடுகுறியாயது என்னையெனின்:—இவற்றுள் முக்கணன் என்னும் பெயர், யானைமுகக்கடவுள் முதலியோர்க்கு மூன்று கண்ணுளவாகலிற் காரணங் கருதியவழி மூன்று கண்ணினையுடையோர் பலர்க்குஞ் சேறலானும், காரணங் கருதாதவழி இடுகுறி மாத்திரையேயாய்ப் பரமனுக்கே சேரலானும், காரணவிடுகுறியாயிற்று. ஏனைப் பெயர்கட்கும் இவ்வாறே காண்க.

இவ்வாறே, வடநூலார், இடுகுறியை ரூடி என்றும், காரணத்தை யோகம் என்றும், காரணவிடுகுறியை யோகரூடி என்றும் வழங்குப.

இவ்விலக்கணத்தான் எழுத்தினது பெயரும் பிற பெயரும் வருமாறு காண்க. (௭)

## எழுத்தின் பெயர்

கூஙு. அம்முதல் ஈரா றுவி கம்முதல்
மெய்ம்மூ வாறெனா விளம்பினர் புலவர்.

எ - னின். ஒருசாரெழுத்தினது பெயராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அகரமுதல் ஒளகாரம் ஈறாகக் கிடந்த பன்னிரண்டனையும் ஆவியென்றும், ககரமுதல் னகரம் ஈறாகக் கிடந்த பதினெட்டனையும் மெய் என்றும், நூல்களால் சொன்னார் அறிவுடையோர் எ - று.

கடவுளால் ஆவி மெய்யென்றமைத்த பெயர்க்காரணம் உயிர்களான் முற்றாமுணர்தற்கு அருமையும், கடவுள் நூலுணர்ந்தோர் வழிச்செல்லுந் தமது பெருமையுந் தோன்ற, விளம்பினர் புலவரென்றார்.

ஆவியும் மெய்யும் போறலின், இவ்விருவகை யெழுத்திற்கும், ஆவிமெய்யென்பன, உவமவாகுபெயராய்க், காரணப் பொதுப் பெயராயின. ஏனையவும் இவ்வாறே காண்க. (அ)

## குறில்

கூச. அவற்றுள்,
அ இ உ எ ஒக்குறில் ஐந்தே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) ஆவி மெய் என்றவற்றுள் இவ்வைந்துங் குற்றெழுத்தாம் எ - று. (கூ)

## நெடில்

கூரு. ஆஈ ஊஏ ஐஓ ஒளநெடில்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்வேழும் நெட்டெழுத்தாம் எ - று(க0)

## சுட்டெழுத்து

கூகூ. அ இ உம்முதல் தனிவரின் சுட்டே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இம் மூன்றெழுத்தும், மொழிக்குப் புறத்தும் அகத்தும் முதற்கண் தனித்துச் சுட்டுப்பொருள் உணர்த்தவரின், சுட்டெழுத்தாம் எ - று.

முதலெனப் பொதுப்படக் கூறினமையிற் புறத்தும் அகத்தும் என்பது பெற்றாம்.

எ - டு. அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன் எனவும்; அவன், இவன், உவன் எனவும் வரும்.

அவன் என்பதன்கண் அகரம், அறம் என்பதன்கண் அகரம் போலப் பின் எழுத்துக்களோடு தொடர்ந்து நின்று ஒரு பொருளை உணர்த்தாது, மலையன் என்பதன்கண் பகுதிபோல வேறு நின்று சுட்டுப்பொருள் உணர்த்தலின், அகத்துவரும் இதனையுந் தனிவரின் என்றார். இவ்வுரை வினாவிற்குங் கொள்க. (கக)

### வினாவெழுத்துக்கள்

கஎ. எ யா முதலும் ஆ ஓ ஈற்றும்
ஏ இரு வழியும் வினாவா கும்மே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) புறத்தும் அகத்தும், மொழிமுதற்கண் எகரமும் யாவும், ஈற்றின்கண் ஆகாரமும் ஓகாரமும், இவ்விரண்டிடத்திலும் ஏகாரமும், தனித்து வினாப்பொருளுணர்த்தவரின், வினாவெழுத்தாம் எ - று.

மேல் தனிவரின் என்றதனை ஈண்டுங் கூட்டுக.

இவை புறத்தும் அகத்தும் வருதல் ஏற்ற பெற்றி கொள்க.

ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல் என்னும் உத்தியான் யா வினாவையும் உடன்கூறினார்.

எ - டு எக்கொற்றன் எனவும்; எவன் எனவும்; யாவன் எனவும்; முதற்கண் வந்தன. கொற்றனா, கொற்றனோ என ஈற்றின்கண் வந்தன. ஏவன், கொற்றனே என ஈரிடத்தும் வந்தது. ஏனைப்பெயர் வினைகளோடும் ஏற்றபெற்றி ஒட்டிக் கொள்க. (கஉ)

### வல்லினம்

ருஅ. வல்லினம் கசடதபற என ஆறே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்வாறும் வல்லினமாம் எ - று. (கங)

### மெல்லினம்

ருகூ. மெல்லினம் ஙஞணநமன என ஆறே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்வாறும் மெல்லினமாம் எ - று. (கச)

### இடையினம்

எ0. இடையினம் யரலவழள என ஆறே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்வாறும் இடையினமாம் எ - று. (கரு)

### இனவெழுத்து

எக. ஐஔ இ உச் செறிய முதலெழுத்
திவ்விரண் டோரினம் ஆய்வரல் முறையே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இனமில்லாத ஐகார ஔகாரங்கள், ஈகார ஊகாரங்கட்கு இனமாகிய இகர உகரங்களைத் தமக்கும் இனமாகப் பொருந்த, முதலெழுத்துக்கள் இவ்விரண்டு ஓரினமாய் வருதல் முறை; ஆதலால், அவை இனவெழுத்தென்றும் பெயரவாம் எ - று. (கசா)

### இனமென்றதற்குக் காரணம்

எஉ. தான முயற்சி அளவு பொருள்வடி
வானவொன் றுதியோர் புடையொப் பினமே.

எ - னின். மேல் இனமென்றதற்குக் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தானம் முதலியவாய இவற்றுள், ஒன்று முதலாக ஒருபுடை ஒத்தலால், இனமாம் எ - று.

தானம் - உரமுதலியன. முயற்சி - இதழ்முயற்சி முதலியன. அளவு - மாத்திரை. பொருள், பாலன் விருத்தனானாற்போலக் குறிலினது விகாரமே நெடிலாதலின், இரண்டற்கும் பொருள் ஒன்றென்று முதனூலான் நியமிக்கப்பட்ட பொருள். வடிவு ஒலிவடிவு வரிவடிவு, இவற்றுள், ஒன்றும் பலவும் ஒத்து இனமாய் வருதல் கண்டுகொள்க.

சார்பெழுத்திற்குப் பெயர் கூறுதொழிந்தார், ஆய்தந் தனிநிலையாதலானும், ஏனைச் சார்பெழுத்திற்குச் சுட்டு விளைவென்று விதந்தோதினவை ஒழிந்த முதலெழுத்தின் பெயரே பெயராய் அடங்குதலானுமென்க.

இச் சூத்திரம் எதுவின் முடித்தல் என்னும் உத்தி. (௧எ)

## ௩. முறை

௭௩. சிறப்பினும் இனத்தினும் செறிந்தீண் டம்முதல்
நடத்தல் தானே முறையா கும்மே.

எ - னின். நிறுத்தமுறையானே முறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சிறப்பினானும் இனத்தினானும் பொருந்தி, இவ்வுலகத்து அகரமுதலாக வழங்குதலானே, எழுத்தினது முறையாம் எ - று.

குறிலினது விகாரமே நெடிலாதலால் குறில் முன்னிற்றலிற் சிறப்பினென்றும், நெடில் இனமாய்ப் பின்னிற்றலின் இனத்தின் என்றும், நாதமாத்திரையாய் எல்லா எழுத்திற்குங் காரணமாய் முன்னிற்றலின் அம்முதல் என்றும். எல்லா எழுத்திற்கும் வைத்த முறைக்காரணம் உயிர்களான் முற்றுமுணர்தலாகாமையின் நடத்தலானே என்றுங் கூறினர்.

## ௬. சிவஞானமுனிவர் விளக்கம்

இவ்வாறு உலகத்தும் பிறப்பொத்தல் பற்றியே இனம் என்று வழங்குபவாகலின், ஈண்டு இனத்தினும் என்றதற்குப் பிற காரணங்களும் உளவேனும் பெரும்பான்மையும் பிறப் பொத்தலே இனமென்று கொள்க.

அங்ஙனமாயினும், நெடுங்கணக்கினுள் அகரமுதல் னகரவிறு வாய்க் கிடக்கை முறையாதற்குக் காரணமும் ஒருவாறு காட்டுதும் :—

அகரமுதலிய பன்னீருயிருந் தனித்தியங்கும் ஆற்றலுடைமை யானும், ககர முதலிய பதினெட்டு மெய்யும் அகரத்தோடு கூடியல்லது இயங்கும் ஆற்றலின்மையானும், அச்சிறப்புஞ் சிறப்பின்மையும் நோக்கி, உயிர்முன்னும் மெய் பின்னுமாக வைக்கப்பட்டன.

இனி, உயிர்களுள், அ இ உ என்பன, முறையே, அங்காந்துகூறு முயற்சியானும், அவ்வங்காப்போடு அண்பல்லடி நாவிளிம் புறக் கூறுமுயற்சியானும், அவ்வங்காப்போடு இதழ் குவித் துக் கூறுமுயற்சியானும் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன.

ஆகார, ஈகார ஊகாரங்கள், அகர முதலியவற்றிற்கு இனமாத லின், அவற்றைச் சார வைக்கப்பட்டன.

இனி, எகரமாவது அகரக்கூறும் இகரக்கூறுந் தம்முளொத் திசைத்து நரமடங்கல்போல் நிற்பதொன்றாகலானும், ஒகர மாவது அகரக்கூறும் உகரக்கூறுந் தம்முளொத்திசைத்து அவ்வாறு நிற்பதொன்றாகலானும், அவை அவற்றின் பின் முறையே வைக்கப்பட்டன.

ஏகார ஓகாரங்கள், இனமாதலின், அவற்றின் பின் முறையே வைக்கப்பட்டன.

அகரமும் யகரமும் இகரமுந் தம்முளொத்திசைத்து நிற்பதொன் றாகலின், எகர ஏகாரங்களின் பின்னர் ஐகாரமும், அகரமும் வகரமும் உகரமுந் தம்முளொத்திசைத்து நிற்பதொன்றாக லின், ஒகர ஓகாரங்களின் பின்னர் ஔகாரமும் வைக்கப் பட்டன.

இவ்வாறாதல் பற்றி, ஏ ஓ ஐ ஔ என்னும் நான்கனையும் வட நூலார் சந்தியக்கரமென்பர்; கையடனார் நரமடங்கல்போல் என்று உவமையுங் கூறினார். இக்கருத்தே பற்றி, நன்னூல் ஆசிரியர் :

[1]" அம்மு னிகரம் யகர மென்றிவை
யெய்தி னையொத் திசைக்கு மவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன"

என்றார். இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும்:

[2]"அகர விகர மைகார மாகும்", [3]"அகர வுகர மௌகார மாகும்" எனக் கூறி, ஐயென்னு நெட்டெழுத்தின் வடிவு புலப்படுத் தற்கு அகர இகரங்களேயன்றி அவற்றிடையே யகரமும் ஒத்திசைக்கு மென்பர்.

[4]" அகரத் திம்பர் யகரப் புள்ளியு
மையெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"

என்றும், 'மெய்பெற' என்ற இலேசானே, ஔவென்னு நெட் டெழுத்தின் வடிவு புலப்படுத்தற்கு அகர உகரங்களே யன்றி அவற்றிடையே வகரமும் ஒத்திசைக்குமென்றும், இம்பர் உம்பரென்றாற் போல்வன நால்வகை இடவகை களான் மயங்குமாகலின், இவற்றின் முதற்கண் நிற்பதி யாதோ இறுதிக்கண் நிற்பதியாதோ வென்னும் ஐயநீக்கு தற்கு [5]"இகரம் யகர மிறுதி விரவும்" என்றுங் கூறினார்.

மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தலென்னும் உத்தியான், எகர ஏகாரங்கள் ஒகர ஓகாரங்கள் அவ்வாறாதலுங் கொள்ளவைத்தார்.

மாபாடியத்துள், ஐகாரத்தின் பின்னின்ற வடவெழுத்து நான் குயிர்க்கும் இடையே ரகர லகரக் கூறுகள் ஒத்துநிற்கும் என்ற ஆசிரியர் பதஞ்சலியார்க்கு, ஐ ஔ என்புழியும், இடையே யகர வகரக் கூறுகள் விரவி நிற்குமென்பது உடன் பாடாதல் பெற்றாம் எகரமுதலியவற்றுள் அகரக்கூறு குறைவும் இகரவுகரக் கூறுகள் மிகுதியுமாம் எனவும் உணர்க. இதுவும் மாபாடியத்திற் கண்டது. ஈண்டுக் கூறிய வாற்றானே, அகரம் உயிரெழுத்துக்களினுங் கலந்து நிற்கு மாறு அறிக.

---

1. நன்னூல்-கஉ௫.
2. தொல்காப்பியம். எழு. மொழிமரபு. சூ. உக.
3. " " " சூ. உஉ.
4. " " " சூ. உந.
5. " " " சூ. உ௫.

இனி, மெய்களுள், வலியாரை முன்வைத்து மெலியாரைப் பின் வைத்தல் மரபாகலின், அச்சிறப்பு நோக்கி, வல்லெழுத்துக்கள் முன்னும், அவ்வவற்றிற்கு இனமொத்த மெல்லெழுத்துக்கள் அவ்வவற்றின் பின்னுமாக வைக்கப்பட்டன. அவ்விரண்டும் நோக்கியல்லது இடைநிகரனவாய் ஒலித்தல் அறியப்படாமையின், அதுபற்றி இடையெழுத்துக்கள் அவ்விரு கூற்றிற்கும் பின்வைக்கப்பட்டன.

ஒருவாற்றான் ஒத்தலும் ஒருவாற்றான் வேறுதலும் உடைமைபற்றியன்றே இனமென்று வழங்கப்படுவது; அவற்றான் இடையெழுத்தாறும், இடப்பிறப்பான் ஒத்தலும் முயற்சிப்பிறப்பான் வேறுதலும் உடைமையின், இடைக்கணமென ஓரினமாயின. உயிர்க்கணம், வன்கணம், மென்கணம் என்பவற்றிற்கும் இஃதொக்கும்.

இனிக், க ஙக்களும், ச ஞக்களும், ட ணக்களும், த நக்களும், ப மக்களும், அடிநாவண்ணம், இடைநாவண்ணம், நுனிநாவண்ணம், அண்பல்லடி, இதழெனும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக, வைக்கப்பட்டன.

ய ர ல வக்கள் நான்கும், முறையே, அடியண்ணமும், இடையண்ணமும், அண்பல் முதலும், இதழுமென்னும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன.

ழகார றகார னகாரங்கள் மூன்றும், தமிழெழுத்தென்பது அறிவித்தற்கு இறுதிக்கண் வைக்கப்பட்டன. அவற்றுள்ளும் ழகரம், இடையெழுத்தாகலின் அதுபற்றி இடையெழுத்தோடு சார்த்தி, அவற்றிறுதிக்கண் வைக்கப்பட்டது. வடமொழியின், லகரம் ளகரமாகவும், உச்சரிக்கப்படுவதன்றித் தனியே ஓரெழுத்தன்மையின், அச்சிறப்பின்மை பற்றி, இடையெழுத்தாகிய ளகரம் ழகரத்திற்கும் பின் வைக்கப்பட்டது.

இவ்வாறே, உயிருள்ளும் எகர ஒகரங்கள், ஒருவாற்றாற் சிறப்பெழுத்தாயினும், பிராகிருதமொழியிற் பயின்று வருதலானும், சாமவேதமுடையாருள் ஒருசாரார் இசைபற்றிக் குழூஉக்குறிபோலக் கொண்டோதுப வாகலானும், இறுதிக்கண் வையாது, முறைபற்றி எகார ஒகாரங்களின் முன் வைக்கப்பட்டன. ஆகையான், முறையாமாறு இவையென உய்த்துணர்ந்துகொள்க.

இவ்வாறு உலகத்தும் பிறப்பொத்தல் பற்றியே இனமென்று வழங்குபவாகலின், ஈண்டு இனத்தினும் என்றதற்குப் பிற காரணங்களும் உளவேனும், பெரும்பான்மையும் பிறப் பொத்தலே இனமென்று கொள்க. (௭௨)

---

## ௩. பிறப்பு

### பிறப்பின் பொதுவிதி

௭௪. நிறைஉயிர் முயற்சியின் உள்வளி துரப்ப
எழும்அணுத் திரள்உரம் கண்டம் உச்சி
மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.

**எ - னின். நிறுத்தமுறையானே பிறப்பாமாறு உணர்த்து வான் தொடங்கி அதன் பொதுவிதி உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) ஒலியெழுத்தாகிய காரியத்திற்கு வேண்டுங் காரணங்களில் ஒருவாற்றானுங் குறைவின்றி நிறைந்த உயிரினது முயற்சியால் உள்நின்ற வளியெழுப்ப எழுஞ் செவிப்புலனும் அணுத்திரள், உரமுதலிய நான்கிடத்தையும் பொருந்தி, இதழ் முதலிய நான்கின் தொழில்களால் வெவ்வேறு எழுத்தாகிய ஒலிகளாய்த் தோன்றுதல், அவற்றின் பிறப்பாம் எ - று. (௧௧)

### முதலெழுத்துக்களுக்கு இடப்பிறப்பு

௭௫. அவ்வழி,
ஆவி இடைமை இடமிட றாகும்
மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை.

**எ - னின். முதலெழுத்துக்கட்கு இடம்வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) மேற்கூறிய நெறியாற் பிறக்குங்கால், ஆவி இடையினம் என்னும் இருவகை எழுத்தினது இடம்

மிடறும்; மெல்லினம் மூக்கை இடமாகப் பொருந்தும்; வல்லினம் நெஞ்சை இடமாகப் பெறும் எ - று. (உ௦)

முதலெழுத்துக்களுக்கு முயற்சிப்பிறப்பு

எசு. அவற்றுள்,

முயற்சியுள் அ ஆ அங்காப் புடைய.

எ - னின். முதலெழுத்துக்களுட் சிலவற்றிற்கு முயற்சி வகையாற் பிறப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் இடம் வகுக்கப்பட்ட முதலெழுத்துக்களுள் அகர ஆகாரங்கள், நால்வகை முயற்சியுள், அண்ணத்தின் தொழிலாகிய அங்காத்தலை யுடையவாய்ப், பிறக்கும் எ - று. (உக)

எஎ. இஈ எஏ ஐஅங் காப்போ

டண்பல் முதல்நா விளிம்புற வருமே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்வைந்தெழுத்தும், அங்காப்புடனே, அண்பல்லை அடிநாவிளிம்பு பொருந்தப் பிறக்கும் எ - று.

எஅ. உஊ ஒஓ ஔஇதழ் குவிவே.

எ - னின். இதுவும் அது.

(இ-ள்.) இவ்வைந்தெழுத்தும் பிறத்தற்கு ஏதுவாகிய முயற்சி இதழ் குவிவாம் எ - று. (உ௩)

எகூ. கஙவும் சஞவும் டணவும் முதலிடை

நுனிநா அண்ணம் உறமுறை வருமே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) கவ்வும் ஙவ்வும் முதல்நா முதலண்ணத்தையும், சவ்வும் ஞவ்வும் இடைநா இடையண்ணத்தையும், டவ்வும் ணவ்வும் நுனிநா நுனியண்ணத்தையும் பொருந்த, இம்முறையே பிறக்கும் எ - று. (உ௪)

௮௰. அண்பல் அடிநா முடியுறத் தநவரும்

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) அண்பல்லடியை நாநுனி பொருந்தத், தவ்வும் நவ்வும் பிறக்கும் எ - று. (௨௫)

௮௧. மீகீழ் இதழுறப் பம்மப் பிறக்கும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மேலிதழுங் கீழிதழும் பொருந்தப், பவ்வும் மவ்வும் பிறக்கும் எ - று. (௨௬)

௮௨. [1]அடிநா அடியணம் உறயத் தோன்றும்

எ - னின். இதுவும் அது.

(இ - ள்) அடிநா அடியண்ணத்தைப் பொருந்த, யகரம் பிறக்கும் எ - று. (௨௭)

௮௩. அண்ணம் நுனிநா வருட ரழவரும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) அண்ணத்தை நுனிநாத் தடவ, ரவ்வும் ழவ்வும் பிறக்கும் எ - று. (௨௮)

௮௪. அண்பல் முதலும் அண்ணமும் முறையின்
நாவிளிம்பு வீங்கி ஒற்றவும் வருடவும்
லகார ளகாரமாய் இரண்டும் பிறக்கும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) அண்பல் முதலை நாவிளிம்பு வீங்கியொற்ற லகாரமாகியும், அண்ணத்தை நாவிளிம்பு வீங்கி வருட ளகாரமாகியும், இவ்விரண்டெழுத்தும் பிறக்கும் எ - று.

---

1. இச்சூத்திரம் தொல்காப்பியத்திற்கு வேறுபட்டுள்ளது; தொல். பிறப்பு, 17-ஆம் சூத்திரம் பார்க்க.

அரு. [1]மேற்பல் இதழுற மேவிடும் வவ்வே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மேற்பல்லைக் கீழிதழ் பொருந்த, வகரம் பிறக்கும் எ - று. (ரு0)

அசு. அண்ணம் நுனிநா நனியுறின் றனவரும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) அண்ணத்தை நுனிநா மிகப் பொருந்தின் றவ்வும் னவ்வும் பிறக்கும் எ - று. (ருக)

சார்பெழுத்துக்கு இடமுயற்சி

அஎ. [2]ஆய்தக் கிடந்தலை அங்கா முயற்சி
சார்பெழுத் தேனவும் தம்முதல் அனைய.

எ - னின். சார்பெழுத்துக்கட்கு இடமுயற்சிவகையாற் பிறப் புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆய்தம் பிறத்தற்கு இடந் தலை, முயற்சி அங்காத்தலாம்; ஒழிந்த சார்பெழுத்துக்களும், இடமுயற்சி கள் தம் முதலெழுத்துக்களோடு ஒப்பனவாய்ப், பிறக்கும் எ - று.

சார்பின் சார்பாகிய ஆய்தக்குறுக்கமுந் தன் முதல்போற் பிறக்குமென்பார், எதிரது தழீஇ, எனவுமென்றார். (ருஉ)

பிறப்புக்குப் புறனடை

அஅ. [3]எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பில்
திரிபும் தத்தமில் சிறிதுள ஆகும்.

1. 'மேற்பல்லைக் கீழிதழ்பொருந்த' என்பர் இராமாநுச கவிராயர்.

2. ஆய்தத்துக்கிடம் நெஞ்சென்பர் நச்சினார்க்கினியரும் (தொல் - பிறப்பு 19, உரை), இ. வி. நூலுடையாரும்; சூ. 13.

3. எடுத்தல் முதலிய மூன்றொலியோடு விலங்கலோசை யென்று ஒன்றுண்டென்றும், அதனையுடையது ஐகாரமென்றும்,

எ - னின். மேற்கூறிய பிறப்பிறந்த ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பலவெழுத்திற்குப் பிறப்பு ஒன்றாகச் சொல்லப்பட்டனவேனும், எடுத்தல் படுத்தல் நலிதல் என்னும் எழுத்திற்குரிய ஒலி முயற்சியான், ஒன்றற்கொன்று பிறப்பு வேறுபாடுகளும், அவ்வவற்றின்கண் சிறிது சிறிதுளவாம் எ - று. (௯௯)

உயிர்மெய்

அ௧௦. புள்ளிவிட் டவ்வொடு முன்உரு வாகியும்
ஏனை உயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயின்
பெயரொடும் ஒற்றுமுன் னாய்வரும் உயிர்மெய்.

எ - னின். மேற் பிறப்புணர்த்திய சார்பெழுத்திற்குச் சார்ந்து வருமாறும் ஒரு பிறப்பாதலிற், பிறப்பதிகாரத்துள் அடக்கி உணர்த்துவான் தொடங்கி, அவற்றுள் உயிர்மெய் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மெய் புள்ளியைவிட்டு, அகரத்தோடு கூடியவழி விட்டவுருவே உருவாகியும், ஒழிந்த உயிர்களோடு கூடியவழி உருவு வேறுபட்டும், தன்மாத்திரை தோன்றாது உயிர்மாத்திரையே மாத்திரையாய்த், தன் வரிவடிவினது விகாரவடிவே வடிவாய் உயிர்வடிவை ஒழித்து, மெய்யுயிரென்னும் பெயராகிய இரண்டிடத்தும் பிறந்த உயிர்மெய்யென்னும் பெயருடனே, ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமாகி, வரும் உயிர்மெய்யெழுத்து எ - று.

ஒழித்து என்றும், ஒற்று முன்னாய் என்றும், வந்த சினைவினை, இருவயிற்பெயரொடும் வரும் என்னும் முதல்வினையோடு முடிந்தன.

---

வல்லினம் தலைவளியுடையது, மெல்லினம் மூக்குவளியுடையது, இடையினம் மிடற்றுவளியுடையதென்றும் கூறுவர்; தொல், பிறப்பு. சூ. 6, ந. உரை.

## சிவஞானமுனிவர் விளக்கம்

உருவு திரிதல், புள்ளி பெறுவன புள்ளி பெற்றும், மேலுங் கீழும் விலங்கு பெறுவன விலங்கு பெற்றும், கோடு பெறுவன கோடு பெற்றும், புள்ளியுங் கோடும் உடன்பெறுவன உடன் பெற்றும், வருவனவாம். அருகே பெற்ற புள்ளியை இக் காலத்தார் காலாக எழுதுவர்.

பூதி முதலியவற்றில் நீட்டிய வரிவடிவும், ஒலி வடிவுபோலப் பயன்தரும் ஒற்றுமை குறித்து, ஈண்டு அவ்விரு திறனும் விரவிக் கூறினர்.

இவ்விலக்கணத்தான் ஒவ்வொரு மெய்யிற் பன்னிருயிருங் கூடப் பன்னிருபதினெட்டு இருநூற்றொருபத்தாறாய் வருமாறு, வழங்கும் வரிவடிவுள்ளும் ஒலிவடிவுள்ளுங் காண்க. (கூச)

### முற்றாய்தம்

கூ0 [1]குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரோடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.

எ - னின். முற்றாய்தம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) புள்ளி வடிவினதாய ஆய்தம், குற்றெழுத்தின் முன்னதாய், உயிரோடு கூடிய வல்லெழுத்து ஆறன் மேலதாய், வரும் எ - று.

உயிர்வருக்கத்து இறுதிக்கண் தந்த ஆய்தவடிவைப் பிற்காலத்து வேறுபட வரைந்து வழங்குவராதலின், தொல்லை வடிவு தோன்ற ஆய்தப்புள்ளி என்றார்.

எ - டு. எஃகு, கஃசு, இருபஃது, அஃகடிய, அஃகான், மஃகான் என வரும். தனிக்குறிலென்று வரைந்தோதாமையின்,

"விலஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாதர்
இலஃஃகு முத்தி னினம்"

எனவும் வரும். பிறவுமன்ன.

இச்சூத்திரம், மேற்கோளாதலால், தானெடுத்து மொழிதல் என்னும் உத்தி.

---

1. இது தொல்காப்பியச் சூத்திரம் ; மொழி. சூ. 5

உக்கின வகையான் இயல்பாக வந்த ஆய்தம் ஆறனோடு, புணர்ச்சி விகாரத்தான் வரும் ஆய்தமுஞ் செய்யுள் விகாரத்தான் வரும் ஆய்தமுங் கூட்ட, எட்டாய் வருமாறு காண்க. (௯௦)

### உயிரளபெடை

௯௧. இசைகெடின் மொழிமுதல் இடைகடை நிலைநெடில்
அளபெழும் அவற்றவற் றினக்குறில் குறியே.

எ - னின். **உயிரளபெடை வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) செய்யுட்கண் இசை குன்றின், மொழி முதலினும் இடையினும் கடையினும் நின்ற நெட்டெழுத் தேழும், அவ்விசை நிறைக்கத் தத்தம் மாத்திரையின் மிக்கொலிக்கும்; அவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு, அவற்றின்பின், அவற்றிற்கு இனமாகிய குற்றெழுத்துக்கள் வரிவடிவின்கண் அறிகுறியாய் வரும் எ - று.

எ - டு:

"ஆஅ அளிய அலவன்றன் பார்ப்பினொ
டிரையக்கொண் டானாப் பள்ளியுள்
தூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றோள்
மேஎ வலைப்பட்ட நம்போல் நறுநுதால்
ஓஒ வுழக்குந் துயர்."

எனவும்,

[1]"உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு."

எனவும்,

[2]"அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை"

எனவும் வரும். 'செறாஅஅய் வாழிய' என்புழி நான்கு மாத்திரையாயும், ஏனைய மூன்று மாத்திரையாயும், அலகுபெற்றுச் செய்யுளிசை நிறைத்து, மூவிடத்தும் வந்தவாறு காண்க. பிறவும் அன்ன.

---

க. திருக்குறள், செ. 1200.
உ. ,, ,, 1115.

இனி இசைகெடின் என்று பொதுப்படக் கூறினமையால்,

[1]"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை"

எனக் குறில் நெடிலாய் அளபெழுந்து அலகு பெற்றும் பெறாதும் இன்னிசை நிறைப்ப வருவனவும்,

[2]"உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்"

என அளபெழுந்து அலகுபெற்றும் பெறாதுஞ் சொல்லிசை நிறைப்ப வருவனவும்,

[3]"வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின்"

என்பதனுட் கெழீஇயிலர் என அளபெழுந்து அலகு பெறாது சொல்லிசை நிறைப்ப வருவனவுங்கொள்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

எழுத்துப் பலவாயின ஒலிவேற்றுமையானன்றே, அங்ஙனமாதலின், நெடிலது விகாரமாய் ஓரொலியாய்ப் பிறப்பதே அளபெடையென்பார் நெடிலளபெழும் என்றும், அவற்றவற்றினக்குறில் குறியே என்றுங் கூறினார். ஆசிரியர் தொல்காப்பியரும், நீரும் நீருஞ் சேர்ந்தாற்போல நெட்டெழுத்தோடு குற்றெழுத்தொத்து நின்று நீண்டிசைப்பதே அளபெடையென்பார்.

[4]"குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கு
நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே."

என்றார். இங்ஙனம் ஒலிபற்றிக் கூறும் வகையால் இருவர்க்குங் கருத்து ஒன்றேயாயினும், குறியேயென்றது, இவ்விரண்டு மேற்கோளில் ஒன்று துணிதலான், ஒருதலை துணிதல் என்னும் உத்தியும் அம்மதமும் பட வந்ததென்க.

இப்பெற்றி அறியாதார், நெடிலுங் குறிலும் விரலும் விரலுஞ் சேர நின்றாற்போல இணைந்துநின்று அளபெடுக்குமெனத்,

---

1. திருக்குறள், செ. 15.
2. ,, ,, 1263.
3. ,, ,, 1194.
4. தொல்காப்பியம், எழு. மொழி மரபு, சூ. 6.

தமக்கு வேண்டியவாறே கூறுப. நெடிலும் குறிலும் அவ்வாறு நின்றளபெழுமென்றல் பொருந்தாமைக்கு, எழுத்தெடையென்னாது அளபெடையென்னுங் குறியீடே சான்றாதலறிக. அற்றேல், ஓரெழுத்தினையே இரண்டு மாத்திரையும் ஒரு மாத்திரையுமாகப் பிரித்து, அசைத்து, அதனாற் சீர்செய்து, தளையறுத்தல் பொருந்தாதெனின்,—அற்றன்று: எழுத்து வகையான் என்னாது,

"மாத்திரை வகையாற் றளைதம கெடாநிலை
யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்."

எனக் கூறுபவாகலின், எழுத்திற்கு மாத்திரை கோடலும், அசைத்தலும், சீர்செய்தலும், தளையறுத்தலும், ஓசைபற்றியல்லது, எழுத்துப்பற்றியல்ல வென்க.

இதனுள், செப்பலோசை முதலிய ஓசை குன்றாது நெட்டெழுத்தேழும் மொழி முதலிடை கடைகளினின்று அளபெடுக்குங்கால், ஔகாரம் மொழியிடை கடைகளின் வரப்பெறாமையின், அவ்விடங்களின் அஃதொழிய நின்று அளபெடுக்கும் அளபெடை பத்தொன்பதோடு, இன்னிசை நிறைப்பவுஞ் சொல்லிசை நிறைப்பவும் அளபெடுக்கும் அளபெடை இரண்டுங் கூடி, உயிரளபெடை எழுமூன்றாய் வருமாறு காண்க. (௯௧)

## ஒற்றளபெடை

௯௨. ஙஞண நமன வயலள ஆய்தம்
அளஃபாங் குறிலிணை குறிற்கீழ் இடைகடை
மிகலே அவற்றின் குறியாம் வேறே.

எ-னின். ஒற்றளபெடை வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) செய்யுட்கண் இசை குன்றின், குறிலிணைக் கீழுங் குறிற்கீழுமாய் மொழி இடையினும் ஈற்றினும் நின்ற இப் பத்தொற்றும், ஆய்தமும், அவ்வோசை நிறைக்கத், தம்மாத்திரையின் மிக்கொலிக்கும்; அவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு, அவற்றின்பின் அவ்வெழுத்துக்களே வரிவடிவின்கண் வேறு அறிகுறியாய் வரும் எ-று.

'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்பதனான் மேல் 'இசைகெடின்' என்பதனை இவ்வளபெடைக்கும் வருவித்துக்கொள்க.

மாத்திரை நிறைத்தற்கன்றி அறிகுறிமாத்திரையாய் வருமென்று கோடற்கு, வேறேயென்றார்.

எ - டு:

"இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்குக்
கலங்ங்கு நெஞ்சமிலை காண்"

எனவும்,

"எங்ங் கிறைவனுள னென்பாய் மனனேயா
னெங்ங் கெனத்திரிவா ரின்"

எனவும்,

"கலங்ங் கொண்ட கன்மார்பர்"

"மடங்ங் கலந்த மனனே களத்து
விடங்ங் கலந்தானை வேண்டு"

எனவும்,

"அங்ங் கனிந்த வருளிடத்தார்க் கன்புசெய்து
நங்ங் களங்கறுப்பா நாம்"

எனவும், ஙகரம், குறிலிணைக் கீழுங் குறிற்கீழும், மொழிக்கிடையினுங் கடையினும், முறையே அளபெழுந்தது.

"கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்ன் னுழைமருங்குன் மேதகு சாயலா
ளென்ன் பிறமகளா மாறு"

என ணகரமும் னகரமுங், குறிற்கீழ், மொழியீற்றின் அளபெழுந்தன.

"எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு"

என ஆய்தம், குறிற்கீழ், மொழிக்கிடையின் அளபெழுந்தது; பிறவும் அன்ன.

ஆய்தம் ஒற்றோடும் ஒருபுடையொத்து வருதலின், ஈண்டுத் தந்துரைத்தார்.

ஙகரம் விதியீறாய் வருதலின் அதனை விலக்காது, ஆய்தம் ஒருமொழிக்கண்ணுந் தொடர்மொழிக்கண்ணும் விதித்த முதலெழுத்துக்கள் இருமருங்கு நின்றெழுப்ப இருசிறகெழுப்ப எழு

முடக்குதற்கேற்க் இடைபெயர்ந்திசைப்பதன்றி ஒருவாற்றானும் ... வருந் தன்மையதன்றாகலின், அஃகடிய முதலியவற்றின் கண் திரிந்த ஆய்தம் அஃகான் முதலியவற்றின்கண் தோன்றிய ஆய்தம்போலத் தொடர்மொழிக்கண் இடைநிலையாயதன்றி விதிப்பின்றென்று அதனுண்மை துணிந்து, அதனை இறுதிக்கண் விலக்கி, இற்றொடை நாற்பத்திரண்டென்று மேலுரைத்தவாறு இக்கணம் வருதல் காண்க. (கூஎ)

## குற்றியலிகரம்

கூரு. யகரம் வரக்குறள் உத்திரி இகரமும்
அசைச்சொல் மியாவின் இகரமும் குறிய.

எ - னின். குற்றியலிகரம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள். யகரம் வருமொழிக்கு முதலாகிவர, நிலைமொழிக்கீறாகி நின்ற குற்றியலுகரந் திரிந்த இகரமும், மியாவென்னும் அசைச்சொல்லின்கண் இகரமும், குற்றியலிகரங்களாம் எ - று.

எனவே, இக்கணம் வருமாயின், இவ்வெழுத்தின் தொடர்பாற் குறுகுமென்பது பெற்றாம்.

எ - டு. நாகியாது, எஃகியாது, வரகியாது, கொக்கியாது, குரங்கியாது, அஃகியாது எனவும்; கேண்மியா, சென்மியா எனவும் வரும். பிறவும் அன்ன.

மேற்றொடர்ப்படக் கூறிய குற்றியலுகரம் முப்பத்தாறானும், அசைச்சொல் மியாவினானும், குற்றியலிகரம் முப்பத்தேழாய் வருமாறு காண்க. (கூஅ)

## குற்றியலுகரம்

கூச. [1]நெடிலோ டாய்தம் உயிர்வலி மெலியிடைத்
தொடர்மொழி இறுதி வன்மையூர் உகரம்
அஃகும் பிறமேல் தொடரவும் பெறுமே.

---

1. இடையொற்றுக்கள். ஆறையுந்தொடாது ஆதலால் இதனுள் நான்கே வருமெனக் காண்க எனவும்; ஆயின் முப்பத்தாறென்ற தென்னையெனின், ஒருமதங்குறைந்த யானைமுகக் கடவுளை மும்மதத்தான் என்றாற்போல இலக்கணை என்னும் விதி பற்றிக் கூறினரென்க எனவும் விரிப்பர் இராமாநுச கவிராயர்.

எ - னின். இடமும் பற்றுக்கோடுஞ் சார்ந்து குற்றியலுகரம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தனிநெடிலேழுடனே, ஆய்தமொன்றும், மொழியிடையீறுகளின் வரப்பெறாத ஔகாரமொழித் தொழிந்த உயிர் பதினொன்றும், வல்லெழுத்தாறும், மெல்லெழுத்தாறும், வல்லெழுத்துக்களோடு தொடராத வகர மொழித்தொழிந்த இடையெழுத்தைந்துமாகிய முப்பத்தா றெழுத்தினுள், யாதானுமொன்று ஈற்றயலெழுத்தாய்த் தொடரப்பட்டு, மொழியிறுதிக்கண் வல்லெழுத்துக்களுள் யாதானுமொன்று பற்றுக்கோடாக, அதனை யூர்ந்துவரின், அவ்வுகரந் தன்மாத்திரையிற் குறுகும்; அது தன்மாத் திரையிற் குறுகுதற்கும் மொழி நிரப்புதற்கும் காரணம், இவ்வோரெழுத்துத் தொடர்தல் மாத்திரையின் அமை யாது, பிறவெழுத்துக்களுள் ஒன்றும் பலவும் மேலே தொடரவும் பெறும் எ - று.

நெடிலை ஒடுக்கொடுத்துப் பிரித்தார், தனிநெடில் ஆதலின். உயிரென்றது குற்றுயிர் நெட்டுயிர் இரண்டனையும்.

தொடர் என்னும் வினைத்தொகை வன்மையூருகரம் என்னுஞ் செயப்படுபொருளோடு முடிந்தது.

பிற என்றது, 'பகாப்பதமேழும் பகுபதமொன்பதும்' என்று வரையறுத்து அவற்றின், இங்ஙனம் ஈற்றயலும் ஈறுமாகக் கூறிய இரண்டும் ஒழித்து, ஒழிந்த எழும் ஐந்துமாய எழுத்துக்களை.

தொடரவும் என்ற உம்மை இறந்தது தழீஇ நின்றது.

பெறுமே என்றது தனிநெடிலொழிந்த ஐந்து தொடரும், வன்மையூருகரங் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்கும் மேற்றொடர் தலும் இன்றியமையாமையின்.

எ - டு: நாகு, எஃகு, வரகு, பலாசு, கொக்கு, குரங்கு, அல்கு என வரும். பிறவும் அன்ன.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனி, இங்ஙனம் பிறமேற்றொடரவும் பெறுமே எனக் கூறுதொழி யின், இவ் வைவகையெழுத்தும் ஈற்றெழுத்துங் கூடியே ஒருமொழியாய் நிற்குமெனவும் பட்டு, அது இது என்றற்

ஞெடுக்கத்தனவுங் குற்றியலுகரமாவான் செல்லுமெனவும், ஆய்தமுந் தனிமெய்யும் மொழிக்கு முதலாமெனவும், தனி நெடிலை ஒழித்தொதுக்கொடுத்து விதக்கவேண்டாவெனவும் ஆசிரியர் தொல்காப்பியர்,

"நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே"

எனத் தொகுத்துக் கூறியவாறே கூறாது, எல்லாவெழுத்தை யுங் கூறுவார், அவற்றையே ஆய்தமுதல் ஐந்தாக வகுத்துத், தனி நெடிலோடு ஆறாகக், குற்றுகரத்தை அறுவகையான் வழங்குதற்கு இலக்கணந் தோன்றக் கூறினமையின், அவ் வாறு எடுத்தாளுதற்பொருட்டு, எல்லாவெழுத்தையுங் குறி யீடாக விதந்த ஆய்தமுதலிய ஐந்தனுள் ஒன்று ஈற்றயலி னின்று இறுதிவன்மையூருகரத்தைத் தொடர்தலேயன்றிப் பிற மேற்றொடர்தலுங் குறுகுதற் கேதுவன்றெனவும், பொருள்படுமாறறிக.

இச் சூத்திரப்பொருள் முன்மொழிந்து கோடல் என்னும் உத்தி.

இனி, இவ்வாறன் பகுதித் தொடரும் இடமாதலின், இவ்விட வேற்றுமையால் குற்றியலுகரம் முப்பத்தாறென்று மேற்கூறிய வாறே வருமாறு காண்க.

இவ்வாறு கொள்ளாது, ஆசிரியர் ஈற்றயலினின்ற எழுத்தை இட மாகக் கொண்டாற்போல, ஈற்றயலினின்ற அசையை இட மாகக்கொண்டு, அவற்றுள் அது இது முதலிய முற்றுகரத்தை நீக்குதற்குக் குற்றெழுத்துத் தனியே வரும் அசையொன் றனையும் ஒழித்து, ஏனையேழசையினையும்,

"நெடிலே குறிலிணை குறினெடி லென்றிவை
யொற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்
றேழ்குற் றுகரக் கிடனென மொழிப"

எனக் கூறினும் உளராலோவெனின்:—அவ்வாறு எழிட மெனக் கோடு மென்பார்க்குப், பிண்ணாக்கு சுண்ணாம்பு பட்டாங்கு விளையாட்டு இரும்பூது முதலியனவும், ஆய்தந் தொடர்ந்தனவும், நெட்டொற்றிறுதி நெடிலிறுதிக் குற்றுகர முதலியனவுங் குற்றொற்றிறுதிக் குற்றுகரமுமாய் அடங்கு மேனும், போவது வருவது ஒன்பது முதலியன அடங்காமை யறிக. நெடின் முதலாயின ஈற்றயலினிற்றல் வேண்டு மென யாப்புறவின்மையின், முதற்கணிற்பினும் ஈற்றுகரம் அவற்றிறுதியாதல் அமையுமெனக் கொண்டு, போவது

முதலியனவும் நெடிலிறுதி முதலியனவாய் அடங்குமென் பார்க்கும், அங்ஙனம் பாகுபடுத்துக் கருவி செய்ததனாற் போதப்பயனின்றென்பதாம். இது பிறாநூற் குற்றங் காட்டல் என்னும் மதம்.

இனி, மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் என்னும் உத்தியான், நுந்தை யென்னு "முறைப்பெயர் மருங்கின் ஒற்றிய நகரமிசை" உகரமூர்ந்து மொழிமுதற்கண் நிற்பினுங் குற்றியலுகரமா மெனவும், அவ் வுகரம் செக்குக்கணை சுக்குக்கொடு எனப் புணர்மொழி யிடைப்படினுந் தன்னரைமாத்திரையிற் குறுகு மெனவுங் கொள்க. (நூக)

## ஐகார ஔகாரக் குறுக்கங்கள்

கூரு. [1]தற்சுட் டளபொழி ஐம்மூ வழியும்
நையும் ஔவும் முதல்அற் றாகும்

எ-னின். ஐகார ஔகாரக் குறுக்கங்கள் வருமாறு உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்) ஐகாரம், தன்னைக் கருதித் தன் பெயர் கூறுமளவிற் குறுகாது, ஒழிந்த மொழி முதலிடை கடை யென்னும் மூன்றிடத்தும், முன்னும் பின்னும் இருமருங்கு மாய எழுத்தின்றொடர்பால், தன்மாத்திரையிற் குறுகும். ஔகாரமும், தன்பெயர் கூறுமளவிற் குறுகாது, ஒழிந்த மொழிமுதற்கண் பின் வருமெழுத்தின் தொடர்பால் தன்மாத்திரையிற் குறுகும் எ - று.

சுட்டளபென்பது வினைத்தொகை.

அளபென்றார், எழுத்தின் சாரியை தொடரினுங் குறுகு மென்பது கருதி. எனவே, ஓரெழுத்தொருமொழியாய், நிலைமொழி வருமொழியாய்த் தொடராது, தனித்து, ஒரோவிடங்களின் வரின், தன்மாத்திரை குறுகாதென்பதூஉம் பெற்றாம்.

---

1. தற்சுட்டு - தன்னைக் குறித்துத் தன்பெயர் சொல்லுகையி லும், அளவு - அளபெடையிலும், ஒழி-ஒழிந்த, ஐ-ஐகாரம், மூவழி - மொழி முதலிடை கடை யென்னு மூவிடங்களிலும், நையும் - தன் னிரண்டு மாத்திரையிற் குறுகும் எனப் பொருள் விரிப்பர்—இலக் கண விளக்க நூலார்.

எ-டு: ஐப்பசி, மைப்புறம் எனவும்; வலையன் எனவும்; குவளை எனவும்; வௌவல் எனவும் வரும்.

இனி,

"ஐயெனெடு தனியிரண் டல்வழி யையொ
ஒளவு மொன்றரை தனிமையும் ஆகும்"

எனக் கூறினாருமாராலோவெனின்:—தன்னியல்பாய இரண்டு மாத்திரையினின்றுங் குறுகுதல் இல்லனவற்றை ஒழிப்பார் விகாரத்தான் மூன்று மாத்திரையும் நான்கு மாத்திரையுமாய் மிக்கொலிக்கும் அளபெடையை ஒழிக்க வேண்டாமையின், அது பொருந்தாதென்க. இது மறுத்தல் என்னும் மதம். ஏனைய உடன்படல்.

இடவகையான், ஐகாரக்குறுக்கம் மூன்றும், ஒளகாரக்குறுக்கம் ஒன்றும் வருமாறு காண்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனி, ஐகாரக்குறுக்கம் மொழிமுதற்கண் ஒன்றரை மாத்திரையாயும் ஏனையிடங்களின் ஒரு மாத்திரையாயும், ஒளகாரக் குறுக்கம் மொழிமுதற்கண் ஒன்றரை மாத்திரையாயுங் குறுகுமென்பது உய்த்துணர்ந்து கொள்க. அவ்வாறு உய்த்துணர்ந்து கொள்ளாக்கால்,

[1]"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாள்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்."

எனவும்,

[2]"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்."

எனவும்,

[3]"ஒளவிய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்."

எனவும் வரும் இலக்கியங்கட்கு இலக்கணம் இன்றாய் முடியுமென்க. (௬௦)

---

1. நாலடியார், ௯௧. 2. குறள் - ௭௭௪. 3. குறள் - ௧௬௯.

### மகரக் குறுக்கம்

கூசு. ணனமுன்னும் வஃகான் மிசையுமக் குறுகும்

எ - னின். மகரக்குறுக்கம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ணகார னகாரங்களின் ஒன்று நின்று தொடர்ந்திட அதன்முன்வரினும், வகாரம் வந்து தொடர்ந்திட அதன்மேல் நிற்பினும், மகரந் தன் அரை மாத்திரையிற் குறுகும் எ - று.

எ - டு.

" பசுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர்
முசுப்போல முள்காந் திருப்பர்—பசுத்தான்
வெருளினு மெல்லாம் வெருளுமஃ தன்றி
மருளினு மெல்லா மருண்ம்."

எனவும், " திசையறி மீகானும் போன்ம் " எனவும் ; தரும் வளவன் எனவும் வரும்.

இனி, ணகர னகரங்களின் முன்வந்த மகரஞ் செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றீற்ற தென்பதூஉம், அவ்வீற்றயல் உகரங் கெட அவ்வுகர மூர்ந்த ளகர லகரங்கள் ஈற்று மகரத்தோடு மயங்காமையின் மயங்குதற்குரிய ணகர னகரமாய்த் திரிந்தன ஈண்டுநின்ற ணகர னகரம் என்பதூஉம், இவற்றுள் ஒன்றுடன் ஈரொற்றாய் மயங்கின் மகரங் குறுகும் என்பதூஉம், இவற்றின் முன் குறுகுதல் செய்யுட்கண்ணது என்பதூஉம், காணும் கூனும் என இயல்பாக நின்ற ணகர னகரங்கண் முன் இவ்வாறு வந்து மகரங் குறுகாது என்பதூஉம், பிறவும் மேல் வருஞ் சூத்திரங்களெல்லாவற்றையும் வேண்டிப் பருந்தின் வீழ்வாய் நின்ற இச் சூத்திரத்து உய்த்துணர்ந்துகொள்க. இஃது உய்த்துணரவைப்பு என்னும் உத்தி. (சுசு)

### ஆய்தக் குறுக்கம்

கூஎ. லளவீற் றியைபினும் ஆய்தம் அஃகும்.

எ - னின். ஆய்தக்குறுக்கம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) லகார ளகாரவீற்றுப் புணர்ச்சியினால் வரும், 'குறில்வழி லளத்தவ் வணையி னாய்த—மாகவும்

பெறாஉம்' என்ற ஆய்தம், இருமருங்குமாய எழுத்தின் தொடர்பால் தன் அரை மாத்திரையிற் குறுகும் எ - று.

எ - டு: கஃறீது, முஃடீது என வரும்.

இது முடிவிடங்கூறல் என்னும் உத்தி.

இவ்வாய்தங் குறுகாதெனக் [1]காண்டல் விரோதங் கூறுவாருமுளர். (௪௨)

---

## ௩. உருவம்

கூ௮. தொல்லை வடிவின எல்லா எழுத்தும்ஆண்
டெய்தும் [2]எகர ஒகரமெய் புள்ளி.

எ - னின். நிறுத்த முறையானே உருவமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எல்லாவெழுத்தும் பலவேறு வகைப்பட வரைந்து வழங்கும் பழைய வடிவினையுடையவாம்; அவ்வடிவினவாய் வழங்குமிடத்துத், தனித்தும் உடம்பூர்ந்தும் வரும் எகரமும் ஒகரமுந் தனிமெய்களும், இயல்பாய புள்ளியைப் பிற்காலத்து ஒழித்து வரைந்து ஏகார ஓகாரங்களோடும் உயிர்மெய்களோடும் ஐயப்பட வழங்கும் வழக்கினையுடையவன்றித், துணியப்படுந் தொல்லை வடிவினது உறுப்பாய புள்ளியைப்பெறும் எ - று.

வரலாறு. எ் எ, ஒ் ஒ, கெ் கெ, கொ் கொ, க் க என வரும். பிறவும் அன்ன. (௪௩)

---

1. காண்டல் விரோதம் - பிரத்தியட்ச விரோதம். கூறுபவர் இலக்கண விளக்கவுரைகாரர்; சூ. 5, உரை.

2. இச்சூத்திரத்தை 'ஏகார மோகார மெய்புள்ளி' எனத் திருத்தினர் இராமாநுச கவிராயர்.

## கூ. மாத்திரை

### எழுத்துக்களின் மாத்திரை

கூகூ. மூன்றுயிர் அளபிரண் டாநெடில் ஒன்றே
குறிலோ டையௌக் குறுக்கம் ஒற்றள
பரையோற் றிஉக் குறுக்கம் ஆய்தம்
கால்குறள் மஃகான் ஆய்த மாத்திரை.

எ - னின். நிறுத்தமுறையானே மாத்திரையாமாறு உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) உயிரளபெடைக்கு மாத்திரை மூன்றும்; நெடிலுக்கு மாத்திரை இரண்டாம்; குறிலுக்கும் ஐகாரக் குறுக்கத்திற்கும் ஔகாரக்குறுக்கத்திற்கும் ஒற்றள பெடைக்குந் தனித்தனி மாத்திரை ஒன்றும்; ஒற்றிற்குங் குற்றியலிகரத்திற்குங் குற்றியலுகரத்திற்கும் ஆய்தத்திற் கும் தனித்தனி மாத்திரை அரையாம்; மகரக்குறுக்கத் திற்கும் ஆய்தக்குறுக்கத்திற்குந் தனித்தனி மாத்திரை காலாம் எ - று.

உயிர்மெய்க்கு அளவு கூறுதொழிந்தார், மேல் 'உயிரளவாய்' என்றுரைத்தலின். இஃது உரைத்தாம் என்னும் உத்தி.

உயிரளபெடை நான்கு மாத்திரையவாதலும், ஐகார ஔகாரக்குறுக்கங்கள் ஒன்றரை மாத்திரையவாதலும், ஆரிடத் துள்ளும் அவை போல்வனவற்றுள்ளும் அருகி வந்து செய்யுள் வழுவமைதியாய் முடிதலின், அவற்றை ஒழித்து, எல்லார்க்கும் ஒப்ப முடிந்து பயின்று வருவன மூன்று மாத்திரையும் ஒரு மாத்திரையுமே யாகலின், மூன்றுயிரளபென்றும் ஒன்றே குறிலோ டையௌக் குறுக்கமென்றுங் கூறினர்.

### சிவஞானமுனிவர் விளக்கம்

குற்றியலுகரம் புணர்மொழியிடைப்படிற் குறுகிக் கான்மாத்திரை பெறுதல், உரையிற்கோடல் என்பதனுற் கொள்க. (சுச)

### மாத்திரை இன்னதென்பது

சூOO. இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை.

எ - வின். எழுத்தொலியெழுச்சி பலவற்றையும் அளந்து கோடற்குக் கூறிய ஒருமாத்திரை யென்னுங் காலசங்கையினை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மாந்தருடைய இயல்பாக எழும் [1]இமைப் பொழுதும், நொடிப்பொழுதும், ஒரு மாத்திரையென்னும் வரையறைப்பொழுதாம் எ - று.

இமையென்றது இமைத்தலை. நொடியென்றது நொடித்தலை. இவையிரண்டும் ஆகுபெயராய்க், காலத்தை உணர்த்தி நின்றன.

இயல்பெழும் என்னும் பெயரெச்சம், இமை நொடி என்னும் பெயர்களோடு முடிந்தது.

எழுத்தொலி முதலியவற்றை இயல்பு கெடுத்து ஒருவன் வேண்டியவாறே எழுப்பினும் அவ்வாறு எழாநிற்கும், இமையும் நொடியும் இயல்பு கெடுத்து எழுப்பவேண்டினும் அவ்வாறு எழாது இயல்பாகவே எழாநிற்குமாதலின் இயல்பெழும் எனவும், மேலைச் சூத்திரத்து எழுத்தொலிகளை வேண்டியவாறே எழுப்பாது இவ்வளவான் அளந்தெழுப்புகவெனவுங் -

பின்னது நிறுத்தலென்னும் உத்தியான், இவ் வளவு கருவி பிற் கூறப்பட்டது.

(சரு)

### மாத்திரைக்குப் புறனடை

க0க. ஆவியும் ஒற்றும் அளவிறந் திசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற் றாதியின்.

எ - வின். தவளைப்பாய்த்தாய் ஒன்றிடையிட்டு நின்ற மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதல் சார்பனைத்துமாய ஆவியுமொற்றும், மேற்கூறிய அளவிறந்து மிக்கொலித்தலையும் பொருந்தும், இசை விளி பண்டமாற்று முதலியவற்றின்கண் எ - று.

---

1. 'கட்புலனாய இமைக்காலமும் செவிப்புலனாய நொடிக் காலமும் கருதிக்கோடற்கு இரண்டும் ஓதினா ரென்க' என்பர், மயிலைநாதர். இந்த அளவினைச் சார்த்தியளத்தல் என்பதன்பாற் படுத்துவர், நச்சினார்க்கினியர். மாத்திரையின் கூறுகளை அறிதற்கு, "உன்னல் காலே ஊறல் அரையே, முறுக்கல் முக்கால் விடுத்த லொன்றே" என்னும் சூத்திரம் கருவியாகும்.

ஆதியென்றமையான், நாவல் குறிப்பிசை முறையீடு புலம்பலுங் கொள்க.

இசையின் அளவிறந்திசைக்குங்கால், ஆவி பன்னிரண்டு மாத்திரையீறாகவும், ஒற்று பதினொரு மாத்திரையீறாகவும் இசைக்குமென்றார் இசைநூலார். இது பிறநூல் முடிந்தது தானுடன்படுதல் என்னும் உத்தி. ஏனையவற்றின் அளவிறந்திசைக்குங்கால், உலகநடை பிறழாதிசைப்பதே வரையறையென்க.

நாவலென்பது நெற்போர் தெழிக்கும் பகட்டினங்களைத் தூப்பதோர் சொல்.

> [1]"காவ லுழவர் கடுங்களத்துப் போரேறி
> நாவலோ ஒஒஒ வென்றிசைக்கு நாளோதை-மாவலவன்
> கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே
> நல்யானைக் கோக்கிள்ளி நாடு."[2]

என்பதனாலறிக. "கஃஃஃ றென்னுங் கல்லதர் அத்தம்" "சுஃஃஃ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை" என்பன குறிப்பிசை. ஏனைய பொருள் தோன்றிக் கிடத்தலின், அளவிறந்திசைத்தல் வந்தவழிக் காண்க. (சசு)

---

# எ. முதனிலை

## மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள்

**க0உ. பன்னீ ருயிரும் கசதந பமவய**
**ஞ ங ஈ ரைந்துயிர் மெய்யும் மொழிமுதல்.**

**எ - னின். நிறுத்தமுறையானே மொழிக்கு முதலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

1. முத்தொள்ளாயிரம் - சுடு.

2. 'இசைவிளி பண்டமாற்றாயினவற்றை இயற்கையளபெடை' என்றும், 'இயற்கையாவது பொருட்குப்பின் றோன்றாது உடனிகழுந் தன்மை' என்றுங் கூறுவர் பிரயோக விவேக நூலார். ஈண்டு அலகுபெறுமையை 'சீருந்தளையுஞ் சிதையிற் சிறிய இ, உ அளபோ, டாரு மறிவ ரலகுபெறுமை' என்பதனானும் உணர்க.

(இ - ள்.) பன்னிரண்டுயிரும், உயிரூர்ந்த இப்பத்து மெய்யும் மொழிக்கு முதலாம் எ - று.

எ - டு: அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடு, ஏடு, ஐயம். ஒதி, ஓதி, ஔவியம் எனவும்; களி, சவடி, தளிர், நலம், படை, மலை, வளம், யவனர், ஞமலி, அங்ஙனம் எனவும் வரும். பிறவும் அன்ன.

உயிர்போல் தனித்து முதலாந்தன்மைய வல்லவாதலின், உயிர்மெய் என்றார். இஃது இன்னதல்லதிதுவென மொழிதல் என்னும் உத்தி. (சஎ)

பொதுவிதியுட் சிறப்புவிதி

க0௩. உஊ ஒஓ அலவொடு வம்முதல்.

எ - னின். பொதுவிதியுட் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நான்குமல்லாத எட்டுயிரோடும் வகரம் மொழிக்கு முதலாம் எ - று.

எ - டு: வளி, வாளி, விளி, வீளி, வெளி, வேளை, வைகல், வௌவு என வரும். (சஅ)

க0ச. அஆ உஊ ஓஔ யம்முதல்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்வாறுயிரோடும் யகரம் மொழிக்கு முதலாம் எ - று.

எ - டு: யவனர், யானை, யுகம், யூகி, யோகம், யௌவனம் என வரும்.

மேலை ஒடுவை வருவித்துக் கொள்க. (சகூ)

க0ரு. அ ஆ எ ஒவ்வோ டாகு ஞம்முதல்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இந்நான் குயிரோடும் ஞகரம் மொழிக்கு முதலாம் எ - று.

எ - டு: ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று என வரும். (௬0)

௬0௧. சுட்டியா எகர வினாவழி யவ்வை
ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மூன்று சுட்டும் யா வினாவும் எகர வினாவு மாய இடைச்சொற்களின் பின் அகரத்தையொட்டி ஙவ்வும் மொழிக்கு முதலாம் எ - று.

எ - டு: அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம், எங்ஙனம் என வரும். இவற்றை ஆங்கு எங்கு என்றாற்போல ஒருமொழிகளென்றால் என்னையெனின்:—அஞ்ஞான்று எஞ் ஞான்று என்பனபோலப் பிளவுபட்டு இடையே மெல்லொற்று மிக்கு வருதலின் தொடர்மொழிகளேயாமென்க.

ஙனமென்பது, இடத்தினையுந் தன்மையினையும் உணர்த்தும் பலபொருளொருசொல்லாய் வரினும், தனித்து வருந் தன்மைய தன்றி, முடவன் கோலூன்றி வந்தாற்போலச் சுட்டு வினாவாகிய இடைச்சொற்களை முன்னிட்டு வருதலான், வழியென்றும், ஏனைய மெய்கள்போல முதலாகாமையின் அவ்வோடென்னாது ஒட்டி என்றும், ஒருவாற்றான் முதலாதலின் இழிவுசிறப்பாக ஙவ்வு மென்றுங் கூறினார். இங்ஙனங் கூறலான், ஙகரம் மொழிக்கு முதலாகாதென்பார்க்கு உடன்படலும் மறுத்தலுமாய்ப் பிறர் தம்மதமேற்கொண்டு களைவே யென்னும் மதம்படக் கூறினா ரென்றுணர்க.

இனி முதலாமென்ற பத்துயிர்மெய்யுள் வகரமுதலிய நான் கினையும் விதந்து கூறவே, ஒழிந்த ஆறு மெய்யும் பன்னிரண்டுயி ரோடு முதலாமென்பது [1]அருத்தாபத்தியாற் பெற்றாம்.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனி,

[2]" சகரக் கிளவியு மவற்றோ ரற்றே
அ ஐ ஒளவெனு மூன்றலங் கடையே."

1. அருத்தாபத்தி, பிரமாணங்களுளொன்று; அஃதாவது: 'பகலுண்ணான் பருத்திருப்பான்' என்றால், உண்ணாதவன் பருத் திருத்தல் கூடாமையின், 'இரவிலுண்பான்' என்று கொள்ளுதல்.
2. தொல்காப்பியம், எழுத்ததிகாரம்-மொழிமரபு - சூ. உ௯.

என்பது முதலாக இன்னோன்ன சிலவெழுத்துக்களை மொழிக்கு முதலாகாவென ஆசிரியர் தொல்காப்பியர் விலக்கினாரோவெனின் :—இவ்வடமொழிகளுந் திசைச்சொற்களும் அக்காலத்து இவ்வாறு தமிழின்கட் பயின்று வாராமைபற்றியென்க. (ருக)

---

## ௮. இறுதிநிலை

### மொழிக்கிறுதியில் வரும் எழுத்துக்கள்

க0எ. ஆவி ஞணநமன யரலவ ழளமெய்
சாயம் உகரநா லாறும் ஈறே.

எ - னின். நிறுத்த முறையானே மொழிக்கீறமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தனித்தும் ஒற்றோடும் வரும் ஆவி முதலாக இங்ஙனங் கூறிய இருபத்துநான்கெழுத்தும் மொழிக்கீறாம் எ - று.

எ - டு: ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எனவும்; சுட்டும் வினாவும் உவமவுருபடியுமாய ஓரெழுத்தொருமொழியாம் இடைச்சொலாகிய அ, இ, உ, எ, ஒ எனவும்; விள. பலா, கரி, குரீஇ, கடு, மரூஉ, சே, தை, கோ எனவும்; உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வாள், அஃகு எனவும் வரும். காட்டாதொழிந்தன வருஞ் சூத்திரத்தாற் காண்க.

குற்றுகரமும் உயிராய் அடங்குமேனும், புணர்ச்சி வேறுபாடு தோன்ற வேறெடுத்தோதினாரென்க. (ருஉ)

### சிலவற்றிற்குச் சிறப்புவிதி

க0அ. குற்றுயிர் அளபின் ஈறும் எகரம்
மெய்யோ டேலாதொந் நவ்வோ டாம்ஔ
ககர வகரமோ டாகு மென்ப.

எ-னின். குற்றுயிர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும், எகரத்திற்கு எய்தியதொருமருங்கு விலக்கலும், ஒகரத்திற்கும் ஔகாரத்திற்கும் எய்தியவற்றுட் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குற்றுயிர் அளபெடையின்கண் வரிவடிவின் அறிகுறியாய்த் தனித்து ஈறும்; எகரம் மெய்யோடு ஈறுகாது; ஒகரம் நகரமொன்றுடன் ஈறும்; ஔகாரங் ககர வகரங்கள் இரண்டுடனும் ஈறும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

எ - டு. "ஆஅவளிய வலவன்" எனவும்; நொ எனவும்; கௌ, வௌ எனவும் வரும்.

நெடில் அளபெடுப்புழி நெட்டெழுத்துத் தனியே வந்த நோசை குற்றெழுத்துத் தனியே வந்த நோசை என்று கொள்ள நிற்றலிற் குற்றுயிரளபினீறுமென்றார்.

எகர ஒகர ஔகாரங்களை விதந்தோதவே, ஏனையுயிர்கள் தமக்கேற்ற மெய்களோடு ஈறுமென்பது பெற்றும்.

முதலுஞ் சார்புமாய் வகுத்து விரித்துக்கொண்ட எல்லாவெழுத்தும் உயிரும் மெய்யும் ஆய்தமுமாய் அடங்கலின், முதலும் ஈறுமாகாத ஆய்தத்தை யொழித்து, ஒழிந்த உயிரும் மெய்யுமாய இரண்டனையும் உயிர்முதல் மெய்முதல் உயிரீறு மெய்யீறெனை வகுத்துக்கொண்டார், மேல் வரும் புணர்ச்சிவிதி அடங்குதற் பொருட்டெனக் கொள்க. (௫௩)

## எழுத்தினது முதலும் ஈறும்

௧0௪. நின்றநெறி யேஉயிர் மெய்முதல் ஈறே.

எ - னின். எழுத்தினது முதலும் ஈறுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) உயிர்மெய்யினது முதல் யாது அதன் ஈறு யாதெனின், ஒற்று முன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்து நின்ற நெறியே, மெய் அதன் முதலாம், உயிர் அதன் ஈறும் எ - று.

எனவே, உயிரும் ஒற்றும் ஆய்த முதலிய ஒன்பது சார்பெழுத்துக்களும் ஓரெழுத்தாகலின், அவற்றிற்கு முதலும் ஈறும் அவையேயாமென்பது அருத்தாபத்தியாற் கூறினர். இஃது எஞ்சிய சொல்லின் எய்தக்கூறல் என்னும் உத்தி. இத்தொடக்கத்தன வல்லன, சொல்லின் முடிவி னப்பொருள் முடித்தல் என்னும் உத்தி.

முன்னர் மொழிக்கு முதல் ஈறென்றவற்றுள்ளும், பின்னர் இடைநிலை போலி பதம் புணர்பென்பவற்றுள்ளும், உயிர்மெய்யைப் பிரித்துத் தனிமெய்யும் தனியுயிரும் போல வைத்து இலக்கணங் கூறலின். மொழிக்கு முதலும் ஈறுங் கூறுதலன்றி எழுத்திற்கு முதலும் ஈறுங் கூறினாரென்றுணர்க. இச்சூத்திரஞ் சிங்கநோக்கம். அற்றன்றி, ஆற்றொழுக்காய், முன்னின்ற மொழி முதலீறாக்குஞ் சூத்திரங்களையே தொடர்ந்து வந்ததென்பாருமுளர். பின் 'ஙம்முன் கவ்வாம்' என்றும், 'இயல்பினும் விதியினு நின்ற உயிர்முன் க ச த ப மிகும்' என்றும், உயிர்மெய்யின் உயிரையும் மெய்யையும் வேறு பிரித்தோதுவது இலக்கண மன்றாய் முடிய மாதலின். அது பொருந்தாதென்க.

எண்ணுஞ் சூத்திரத்துள் உயிர்மெய்யை ஓரெழுத்தாக எண்ணினார், ஈண்டு இரண்டாக வைத்து இலக்கணங் கூறுவதென்னை யெனின்:—அப்பொழுது பெய்த உப்பே போல, உயிரொடு புணர்த்திய மெய், தன்னுருவு தோன்றாது ஒன்றாய் நிற்றலின் ஒன்றுமாய், ஒற்றுமுன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்து நின்ற நெறியான் இரண்டுமாய் நிற்றலினென்றுணர்க. இவ்வாற்றான், உயிர்மெய் யென்னுஞ் சொல், மாத்திரைவகையான் உம்மைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகவும், ஒலிவகையான் உம்மைத் தொகையாகவுங் கொள்ளப்படும். (௩௪)

## ௯. இடைநிலை மெய்ம்மயக்கம்

௧௧௦. கசதப ஒழித்த ஈரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்
டாகுமிவ் விருபால் மயக்கும் மொழியிடை
மேவும் உயிர்மெய் மயக்கள வின்றே.

எ - னின். நிறுத்தமுறையானே மொழிக்கிடைநிலையாமாறு உணர்த்துங்கால், உயிருடன் உயிர் மயங்கலும், மெய்யுடன் மெய் மயங்கலும், இவ்விரண்டும் மாறி மயங்கலும் என மூன்றாக வகுக்கப்படும்; இவற்றுள், உயிருடன் உயிர்மயங்குந் தன்மையின்மையின் அதனையொழித்து, ஏனையிரண்டனையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மெய் பதினெட்டனுள், க ச த ப என்னும் நான்கையும் ஒழித்த பதினான்கு மெய்யும் பிறமெய்களோடு கூடுங்கூட்டம் வேற்றுநிலைமெய் மயக்கமாம்; ரகார ழகார

மென்னும் இரண்டனையுமொழித்து ஒழிந்த பதினாறு மெய்யுந் தம்மொடு கூடுங் கூட்டம் உடனிலைமெய்ம்மயக்க மாம். இவ்விரண்டு பகுதி மயக்கமும் மொழிக்கிடையே வரும். இவ்வாறு மெய்யுடன் மெய் மயங்குதலன்றி, உயிருடன் மெய்யும், மெய்யுடன் உயிரும், மாறி, உயிரும் மெய்யும் மயங்கும் மயக்கத்திற்கு வரையறையின்று, வேண்டியவாறே மயங்கும் எ - று.

கூட்டமெனினும் மயக்கமெனினும் ஒக்கும்.

உடனிலையென்பதனாற் பிறமெய்யென்பது பெற்றாம்.

மொழியென்றது ஒருமொழி தொடர்மொழி என்னும் இரண்டனையும்.

உயிரும் மெய்யும் மயங்குதற்கு இடம் விதந்து கூறாது பொதுப்படக் கூறினார், மொழியினும் உயிர்மெய்யென்னும் ஓரெழுத்தினும் வருதலின்.

இச் சூத்திரத்தான் மெய்யுடன் மெய் மயங்குங்கால், க ச த ப என்னும் நான்குந் தம்மொடு தாமே மயங்குமெனவும் ர ழ என்னும் இரண்டுந் தம்மொடு பிறவே மயங்குமெனவும், ஒழிந்த பன்னிரண்டு மெய்யுந் தம்மொடு தாமும் பிறவும் மயங்குமெனவும் பெற்றாம்.

உயிருமெய்யும் மயங்குதற்கு உதாரணம்: அல், வில் எனவும்; கா எனவும்; மொழிக்கண் மயங்கின. க என எழுத்தின்கண் மயங்கின. மெய்யுடன் மெய் மயங்குதற்கு உதாரணம் மேல் வருஞ் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

[1]இவ்விடைநிலையை ஒருமொழி தொடர்மொழி யென்னும் இரண்டினுங் கொள்ளாது, ஒருமொழிக்கே யெனக் கொள்வாரு முளர். எவ்விடத்துவரினும் இரண்டெழுத்து இணங்கிப் பொருந் தும் பொருத்துவாயை இடைநிலையென் றோதலானும், இணங்கா தனவரின் விகாரப்படுதலானும், அது நூற்கருத்தன் றென்க.

இனி, உயிர்மெய் மயக்களவின் றென்பதற்கு [2]உயிர்மெய் முன் உயிர்மெய் மயங்குதல் வரையறையின்றெனப் பொருள்

---

1. இடைநிலை மயக்கத்தை ஒரு மொழிக்கேயெனக் கொள் பவர், நச்சினார்க்கினியர்; தொல். நூன். சூ. 27.

2. உயிர்மெய்முன் உயிர்மெய் மயங்குதல் உளதென்று கூறுபவர்கள் மயிலைநாதரும், நச்சினார்க்கினியரும்; தொல். நூன். 22, உரை; இ. வி. உரைகாரரும்; சூ. 31 உரை.

கூறுவாருமுளர். இக்காலம் உயிர்மெய்யை இரண்டெழுத்தாகப் பிரித்து மயக்கவிதி கூறுவார் அதனையே ஒன்றாக வைத்து மயக்கவிதி கூறாராதலானும், கூறினும், இடைநிலை மயக்க முழுவதும் இச் சூத்திரத்து அடங்காமையானும், அது பொருந்தாதென்க. (௬௫)

## வேற்றுநிலை மெய்ம்மயக்கத்திற்குச் சிறப்புவிதி

௧௧௧. ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே.

எ - னின். வேற்றுநிலை மெய்ம்மயக்கத்துள் விதந்து சிறப்பு விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஙகர முன்னர்க் ககரமும், வகர முன்னர் யகரமும் மயங்கும் எ - று.

எ - டு: கங்கன், தெவ்யாது என வரும். (௬௬)

௧௧௨. ஞநமுன் தம்மினம் யகரமொ டாகும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்முன்னரும், தமக்கினமாகிய சகர தகரங்களும், யகரமும் மயங்கும்.

எ - டு: கஞ்சன், உரிஞ்யாது, கந்தன், பொருந்யாது என வரும். (௬௭)

௧௧௩. டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்முன்னரும், க ச ப என்னும் மூன்று மெய்யும் இணங்கி மயங்கும் எ - று.

எ - டு: கட்கம், கட்சி, நுட்பம், கற்க, கற்சிறார், கற்ப என வரும். (௬௮)

௧௧௪. ணனமுன் இனங்கச ஞபமய வவ்வரும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்முன்னரும், தமக்கினமாகிய ட றக்களும், க ச ஞ ப ம ய வ என்னும் ஏழு மெய்யும் மயங்கும் எ - று.

எ - டு: விண்டு, வெண்கலம், வெண்சோறு, வெண்ஞமலி, வெண்பல், வெண்மலர், மண்யாது, மண்வலிது எனவும்; புன்றலை புன்கண், புன்செய், புன்ஞமலி, புன்பயிர், புன்மலர், பொன்யாது, பொன்வலிது எனவும் வரும். (ருகூ)

கக௫. மம்முன் பயவ மயங்கும் என்ப.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மகரமெய் முன்னர்ப் பகர யகர வகரங்கள் மயங்குமென்று சொல்லுவர் புலவர் எ - று.

எ - டு: கம்பன், கலம் யாது, கலம் வலிது என வரும். (சுo)

ககசு. யரழ முன்னர் மொழிமுதல் மெய்வரும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இம்மூன்று மெய் முன்னரும் மொழி முதலிற்கு விதந்துகொண்ட பத்துமெய்யும் மயங்கும் எ - று.

எ - டு: வேய், வேர், வீழ், கடிது, சிறிது, தீது, பெரிது, நீண்டது, மாண்டது, ஞான்றது, யாது, வலிது எனவும்; வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு எனவும் வரும்.

சுருங்கச்சொல்லல் என்னும் வனப்புவகையான் மொழிமுதன் மெய்யெனக் கூறலின், யகரத்தின் முன் யகரம் மயங்கும் உடனிலை ஈண்டுக் கொள்ளாதொழிக. (சுக)

ககஎ. லளமுன் கசப வயஒன் றும்மே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்முன்னரும், க ச ப வ ய என்னும் ஐந்துமெய்யும் மயங்கும் எ - று.

எ - டு: வேல், வாள், கடிது, சிறிது, பெரிது, வலிது, யாது என வரும். (சுஉ)

### உடனிலை மெய்ம்மயக்கத்தின் சிறப்புவிதி

ககஅ. ரழவல்லன தம்முன் தாம்உடன் நிலையும்.

எ-னின். உடனிலை மெய்ம்மயக்கத்தின் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ரகார ழகார மல்லனவாகிய வேற்றுநிலை மெய்ம்மயக்கத்துட் கூறிய பன்னிரண்டு மெய்யும், உடனிலைக்கேயுரிய க ச த ப நான்கும், தம்முன் தாமுடனின்று மயங்கும் எ - று.

எ - டு: அங்ஙனம். அக்கை, அஞ்ஞானம், அந்நீர், அட்டு அற்றம், அண்ணம், அன்னை, அம்மை, அய்யம், அல்லி, அள்ளல் எனவும்; அக்கு, அச்சு, அத்து, அப்பு எனவும் வரும். (சுக)

தனிமெய்யுடன் தனிமெய்யாய் மயங்குவன இவை
மொழிக்கு உறுப்பாக மயங்காதன இவை

ககஉ. யரழவொற் றின்முன் கசதப ஙஞநம
ஈரொற் றாம்ரழத் தனிக்குறில் அணையா.

எ - னின். தனிமெய்யுடன் தனிமெய்யாயும் மயங்குவன இவையவென்பதூஉம், மொழிக்குறுப்பாக மயங்காதன இவையவென்பதூஉம், உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) ய ர ழ வென்னும் மூன்றொற்றும், இவற்றின் முன் மயங்குமென விதித்த பத்தொற்றுள் இங்ஙனங் கூறிய எட்டொற்றும், தனிமெய்யும் உயிரூர்ந்த மெய்யுமாய் மயங்குவனவன்றி, ஈரொற்றாயும் மயங்குவனவாம். [1]ரகார ழகாரவொற்றும், தனிக்குறிலும், மயங்குந்தன்மையவாயினும், மொழிக்கு உறுப்பாக, வருவதும் நிற்பதுமாய் மயங்கா எ - று.

ஈரொற்றும் ஆமென்னும் உம்மையும், மொழிக்குறுப்பாக என்னுஞ் சொற்களும் எஞ்சி நின்றன.

எ - டு: வேய்க்குறை, வேர்க்குறை, வீழ்க்குறை, சிறை, தலை, புறம் எனவும்; வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு எனவும்; காய்ந்தனம், சேர்ந்தனம், வாழ்ந்தனம் எனவும் வரும். ஏனைய வந்துழிக் காண்க.

அணையா என்ற ஆகாதனவற்றிற்கு உதாரணங் காட்டல் ஆகாமையுணர்க. (சுஉ)

---

1. இனி உரையிற்கோடல் என்னும் உத்தியால், ரகர ழகர வொற்று தனிக்குறிலைச் சேர்ந்து மொழிக்குறுப்பாகி விகுதி இடைச் சொல்லாய் வருமெனக்கொள்க எனவும் கூறுவர் இராமாநுச கவிராயர்.

செய்யுளில் ஈரொற்றாய் நிற்கும் எழுத்துக்கள்

கஉ0. லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றாஞ் செய்யுள் உள்ளே.

எ-னின். செய்யுட்குரியவாய் ஈரொற்றுடன் நிற்பன இவையவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) லகார ளகாரவொற்றுத் திரிந்த னகார ணகாரங்கள் முன்வரும் மகரவொற்று, முன்னர்க் கூறியவாறே குறுகி, அவற்றுடன் ஈரொற்றுடனிலையாஞ் செய்யுளகத்து எ-று.

எ-டு: "[1]திசையறி மீகானும் போன்ம்" எனவும்; "மயிலியன் மாதர் மருண்ம்" எனவும் வரும்.

மகாரம் நைந்தென [2]அநுவதித்தார், மகரங் குறுகுதற்குத் தொடரும் னகர ணகரங்கள் லகர ளகரந் திரிந்தனவென்பதூஉம், அக்குறுக்கஞ் செய்யுட்கண்ணதென்பதூஉம் உய்த்துணர்தற்கென்க. (கூடு)

முதனிலை இறுதிநிலை இடைநிலைகளுக்குப் புறனடை

கஉக. தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும்
இம்முறை மாறியும் இயலும் என்ப

எ-னின். மொழி முதலீறிடை நிலைகட்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) எழுத்துக்கள் தம்பெயர்களை மொழிந்து நிலைமொழி வருமொழியாகப் புணர்க்குமிடத்து, எல்லா மொழி முதற்கும், இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்தும் முதலாம்; மயக்கத்திற்கு இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்தும் மயங்கும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

---

1. பரி. ம: 55.

2. அநுவதித்தல் - 'வழிமொழிதல்' என்று தமிழில் வழங்கப்பெறும்; "கூறின பின்னுங் கூறின சிலவவை, அனுவாதமென்றே யறிந்தே யடக்குக." இ. கொ. சூ. எ.

இக்ஙனம் எல்லாவெழுத்துந் தனித்தனி அதற்கதுவே முதலாக வரும் எனவே, ஈற்றிற்கு விதித்தனவும் விலக்கியனவு மாகிய எல்லாவெழுத்துந் தனித்தனி அதற்கதுவே ஈறாக வருமெனச் சொல்லாதே அருத்தாபத்தியான் அமைதலின், ஈறு மெய் நிலைபடக் கூறுவதொழிந்தார்.

எ - டு: "அவற்றுள், லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்" என்புழி, ஃகரம் முதலாகியும், கூனிறுதி னகரவொற்றோடு மயங்கியும் நின்றது. கெஃஃபெரிது என்புழி, ஃகரம் மெய்யோ டுடன் நின்றது. பிறவும் வரையறையின்றி வருதல் காண்க.

ஆய்தத்திற்குப் பிறப்பதிகாரத்துள் வருவாய் கூறியவழி மயக்கவிதி அமைந்து கிடந்தமையானும், தன்பெயர் மொழிய வாராமையானும் கூறுதொழிந்தார். (கக)

## ௰. போலி

### மொழியிறுதிப்போலி

௧௨௨. மகர இறுதி அஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன உளவே.

எ - னின். நிறுத்த முறையானே போலியாமாறு உணர்த்து வான்றொடங்கி, மொழியிறுதிப்போலி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பால்பகா அஃறிணைப்பெயர்களிடத்து இறுதி மகரம், னகரத்தோடு ஒத்து நடப்பன உளவாம் எ - று.

மகரவிறுதியென்றதனால், பால்பகா அஃறிணைப் பெயரென்பது பெற்றாம்.

மகரம் னகரத்தோடொத்தலாவது, பெயரிறுதிக்கண் மகரம் நின்ற நிலைக்களத்து னகரம் நிற்பினும் வேற்றுமையின்றி ஒத்தல்.

எ - டு:

[2]"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்."

---

1. தொல். நூன். ௬. உச. 2. திருக்குறள், அச.

இதனுள், அகம் அகன், முகம் முகன் எனவும்; தலம் தலன், நிலம் நிலன், கலம், கலன், நலம் நலன், வலம் வலன் எனவும் வரும். பிறவும் அன்ன.

உறழா நடப்பன உள என்னுஞ் சொல்லாற்றலான், உறழாதன பெரும்பாலவென்க. அவை வட்டம், குட்டம், மாடம், கூடம் முதலாயின.

பால்பகா அஃறிணைப் பெயர்களிடத்து இயல்பாய மகர விறுதி நிலையின் னகரம் போலியாய் வருமெனவே, அகன் முகன் முதலிய சொற்களைப் பால்பகுத்த ஆடூஉவறிசொல்லெனக் கொள்ளற்க என்பதூஉம், எகின் பயின் குயின் வயின் முதலிய னகர வீற்றுப் பெயர்க்கு இவ் வையப்பாடில்லை என்பதூஉம் பெற்றாம்.

இனி, இவ்விறுதிப்போலியை முற்கூறியவதனால், சுரும்பு சுரும்பர், அரும்பு அரும்பர், சாம்பல் சாம்பர், பந்தல் பந்தர் முதலியனவுங் கொள்க. (கஎ)

## மொழிமுதற் போலியும் மொழியிடைப் போலியும்

**கஉரு. அ ஐ முதலிடை ஒக்கும் சஞயமுன்.**

**எ - னின். மொழிமுதற்போலியும் மொழியிடைப்போலியும் உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) மொழிமுதலினும், இடையினும், அகர ஐகாரங்கள் வேற்றுமையின்றி ஒத்து நடப்பனவாம், சகர ஞகர யகரங்கட்கு முன்னர் வருமாயின் எ - று.

ஈண்டு முன்னென்றது கால முன் எனக் கொள்க.

எ - டு: பசல் பைசல், மஞ்சு மைஞ்சு, மயல் மையல் எனவும்; அமச்சு அமைச்சு, இலஞ்சி இலைஞ்சி, அரயர் அரையர் எனவும் வரும். பிறவும் அன்ன. (கஅ)

## மொழியிடைப்போலி

**கஉச. ஐகான் யவ்வழி நவ்வோடு சில்வழி**
**ஞஃகான் உறழும் என்மரும் உளரே.**

**எ - னின். இதுவும் மொழியிடைப்போலி உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) மொழியிடைக்கண், சிலவிடத்து, ஐகாரத்தின் பின்னும், யகரவொற்றின் பின்னும், இயல்பாய் வரும் நகரத்தோடு ஞகரம் உறழும் என்று சொல்லுவாருமுளர் எ - று.

இப்போலி அருகி வருதலின் சில்வழியென்றும், எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததன்றாகலின் என்மரும் என்றுங் கூறினர்.

எ - டு :

[1]"செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க
செய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற வாடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே."

எனவும், ஐஞ்ஞூறு எனவும் வரும்.

இச்சூத்திரம் பிறன்கோட் கூறல் என்னும் உத்தி.

"மண் யாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே" "மண்ஞாத்தகோட்ட மழகளிறு தோன்றுமே" எனவும், "பொன் யாத்த தார்ப் புரவி பரிக்குமே" "பொன் ஞாத்த தார்ப் புரவி பரிக்குமே" எனவும் வருமொழி வினைக்குமுன்னர், யா நின்ற நிலைக்களத்து ஞா நிற்பினும் ஒக்கும் போலிக்கு. ஆசிரியர் தொல்காப்பியர்,

[2]"ண ன வென் புள்ளிமுன் யாவு ஞாவும்
வினையோ ரனைய வென்மனார் புலவர்"

எனச் சூத்திரஞ் செய்தவாறு, இவ்வாசிரியருஞ் சூத்திரஞ் செய்யாதொழிதல் இறந்தது விலக்கல் என்னும் உத்தி. பிறவும் அன்ன.

இம்மூன்று சூத்திரத்தானுங் கூறிய போலிகளை இடைநிலை மயக்கத்தின்பாற்படுத்துப் பொருள் கூறுவாருமுளர். இங்ஙனங் கூறிய எழுத்துக்கள் மொழிக்குறுப்பாகி, ஒன்று நின்ற நிலைக்களத்து மற்றொன்று அதுபோல மொழி நிரப்ப நிற்பதன்றி, ஒன்றோடொன்று மயங்கி, இரண்டெழுத்தும் உடனிற்பதின்மையானும், முதலீறிடைநிலைகட்குப் புறனடையுங் கூறிக் குறைவறுத்தமையானும், 'உறழா நடப்பன' என்றும் 'ஒக்கும்' என்றும்

1. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம், திருத்தில்லை செ. ௫.

2. தொல். எழுத்ததி. தொகை, சூ. ௪.

இங்ஙனம் எவ்வெழுத்துந் தனித்தனி அதற்கதுவே முதலாக வரும் எனவே, ஈற்றிற்கு விதித்தனவும் விலக்கியனவு மாகிய எவ்வெழுத்துந் தனித்தனி அதற்கதுவே ஈறாக வருமெனச் சொல்லாதே அருத்தாபத்தியான் அமைதலின், ஈறுமென நிகைபடக் கூறாதொழிந்தார்.

உ - ம்: [1]"அவற்றுள், லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்" என்புழி, லகரம் முதலாகியும், கூனிறுதி ளகரவொற்றோடு மயங்கியும் நின்றது. கெப்பெரிது என்புழி, எகரம் மெய்யோ டுறாது நின்றது. பிறவும் வரையறையின்றி வருதல் காண்க.

ஆய்தத்திற்குப் பிறப்பதிகாரத்துள் வருவாய் கூறியவழி மயக்கவிதி அமைந்து கிடந்தமையானும், தன்பெயர் மொழிய வாராமையானும் கூறாதொழிந்தார். (சக)

---

## க0. போலி

### மொழியிறுதிப்போலி

கஉஉ. மகர இறுதி அஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன உளவே.

எ - னின். நிறுத்த முறையானே போலியாமாறு உணர்த்துவான் தொடங்கி, மொழியிறுதிப்போலி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பால்பகா அஃறிணைப்பெயர்களினிடத்து இறுதி மகரம், னகரத்தோடு ஒத்து நடப்பன உளவாம் எ - று.

மகரவிறுதியென்றதனால், பால்பகா அஃறிணைப் பெயரென்பது பெற்றாம்.

மகரம் னகரத்தோடொத்தலாவது, பெயரிறுதிக்கண் மகரம் நின்ற நிலைக்களத்து னகரம் நிற்பினும் வேற்றுமையின்றி ஒத்தல்.

உ - ம்:

[2]"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்."

---

1. தொல். நூன். கூ. உச. 2. திருக்குறள், அச.

எ - னின். மேல் எழுத்திலக்கணங் கூறிய முகத்தாற் போந்த எழுத்தின் சாரியைகளைத் தொகுத்து இனமடைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்கள் அகரச் சாரியையும், நெட்டுயிர் கள் காரச்சாரியையும், அவற்றுள் ஐகார ஔகாரங்கள் காரச்சாரியையுடனே கான் சாரியையும், உயிர்க்குறிலும் உயிர்மெய்க்குறிலும் காரம் கான் என்னும் இவ்விரண் டுடனே கரச்சாரியையும் பெறும் எ - று.

மெய்களை முற்கூறினர், அவற்றிற்கு அச்சாரியை இன்றி யமையாமையின். மெய்கள அவ்வுமென்றது அகரமுமென்றார், அங்ஙனங் கரங் காரம் கான்கள் வரின், சாரியை அகரத்தினது சாரியையென்று கோடற்கு. ஆஞ்சாரியை யென்றார், கார முதலிய சாரியைகளை ஏற்றபெற்றி கோடற்கு.

எ - டு: க, ங எனவும்; ஆகாரம், ஐகாரம், ஔகாரம் என வும்; ஐகான், ஔகான் எனவும்; அகாரம் அஃகான், அகரம், மகாரம், மஃகான், மகரம் எனவும் வரும். பிறவும் அன்ன.

பிறவென்றமையால், குறிலோடு கான் புணருங்கால் இடையே ஆய்தத்தோற்றமும், வழங்கும் பிற சாரியைகளுங் கொள்க.

உயிர்மெய்நெடிலும் ஆய்தமுங் கூறுதொழிந்தார், உயிர்மெய் நெடில் இங்ஙனங் கூறிய மூன்று சாரியையும் ஏலாமையானும், ஆய்தம் பிறவழி வாராமையின் மொழியிடைப்படுத்து அம்மொழி யிறுதிக்கண் பிறசாரியை தந்து உயிர்வருக்கத் திறுதிக்கண்ணே வழங்குதலானும் என்க.

விகற்பத்தின் முடித்தல் என்னும் உத்தியான் மேல் விரிந்து முடிந்துகிடந்தனவற்றைப், புலப்படவேண்டி ஈண்டுத் தொகுத்து முடித்தலான், இச்சூத்திரம் முடிந்தது முடித்தல் என்னும் உத்தி. (எக)

## இவ்வியலுக்குப் புறனடை

கஉஎ. மொழியாய்த் தொடரினும் முன்னனைத் தெழுத்தே.

எ - னின். இவ்வியலுக்கு ஆவதோர் புறனடை உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வெழுத்துக்கள், பதமாயினும், அப் பதந் தம்மோடும் உருபோடும் புணரினும், அவற்றுற்

பிறழாது, முன்னர்க் கூறிய அப் பத்திலக்கணத்தையும் உடையவாம் எ - று.

எழுத்துச் சுண்ணத்தின்கண் அரிசனமுதலிய போலாது மாலையின்கண் மலர்போல் அவற்றில் நிற்றலின், முன்னைத் தென்றார்.

எழுத்து என்பது, சாதியொருமையாதலின், அனைத்து என்னும் ஒருமையோடு முடிந்தது.

முன்னைத்தாதல் பதவியல் முதலிய நான்கியலுள்ளுங் காண்க.

(எ௨)

**எழுத்தியல் முற்றிற்று.**



# ௨. பதவியல்

## க. பதம்

### பதம் இன்னதென்பதும் அதன்வகையும்

கஉ௮. எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருள்தரின்
பதமாம் அதுபகாப் பதம்பகு பதம்என
ஈரா லாகி இயலும் என்ப.

எ - னின். நிறுத்த முறையானே பதத்தினது இலக்கணம் உணர்த்துவான் தொடங்கி, எழுத்தாற் பதமாதலும் அஃது இத்துணையவென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுத்துக்கள் தாமே, ஒவ்வொன்று தனித்தும் இரண்டு முதலாகத் தொடர்ந்தும் பிறபொருளைத் தருமாயின், அது பதமாம்; அப்பதம், பகாப்பதம் எனவும், பகுபதம் எனவும், இரண்டு பகுதியவாகி நடக்கும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

எழுத்தாலாய பதம் அரிசனமுதலியவற்றாற் சமைந்த சுண்ணம்போலாது மலராற் சமைத்த மாலைபோல் நிற்றலின் எழுத்தே என்றும், ஓரெழுத்தேனும் பிறபொருள் தருதலின் பதமாம் என்பார் தனித்து என்றும், [1]ஒன்று இரண்டு பலவென்பன வடநூல் வழக்கு, ஒன்றல்லனவெல்லாம் பலவென்பது தமிழ்நடையாகலின், வடநூல் வழக்குப்பற்றி ஆசிரியர் தொல்காப்பியர்,

"[2]ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி
யிரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே."

எனக் கூறினாரேனும், கல் வில் என்றற்றொடக்கத்து ஈரெழுத் தொருமொழிகளும் ஒன்றோடொன்று தொடர்ந்து நின்றே பிற

---

1. "ஒன்றல் லவைபல தமிழ்நடை வடநூல்
இரண்டல லவைபல வென்றிசி னோரே" (யா. கா. மேற்.)
'ஒன்றல்லவை பலவென்பது தமிழ்நடை' தக்க. 466, உரை.

2. தொல்காப்பியம் எழு. மொழி. சூ. கஉ.

பொருளுணர்த்தலின் இவற்றைத் தொடர்ந்தன அல்லவெனக் கூறினாரல்லர் என்பதற்குத் தொடர்மொழி என வாளா கூறாது "இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி" என அடைகொடுத்து ஓதியதே சான்றாகலான் தமிழ்நடைபற்றி "ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி—யிரண்டிறந் திசைக்குந் தொடர் மொழி யுளப்பட—மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே" என்றார்க்கு இரண்டெழுத்துந் தொடர்ந்தனவல்லவெனின் அது மொழியுமன்றென்பார் தனிநிலை யொழிந்தனவற்றைத் தொடர்ந்து என்றும், இறிஞ் மிறிஞியெனின் தொடருமேனுந் தன்னை உணர்த்துமன்றிப் பிறபொருள் தாராமையிற் பதமாகாதென்பார் பொருள்தரின் என்றும், "தன்னை யுணர்த்தி னெழுத்தாம் பிற பொருளைச்—சுட்டுதற் கண்ணேயாஞ் சொல்" என்பவாகலின், பொருள் என்றது பிறபொருள் என்பார் உணர்த்தின் என்னாது தரின் என்றும், அணுவென்னும் ஒலி நுட்பத்தான் எழுத்தாணாற் போல் எழுத்தென்னும் ஒலி நுட்பத்தான் மொழியாம் என்பார் பதமாம் என்றும், இப் பதவியலுக்கு மேற்கோள் ஆரியமென்பார் மொழியென்னாது பதம் என்றுங் கூறினார்.

இச் சூத்திரத்துள் 'தொடர்ந்தும்' என்றது பிறர்நூற் குற்றங் காட்டல் என்னும் மதம். (க)

## ஓரெழுத்தொருமொழி

கஉக. உயிர்மவில் ஆறும் தபநவில் ஐந்தும்
கவசவில் நாலும் யவ்வில் ஒன்றும்
ஆகு நெடில்நொது ஆங்குறில் இரண்டோ
டோரெழுத் தியல்பதம் ஆறேழ் சிறப்பின.

எ-னின். மேல் எழுத்துத் தனித்துந் தொடர்ந்தும் ஒரு மொழியாமென்றார்; அவற்றுள் ஓரெழுத்தொருமொழி இவையென் பதூஉம் இத்துணைய வென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) உயிர்வருக்கத்தும், மவ்வருக்கத்தும் அவ் வாறும், தவ்வருக்கத்தும், பவ்வருக்கத்தும், நவ்வருக்கத் தும் ஐவைந்தும், கவ்வருக்கத்தும், வவ்வருக்கத்தும், சவ் வருக்கத்தும் நந்நான்கும், யவ்வருக்கத்து ஒன்றுமாகும் நெட்டெழுத்தாகிய மொழிநாற்பதும், நொவ்வுந் துவ்வு மாகுங் குற்றெழுத்தாகிய மொழி இரண்டுடனே, ஓரெழுத்தாகிய மொழி இந்நாற்பத்திரண்டுஞ் சிறப்பின வாம் எ-று.

எ - டு: ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ எனவும்; மா, மீ, மூ, மே, மை, மோ எனவும்; தா, தீ, தூ, தே, தை எனவும்; பா, பூ, பே, பை, போ எனவும்; நா, நீ, நே, நை, நோ எனவும்; கா, கூ, கை, கோ எனவும்; வா, வீ, வை, வௌ எனவும்; சா, சீ, சே, சோ எனவும்; யா எனவும்; நொ, து எனவும் வரும். இவற்றுள், ஊ - இறைச்சி; ஓ - மதகுநீர் தாங்கு பலகை; பே - நுரை; நே - அன்பு; சோ - அரண்; நொ, து என்னுங் குறிலிரண்டும், துன்பி, புசி என்னும் ஏவல்.

இவை சிறப்பின எனவே, வகரவீற்றுச் சுட்டுப்பெயர்ப் பொருளை ஒப்புமையான் உணர்த்தி நிற்றலான் ஔ என்னும் ஓரெழுத்தொருமொழியும், சுட்டு வினா உவமைப்பொருளைத் தரும் இடைச்சொல்லாதலாற் குற்றுயிர் ஐந்தானாய ஓரெழுத்தொரு மொழிகளும், கௌ என்னும் உயிர்மெய்யானாய ஓரெழுத்தொரு மொழியும், இவை போல்வன பிறவுஞ் சிறப்பில்லனவெனக் கொள்க. (உ)

## தொடரெழுத்தொருமொழி

க௩௦. பகாப்பதம் ஏழும் பகுபதம் ஒன்பதும்
எழுத்தீ றாகத் தொடரும் என்ப

எ - னின். தொடரெழுத்தொருமொழியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பகாப்பதம் இரண்டெழுத்து முதல் ஏழெழுத்தீறாகவும், பகுபதம் இரண்டெழுத்து முதல் ஒன்பதெழுத்தீறாகவுந் தொடரும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

எ - டு: அணி, அறம், அகலம், அருப்பம், தருப்பணம், உத்திரட்டாதி எனவும்; கூனி, கூனன், குழையன், பொருப்பன், அம்பலவன், அரங்கத்தான், உத்திராடத்தான், உத்திரட்டாதியான் எனவும் வரும்.

எழுந்திருக்கின்றார், நடத்துவிப்பிக்கிறார், நடத்துவிப்பிக்கின்றார், நடத்துவிப்பிக்கிறார்கள், நடத்துவிப்பிக்கின்றார்கள், நடத்துவிப்பிக்கின்றவர்கள் எனப் பகுதி முதலிய உறுப்பு வேறுபட்டு வருவனவற்றிற்கு இவ் வரையறை இல்லையென்க. (௩)

பகாப்பதம்

கஙக. பகுப்பால் பயனற் றிடுகுறி ஆகி
முன்னே ஒன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை இடைஉரி நான்கும் பகாப்பதம்.

எ - னின். மேற்பதம் [1]பகாப்பதம் பகுபதமென இரண்டு பகுதியவாய் நடக்குமென்றார்; அவற்றுள் பகாப்பதம் இனையவென்பதூஉம் இத்துணையவென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பகுபதம்போல் இதனைப் பகுத்துப் பார்க்கின் அப்பகுப்பாற் பகுதி விகுதிமுதலிய உறுப்பின் பயன் விளைவதின்றிக், காரணத்தான் வரும் அப்பதம் போலாது இடுகுறியாய்ப், பகுதி விகுதி முதலிய ஆறுறுப்பானும் பின்பு முடிக்கப்படும் அப்பதம் போலாது படைப்புக்காலந் தொட்டு ஒன்றாய் முடிந்து, நடக்கின்ற பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல் என்னும் நான்கும் பகாப்பதமாம் எ - று.

பகுபதத்திற்கு மறுதலைப்பட்டதென்பார், இவ்வாறு கூறினார்.

எ - டு: நிலம், நீர் எனவும்; நட, வா எனவும்; மன், கொல் எனவும்; உறு, கழி எனவும் வரும். பிறவும் அன்ன. (ச)

பகுபதம்

கஙஉ. பொருள்இடம் காலஞ் சினைகுணம் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே.

எ - னின். பகுபதம் இனையவென்பதூஉம் இத்துணையவென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் கூறிய பொருளாதியாறுங் காரணமாக வரும் பெயர்ச்சொற்களும், தெரிநிலையாயுங் குறிப்பாயுங் காலத்தைக்கொள்ளும் வினைச்சொற்களும் ஆகிய இரண்டும் பகுபதமாம் எ - று.

1. அவன் முதலியவற்றைப் பகாப்பதமென்றனர், மயிலைநாதர்; நன். சூ. 130, உரை.

பொழுதுகொள் வினை பகுபதமெனவே, அவ்விருவகை வினையாலணையும் பெயரும் பகுபதமாமென்பது அருத்தாபத்தியாற் கூறினரென்க.

எ - டு: பொன்னன், அகத்தன், ஆதிரையான், கண்ணன், கரியன், ஊனன் எனப் பெயர்ப்பகுபதம் வந்தன. நடந்தான், நடக்கின்றான், நடப்பான் எனவும்; நடந்த, நடக்கின்ற, நடக்கும் எனவும்; நடந்து, நடக்க, நடக்கின் எனவும்; நடவான் எனவும்; நடவாத எனவும்; நடவாமல் எனவும்; தெரிநிலையுடன்பாட்டு வினைமுற்றும் எச்சமும், எதிர்மறை வினைமுற்றும் எச்சமுமாய வினைப்பகுபதங்கள் முறையே வந்தன. பொன்னன், அகத்தன், ஆதிரையான், கண்ணன், கரியன், ஊனன் எனவும்; கரிய, பெரிய எனவும்; அன்றி, இன்றி எனவும்; குறிப்புவினை முற்றும் எச்சமுமாய வினைப்பகுபதங்கள் வந்தன. நடந்தான், நடந்தவன் எனத் தெரிநிலை வினையாலணையும் பெயர்ப்பகுபதம் வந்தன. பொன்னன் ஊணன் எனக் குறிப்புவினையாலணையும் பெயர்ப் பகுபதம் வந்தன. பிறவும் அன்ன.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனி, இங்ஙனம் பொருளாதியாறும் அடியாகத் தோன்றிய அவ்வினைக்குறிப்புப் பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் வேற்றுமை யாதோவெனின்:—வினைக்குறிப்புச சொல்லெல்லாந் தெரிநிலைவினைபோல முதனிலையிற் பொருள் சிறந்து நிற்கும், வினைக்குறிப்புப் பெயர்ச்சொல் அவ்வாறன்றி விகுதியிற் பொருள் சிறந்து நிற்குமெனவறிக. எனவே, பொருளாதியாறங் காரணமாக வரும் பெயர்ச்சொற்கள் முதனிலை விகுதியாகிய அவ்விரண்டினும் பொருள் சிறந்து நிற்குமென உய்த்துணர்ந்துகொள்க. எல்லாச் சொற்களையுங் கூறுங்கால், பொருள் சிறக்குமிடத்து எழுத்தினையெடுத்தும், அயலெழுத்தினை நலிந்தும், ஏனையெழுத்துக்களைப் படுத்துங் கூறுக.

அவன் இவன் உவன் என்னுஞ் சுட்டுப்பெயரும், எவன் யாவன் என்னும் வினாப்பெயரும், தமர் நமர் நுமர் என்னுங் கிளைப்பெயரும், தந்தை எந்தை நுந்தை என்னும் முறைப்பெயரும், இவை போல்வன பிறவும், சுட்டுப்பொருளும் வினாப்பொருளுங் கிளைப்பொருளும் முறைப்பொருளுங் காரணமாகப் பிறபொருட்கு வரும் பெயராய்ப், பகுதி விகுதி முதலிய உறுப்பும் உறுப்பின் பொருளுந் தந்து, வெள்ளிடைக்கிடக்கும் பகுபதமாய்ப் பகுக்கப் படுதலால், இவற்றைப் பகுபதம் என்னாது பகாப்பதம் எனக் கூறின் அது பொருந்தாதென்க.

இனிப், பகுதி விகுதி முதலிய உறுப்பும் உறுப்பின் பொருளுந் தரும் ஒருசொல்லைப் பகுபதம் என்றமையின், சொன்மை பொருண்மை இன்மை செம்மை சிறுமை நடத்தல் வருதல் முதலிய சொற்கள், பகுதி விகுதியாகப் பகுக்கப்படுதலானும், விகுதிக்கு வேறு பொருளின்றிப் பகுதிப்பொருள் விகுதியாய் நிற்றலானும், சொல்நிலையாற் பகுபதம் என்றும் பொருள்நிலையாற் பகாப்பதம் என்றுங் கொள்ளப்படுமென்க.

மேற் சொல்லதிகாரத்துள், திணை பால் இடம் முதலிய இலக்கணங்களான் விதந்து 'கிளையெண் குழூஉமுதற் பல்பொருள்' என்னுஞ் சூத்திரமுதலியவற்றான் நான்கியலுள்ளும் உணர்த்தலால், ஆண்டுணர வரும் பெயர் வினை இடை உரிகள் ஈண்டுணர வாராவேனும், உரைத்தும் என்னும் உத்தியான் அவற்றைப் பகாப்பதம் பகுபதம் என்றார். (ரு)

பகுபதவுறுப்புக்கள்

கூரு. பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.

எ - னின். பகுபதவுறுப்பு இத்துணையவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனங் கூறிய பகுதி முதலிய ஆறுறுப்பினுள்ளும், இப்பதப்பொருளமைதிக்கு ஏற்பனவற்றைக் கருதி அறிவுடையோராற் கூட்டி முடிப்ப, எவ்வகைப்பட்ட பகுபதங்களும் முடியும் எ - று

பிரகிருதி விகிருதி என்னும் ஆரியமொழிகள் பகுதி விகுதி எனத் திரிந்து நின்றன.

இக்கருவிகளாறும், முறையே, தன்னியல்பின் நிற்றலிற் பகுதி என்றும், தன்னியல்பில் நிற்கும் ஒருவன் உள்ளத்தை ஆடையணி முதலியவற்றோடு ஒருத்தி முன்னின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்தல்போலத் தன்னியல்பில் நிற்கும் பகுதிப் பொருளை இடைநிலை முதலியவற்றோடு விகுதி முன்னின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்தலின் விகுதி என்றும், முதனிலைப் பகுதிக்கும் இறுதிநிலை விகுதிக்கும் இடைநிற்றலின் இடைநிலை என்றும், இவ்விகுதி முதலிய புணர்ப்பைச் சார்ந்து ஆண்டைக்கு இயைந்துநிற்றலிற் சாரியை என்றும், நால்வகைச்

சொல்லும் ஒன்றோடொன்று சந்திக்குமிடத்து வருதலிற் சந்தி என்றும், செய்யுள்தொடை முதலியவற்றான் வலித்தல் மெலித்தல் முதலாக விகாரப்படுதலின் விகாரம் என்றும் பெயர் பெற்றன.

அல்வழி வேற்றுமைப் புணர்ச்சிக்கு விதித்த தோன்றல் திரிதல் கெடுதலையுஞ் செய்யுட்கு விதித்த ஒன்பது விகாரத்தையும் இப்பதம் பெறுமென மாட்டுதலின், இது மாட்டெறிந்தொழுகல் என்னும் உத்தி. (சு)

## உ. பகுதி

### பகுதி இன்னதென்பது

**கங.ச.** **தத்தம்**
**பகாப்ப தங்களே பகுதி ஆகும்**

**எ - னின். பதுபதவுறுப்பாறனுள், பின்னைய மூன்றும் புணரியலுள் உணர்த்தப்படுதலின், அவையொழித்து, முன்னைய மூன்றனுட் பகுதி இனையவென்பது உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) பெயர்ப் பகுபதங்களுள்ளும், வினைப் பகுபதங்களுள்ளும், தத்தம் முதனிலையாய பகாப்பதங்களே அவற்றின் பகுதியாம் எ - று.

பகுபதத்துட் பகுதி விகுதி முதலிய உறுப்பெல்லாம் பகாப்பதமாயினும், விகுதி முதலியவற்றை மேல் விதந்து கூறலின், ஈண்டுத் தத்தம் பகாப்பதங்கள் என்றது, முதனிலைகளையே என்பது [1]பாரிசேடத்தாற் பெற்றும்.

பகுபதவுறுப்பாம் முதனிலை இறுதிநிலை இடைநிலைகளாய பகாப்பதங்களினின்றும் முதனிலைப் பகாப்பதம் [illegible]ம பிரித்துத் தந்தமையின், பகாப்பதங்க[illegible] என்னும ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. (எ)

### பண்புப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

**கங.ரு.** **செம்மை சிறுமை சேய்மை தீமை**
**வெம்மை புதுமை மென்மை மேன்மை**
**திண்மை உண்மை நுண்மை இவற்றெதிர்**
**இன்னவும் பண்பின் பகாநிலைப் பதமே.**

---

1. பாரிசேடம் என்பதற்கு ஒழிந்து நின்றதனுலுணரப்படுவது என்னும் உத்தி என்பர் இராமாநுச கவிராயர்.

எ - னின். பண்புப் பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனங் கூறிய பதினொன்றும், இவற்றிற் கெதிரான வெண்மை கருமை பொன்மை பசுமைகளும்; பெருமை அணிமை நன்மை தண்மை பழமை வன்மை கீழ்மை நொய்மை இன்மை பருமையும்; இவைபோல்வன பிறவும், பகுதியாய பண்புப்பொருளினின்றும் வேறு பொருள் பகுக்கப்படாத நிலைப்பதமாம் எ - று.

இங்ஙனங்கூறிய வாய்பாடு முதலியவெல்லாம், சொன்னிலையாற் பகுபதமாயினும், மைவிகுதிக்குப் பகுதிப்பொருளன்றி வேறு பொருளின்மையிற் பொருள்நிலையாற் பகுக்கப்படாதென்பார் பண்பிற பகா என்றும், [1]"மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" என்றாற்போல இங்ஙனங் கூறிய வாய்பாட்டுப் பண்புகள் மைவிகுதியின்றி இயங்காமையின், இவ்விகுதியினையும் பகுதியாக நிறீஇ மேல் வரும் விகுதியோடு புணர்க்கப்படும் என்பார், நிலைப் பதம் என்றுங் கூறினார். (அ)

பண்புப்பகாப்பதம் என்னாது பண்பிற்பகா நிலைப்பதம் என்றல் சொற்பொருள் விரித்தல் என்னும் உத்தி. செம்மை சிறுமை முதலிய வாய்பாடுகள் எடுத்துக்காட்டல் என்னும்

௧௩௬. ஈறு போதல் இடைஉகரம் இய்யாதல்
ஆதி நீடல் அடியகரம் ஐயாதல்
தன்னொற் றிரட்டல்முன் னின்றமெய் திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மேல் செம்மை சிறுமை முதலாகத் தெரித்த வாய்பாடுகளின் இறுதி விகுதி போதலும், இடையின் நின்ற உகரம் இகரமாதலும், முதல்நின்ற குறில் நெடிலாதலும், முதல்நின்ற அகரம் ஐகாரமாதலும், இடையே தன்னொற்று மிகுதலும், முன்பு நின்ற மெய் திரிதலும், வருமெழுத்திற்கு இனவெழுத்து மிகுதலும், இவைபோல்வன பிறவும், அப்பண்பினுக்கு இயல்பாம் எ - று.

1. தொல்காப்பியம், எழு. சூ. ௪௬.

[1]"மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" என்ற அகரம் பன்னீருயிரும் மெய்யொடு புணர வருங்காலத்து நீங்கினாற்போல, விகுதி முதலிய புணர வருங்காலததுப் பண்படி நிற்க அப்பகுதிப் பொருள் விகுதி நீங்குமென்பார், ஈறு கெடுதல் என்னாது ஈறு போதல் என்றும், விதந்துகூறு விகாரங்களுமுள அவை வந்துழிக் காண்க என்பார், இனையவென்றும், அவ்விகாரம் ஒருதலையன்று சிவப்பன் கறுப்பன் என்னும் பிற வாய்பாடுகள் போலச் செம்மையன் கருமையன் எனவும் முடியுமென்பார், எதிர்மறையும்மை கொடுத்து இனையவும் என்றும், பெயர் விகுதியோடும் வினை விகுதியோடும் பதங்களோடும் புணரினும் ஒருவழி இவ்விகாரப்படுமென்பார், பகுதிக்கு எனாது பொதுமையிற் பண்பிற்கியல்பே என்றுங் கூறினார்.

பதப்புணர்ச்சிக்கும் ஈண்டுக் கூறல் ஒப்பின் முடித்தல் என்னும் உத்தி.

எ - டு: நல்லன், வல்லன் என்பன ஈற்று விகுதி போயின. கரியன், பெரியன், என்பன ஈற்று விகுதி போய் இடையுகரம் இகரம யின. பாசி, பாசடை என்பன ஈற்று விகுதிபோய் ஆதி நீண்டன. பைங்கண், பைந்தார் என்பன ஈற்றுவிகுதி போய் இடையுகரஞ் சகரத்தோடு கெட்டு வருமெழுத்திற் கினமிகுந்து அடியகரம் ஐகாரமாயின. வெற்றிலை, வெட்டவெளி என்பன ஈற்று விகுதிபோய்த் தன்னொற்றிரட்டின. சேதா, சேதாம்பல் என்பன ஈற்று விகுதிபோய் ஆதி நீண்டு முன்னின்ற மகரவொற்றுத் தகரவொற்றாய்த் திரிந்தன.

செம்மை சிறுமை முதலாக விதந்தும் இன்னவுமென அடக்கியுங் கூறிய பல்வேறு வகைப்பட்ட பண்புவாய்பாட்டு விகற்பங்களெல்லாம், பொதுவிதியானும், ஈறுபோதல் முதலாக விதந்தும் இனையவுமென அடக்கியுங் கூறிய சிறப்புவிதியானும், விகுதி பதங்களோடு புணர்ந்து அமைந்து கிடந்தமை உய்த்துணர்ந்து கொள்க.

இங்ஙனம் விதந்து கூறிய விகாரங்கள் அன்பன் அழகன் முதலிய வாய்பாடுகட்கு எய்தாமையானும், செம்மை சிறுமை முதலாக எடுத்துக்காட்டு மொழிகட்கு எய்தினமையானும், இஃது எடுத்தமொழியினெய்தவைத்தல் என்னும் உத்தி. (கூ)

தெரிநிலைவினைப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

கஉஎ. நடவா மடிசீ விடுகூ வேவை
கோப்போ வௌவுரிஞ் உண்பொருந் திருந்தின்

1. தொல். மொழி. சூ. கஉ.

தேய்பார் செல்வவ் வாழ்கேள் அஃகென்
றெய்திய இருபான் மூன்றும் ஈற்றவும்
செய்யென் ஏவல் வினைப்பகாப் பதமே.

எ னின். தெரிநிலைவினைப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *நட வா மடி சீ விடு கூ வே வை நொ போ வௌ உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகு என்று முதனிலையாய் எய்திக் கிடந்த இவ்விருபத்து மூன்றாகும் உயிரும் ஒற்றுங் குற்றுகரமுமாகிய ஈற்றினையுடைய இத்தொடக்கத்து வாய்பாடுகளெல்லாம், செய்யென்னும் ஏவலினது பகாப்பதமாகிய பகுதியும், ஏனை வினையினது பகாப்பதமாகிய பகுதியுமாம் எ - று.*

*இத்தொடக்கத்து வாய்பாடுகளென்பார், அஃகாம் என்னாது அஃகென்று எனவும். ஈற்றவும் எனவும்; எகரவுயிர் வினாவிடைச் சொற்கண்ணுந் தன் பெயர்க்கண்ணும் அன்றிப் பிறவழி ஈறாகாமையின் அஃதொழிந்தவை ஈண்டைக்காமென்பார் ஆமீற்ற எனவும்; விகற்பத்தின் முடித்தல் என்னும் உத்தியான் இருபத்துமூன்றீற்றவாக விகற்பித்தெடுத்துக் காட்டும் வாய்பாடுகள முதலியவெல்லாம் இப் பொதுவாய்பாட்டின் அடங்குமென்பார், முடிந்தது முடித்தல் என்னும் உத்தியாற் செய் எனவுங் கூறினார்.*

*இரட்டுறமொழிதல் என்னும் உத்தியான் எடுத்துக்கொண்ட முன்னிலையொன்றற்கே உரிய ஏவலினது பகுதிப்பொருளும் ஏனை வினையினது பகுதிப்பொருளுந் தந்துநிற்கும் நட வா முதலிய வாய்பாடுகளை எண்ணித் தொகுத்த இருபான்மூன்றா மீற்ற என்னுந் தொகை, செய்யென் ஏவற் பகாப்பதம் என்னும் பயனிலையோடும், செய்யென்வினைப் பகாப்பதம் என்னும் பயனிலையோடும் தனித்தனி முடிந்தன.*

*செய்யென்வினைப் பகாப்பதம் என்ற துணையானே செய்யெனேவற் பகாப்பதமும் அடங்காதோ வேறு கூறவேண்டியதென்னையெனின்—நட வா உண் தின் என்றற்றொடக்கத்து முதனிலைகளே விகுதியோடு புணராது தனித்து நின்று ஓசை வேறுபாட்டான் முன்னிலையேவலொருமை யெதிர்கால வினைமுற்றுப் பொருண்மையுணர்த்தினவோ விகுதியோடு புணர்ந்து*

ன்றே அப்பொருண்மை புணர்த்தினவோ என்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தற்குக் கூறியதென உணர்க.

ஏவற்பகுதிக்கு உதாரணம்: நடவாய், வாராய், உண்ணாய், தின்னாய், அஃகாய் எனவும்; நடமின், வம்மின், உண்மின், தின்மின், அஃகுமின் எனவும் வரும்.

இனி, ஆசிரியர் தொல்காப்பியர்,

[1]"செய்யா யென்னு முன்னிலை வினைச்சொற்
செய்யென் கிளவி யாகிட னுடைத்தே."

எனக் கூறியவாற்றான், ஆயென்னும் விகுதி குன்றி நட வா உண் தின் அஃகு எனவும் நிற்குமென உணர்க. நிற்பினும், விகுதியோடு புணர்ந்தனவேயாம். அஃது அச் சூத்திரத்திற் சேனாவரையர் கடாவிடைகளான் விளங்கக் கூறியவாற்றானும் அறிக. இனி, இவ்வாறு ஏவற்பொருளுணர்த்தாது முதனிலைத் தனிவினைப் பொருளுணர்த்தி நிற்பிற் பகாப்பதம் என்று கொள்ளப்படும். இதுபற்றியன்றே முன்னரே வினைப்பகாப்பதத்திற்கு உதாரணங் காட்டியதூஉமென்க. இன்னும், அச் சூத்திரத்து மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் என்னும் உத்தியான் விகுதி புணர்ந்து கெட்டு நிற்குஞ் சொற்கள் பலவுள; அவையெல்லாம் பதமுடிப்புழிக் காண்க.

ஏனை வினைப்பகுதிக்கு உதாரணம்: நடந்தான், வந்தான், மடித்தான், சீத்தான், விட்டான், கூவினான், ஏவினான், வைத்தான், நொந்தான், போயினான், வெளவினான், உரிஞினான், உண்டான், பொருநினான், திருமினான், தின்றான், தேய்த்தான், பார்த்தான், சென்றான், வவ்வினான், வாழ்ந்தான், கேட்டான், அஃகினான் எனவும்; கிடந்தான், கண்டான் எனவும்; ஏகினான், குறுகினான், கட்டினான், பொருந்தினான், எய்தினான் எனவும் வரும். பிறவும் அன்ன. இவற்றுள் பகுதி முதனிலையாய் எய்திக் கிடந்தமை காண்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனி, இச் சூத்திரத்திற் செய்யெனேவல் வினைப்பகாப்பதம் என்பதற்கு, இவ்வாறு பொருள் கூறாது, ஆற்றொழுக்காகச், செய்யென் ஏவல்வினைப் பகாப்பதமே வினை வினைப்பெயர் கட்கெல்லாம் முதனிலையெனப் பொருள் கூறுவாருமுளர்.

1. தொல்காப்பியம், சொல். எச்சவியல். சூ. ௫௪.

[1]"அடியேனுன் னடியார் நடுவு ளிருக்கு மருளைப் புரியாய்." [2]"எந்தா யினித்தா னிரங்காயே." [3]"மருங்கே சார்ந்து வர வெங்கள் வாழ்வே வாவென் றருளாயே" [4]"நரிப்பாய் நாயே னிருப்பேனோ நம்பியினித்தா னல்காயே." [5]"தீதமினிய குயிலே—அந்தமிலான் வரக்கூவாய்." என்றற்றொடக்கத் தனவாய திணைபாலிடங் காலங் காட்டும் விகுதியுறுப்போடு கூடி முற்றி நிற்கும் முன்னிலையேவலொருமை யெதிர்கால வினைமுற்றுப் பகுபதங்களைப் பகாப்பதமென்றல் கூடாமையேயன்றித் 'தத்தம் பகாப்பதங்களே பகுதி யாகும்' என்னும் பொதுச் சூத்திரத்தோடு மாறுகொளக் கூறலா மாதலின், அதுபொருளன்றென மறுக்க.

இங்ஙனம் முதனிலை புடைபெயர்தலே வினையாதலின், எல்லா வினைச்சொற்களும் பிறத்தற்கு மூலமாகிய பொது முதனிலைத் தனிவினைப் பெயரொன்றே கொள்க. அதனைப் படுத்தலோசையாற் கூறிக் காண்க. எல்லா வினைச்சொற்களாவன திணை பால் இடங் காலம் விதி மறை பொதுச்சிறப் பாதியோடுங் கூடிய முற்றெச்சங்களுந் தொழிற்பெயர்களுமென்க.

கையறியா மாக்கட்கன்றி நூலியற்றும் அறிவினையுடைய மக்கட்குப் பல்கலைக்குரிசில் பவணந்தியென்னும் புலவர்பெருமான் புகழ்போல விளங்கி நிற்றலான், உலகமலையாமை யுள்ளிட்ட பத்தழகோடும் பிறந்து நின்றது இச்சூத்திரமென்றுணர்க.

வடநூல் மேற்கோளாக, ஒருமொழிகளை விதந்து, பகாப்பதம் பகுபதமெனக் காரணக்குறி தாமே தந்து, அவற்றை நல் விருந்தென்ன நாவலர் பயில 'எழுத்தே தனித்தும்' என்னுஞ் சூத்திரமுதல் இச்சூத்திரமீறாகப் பகாப்பதம் பகுபதமெனப் பல்காற் கூறுதல் தன்குறிவழக்க மிகவெடுத்துரைத்தல் என்னும் உத்தி. (கo)

ஏவற்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

கஙஅ. செய்யென் வினைவழி விப்பி தனிவரின்
செய்விஎன் ஏவல் இணையின் ஈரேவல்.

1. திருவாசகம், கோயின்மூத்த திருப்பதிகம், செ. க.
2. " " " ௬.
3. " " " எ.
4. " " " கூ.
5. " குயிற்பத்து க.

எ - னின். மேல் இரட்டுற மொழிந்தவற்றுள் ஏவற்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய செய் என்னும் வாய்பாட்டு முதனிலைத் தனிவினையின்பின் வி பி என்னும் இவ்விரண்டு விகுதியினுள் ஒன்று வருமாயிற் செய் என்னும் ஏவல் மேல் ஒரேவலாய்ச் செய்வி என்னும் வாய்பாட் டேவற் பகுதியாம்; அவற்றின்பின் இவ்விகுதிகள் தன்னோடும் பிறிதோடும் இணைந்து வருமாயிற் செயவிப்பி என்னும் வாய்பாட்டு ஏவற்பகுதியாம் எ - று.

விதந்த ஏவற்சிறப்பு வாய்பாட்டையெல்லாஞ் செய்யென்னும் ஏவற் பொதுவாய்பாட்டு ளடக்கி மேற்கூறலின், நட வா முதலிய வினைவழியென்பார் செய்யென்வினைவழி என்றும்: இவை பெரு வழக்கல்ல என்பார் தனிவரின் என்றும்: இணையின் என்றும்; இவ்விகுதி ஒன்றும் இரண்டும் ஏற்ற பெற்றி வருமென்பார், செய்பி என்னாது செய்வி என்றுங் கூறினர்.

எ - டு: நடப்பியாய், நடப்பிப்பியாய், வருவியாய், வருவிப்பியாய் எனவும்; ஆய் விகுதி குன்றி நடப்பி, நடப்பிப்பி, வருவி, வருவிப்பி எனவும் வரும்.

நட வா முதலிய ஏவற்சிறப்பு வாய்பாட்டிற்கு இலக்கணங் கூறிய முகத்தே ஏவற்பொது வாய்பாட்டிற்கும் செய் செய்வி செய்விப்பி எனக் கூறாக்கூற்றாய் இலக்கணம் அமைந்து கிடந்தமையின், இக்கூற்று இரட்டுற மொழிதல் என்னும் உத்திக்கினம். இவைபோல்வன பிறவும் அது. (கக)

## வினைப்பகுதிக்குப் புறனடை

கருக. விளம்பிய பகுதிவே றாதலும் விதியே.

எ - னின். வினைப்பகுதிக்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஏவற்பகுதி வேறாதல்போல, அதன் பின்னே விளம்பிய வினைப்பகுதி வேறாதலும் விதியாம், விலக்கன்று எ - று.

எ - டு: நடந்தான், நடப்பித்தான், நடப்பிப்பித்தான், நடத்துவித்தான், நடத்துவிப்பித்தான் என வரும். பிறவும் அன்ன.

ஈண்டும் விப்பிகள் எற்ற பெற்றி கொள்க.

இவற்றுள், ஈட என்னுந் தன்வினைப்பகுதி பிறவினைப் பகுதியாய் வேறுபட்டு நின்றவாறு காண்க. வேறுபடாதது பிரகிருதியாமன்றி வேறுபட்டது பிரகிருதியாகாதேனும், தந்தையைக் குறிக்க மகனெனப்பட்டான் ஒருவன் தன் மகனைக் குறிக்கத் தந்தையானாற்போலப், பிறவினைப்படுத்த வரும் இவ்விகுதிகளும் மேல்வரும் அன் ஆன் முதலிய விகுதிகளைக் குறிக்கப் பகுதியாமாதலின், விதியே யெனப் புறனடை தந்தார். மூன்னர் எவற் பகுதி வேறுபட்டமையும் அன்ன.

இச் சூத்திரத்திற்கு, வாவென் பகுதி முதலியன வந்தான், வருகின்றான் என விகாரப்படுதலைப் பொருளாகக் [1]கூறுவாருமுளர். இவ்விகாரங்கள் பகுபதவுறுப்பாக மாட்டெறிந்துகொண்ட மூன்று சந்தியுளாளும் ஒன்பது விகாரத்துள்ளும் அமைந்து கிடத்தலின், அது பொருந்தாதென்க. (௧௨)

## ௩. விகுதி

௧௪௦ [2]அன் ஆன் அள் ஆள் அர் ஆர் பம்மார்
அஆ குடுதுறு என்ஏன் அல்அன்
அம்ஆம் எம்ஏம் ஓமோ டும்மூர்
கடதற ஐஆய் இம்மின் இர்ஈர்
ஈயர் கயவும் என்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினும் சிலவே.

எ-னின். விகுதி இனையவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் அன் ஆன் முதல் முப்பத்தேழாகச் சொல்லப்படுவனவும் இவைபோல்வன பிறவும் தெரி

---

1. இங்ஙனம் பொருள் கூறுபவர் மயிலைநாதர்; இ. வி. உரையாசிரியர் கொள்கையுமிதுவே; இ. வி. சூ. 45.

2. இக் கருத்தறியாதார் அச் சூத்திரம் பொதுவென்றும், வினைக்கும் பெயர்க்குமே பொதுவென்றும், அன் விகுதி கூறியது கூறல் என்னும் குற்றமென்றும், ஒன்றன் விகுதி மற்றொன்றில் அன்விகுதியென்றும், சூத்திரம் பிழைபட்டதாகக் கருதித் திருத்தினமென்றும் இன்னும் பல கருதி மயங்குவரென்க, என்பர்-இலக்கணக்கொத்து நூலார்.

நிலைவினையின் விகுதிகளாம்; பெயரிடத்தும் இவற்றுள் சில விகுதிகளாம் எ - று.

இரட்டுறமொழிதல் என்னும் உத்தியால் தன்மையொருமைக்கும் அஃறிணைப்படர்க்கையொருமைக்கும் பொதுவாக டு து று வென்றும்: முன்னிலையொருமைக்கும் முன்னிலையேவலொருமைக்கும் பொதுவாக ஆய் என்றும்; அன் என்னுந் தன்மையொருமை விகுதி தொன்று தொட்டதன்றி இலக்கியங்கண்டமையின் எதிரது போற்றல் என்னும் உத்தியால் தழீஇக்கொண்டதாதலின், அதனை வலியுறுத்திப் பின்னும் அன் என விதந்தும், இன்னும் இவற்றுள் இரட்டுரமொழிதலான் அடங்குவன அடங்க அடங்காவாய பெயரெச்சம் வினையெச்சம் நடத்து, நடப்பி முதலிய பிறவினை என்பவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் பகுதியை விகுதிப்படுத்தி வருவன யாவை, அவையெல்லாம் விகுதியென்று கருதிக் கோடற்குப் பிறவும் என்றுங் கூறினார்.

பெயரினுஞ் சில என்ற மாத்திரையிற் குறிப்புவினையினுஞ் சிலவென்பது கூறாதே அமைதலின், இங்ஙனம் வினை என்றது அவ்விரண்டு மொழிந்த தெரிநிலைவினை என்பது பெற்றாம்.

எ - டு: நடந்தனன், நடந்தான் இவை ஆண்பாற்படர்க்கை. நடந்தனள், நடந்தாள் இவை பெண்பாற் படர்க்கை. நடந்தனர், நடந்தார், நடப்ப, நடமார் இவை பலர்பால் படர்க்கை. நடந்தன, நடவா இவை பலவின்படர்க்கை. நடக்கு, உண்டு, நடந்து, சேறு, நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பன் இவை ஒருமைத் தன்மை நடந்தது, கூயிற்று, குண்டுகட்டு இவை ஒன்றன் படர்க்கை. நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம், நடக்கும், உண்டும், நடந்தும், சேறும் இவை தன்மைப் பன்மை நடந்தனை, நடந்தாய், நடத்தி இவை ஒருமை முன்னிலை. நடமின், நடந்தனிர், நடந்தீர் இவை பன்மைமுன்னிலை. நிலீயர், நடக்க, வாழிய இவை வியங்கோள். நடக்கும் இது செய்யுமென்னு முற்று. பிறவும் அன்ன.

இவை திணைபால் இடங்களை புணர்த்தி வினையின் இறுதி நிலையாய் முழுவதும் வந்தன.

வில்லன், வில்லான், வளையன், வளையாள், ஊரர், ஊரார், வில்லி, வாளி, அரசி, செட்டிச்சி, காதறை, மூக்கறை இவை பெயர்க்கண் சில வந்தன. பிறவும் அன்ன. (கஙு)

## ௬. இடைநிலை

### பெயரிடைநிலை

கசக. இலக்கியம் கண்டதற் கிலக்கணம் இயம்பலிற்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெயர் அல்பெயர்க் கிடைநிலை யெனலே.

எ - னின். இடைநிலையாமாறு உணர்த்துவான் தொடங்கிப் பெயர்க்கு இடைநிலை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *அறிவுடையோரான் நியமிக்கப்படும் இலக்கியங் கண்டு அதனுக்கு அவ்விலக்கியத்தின் அமைதியே இலக்கணமாகக் கூறலின், மேற்கூறிய பகுதியையும் விகுதியையும் பகுத்து, இடையே நின்றது யாது, அதனை, வினையாலணையும் பெயரல்லாத பெயர்கட்கு, இடைநிலையென்று சொல்லுக எ - று.*

*குறிக்கப்படும் இலக்கணத்தையுடையனவெல்லாம் இலக்கியமாயினும். ஈண்டு இலக்கியம் என்றது, பெயர்ப்பகுபதத்தை. இலக்கணம் என்றது, அதனகத்துப்பகுதி முதலிய உறுப்புக்களை.*

*மா பலா முதலியன பாரை முதலிய சினையோடு நின்றனவெனக் கண்டது கூறுவார்போலப், பகுபதம் பகுதி முதலிய உறுப்பொடு நின்றதெனக் கண்டதுகூறி, அப் பதந் தந்த தோலாநாவின் மேலோராணையின் நிற்றலிற் கண்டதற்கு என்றும், சாரியை சந்தி விகாரங்களும் இடை நிற்குமேனும் அவை மேல் விதக்கப்படுதலின், அவை யொழிந்தனவற்றை இடை நின்றதை என்றும், மேல்வினைக்கு விதந்து கூறும் இடைநிலை வினையாலணையும் பெயர்க்கும் அமைதலின் வினைப்பெயரல்பெயர்க்கு என்றும், இப்பெயரிடைநிலை வரையறுக்கப்பட்டதன்று ஆங்காங்குணர்ந்துரைக்கவென்பார் எனலே என்றுங் கூறினர்.*

எ - டு: *அறிஞன் என்பது ஞகரவிடைநிலை பெற்றது. ஓதுவான், பாடுவான் என்பன வகரவிடைநிலை பெற்றன. வலைச்சி, புலைச்சி என்பன சகரவிடைநிலை பெற்றன. வண்ணாத்தி, பாணத்தி மலையாட்டி, வெள்ளாட்டி, தந்தை, எந்தை, நுந்தை என்பன தகரவிடைநிலை பெற்றன. பிறவும் அன்ன.* (கச)

### இறந்தகாலவினையிடைநிலை

கசஉ. தடறவொற் றின்னே ஐம்பால் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழில் இடைநிலை.

எ - னின். இறந்தகால வினைத்த இடைநிலை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தகர டகர றகர மெய்களும், இன் என்னுங் குற்றிறுற்றும், ஐம்பால் மூவிடத்தும் இறந்த காலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகளாம் எ - று.

எ - டு: நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன, நடந்தேன், நடந்தேம் நடந்தாய், நடந்தீர் எனவும்: உண்டான் எனவும்: சென்றான் எனவும்; உறங்கினான் எனவும் வரும். இன்னிடைநிலை, எஞ்சியது எனக் கடைக்குறைந்தும், போனது என முதல் குறைந்தும் வரும். பிறவும் அன்ன. (கரு)

நிகழ்காலவிடைநிலை

கசரு. ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பால் நிகழ்பொழு தறைவினை இடைநிலை

எ - னின் நிகழ்கால வினைத்த இடைநிலை உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்.) ஆநின்று என்பதூஉம், கின்று என்பதூஉம், கிறு என்பதூஉம், ஐம்பால் மூவிடத்தும் நிகழ்காலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகளாம் எ - று. தருவினையை அறைவினை என்றது இலக்கணை. மேலைச் சூத்திரத்தில் வருவதூஉம் அது.

எ - டு: நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறான் என வரும். ஏனைப் பாலிடங்களினும் ஒட்டிக்கொள்க (கசு)

எதிர்காலவிடைநிலை

கசச. பவ்வ மூவிடத் தைம்பால் எதிர்பொழுது
இசைவினை இடைநிலை யாமிவை சிலஇல.

எ - னின். எதிர்காலவினைத்த இடைநிலையும் மூக்கால இடைநிலைகட்கும் ஆவதோர் புறனடையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பகரவொற்றும், வகரவொற்றும், ஐம்பால் மூவிடத்தும் எதிர்காலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகளாம். இம்முக்காலமும் முறையே காட்டுந் தகரவொற்று முதல் வகரவொற்றீறாய இடைநிலைகள், சில முற்றுவினை எச்சவினைகட்கு இலவாம் எ - று.

எ - டு: நடப்பான், வருவான் எனவரும். ஏனைப் பாலிடங்களினும் ஒட்டிக்கொள்க.

இனி, இவை சில இலவெனவே, காலத்தை இறுதிநிலை தரும் என்பதூஉம், முதனிலை தரும் என்பதூஉம், பிற இடைநிலை தரும் என்பதூஉம் பெற்றாம். இவ்விகற்பமெல்லாம் வரும் சூத்திரத்தாற் கூறுப. (கஎ)

காலங்காட்டும் விகுதி

கசரு. றவ்வோ டுகர உம்மைநிகழ் பல்லவுந்
தவ்வோ டிறப்பும் எதிர்வும் டவ்வோடு
கழிவுங் கவ்வோ டெதிர்வுமின் னேவல்
வியங்கோள் இம்மார் எதிர்வும் பாந்தஞ்
சேலவோடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையும் ஏற்கும் ஈங்கே.

எ - னின். மேலைச் சூத்திரத்து 'இவை சிலவில' என்றார், அவை இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) றகரத்தோடு கூடிய உகரவீறும் உம்மீறும் இறந்தகாலமும் எதிர்காலமும், தகரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் அவ்விருகாலமும், டகரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் இறந்தகாலமும், ககரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் எதிர்காலமும், மின்னீறும் ஏனை ஏவலின் வரும் அனைத்தீறும் வியங்கோளீறும் இகரவீறும் மாரீறும் எதிர்காலமும், பகரவீறு இறந்தகாலமும் எதிர்காலமும், செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றீறு நிகழ்காலமும் எதிர்காலமும், முற்று விகுதி எச்சவிகுதிகளோடு புணர்தற்குரிய எதிர்மறை ஆகாரவீறு மூன்று காலமும் ஏற்கும், மேலைச் சூத்திரத்து 'இவை சிலஇல' என்றவற்றுள் எ - று.

அந்தம் என்பதனை எல்லாவற்றினும் ஒட்டிக்கொள்க

றவ்வொடுகரவும்மீறும் தவ்வொடுகரவும்மீறும் பாந்தமும் இறந்தகாலமும் எதிர்காலமும் ஏற்குமெனத் தொகுத்துக் கூறாது, விகற்பத்தின் முடித்தல் என்னும் உத்தியான் வகுத்துக் கூறினார், புலப்படவேண்டியென்க.

இகரவீறு தனித்தியலாமையின் யாதானுமோர் மெய்யினை யூர்ந்து வருமென்பதூஉம், அது காலங்காட்டாதென்பதூஉம், அது காலங்காட்டியதேல் இவ்வீறு காலங்காட்டாதென்பதூஉம், செய்யும் என்னும் வாய்பாட்டெச்சமும் இடைநிலையின்றி ஈறு காலங்காட்டுமேனும் அஃதெதிர்காலங் காட்டுமென மேல் விதத்தலின் இங்ஙனஞ் செய்யும் என எடுத்தோதியது முற்றென்பதூஉம் பெற்றாம். மூன்று காலமும் அவைபற்றிப் புடை பெயரும் வினையும் இல்லனவற்றை எதிர்மறைவினை மூன்று காலமும் ஏற்குமென்று கூறுதல் இலக்கணையாதலிற் பிற் கூறினர்.

எ - டு: சென்று, சென்றும், சேறு, சேறும், வந்து, வந்தும், வருது, வருதும், உண்டு, உண்டும், உண்கு, உண்கும், உண்மின், உண்ணாய், உண், உண்க, வாழிய, வாழியர், சேறி, உண்மார், உண்ப, உண்ணும், உண்ணான் என வரும்.

மும்மையும் என்னும் முற்றும்மையை 'முற்றும்மை யொரோ வழி யெச்சமுமாகும்.' என்பதனான் எச்சவும்மையாக்கி, நடந்திலன் நடவாநின்றிலன் என எதிர்மறை ஒருகாலம் ஏற்று வருதலுங் கொள்க.

சென்றி, செல்லாநின்றி என வருமாயின், இடைநிலை காலங் காட்டிய இகரவீற்றவாம்.

'இவை சிலவில' என்றவற்றுள், இறுதிநிலை காலங் காட்டுவன வற்றை விதந்தோதி, முதனிலையும் பிற இடைநிலையுங் காலங் காட்டுவனவற்றை ஓதாமையின், அவை சிறுபான்மைய, வந்த வழிக் காண்க என்றாராயிற்று. அவை வருமாறு:—

தொட்டான், விட்டான், உற்றான், பெற்றான், புக்கான், நக்கான் என்பனவற்றுள், இடைநிலையின்றி முதனிலை விகாரமாய் இறந்தகாலங் காட்டின.

[1]என்றிசினோர், என்மர், [2]என்மனார் என்பவற்றுள், எடுத்தோதாப் பிறஇடைநிலைகள் நின்று முன்னையதொன்றும் இறந்தகால

1. என்றிசினோர்: "என்றிசினோர் கண்டிசினோர் என்பன அவ்வாறு வந்த இறந்தகால முற்றுச்சொல்" என்பது சேனாவரையம்; "என்றிசினோரென்பது அவ்வாறு வந்த இறந்தகால முற்றுவினைத் திரிசொல்" என்பது நச்சினார்க்கினியம்; தொல். கிளவி கூ. 1.

2. என்மனார்: "என்மனார் என்பது என்ப என்னும் முற்றுச் சொல்லை, 'குறைக்கும் வழிக்குறைத்தல்' என்பதனால் பகரங் குறைத்து 'விரிக்கும் வழி விரித்தல்' என்பதனால் மன்னும்

மும் பின்னையவிரண்டும் எதிர்காலமுங் காட்டின. பிறவும் அன்ன.

ஈங்கேயென்ற மிகையானே,

" வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்
பொருதி புலம்புதி நீயும்."

என இகரவீறு நிகழ்காலங் காட்டலும், ஏனைய கூறிய காலத்திற் பிறழ்ந்து வருவனவுளவேல் அவையும், பெயரெச்ச வினையெச்சங்களின் இடைநிலையின்றி இறுதிநிலை காலங் காட்டுவனவுங் கொள்க.

இனிப் பகுதி முதலிய உறுப்புக்களாற் பகுபதமுடியுமாறு :—

அவன் என்னுஞ் சுட்டுப் பொருட்பெயர்ப் பகுபதம், அ என்னும் பகுதியும், அன் என்னும் விகுதியும் பெற்று, 'எகர வினாமுச் சுட்டின் முன்னர்' என்னுஞ் சூத்திரத்தால் வகரந் தோன்றி, 'உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே.' என்பதனான் வகரத்தின்மேல் விகுதி உயிரேறி முடிந்தது.

தமன் என்னும் கிளைப்பொருட்பெயர்ப் பகுபதம், தாம் என்னும் பகுதியும், அன் என்னும் விகுதியும் பெற்றுத், 'தான்றா நாமுதல் குறுகும்' என்பதனாற் பகுதிமுதல் குறுகி, உடன்மேல் உயிரேறி முடிந்தது.

குறிஞ்சியான் என்னும் இடப்பெயர்ப் பகுபதம், குறிஞ்சி என்னும் பகுதியும், ஆன் என்னும் விகுதியும் பெற்று, யகரவுடம்படு மெய் தோன்றி உயிரேறி முடிந்தது.

பிரபவன் என்னுங் காலப்பெயர்ப் பகுபதம், பிரபவ என்னும் பகுதியும், அன் என்னும் விகுதியும் பெற்று, 'ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே.' என்பதனாற் பகுதி கடைக்குறையாய் வகரவொற்றின்மேல் விகுதி அகரவுயிரேறி முடிந்தது.

திணிதோளன் என்னுஞ் சினைப்பெயர்ப் பகுபதம், திணிதோள் என்னும் பகுதியும், அன் என்னும் விகுதியும் பெற்று, உடன்மேலுயிரேறி முடிந்தது.

---

ஆரும் என இரண்டிடைச் சொற் பெய்து விரித்தான்" என்பது இளம்பூரணம்; "என்மனார் என்பது செய்யுள் முடிபெய்தி நின்றதோர் ஆரீற்று எதிர்கால முற்றுச்சொல்" என்பது சேனாவரையம்; "என்மனார் என்பது ஓர் ஆரீற்று நிகழ்கால முற்று வினைத்திரிசொல்" என்பது நச்சினார்க்கினியம்; தொல். கிளவி. சூ. 1.

பெரியன் என்னுங் குணப்பெயர்ப் பகுபதம், பெருமை என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்றுப், பகுதியீறு போய், இடையுகரம் இகரமாய், யகரவுடம்படுமெய் தோன்றி, உயிரேறி முடிந்தது.

ஓதுவான் என்னுந் தொழிற்பெயர்ப் பகுபதம், ஓது என்னும் பகுதியும், ஆன் என்னும் விகுதியும், வகரவிடைநிலையும் பெற்று, உயிரேறி முடிந்தது.

நன்மை என்னும் பகுபதம், நல் என்னும் பகுதியும், மை என்னும் விகுதியும் பெற்று, 'மெலிமேவி னணனவும்' என்பதனான் லகரம் னகரமாய்த் திரிந்து முடிந்தது

வருதல் என்னும் பகுபதம், வா என்னும் பகுதியும், தல் என்னும் விகுதியும் பெற்று, 'வலித்தன் மெலித்தல்' என்பதனாற் பகுதி முதல் குறுகி, ரகரவுகரம் விரிந்து முடிந்தது.

நடந்தனன் என்னும் இறந்தகாலவினைப் பகுபதம், நட என்னும் பகுதியும், அன் என்னும் விகுதியும், இறந்தகாலந் தருந் தகரவிடைநிலையும், அன் சாரியையும் பெற்றுப், பகுபதவுறுப்புக்களுட் பகுதியொழிந்தன இடைச்சொல்லாதலின், 'இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்' என்பதனாற் பகுதியீற்றி னின்ற உயிர் முன் வந்த தகரவிடைநிலை மிகாது அதற்கின மிகுந்து, இடைநிலைத் தகரவொற்றின்மேற் சாரியை அகரவுயிரேறிச் சாரியையீற்று னகரவொற்றின்மேல் விகுதி அகரவுயிரேறி முடிந்தது.

நடவாநின்றான் என்னும் நிகழ்காலவினைப்பகுபதம், நட என்னும் பகுதியும், ஆன் என்னும் விகுதியும், ஆநின்று என்னும் இடைநிலையும் பெற்று, உடம்படுமெய் தோன்றி, இடைநிலையீற்றுக் குற்றுகரங் கெட்டு, உயிரேறி முடிந்தது.

நடப்பான் என்னும் எதிர்காலவினைப்பகுபதம், நடவென்னும் பகுதியும், ஆனென்னும் விகுதியும் பகர இடைநிலையும் பெற்று, 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்.' என்பதனாற் பகர மிகுந்து, உடன்மேலுயிரேறி முடிந்தது.

நடந்தது என்னும் அஃறிணையொருமைப் படர்க்கையிறந்த காலவினைப் பகுபதம், நடவென்னும் பகுதியும், துவ்வென்னும் விகுதியும், தகரவிடைநிலையும், துவ்விகுதிக்குந் தகரவிடைநிலைக்குமிடையே அகரச்சாரியையும் பெற்று முடிந்தது.

நடவாய் என்னு முன்னிலையேவலொருமை யெதிர்கால வினைமுற்றுப் பகுபதம் நட என்னும் பகுதியும், ஆய் என்னும்

விகுதியும் பெற்று, வகரவுடம்படுமெய் தோன்றி, விகுதி ஆகார வுயிரேறி முடிந்தது.

நடப்பியாய் என்னும் ஏவற் பிறவினைப் பகுபதம், நட என்னும் பகுதியும், பி என்னும் விகுதியும் பெற்றுப், பகரமிகுந்து, இரண்டுமோர் பகுதியாய் நின்று, மேல் வரும் ஆய்விகுதியோடு புணர்ந்து, யகரவுடம்படுமெய் தோன்றி, விகுதியாகாரவுயிரேறி முடிந்தது.

நடப்பிப்பியாயென்னும் அவ்வினைப்பகுபதம், நடப்பியென்னும் பகுதியும், பி என்னும் விகுதியும் பெற்றுப், பகரமிகுந்து, அனைத்துமோர் பகுதியாய் நின்று, மேல் வரும் ஆய்விகுதியோடு புணர்ந்து, யகரவுடம்படுமெய் தோன்றி, விகுதி ஆகாரவுயிரேறி முடிந்தது.

விளம்பிய பகுதி வேறுனவையும். இவ்வாறே முடிந்து, அனைத்துமோர் பகுதியாய் நின்று, மேல் வரும் அன் ஆன் முதலிய விகுதியோடு புணர்ந்தமை காண்க.

நடவான் என்னும் எதிர்மறைவினைப் பகுபதம் நட என்னும் பகுதி எதிர்மறை ஆகாரவிகுதியோடு புணர்ந்து, இரண்டும் ஒரு பகுதியாய் நின்று மேல் வரும் ஆன் விகுதியோடு புணர்ந்து 'ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே' என்பதனுன் விகுதியினது ஆகாரங் குறைந்து முடிந்தது.

நடவா எனனும அஃறிணைப பனமைப் பகுபதம் 'ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்.' என்பவாகலிற் பால்காட்டும் ஆகார விகுதியன்றி எதிர்மறை ஆகாரம் வேண்டாது முடிந்தது.

நடந்திலன் நடவாநின்றிலன் என்பவற்றுட் காலவிடைநிலையும் அவற்றை மறுத்த இல் என்னும் எதிர்மறையிடைநிலையுந் தந்து அவற்றை ஒரு பகுதியாக்கி முடிக்க.

இவ்வாறே பெயரெச்ச வினையெச்சங்களும் பிறவும் பகுதி விகுதி முதலிய உறுப்புக்களோடு ஏற்றவாறு அமைந்து கிடந்தமை காண்க.

## சிவஞான முனிவர் விளக்கம்

எழுதப்படுவதென்னும் பொருட்கண், எழுது என்னும் முதனிலை முன்னர்ச் செயப்படுபொருண்மைபுணர்த்தும் ஐகார விகுதி புணர்ந்து கெட்டுக், கெட்டவழித் தகரமிரட்டித்து, எழுத்தென முடிந்தது.

ஊண், தீன், கோள் என்றாற்போல்வனவும், செயப்படு பொருண்மையுணர்த்தும் ஐகார விகுதி புணர்ந்து கெட்டு, முதல் நீண்டு நின்றன.

திரை, நரை, அலை, தளிர், பூ, காய், கனி என்றாற்போல்வன, வினைமுதற்பொருண்மை புணர்த்தும் இகரவிகுதி புணர்ந்து கெட்டு நின்றன.

[1]"கெடுவாக வையா துலகம்" என்புழிக் கெடுவென்பது புடை பெயர்ச்சியை உணர்த்துந் தல் விகுதி கெட்டு நின்றது. கேடு என்பது அவ்வாறாய் முதல் நீண்டு நின்றதெனக் கொள்க.

ஏனையவும் இவ்வாறே ஏற்றபெற்றி யறிந்து முடித்துக்கொள்க.

திரை, நரை, தளிர் என்றாற்போல்வன விகுதி குன்றி முதனிலை மாத்திரையாய் நிற்றல்பற்றி, இவற்றை முதனிலைவினைப் பெயரென வழங்குப.

ஐகாரவிகுதி செயப்படுபொருண்மை யுணர்த்துதல் நடவை சேக்கை உடுக்கை தொடை விடை என்றாற்போல்வனவற்றுள்ளும், இகரவிகுதி வினைமுதற்பொருண்மை யுணர்த்துதல் சேர்ந்தாரைக்கொல்லி, நூற்றுவரைக்கொல்லி, நாளோதி, நாலோதி என்றாற்போல்வனவற்றுள்ளுங் காண்க. இவ் விகுதிகள் சிறுபான்மை பிறபொருளுணர்த்தியும் வரும். வடநூலாரும் வினைப்பெயர் விகுதிகள் கூறிய நியமந் தப்பிப் பிறபொருளுணர்த்தியும் வருமெனக் கொள்வர்.

உடுக்கையென்பது, உடுக்கப்படும் பொருளையுணர்த்துங்கால் ஐகாரவிகுதித்தென்றும், உடுத்தல் எனப் புடைபெயர்ச்சியை உணர்த்துங்காற் கைவிகுதித்தென்றுந் தெரிந்துணர்ந்து கொள்க.

'பகுதி விகுதி' என்னுஞ் சூத்திரமுதல் இச்சூத்திரமீறாகப் பகுபதங்களை மேலோர் முடித்தவாறு முடித்துக் காட்டினமை யின், இது முடித்துக்காட்டல் என்னும் உத்தி.

முன்னைத் தமிழ்நூல்களுள் இல்லனவற்றை, இவ்வாசிரியர் தாமே, பகாப்பதம் பகுபதமென முன்னர் நாட்டி இச்சூத்திரங் காறும் அவற்றிற் கிலக்கணந் தந்து நிறுத்தமையின் தாஅனுட்டித் தனுஅது நிறுப்பு என்னும் மதம். (கஅ)

---

1. திருக்குறள்: ககஎ.

## ரு. வடமொழி யாக்கம்

### ஆரியமொழி தமிழில் வடமொழியாதல்

கசசு. இடையில் நான்கும் ஈற்றில் இரண்டும்
அல்லா அச்சை வருக்கமுத லீறு
யவ்வாதி நான்மை ளவ்வாகும் ஐயைம்
பொதுவெழுத் தொழிந்தநா லேழும் திரியும்.

எ - னின். இவ்வியல் மொழியாக்கமாதலின், ஆரியமொழி திரிந்து வடமொழியாமாறு உணர்த்துவான்தொடங்கி, அவற்றின் பொதுவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *ஆரியமொழியுள், அச்சென்று வழங்கும் உயிர் பதினாறனுள்ளும் இடையினின்ற ஏழாமுயிர் முதனான் கும் ஈற்றினின்ற இரண்டுமான ஆறும் ஒழிந்து நின்ற அ ஆ இ ஈ உ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் பத்தும், அல் என வழங்கும் முப்பத்தேழு மெய்யுள்ளுங் க ச ட த ப என்னும் ஐந்து வருக்கத்தினிடையில் உரப்பியும் எடுத்துங் கனைத் துஞ் சொல்லப்பட்டு நிற்கும் மூன்றும் ஒழிந்த க ங ச ஞ ட ண த ந ப ம என்னும் பத்தும், ய ர ல வ என்னும் நான் கும், ளவ்வும் ஆகும் இருபத்தைந்தும், தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம்; இவை யன்றி, மேல் உயிருள் ஒழிந்த ஆறும், ஐந்து வருக்கங்களினும் இடை களின் ஒழிந்த பதினைந்தும், முப்பதாமெய் முதலான எட்டனுள் ளகரமொழிந்த ஏழுமான இருபத்தெட்டும், ஆரியத்திற்குச் சிறப்பெழுத்தாய்த் தமக்கேற்ற பொது வெழுத்தாகத் திரிந்து வடமொழியாம் எ - று.*

*மேல் ஏழாமுயிரென விதப்பாராதலின், இடையினான்கென விதவாது கூறினர்.*

*பொதுவெழுத்தெனவே, சிறப்பெழுத்தென்பது பெற்றாம், தமிழை நோக்கிச் சிறப்பாயின.*

*சிறப்பெழுத்துத் திரியுமென வரையறை கூறவே, பொது வெழுத்து இயல்பாயுந் தமக்கேற்ற விகாரமாயும் வருமென் பதூஉங் கூறினாராயிற்று.* (கக)

ஆரியமொழி வடமொழியாதற்குச் சிறப்புவிதி

கசஎ. அவற்றுள்
ஏழாமுயி ரிய்யும் இருவுமை வருக்கத்
திடையில் மூன்றும் அவ்வம் முதலும்
எட்டே யவ்வும் முப்பது சயவும்
மேல் ஒன்று சடவும் இரண்டு சதவும்
மூன்றே அகவும் ஐந்திரு கவ்வும்
ஆஈ றையும் ஈயீ றிகரமும்

எ - ன். மேலதற்குச் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் திரியுமென்றவற்றுள், சிறப்பெழுத்தாகிய ஏழாமுயிர் இகரமும் இருவுமாம்; ஐந்து வருக்கங்களினும் இடையினின்ற மூன்றும் அவ்வவ்வருக்கங்களின் முதலெழுத்தாம்; எட்டாமெய்யான சவ்வருக்கத்துள் எடுத்துச்சொல்லுமெய் ஓரோவிடத்து யகரமுமாம்; முப்பதாமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் யகரமுமாம்; முப்பத்தொன்றுமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் டகரமுமாம்; முப்பத்திரண்டாமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் தகரமுமாம்; முப்பத்துமூன்றுமெய் மொழிமுதற்கண் அகரமும் இடைக்கண் ககரமுமாம்; முப்பத்தைந்தாமெய் இரண்டு ககரமாம்; பொதுவெழுத்துள் மொழியிறுதி ஆகாரம் ஐகாரமாம்; மொழியிறுதி ஈகாரம் இகரமாய எ - று.

மேல் 'திரியும்' எனப் பொதுவிதி போந்தவற்றுள், பயின்று வருவனவற்றிற்குத் திரிபு கூறி, ஏனைய வந்தவழிக் காண்கவென்பார், இகரமு மாகு மெனப் பயனிலைகொடுத்து முடியாது, இகரமுமென [1]அவாய்நிலையாக முடித்தார்.

வ - று: இடபம், விடபம், திட்டி எனவும்; இருடி, மிருகம், விருத்தி எனவும்; ஏழாமுயிர் இகரமும் இருவுமாயிற்று. நகம், நாகம், மேகம் எனவும்; [2]சலவாதி, விசயம், [3]சருச்சரை எனவும்;

1. அவாய நிலையாவது ஒருசொல் மற்றொரு சொல்லை வேண்டி நிற்பது.

2. சலவாதி - ஒரு கருத்துப்பற்றி ஒருவன் கூறியமொழிக்கு வேறுபொருள் கற்பித்துக்கொண்டு பொருள் கூறுபவன்.

3. சருச்சரை - சரசரப்பு. எண்வகைப் பரிசத்துள் ஒன்று; நன். சூ. 454, உரை; வடநூலார் இம்மொழிக்கு வேறு பொருள் கூறுவர்.

பீடம், பீடை, திடம் எனவும்; தலம், தினம், தரை எனவும்; பலம், பந்தம், பாரம் எனவும்; ஐந்து வருக்கத்தினும் உரப்பியும் எடுத்துங் கனைத்துஞ் சொல்லும மூன்றும் அவ்வம் முதலாயின.

அயம், பங்கயம் என எட்டாமெய் யகரமுமாயிற்று. சாலை, சூலை எனவும்; மயானம் எனவும்; முப்பதாமெய் சகரமும் யகரமு மாயிற்று. சட்டி எனவும்; இடபம் எனவும்; முப்பத்தொன்று மெய் சகரமும் டகரமுமாயிற்று. சித்தி, சூத்திரம், சேனை எனவும்; ஆதனம், வாதனை எனவும்; முப்பத்திரண்டா மெய் சகரமுந் தகரமுமாயிற்று. அரன், அரி எனவும்; சிங்கம், மோகம் எனவும்; முப்பத்துமூன்றாமெய் அகரமுங் ககரமுமாயிற்று. பக்கம், தக்கணம் என முப்பத்தைந்தாமெய் இரண்டு ககரமா யிற்று. வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை என ஆகார ஈறு ஐகார ஈறாயிற்று புரி, மேதினி, குமாரி என ஈகார ஈறு இகர வீறாயிற்று. (உ0)

கசஎ ரவ்விற் கம்முதல் ஆமுக் குறிலும்
லவ்விற் கிம்முதல் இரண்டும் யவ்விற்கு
இய்யு மொழிமுத லாகிமுன் வருமே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) ரகர லகர யகரங்களை முதலாகவுடைய ஆரியமொழிகள் வடமொழியாங்கால், அகர இகர உகர மென்னும் இம்மூன்று குற்றுயிரும், இங்ஙனஞ் சொன்ன வாறே அவ்வடமொழிகட்கு முதலாய், அம் மூன்றெழுத் திற்கு முன்னர் வரும் எ - று.

வ - று. அரங்கம், இராமன், உரோமம் எனவும்; இலாபம், உலோபம் எனவும்; இயக்கன் எனவும் வரும். (உக)

கசஅ. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமும் நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி உவ்வும் ஆமபிற.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) ஆரியமொழியுள் இரண்டெழுத்திணைந்து ஓரெழுத்து நீர்மையாய் நடக்குங்கால், பின்னிற்கும் யரலக்கண்மீதே இகரமும், மகர வகரங்கண்மீதே உகர

மும், நகரமீதே அகரமும், வந்து வடமொழியாம்; இணைந்து முன்னிற்கும் ரகரத்திற்குப் பின்னர் உகரமும் வரும் எ - று.

வ - று. வாக்கியம், வாச்சியம், நாட்டியம் எனவும்; வக்கிரம், வச்சிரம், சத்திரம், அப்பிரம் எனவும்; சுக்கிலம், ஆமிலம் எனவும்; பதுமம் எனவும்; பக்குவம் எனவும்; அரதனம் எனவும்; அருக்கன், அருத்தம், கருப்பம், சருக்கம் தருமம் எனவும் வரும்.

பிறவென்றமையானே, சத்தி, கட்சி, காப்பியம், பருப்பதம் என்றற்றொடக்கத்துத் திரிபும், தூலம், அத்தம, ஆதித்தன், அசத்தம் என்றற்றொடக்கத்துக் கேடும், மற்றும் விகாரத்தால் வருவனவுங் கொள்க.

(உஉ)

## தமிழெழுத்திற் சிறப்பெழுத்தும் பொதுவெழுத்தும்

கரு௦. றனழஎ ஒவ்வும் உயிர்மெய்யும் உயிரள
பல்லாச் சார்பும் தமிழ்பிற பொதுவே.

எ - னின். வடமொழியாக்கங் கூறவேண்டி ஆரியத்திற்குப் பொதுவெழுத்துச் சிறப்பெழுத்தென விதந்தமையின், இவ்விதப்புத் தமிழ்ற்கு உண்டோ இன்றோவென்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) முதலுஞ் சார்புமான நாற்பதெழுத்துள்ளும், றகர னகர ழகர எகர ஒகரமான முதலெழுத்தைந்தும், உயிர்மெய்யும் உயிரளபெடையும் அல்லாத சார்பெழுத்தெட்டும், தமிழிற்கே சிறப்பெழுத்தாம்; ஒழிந்த இருபத்தேழுந் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம் எ - று.

மெய்யை முற்கூறினர், எகர ஒகரங்கள் பிராகிருதத்திற்கும் உரியவாதலினென்க.

(உ௩)

பதவியல் முற்றிற்று.

---

# ௫. உயிரீற்றுப்புணரியல்

## ௧. புணர்ச்சி

*புணர்ச்சி இன்னதென்பது*

௧௫௧. மெய்யுயிர் முதலீ றாம்இரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடும் அல்வழி வேற்றுமைப்
பொருளின் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே.

எ - னின். நிறுத்தமுறையானே மேலையியலுட் கூறிய பதங்கள் ஒன்றோடொன்று புணருமாறு உணர்த்துவான் தொடங்கிப், புணர்ச்சி இன்னதென்பதூஉம் பொதுப்புணர்ச்சியும் முறையே தலைப்பெய்து உயிரீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப்புணர்ச்சி கூறுவார், கழகந்தோட்டம் என்றற்போல் மிகுதிபற்றிய தறியாய் இவ்வியற்கு உயிரீற்றுப் புணரியலெனப் பெயர் தந்தமையின், இவ்வியலின் வைத்தமுறையே, புணர்ச்சி இன்னதென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *மெய்யையும் உயிரையும் முதலும் ஈறுமாக வுடைய பகாப்பதம் பகுபதம் என்னும் இரண்டு பதங்களும், தன்னொடு தானும் பிறிதொடு பிறிதுமாய் அல்வழிப் பொருளிணைதல் வேற்றுமைப் பொருளிணைதல் பொருந்துமிடத்து, நிலைமொழியும் வருமொழியும் இயல்போடும் விகாரத்தோடும் பொருந்துவது மேற்கூறிய புணர்ச்சியாம் எ - று.*

*உயிர்மெய் முதலீறுமெனின் உயிர்மெய் என்னும் ஓரெழுத்தாகப் பொருள்படுமாதலின், மெய்யுயிர் முதலீறுமென மெய்யை முற்கூறினர்.*

*திசைச்சொல்லும் வடசொல்லும் பெயர் வினை யிடையுரியாய் அடங்குமாதலின் அவற்றுள் அடக்கி இருபதங்களும் என்றார்.*

*வேற்றுமையல்லாதவழி அல்வழியாதலின் வேற்றுமையல்வழியெனக் கூறல்வேண்டும்; அங்ஙனங் கூறின், வேற்றுமைப் பொருள், அல்வழிப்பொருள் என இருபொருட்படாது, வேற்*

றமை யென்பது, அல்வழியை விசேடித்ததாய், அல்வழிப்பொருளொன்றினும் பொருந்துழியெனப் பொருள்படுமாதலின், அல்வழி வேற்றுமை என, அல்வழியை முற்கூறினார்.

இயல்பெனினும், தன்மையெனினும், இயற்கையெனினும் ஒக்கும். விகாரமெனினும், செயலெனினும், செயற்கையெனினும், விதியெனினும் ஒக்கும். இவ்விரண்டனுள்,

[1]"நின்ற சொன்முன் னியல்பா கும்மே."

என இயற்கையைச் செயற்கையாகவும்,

[2]"இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை."

எனச் செயற்கையை, இயற்கையாகவுங் கூறுதல் இலக்கணை.

புணரியல் மூன்றனுள்ளும் மெய்யுயிர் முதலீறு மிருபதங்களும் இவ்வாறு புணர்ந்து வருதல் காண்க. (க)

அல்வழி வேற்றுமை இவையென்பது

கருஉ. வேற்றுமை ஐம்முதல் ஆறும் அல்வழி
தொழில்பண் புவமை உம்மை அன்மொழி
எழுவாய் விளிஈ ரெச்சமுற் றிடைஉரி
தழுவு தொடரடுக் கெனஈ ரேழே.

எ-னின். மேல் அல்வழி வேற்றுமை என்றார், அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வேற்றுமைப் புணர்ச்சி: 'பெயரே ஐ ஆல்' என்னுஞ் சூத்திரத்து ஐ முதலிய ஆறு உருபுந் தொக்கும் விரிந்தும் வரப் பதங்கள் பொருந்துந் தொடர்ச்சியாம். அல்வழிப்புணர்ச்சி, வினைத்தொகை முதலிய ஐந்து தொகைநிலையும் எழுவாய் முதல் ஒன்பது தொகாநிலையுமெனப் பதங்கள் பொருந்துந் தொடர்ச்சி பதினான்காம் எ-று.

வேற்றுமைத்தொகைநிலை தொகாநிலையென விதவாமையின் அவ்விரண்டும் வேற்றுமைப் புணர்ச்சி என்பதூஉம், முற்றெச்சங் க௯ விதந்தமையின் தொழிலென்றது வினைத்தொகையை

1. தொல். தொகை. சூ: உ. 2. நாலடியார், ககக.

என்பதூஉம், வினைத்தொகை முதல் ஐந்தும் விரிந்தவழி, வினைத் தொகை பெயரெச்சமாயும், பண்பை விளக்குமொழி இடைச் சொல்லாதலின் பண்புத்தொகையிரண்டும் இடைச்சொற் சந்தியாயும், உவமைத்தொகை இரண்டாம் வேற்றுமையோடு பயனிலையாயும், உம்மைத்தொகை இடைசசொற் சந்தியாயும், அன்மொழித் தொகை பொற்றொடி என்பது பொன்னாலாய தொடியினையுடையாள் எனச் சொற்களுஞ் சந்திகளும் பலவாயும் முடிதலானும், வேற்றுமைத் தொகையன்றி இத்தொகைகள் தொகா நிலையுமாம் என மேற்சூத்திரஞ் செய்யாமையானும், இவ்வைந்து தொடருந் தொகைநிலை யென்பதூஉம் பெற்றாம்.

ஈர் என்பதனை முற்று என்பதனோடும், தழுவுதொடர் என்பதனை எல்லாவற்றோடும் ஒட்டுக.

அடுக்குந் தழுவுதொடராயினும், ஒருசொல் அடுக்கிவருதலின், ஏனையபோல் தழுவுதொடர் அன்றென்பார், விதந்து பிற் கூறினார்.

எ - டு. பொன்னுடையான், பொன்னையுடையான் : கல்லெறிந்தான், கல்லாலெறிந்தான் ; கொற்றன் மகன், கொற்றனுக்கு மகன் ; மலைவீழருவி, மலையின்வீழருவி ; மலையுச்சி, மலையினதுச்சி ; மலைமுழை, மலைக்கண்முழை என வேற்றுமைப் புணர்ச்சி வந்தன. கொல் யானை, கருங்குதிரை, ஆயன் சாத்தன், பொற்சுணங்கு, இராப்பகல், பொற்றொடி, கொற்றன் கொடுத்தான், கொற்றாகொள், உண்ட சாத்தன், உண்டு வந்தான், உண்டான் சாத்தன், குண்டுகட்டெருமை, [1]"அணங்குகொலாய்மயில் கொல்லோ கனங்குழை," [2]"நனி பேதையே," "படைபடையென றஞ்சி" என அல்வழிப்புணர்ச்சி வந்தன.

தழுவுதொடர் ஆறும் பதினொன்குமெனக் கூறவே, தழுவாத் தொடருஞ் சிலவுள அவ்விருவழியும் என்றாராயிற்று. அவை வருமாறு : கைக்களிறு, பொற்குடம், ஆடகப்பூண் என்பன, தழுவுதொடராகிய உருபும் பயனும் உடன்தொக்கமையின் களிறு குடம் பூண் என்பனவற்றோடு நிலைமொழிகள் தழுவாது தொடர்ந்து, மூன்றுவிகாரமும் ஏற்ற வேற்றுமைப்புணர்ச்சி [3]"இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற், பரலவ லடைய விரலை தெறிப்ப" என்பதனுள், மருப்பினிரலை எனக் கொண்டுகூட்டாக வந்து, இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்கு, மருப்பு என்பது இரலை என்பதனோடு புணராது, மருப்பிற் பரல் எனப் புணர்ந்து திரிந்தது. இத்தொடக்கத்தனவெல்லாந்

1. திருக்குறள், க0அக.
2. புறநானூறு, உஉஎ. 3. அகநானூறு, ச.

தழாத்தொடராய வேற்றுமைப் புணர்ச்சியாமென்க. "சுரையாழ வம்மி மிதப்ப" என்பதனுள், மொழிமாற்றாய்ச் சுரை மிதப்ப எனத் தழுவுதொடராகி வருவழி இயல்பாக முடியும் எழுவாய்ப் புணர்ச்சி, சுரையாழ எனத் தழாத்தொடராய் உடம்படுமெய் தோன்றி முடிந்தது. இத்தொடக்கத்தனவெல்லாந் தழாத் தொடராய அல்வழிப்புணர்ச்சியாம் என்க.

மாடத்தைக்கட்டினான் என வேற்றுமையுருபுஞ் சாரியையும் விரிந்துநின்ற இருமொழியொருசந்தியாகிய வேற்றுமைச் சந்தியை, வேற்றுமையங்கருதி நான்குசொல் மூன்று சந்தியாக்கி, உருபுஞ்சாரியையும் இடைச்சொல்லாதலின் அல்வழியுள் இடைச் சொற்சந்தி என்று கோடலும் ஒன்று.

'எட்டே வேற்றுமை' என மேற்கூறுவார் எழுவாயும் விளியு மொழித்து 'வேற்றுமை யைம்முதல் ஆறு' என்றது என்னை யெனின் :—பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலான் வேற் றுமை எட்டென்பார், எழுவாய்க்கும் விளிக்கும் உருபு பெயரும் பெயரது விகாரமுமன்றி வேறுருபின்மையின் அவ்விரண்டனை யும் ஒழித்துத், தமக்கென உருபுடையன இடைநின்ற ஆறு வேற்றுமையுமே ஆதலின், அவற்றின் உருபு ஆறுந் தொக்கும் விரிந்தும் இடைநிற்க அவ்வாறோடும் பதங்கள் பொருந்தும் புணர்ச்சியை வேற்றுமைப்புணர்ச்சி என்றாரென்க.

[1]வினைத்தொகை பண்புத்தொகை அன்மொழித்தொகை என்னும் அல்வழிப்புணர்ச்சியாய தொகைநிலைத் தொடர் மொழிகளை [1]ஒரு மொழிகள் என்பாருமுளர். அவர் கூற்றுத் தாய் மலடி என்றாற்போலும். (உ)

## இயல்புப் புணர்ச்சி

**கடுக. விகாரம் அனைத்தும் மேவல தியல்பே.**

**எ - னின். மேல் 'இயல்போடு விகாரத்தியைவது' என்றார் அவற்றுள் இயல்பாவது உணர்த்துதல் நுதலிற்று.**

**(இ - ள்.)** மேல் வரும் விகார வகையனைத்தும் மேவா தது இயல்புப் புணர்ச்சியாம் எ - று.

---

1. வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித் தொகைகளை ஒரு மொழிகளென்று கூறுபவர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் (தொல். புணர். சூ. 8); இலக்கண விளக்க உரைகாரரும் பெரும்பாலும் இக்கொள்கையினரென்று தெரி கிறது. சூ. 334: உரை.

வ - று : பொன்மலே, புகழழகிது, ஒளிமணி என வரும்.

இயல்புக்கு விதி கூறவேண்டுவது என்னையெனின் :—மலர்க் கணை தொடுத்தான் என விகாரமாயவழி மலராகிய கணையைத் தொடுத்தான் எனவும், மலர்கணை தொடுத்தான் என இயல்பாய வழி மலரையுங் கணையையுந் தொடுத்தான் எனவும் பொருள் வேறுபடுதலின், கூறவேண்டுமென்க. (௩)

விகாரப் புணர்ச்சி

கருச. தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழிமூ விடத்தும் ஆகும்.

எ - னின். விகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்யேனும் உயிரேனும் உயிர்மெய் யேனுஞ் சாரியையேனும் ஒன்றும் பலவுந் தோன்றுதலுந் திரிதலுங் கெடுதலும் மேற்சொன்ன விகாரமாம். இம் மூவகை விகாரமும் நிலைமொழி வருமொழிகளின் முதல் இடை கடை யென்னும் மூன்றிடத்தும் ஏற்றபெற்றி வரும் எ - று.

எ - டு : பூக்கொடி, பூங்கொடி : வருமொழிக்கு முதலில் மெய் தோன்றின. பஃறலே : வருமொழி முதலினும் நிலைமொழி யீற்றினும் மெய்திரிந்தன. நிலவலயம் : நிலைமொழியீற்றின் மெய் கெட்டது. அறுபது : நிலைமொழிமுதலுயிர் திரிந்து வருமொழியிடையொற்றுக் கெட்டது. பல்பொருள் : நிலைமொழி யீற்றுயிர் கெட்டது. நாடுரி : நிலைமொழியீற்றுயிர்மெய் கெட்டு டகரந் தோன்றிற்று. தமிழப்பிள்ளை, பனங்காய் : நிலைமொழி யீற்றிற் சாரியை தோன்றின. காட்டாதொழிந்தன வந்தவழிக் காண்க.

இவ்விகாரங்கள், நிலைமொழி வருமொழிகளுள், ஒரு மொழி யைச் சார்ந்து வந்தன.

ஒருமொழி தொடர்மொழியென விதவாது பொதுப்பட மொழி மூவிடத்தும் ஆகும் என்றமையின், இருமொழியைச் சார்ந்து வருவனவும் உளவெனக் கொள்க. அவை வருமாறு :— ஆவழகிது : வகரவுடம்படுமெய் தோன்றிற்று. உரியநெய் : யகரவுயிர்மெய் தோன்றிற்று. புளியங்காய் அம்முச்சாரியை தோன்றிற்று. இத் தோன்றல் விகாரங்கள், நிலைமொழி வரு மொழிகளுள் ஒருமொழிக்கே உரியவன்றி, இரு மொழியையுஞ் சார்ந்துவந்தமை காண்க. (௪)

## செய்யுள் விகாரம்

கருரு. வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி.

எ - னின். செய்யுள் விகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அல்வழி வேற்றுமையான் வரும் மேற் கூறிய மூன்று விகாரமுமேயன்றி, ஆறுக இங்ஙனங் கூறிய விகாரங்களும் வருவனவாம், செய்யுளகத்து; அடிதொடை முதலிய நோக்கி அமைக்கவேண்டுமிடத்து எ - று.

இவ்வதிகாரத்துட் கூறுஞ் செய்யுள் முடியும் பிறவும் அடங்கு தற்கு, இன்னது நோக்கியென வரைந்து கூறாராயினார்.

வ - று: "குறுத்தாட் பூதஞ் சுமந்த—அறக்கதி ராழியெம் அண்ணலைத் தொழுதினே." இது குறுந்தாள் எனற்பாலது குறுத்தாள் என வலித்தவாறு.

"தண்டை யினக்கிளி கடிவோள்—பண்டைய ளல்லண் மாணேக் கினளே." இது தட்டை எனற்பாலது தண்டை என மெலித்தவாறு.

[1]"தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற்—போத் தரூர் புல்லறிவி னார்." இது பொத்தரூர் எனற்பாலது போத்தரூர் என நீட்டியவாறு.

"யானை—யெருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன்—திருத்தார்நன் றென்றேன் றியேன்." இது தீயேன் எனற்பாலது தியேன் எனக் குறுகியவாறு.

[2]"சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே." இது விளையுமே எனற்பாலது விளையும்மே என ஒற்றில்வழி ஒற்றை விரித்தவாறு.

இதனுள் சிறிய இலை எனற்பாலது சிறியிலையெனத் தொகுத்தவாறு, [3]"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்—கற்றனைத் தூறு மறிவு." இதுவுந் தொட்டது கற்றது எனற்பாலது தொட்டு, கற்று எனத் தொகுத்தவாறு. பிறவும் அன்ன.
(கு)

கருசு. ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே.

எ - னின். இதுவும் அது.

---

1. நாலடி. கயமை : க.  2. புறநானூறு, கoக.
3. திருக்குறள், நகசு.

(இ - ள்) அடி தொடை முதலிய நோக்கித் தொகுக்கும்வழித் தொகுத்தலன்றி, வழக்கின்கண் மரூஉப் போலச் செய்யுட்கண் மரூஉவாய் அடிப்பாடாக ஒருமொழி முதல் இடை கடையென்னும் மூன்றிடத்துங் குறைந்து வருதலுஞ் செய்யுள் விகாரமாம் எ - று.

வ - று : "மரையிதழ் புரையும் அஞ்செஞ் சீறடி," எனவும், "வேதின வெரிநின் ஓதிமுது போத்து" எனவும், "நீலுண் துகிலிகை கடுப்ப" எனவும் முறையே தாமரை, ஓந்தி, நீலம் எனற்பாலன குறைந்தவாறு காண்க.

செய்யுட்கேயுரிய விகாரங்களை ஈண்டுக் கூறியதென்னையெனின் :—செய்யுளகத்து அல்வழி வேற்றுமையான் வரும் மூன்று விகாரமும் இவ்வொன்பது விகாரமும் வருதலின், வேறு பாடறிதற்கென்க. (௬)

புணர்ச்சி விகாரத்தில் வருவதோர் ஐயம் ஒழித்தல்

கருஎ. ஒருபுணர்க் கிரண்டும் மூன்றும் உறப்பெறும்.

எ - னின். அல்வழி வேற்றுமைப்புணர்ச்சி விகாரத்தின் வருவதோர் ஐயமறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) ஒரு புணர்ச்சிக்கண் தோன்றல் திரிதல் கெடுதல் என்ற விகாரம் எத்துணை வருமென்று ஐயுறற்க ; ஒன்றேயன்றி, இரண்டும் மூன்றும் வரப்பெறும் எ - று.

'விகாரத்தியைவது புணர்ப்பு' எனவே, ஒன்று வருதல் கூறாதே அமைதலின், இரண்டு மூன்றுமென்றார்.

வ - று : யானைக்கோடு, நிலப்பனை, பனங்காய் என முறையே காண்க. (எ)

---

## உ. பொதுப் புணர்ச்சி

எல்லாவீற்றின் முன்னும் மெல்லினமும் இடையினமும் புணர்தல்

கருஅ. எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரு ஞநமய வக்கள் இயல்பும்
குறில்வழி யத்தனி யைநொது முன்மெலி
மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்.

எ - னின். பொதுப்புணர்ச்சி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இயல்பாகவும் விதியாகவும் இருபத்து நான்கெழுத்தையும் ஈறாகவுடைய பெயர்ச்சொல் வினைச் சொல் இடைச்சொல் உரிச்சொல் திசைச்சொல் வடசொல் என்பன நிலைமொழியாக நிற்க, இவற்றிற்கு முன்னர் வரும் ஞகார நகார மகார யகார வகாரங்கள், அல்வழி வேற்றுமையாய இருவழியும், இயல்பாதலும், குற்றெழுத் தின் பின்வரும் யகரவொற்றே ஓரெழுத்தொருமொழியான உயிர் உயிர்மெய் என்னும் ஐகாரமே நொவ்வே துவ்வே என்பனவற்றிற்கு முன்னர் வரும் ஞகார நகார மகாரங்கள் பிற சொற்கண்முன் இயல்பா தலன்றி மிக்கு முடிதலுமாம்; ணகார ளகார னகார லகாரங்கட்கு முன் வரும் நகாரம், பிற ஈற்றின் முன் இயல்பாதலன்றித், திரியும் எ - று.

எவ்வகை மொழிக்கும் என்றமையான், விதியீறும் பெற்றாம்.

நகரம் இவ்வாறு திரியுமெனை ஈண்டுக் கூறிக் குறைவறுமை யின், மேலவற்றோடு ஒருங்கெண்ணாது விதந்தார்.

புணரியலிடத்து யாண்டும் அல்வழி வேற்றுமையெனக் குறிப்பாயேனும் வெளிப்படையாயேனும் விதவாராயின், இரு வழியுங் கொள்க.

எ - டு: விள, பலா, புளி, தீ, கடு, பூ, சே, பனை, கோ, கௌ, உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், யாழ், வாள், எஃகு என நிறுத்தி, ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எனவும்; ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வலிமை எனவும்; விளவை நாட்டினன், மண்ணை வைத்தான் எனவும் வருவித்து, இருவழியும் வருமொழிக்கு முதலாய மென்கணமும் இடைக்கணமும் இயல்பாயவாறு காண்க. ஒழிந்த உயர்திணைப் பெயர் முதலிய [1]அறுவகைச் சொற்களினும் இவ்வாறே யொட்டுக. மெய், கை: ஞான்றது, நீண்டது, மாண்டது எனவும்; ஞாற்சி, நீட்சி, மாட்சி எனவும் இருவழியும் மிக்கன. நொ, து: ஞெள்ளா, நாகா, மாடா என இவை வினையாகலின், அல்வழியின் மிக்கன.

1. அறுவகைச் சொல்: பெயர், வினை, இடை, உரி, திசைச் சொல், வடசொல்.

தொழிற்பெயரிறுதி மெய் உகரம் பெறுதலும் நகரத்திரிபும் மேல்வருஞ் சிறப்புச் சூத்திரத்துட் காண்க.

மெலி மிகலுமாமென எண்ணின்கண் நிற்கும் எச்சவும்மை யானே, ஞொ, நு என்னும் இரண்டு சொன்முன்னும் இடையின மிகலுமாம் எனக் கூறினாராயிற்று.

அவை வருமாறு: ஞொய்யவனை, ஞொவ்வளவா, நுய்யவனை, நுவ்வளவா என வரும் இடையினமிகுதல் குறில்வழி யவ்விற்குந் தனி ஐக்கும் பொருந்தாமையின், உம்மையால் தழீஇயினார். இவ்வாறு இடையினமிகுதலை ஆசிரியர் தொல்காப்பியரும் [1]'அவற்றுள், மெல்லெழுத் தியற்கை யுறழினும் வரையார்.'' என உம்மையால் தழீஇயினார். அச்சூத்திரத்திற்கு அவ்வாசிரியர் கருத்தன்றி [2]வேறுரை செய்வாருமுளர்.

ஞொ, நு என்னும் இவ்விரண்டு சொன்முன்னும் மெல்லினமும் இடையினமும் மிகாவேற் புணர்ச்சியின்றி விட்டிசை[3] போலும்; அற்றேல் வாழைபழம் கீரைகறி என்றாற்போலும்.

எகரவீற்றிற்கு உதாரணங் காட்டிற்றிலம், அது வினாவிடைச் சொற்க ளன்றி ஈறாகாமையானும், அவ்வினாவிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி மேற் கூறுதலானு மென்க.

இச் சூத்திரம் முதலியன தொடர்ச்சொற்புணர்த்தல் என்னும் உத்தி. (அ)

பொதுப்பெயர் உயர்திணைப் பெயரீறு

கருக. போதுப்பெய ருயர்திணைப் பெயர்கள் ஈற்றுமெய்
வலிவரின் இயல்பாம் ஆவி யரமுன்
வன்மை மிகாசில விகாரமாம் உயர்திணை.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இருதிணைப்பொதுவான பெயர்க்கும் உயர்திணைப்பெயர்க்கும் ஈறான மெய்கள் வல்லின முதன் மொழி

1. தொல்காப்பியம், எழு. தொகை மரபு. சூ. ௩.

2. இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்.

3. விட்டிசை - வருமொழியோடு தொடர்தலின்றி வேறுபட்டு ஒலித்தலையுடையது: விட்டிசைத்தல்லான் முதற்கட் டனிக் குறி னேரசையென், றோட்டப்படாது. யா. கா. ஒழிபு. சூ. 2.

வந்தால் இயல்பாம். உயிரே யகரமே ரகரமேயென்னும் இவ்வீற்று அவ்விருபெயர்கள் முன்னரும் வரும் க ச த பக்கள் மிகாவாம். மெய்யுயிரீற்று உயர்திணைப்பெயர்கள் நாறகணங்களோடும் புணருமிடத்து நிலைமொழி வருமொழிகள் விகாரப்படுவனவுஞ் சிலவுளவாம் எ - று

வல்லினத்துள் மயங்காதன மயங்கின் ஈற்றுமெய் விகாரப் படுவனவும் உளவாதலிற் பொதுப்பட வலி வரினென்றும், வல்லினம் மிகுதற்குரிய ழகரம் அஃறிணைக்கன்றி இவ்விரு பெயர்க்கும் ஈறாகாமையின் அதனை யொழித்து ய ர முன்னென்றும், வன்கணமேயன்றி ஏனைக்கணங்கள் புணரினும் விகாரப்படுமாதலின் இறந்தது தழீஇய எச்சவும்மை கொடுத்து விகாரமுமாம் என்னாது விகாரமாம் என்றும், அவ்விகாரம் நிலைமொழி வருமொழி இரண்டினும் ஏற்றபெற்றியாக வருதலின் உயர்திணையீறு என்னாது உயர்திணை என்றுங் கூறினார். உயர்திணைப் பெயரைப் பின்வைத்தார், பின்பும் எடுத்து விதத்தற்கென்க.

எ - டு: சாத்தன், கொற்றன், ஆண்: குறிது, சிறிது, தீது, பெரிது; குறியன், சிறியன், தீயன், பெரியன் எனவும்; கை, செவி, தலை, புறம் எனவும் பொதுப்பெயரிறுதி னகர ணகரங்கள் வன்மைவர இருவழியும் இயல்பாயின. ஊரன், அவன்: குறியன், சிறியன், தீயன், பெரியன் எனவும்; கை, செவி, தலை, புறம் எனவும் உயர்திணைப்பெயர்களீற்று னகரம் வன்மை வர இரு வழியும் இயல்பாயிற்று. பிறவும் அன்ன.

சாத்தி கொற்றி, தாய்: குறிது, சிறிது, தீது, பெரிது; குறியள், சிறியள், தீயள், பெரியள் எனவும்; கை, செவி, தலை, புறம் எனவும் பொதுப்பெயரீற்றிகர யகரங்கள்முன் வந்த வல்லினம் இருவழியும் மிகாவாயின. நம்பி, விடலை: குறியன், சிறியன், தீயன், பெரியன் எனவும்; கை, செவி தலை, புறம் எனவும்; அவர், ஒருவர்: குறியர், சிறியர், தீயர், பெரியர் எனவும்; கை, செவி, தலை, புறம் எனவும் உயர்திணை இகர ஐகார ரகரங்கள்முன் வந்த வல்லினம் இருவழியும் மிகாவாயின. பிறவும் அன்ன.

கபிலபரணர், வடுகநாதன், அரசவள்ளல் எனவும், ஆசீவகப் பள்ளி, குமரகோட்டம், குமரக்கோட்டம் எனவும் இருவழியும் உயர்திணையுள் சில தமக்கேற்ற விகாரமாயின. [1]பிறவும் அன்ன.

---

1. இனி ஒப்பின் முடித்தலால் உயர்திணைப் பெயர்ச்சொல் இறுதிகள்போல உயர்திணை வினைச்சொல் இறுதிகளும் வலிவரின் இயல்பாம் எனக் கொள்க. அவை வருமாறு:—

விளைப்பெயர் விளிப்பெயர்முன் வல்லினம்

கருo. ஈற்றியா வினாவிளிப் பெயர்முன்வலி இயல்பே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மூன்றீற்று வினைமுன்னும் யாவென்னும் வினைப்பெயர் முன்னும், உயிர்று ஒற்றீறுய விளிப்பெயர்கள் முன்னும் வரும் வல்லினம் இயல்பாம் எ - று.

எ - டு: நம்பியா கொண்டான், சென்றான், தந்தான், போயினான்; உண்கா கொற்றா, சாத்தா, தேவா, பூதா எனவும்; யா குறிய, சிறிய, தீய பெரிய எனவும் வினைமுன் வல்லினம் இயல்பாயின. நம்பி, நம்பீ; விடலை, விடலாய்; கிள்ளை, கிள்ளாய்; சாத்தி, சாத்தீ: தாய், தாயே: கொள், செல், தா, போ என உயர் திணைப்பெயர் அஃறிணைப்பெயர் பொதுப்பெயரின் அண்மை விளி முன்னுஞ் சேய்மைவிளி முன்னும் வரும் வல்லினம் இயல்பாயின. பிறவும் அன்ன.

இறுதி ஏகார ஓகார வினைமுன் வரும் வல்லினம் இயல்பாதற்கு உதாரணங் காட்டிற்றிலம், அவ்விரண்டற்கும் மேற் சிறப்பு விதி 'இடைச்சொல் ஏ ஓ' என்னுஞ் சூத்திரத்துள் அடக்கிக் கூறுதலின். (கo)

முன்னிலைவினை ஏவல்வினைமுன் வல்லினம்

கருக. ஆவி யரழ இறுதிமுன் னிலைவினை
ஏவல்முன் வல்லினம் இயல்போடு விகற்பே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) உயிரையும் யரழவென்னும் மூன்றொற்றையும் இறுதியாகவுடைய விகுதியுருபினவாய முன்னிலைவினை முன்னும் ஏவல்முன்னும் வரும் வல்லினம் இயல்புடனே விகற்பமாம் உ - று.

எ - டு: உண்டி, தின்றி, உண்டனை, தின்றனை, உண்டாய், தின்றாய்; உண்டனிர், தின்றனிர்: கொற்றா, சாத்தா, தேவா, உண்டான் குமரன், உண்டாள் குமரி, உண்டார் குமரர், ஓதுப புலவர் எனவரும்; பிறவும் இவ்வாறு காண்க என்பர் - இராமாநுச கவிராயர்

பூதா; கொற்றரே, சாத்தரே, தேவரே, பூதரே என முன்னிலை வினைமுன் இயல்பாயின. கொணு, எறி, விடு, ஆய், சேர், தாழ்: கொற்றா, சாத்தா, தேவா, பூதா என ஏவல்முன் இயல்பாயின. விகற்பம் வந்தவழிக் கண்டுகொள்க. நட கொற்றா, நடக்கொற்றா; எய்கொற்றா, எய்க்கொற்றா; ஈர்கொற்றா, ஈர்க்கொற்றா; தாழ் கொற்றா, தாழ்க்கொற்றா என ஏவல்முன் விகற்பித்தன என்று கோடலுமொன்று. இவ்வாறு அருகி வருதலின், இயல்பொடு விகற்பே என விகற்பத்தைப் பிரித்துக் கூறினார்.

மகரவீறு முன்னிலைவினை ஏலாமையின், உதாரணங் காட்டிற்றிலம்.

முன்னிலைவினையென்றார் ஏவலெனவிதந்ததென்னை யெனின்:—முன்னிலைவினையென்பது, தன்மைவினை படர்க்கை வினைகட்கு இனமாகிய முன்னிலைவினையை உணர்த்தும் அல்லது, இனமின்றி முன்னிலையொன்றற்கே உரிய ஏவல்வினையை உணர்த்தாமையினென்க. (கக)

---

## ங. உயிரீற்றுச் சிறப்புப் புணர்ச்சி

### உயிர்முன் உயிர் புணர்தல்

கசுஉ. இ ஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன்இவ் விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்

**எ - னின். உயிரீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப்புணர்ச்சி கூறுவான் தொடங்கி, உயிரீற்றின்முன் உயிர்முதல் வந்து புணரு மாறு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) இகர ஈகார ஐகாரங்களின் வழியே யகரமும், அ ஆ உ ஊ ஒ ஓ ஔ என்னும் இவ்வேழுயிர்களின் வழியே வகரமும், ஏகாரத்தின்வழியே யகரமும் வகரமும், உயிர்முதன்மொழி வந்தால், உடம்படுமெய்யென்று வரும் எ - று.

இருமை என்பது [1]"ஒருமைச் செயலாற்றும் பேதை யெழு மையுந்—தான்புக் கழுந்து மளறு." என்றாற்போலக் குணியைக் குணமாகக் கூறுவதோர் மரபுவழுவமைதி.

---

1. திருக்குறள், அசஅ:

எ - டு : மணியழகிது, தீயெழுந்தது, அவையௌவியம் எனவும்; விளவழகிது, பலாவழகிது, கடுவழகிது, பூவழகிது, சொவ்வழகிது, கோவழகிது, கௌவழகிது எனவும்; [1]"ஏயேயிவ ளொருத்தி பேடியோவென்றார்." சேவழகிது எனவும்; அல்வழிக் கண் கூறிய முறையே உடம்படுமெய் பெற்றன. மணியொளி, விளவடி, மணியையளித்தான் என, வேற்றுமைக்கண் வந்தன. பிறவும் அன்ன.

மாயிருஞாலம் என உரிச்சொல்லாகாரவீற்றின்வழி யகர வுடம்படுமெய் வந்ததென்னையெனின்:—அஃது 'இடையுரி வட சொலி னியம்பிய கொளாதவும்' என்னுஞ் சூத்திரத்தான் அமையு மென்க.

"விண்வத்துக்கொட்கும்" என மெய்யீற்றின்வழியும் உயிர் வரின் உடம்படுமெய் பெறும்"என்பாரும் உளராலோவெனின்:— உயிரீற்றின்முன் உயிர்முதல் வரின் உயிரோடுயிர்க்கு மயக்க மின்மையிற் புணர்ச்சியின்றி விட்டிசைத்து நிற்குமாதலின், உடம் படாத அவ்விரண்டும் உடம்படுதற் பொருட்டு இடையே வரு மெய்யை உடம்படுமெய்யென்பவாகலின், வருமுயிரேறி ஒற்று மைப்பட்டுப் புணர்தற்குரிய மெய்யீற்றின்வழித் தோன்றும் மெய்யை உடம்படுமெய்யென்பது பொருந்தாது. அவ்வகரமெய் தோன்றுதற்கு விதி, வருஞ் சூத்திரத்துட் கூறுப.

உடன்படல் என்பது உடம்படல்என மரீஇயிற்று: [3]"உடம்பா டிலாதவர் வாழ்க்கை" என வருதல் காண்க. உயிரோடுயிர்க்கு மயக்கமின்மையின், வருமுயிர்க்கு உடம்பாக அடுக்குமெய் உடம் படுமெய்யெனப் பொருள் கூறுதலுமொன்று.

இவ்வுடம்படுமெய்களின் தோற்றம் ஏனைத் தோன்றல் விகா ரம்போலாது மயங்காதன மயங்குதற்கு ஆகுபோல வந்தமையின், இப்புணர்ச்சியை இயல்பு புணர்ச்சியென்று கூறுவார் கூற்றும் அமையும் என்பார், உடம்படுமெய் தோன்றும் என்னாது உடம்படு மெய்யென்றாகும் என்றார்.

ஈண்டும் எகர ஈறு ஒழியக் கொள்க. (கஉ)

---

1. சிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், செ : ககo.

2. என்பார், நச்சினார்க்கினியர் ; தொல் - புணர் - சூ. 38. உரை : புள்ளி - சூ. 10. உரை.

3. திருக்குறள், அகo:

விஞச்சுட்டின்முன் நாற்கணமும் புணர்தல்

கசுரு எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே.

எ - னின். 'இ ஈ ஐவழி' என்னுஞ் சூத்திரத்தானும் 'எண்மூ வெழுத்தீற்று' என்னுஞ் சூத்திரத்தானும் எய்திய விதி விலக்கிப், பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) எ என்னும் வினாவிடைச்சொல் முன்னும், அ இ உ என்னும் மூன்று சுட்டிடைச்சொல் முன்னும், உயிரும் யகரமும் வந்தால் வகரமும், ஒழிந்த மெய்கள் வந்தால் அம்மெய்களும், செய்யுட்கண் சுட்டு நீண்டிசைத்த வழி யகரமும் மிகுதல் முறைமையாம் எ - று.

எ - டு: எவ்வணி, எவ்யானை; அவ்வணி, அவ்யானை; இவ்வணி, இவ்யானை; உவ்வணி, உவ்யானை எனவும்; அ, இ, உ: குதிரை, சேனை, தண்டு, படை, ஞாலம், நாடு, மலை, வளை எனவும்; எங்ஙனம், அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம் எனவும்; [1]"ஆயிடைத் தமிழ் கூறுநல் உலகத்து" எனவும், வகரமும், வந்த மெய்களும், யகரமும் முறையே தோன்றியவாறு காண்க. பிறவும் அன்ன.

யகரமும் எய்தின் வவ்வும் என்றமையின் இங்ஙனந் தோன்றிய வகர யகரங்கள் உடம்படுமெய்யல்லவென்பதூஉம், சுட்டு நீளினெனவே நீடல் உடன்பாடென்பதூஉம், நீடல் ஒருதலையன்று என்பதூஉம், யகரந் தோன்றுமெனவே இந்நீட்சி அடி தொடை நோக்கி நீட்டும்வழி நீட்டலன்றென்பதூஉம், யகரமுமென எண்ணின்கண் நின்ற இழிவுசிறப்பும்மையான் யகரத்தோற்றம் உயிர் வரும் வழியன்றிப் பிறவழித் தோன்றாது என்பதூஉம், நெறியென்றமையின் இவ்வாறு நெறிப்பட வருவனவெல்லாங் கோடல் வேண்டும் என்பதூஉம் பெற்றாம்.

ஆவயினான எனச் சுட்டு நீண்டு, பிறவழி யகரந் தோன்றாதாயிற்று.

இவ்வாறு நெறிப்பட வருவன வருமாறு: யாங்ஙனம் என யாவினாமுன் வருமொழி ஙகரம் மிகுந்தது. ஆங்ஙனம், ஈங்ஙனம், ஊங்ஙனம் எனச் சுட்டு நீண்டவழியும் வருமொழி ஙகரம் மிகுந்

1. தொல்காப்பியம், சிறப்புப்பாயிரம்.

தது. ஈது எனவும்; ஆங்கு, ஈங்கு, ஊங்கு எனவும்: ஆண்டு, ஈண்டு எனவும், சுட்டுப்பெயர்ச்சொல் நீண்டன. "விண்ணவத்துக் கொட்கும்" எனவும்; "செல்வழிச்செல்க" எனவும்; "சார்வுழிச் சார்ந்த தகையன்" எனவும் மெய்யீற்று முன் உயிர் வருங்கால் இங்ஙனம் உடம்படுமெய் அன்றெனக் கூறும் வகரந் தோன்றின. பிறவும் அன்ன. (கரு)

## குற்றியலுகரமுன்னுஞ் சில முற்றியலுகரமுன்னும் உயிரும் யகரமும் புணர்தல்

**ககூச.** உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்
யவ்வரின் இய்யாம் முற்றுமற் றொரோவழி.

எ - னின். குற்றியலுகரத்திற்கு 'இ ஈ ஐவழி' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தலும், முற்றிய லுகரத்திற்கு அச்சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) குற்றியலுகரம், உயிர்முதன்மொழி வந்தால், தனக்கு ஆதாரமான மெய் நிற்கத் தான் கெடும்; யகர முதன்மொழி வந்தால், இகரமாகத் திரியும். முற்றிய லுகரமும் அவ்விருவிதியும் பெறும், ஒரோ இடங்களின் எ - று.

எ - டு: நாகரிது, நாகியாது எனவும்: நாகின்வளர்ச்சி, நாகியமன் கொள்ளான், தனுதடி எனவும்; கதவு, செலவு: ..ஙிது, யாது எனவும்; அதனை, இதனை எனவும் இருவழியும் வந்தன. பிறவும் அன்ன.

கெடும் என்றது ஓடும் என்றமையால், குற்றியலுகரம் ஒரோ வழி 'இ ஈ ஐவழி' என்னும் பொதுவிதி பெறுதலுங் கொள்க.

வ - று: 'தன்முக.மாகத் தானழைப் பதுவே,' 'ஆறனொரு மைக் கதுவு மாதுவும்,' என வரும்.

ஆசிரியர் தொல்காப்பியர்: [1]"அவற்றுள், மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்" எனவும்; [2]"குற்றியலுகரமு மற்றென மொழிப" எனவும் கூறிய சூத்திரங்களுள், அற்றென்னுமாட்டேற்

1. தொல்காப்பியம் - எழு. புணரியல். சூ. உ.
2. " " " " ௩.

றிற்கு, மெய்யீறுபோலக் [1]குற்றியலுகரவீறும் புள்ளியொடு நிற்கு மெனப் பொருள்கொள்ளாது, இம்மூன்றாஞ் சூத்திரத்தைப் [2]"புள்ளி யீற்றமு னுயிர்தனித் தியலாது—மெய்யொடு சிவணு மவ்வியல் கெடுத்தே." என்னும் முப்பத்தாறாஞ் சூத்திரத்தோடு மாட்டெறிந்ததாகக், குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங்கொடுத்துக் கெடாது இரண்டுயிரும் ஒருங்கு நிற்குமெனக் கூறிச் [3]சாதிப்பாருமுளர். அவ்வாறு கூறல் மாட்டேற்று இலக்கணமன்றாம். அன்றியும், மெய்யுயிரென்பன உவமவாகு பெயராய் வந்த காரணக்குறியல்லவாக வேண்டும்; அதனால் அஃது அந்நூலாசிரியர் கருத்தன்றாம். இவ்வாறு அந்நூலோடு பொருந்தா உரைக்கோள் பலவுள; அவற்றை அந்நூற் கருத்தாகத் துணிந்து, அந்நூலோடு இந்நூலை மறுதலைப்பட்டதென்று கோடற்க. (௩௭)

---

## ௩. உயிரீற்றுமுன் வல்லினம்

### உயிரீற்றின்முன் வல்லினம் புணர்தல்

௧௬௫. இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
க ச த ப மிகும்வித வாதன மன்னே.

எ - னின். உயிரீற்றின்முன் வல்லினம் புணருமாறு உணர்த்துவான் தொடங்கி, உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்க்கு 'ஆவியரமுன் வன்மை மிகா' என எய்தியதன்மேற் சிறப்புவிதியும், அஃறிணைப்பெயர்க்கும் வினைமுதலியவற்றிற்கும் எய்தாததெய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) இயல்பினானும் விதியினானும் இறுதியாக நின்ற உயிர்களின் முன்னர் வருங் க ச த பக்கள் பெரும்பாலும்[4] மிகும், [5]விதந்து சொல்லாதன எ - று.

---

1. இதனால் இவ்வுரையாசிரியர் குற்றியலுகரம் புள்ளிபெறு மென்னுங் கொள்கையுடையவரென்பது புலப்படும்: "குற்றிய லிகரமுங் குற்றியலுகரமும், மற்றவை தாமே புள்ளி பெறுமே." சங்கயாப்பு

2. தொல்காப்பியம், எழு புணரியல், சூ. ௩௬.

3. சாதிப்பவர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்.

4. மன். என்பது மிகுதிப்பொருள் குறித்த இடைச்சொல்லாதலால் பெரும்பாலுமெனப் பொருளுரைக்கப்பட்டது என்பர் இராமாநுச கவிராயர்.

5. விதந்துசொல்லாதன — எடுத்துச் சொல்லப்படாதன; "விதப்புக்கிளவி வேண்டியது விளக்கும்." யா. கா. சூ. 4. மேற்.

விதியீறுவன, முன்னைய உயிரீறும் மெய்யீறும் ஒழிய உயிரீறாய் நிற்பனவும், யாதானும் ஒருயிர் பின்னர் இறுதிக்கண் தோன்றி நிற்பனவுமாம். விதப்பு ஆவன சிறப்புவிதி.

எ - டு : ஆடூஉக் குறியன், சிறியன், தீயன், பெரியன்; நம்பிக் கொற்றன் எனவும்; சாத்திப்பெண் எனவும்; தாராக்கடிது எனவும்; ஒற்றைக்கை, வட்டக்கல், தாழக்கோல் எனவும்; மூவகைப் பெயர்ப்பதமுன் அல்வழியின் மிக்கன. இவற்றுள், ஒற்றை வட்ட தாழ என்பன விதியீறு. ஆடூஉக்கை, செவி, தலை, புறம், எட்டிப்பூ, [1]காவிதிப்பூ, நம்பிப்பூ எனவும்; விளக்கோடு, கடுக்காய், ஆட்டுக்கால் எனவும்; உயர்திணை அஃறிணைப்பெயர்ப் பதமுன் வேற்றுமைக்கண் மிக்கன. ஆடிக்கொண்டான், ஆடக்கொண்டான், ஆடூஉக்கொண்டான், ஆடெனக்கொண்டான், ஆடக்கொண்டான், உண்பாக்குச் சென்றான், பூத்துக்காய்த்தது, பொள்ளெனப் பரந்தது, சாலப்பகைத்தது எனவும்; இருளின்றிக் கண்டார், பொருளன்றிக்காணார் எனவும்; பலவகைத் தெரிநிலை குறிப்பாய வினையெச்சங்கள்முன் மிக்கன. மற்றைச் சாதி எனவும்; கடிக்கமலம் எனவும்; சொன்றிக் குழிசி எனவும்; கங்கைச்சடை எனவும்; இடைச்சொல் உரிச்சொல் திசைச்சொல் வடசொல்முன் மிக்கன. பிறவும் அன்ன.

விதவாதன பெரும்பாலும் மிகுமெனவே, விதந்தன சிறுபான்மை மிகும் எனவும், விதவாதன சிறுபான்மை மிகாவெனவுங் கூறினாராயிற்று. அவை வருமாறு :—நொக்கொற்றா, துக்கொற்றா, சாத்தா, தேவா, பூதா என்பன 'ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே.' என்று முற்கூறிய விதப்புவிதி பெறாது மிகுந்தன. எனவே, நொ து முன் மூவினமும் மிகுமென்றாராயிற்று. எரி கரை, குழந்தை கை, குழவி கை, [2]"பழமுதிர் சோலை மலைகிழ வோனே" எனவும்; கூப்புகரம், ஈட்டுதனம், நாட்டு புகழ் எனவும்; இருவழியும் பின் விதவாதன மிகாவாயின. பிறவும் அன்ன. (௧௫)

### உயிரீற்றுச் சில மரப்பெயர்முன் வல்லினம் புணர்தல்

௧௬௬. மரப்பெயர் முன்னர் இனமெல் லெழுத்து
வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே.

---

1. காவிதிப்பூ : பாண்டிநாட்டுக் காவிதிப்பட்டத்திற்குரிய பொற்பூ (தொல். அகத். சூ ௩0 ந); 'எட்டிகாவிதி' யென்பன தேய வழக்காகிய சிறப்புப்பெயர் (தொல். தொகை. சூ. ௧௨. ந); "எட்டி காவிதிப்பட்டந்தாங்கிய" (பெருங். உ. ௩. ௧௪௪.)

2. திருமுருகாற்றுப்படை : (௩௧௭.)

எ - னின். உயிரீற்றுச் சில மரப்பெயர்முன் வரும் வல் லெழுத்திற்கு எய்தியது ஒருவழி விலக்கிப் பிறிதுவிதி உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) உயிரீற்று மரப்பெயர்கள்முன், மேலைப் பொதுவிதியான் வல்லெழுத்து மிகாது, வரும் வல்லெழுத் திற்கு இனமான மெல்லெழுத்து மிகப்பெறுவனவுஞ் சிலவுள வேற்றுமைக்கண் எ - று.

பெறுவனவென்னுஞ் சொல் பெறுனவெனத் தொகுத்தல் விகாரமாயிற்று.

எ - டு: விளங்காய், களங்கனி, மாங்கொம்பு, செதிள், தோல், பழம் என வரும். [1]பிறவும் அன்ன.

இனமெல்லெழுத்தும் என்னுமையிற் பொதுவிதி இக்காட்டு ஏலாவென்க. (கக)

---

## ரு. அகரவீற்றுச் சிறப்புவிதி

கசுஎ. செய்யிய என்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரின் எச்சமுற் றாறன் உருபே
அஃறிணைப் பன்மை அம்மமுன் இயல்பே.

எ - னின். உயிரீறுகட்குத் தனித்தனி சிறப்புவிதி கூறுவான் தொடங்கி, அகரவீற்றுச் சொல்லுள் சிலவற்றிற்கு எய்தியது விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் விதந்த அகரவீற்றுச் சொற்கள் ஆறன் முன்னும் வரும் வல்லினம் இயல்பாம் எ - று.

பல்வகை என்பதனை முற்றென்பதனோடும் ஒட்டுக.

பெயரினெச்சமென இன் சாரியை, தவிர்வழி வந்தமையின், விரித்தல் விகாரம்.

---

1. இனி, யாங்கோடு, யாக்கோடு; காயாங்கோடு, காயாக் கோடு; உகாங்கோடு, உகாக்கோடு;—செதிள், தோல், பூ என மெல்லெழுத்தும் வல்லெழுத்தும் பெற்று விகற்பித்து வருதல் உரையிற் கொள்க என்பர் இராமாநுச கவிராயர்.

இதன் முதலிறுதிகளின் அகரவீற்றுச்சொல் வைத்தமையான் இடையனவும் அகரவீற்றவென்பதூஉம், பல்வகை என்றதனான் வினையடி நான்கினும் பிறந்த பெயரெச்ச முற்றென்பதூஉம், முற்றென விதந்தமையின் அஃறிணைப்பன்மை என்றது பெய ரென்பதூஉம் பெற்றாம். [1]வினையடி நான்காவன: இயல்பாகிய வினையடி ஒன்றும் ஏனைப்பெயர் இடை உரி அடியாகப் பிறந்த வினையடி மூன்றுமாம்.

எ - டு: உண்ணிய கொண்டான், சென்றான், தந்தான், போயினான் எனச் செய்யியவென்னும் வினையெச்சமுன் இயல் பாயின. உண்ட, உண்ணாநின்ற, உண்ணாத எனவும்; கடைக் கணித்த, சித்திரித்த, வெளுத்த, சினவிய, கறுவிய, அமரிய எனவும்; திண்ணென்ற, பொன்போன்ற எனவும்; சான்ற, உற்ற எனவும்; குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும் நால்வகைத் தெரிநிலைப் பெயரெச்சமுன்னும் இயல்பாயின. அமர்முகத்த, கடுங்கண்ண, சிறிய, பெரிய, உள, இல, பல, சில எனவும்; பொன்னன்ன எனவும்; கடிய எனவும்; குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும் மூவகைப் பெயரெச்சக் குறிப்பின் முன்னும் இயல்பாயின முற்றிற்கும், பொருள் வேறுபாடன்றிச் சொல் வேறுபாடின்மையின், இவையே காட்டாகக் கொள்க. வாழ்க, வாழிய, கொற்றா, சாத்தா, தேவா, பூதா என வியங்கோள் முற்றின்முன் இயல்பாயின. முற்றுமு ளியல்பாம் என்றமையின், அருத்தாபத்தியான், இவ்வினைமுற்று வினையெசசமாயுங் குறிப்பு முற்று ஈரெச்சமாயும் நின்றவழி வரும் வல்லினம் இயல்பாதலுங் கொள்க.

வ - று: உண்ட கண்டன எனவும், அமர்முகத்த குதிரை எனவும், அமர்முகத்த கலக்கின எனவும் வரும். தன கைகள், செவிகள், தாள்கள், பதங்கள் என ஆறனுருபின்முன் இயல் பாயின. பல குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும்; பல கொடுத்தான், செய்தான், தந்தான், படைத்தான் எனவும் இருவழியும் அஃறிணைப் பன்மைப்பெயர் முன் இயல்பாயின. பிற பெயர்களும் அன்ன. [2]அம்மகொற்றா, சாத்தா, தேவா, பூதா என உரையசையிடைச்சொல்முன் இயல்பாயின.

---

1. இலக்கணக்கொத்து, வினையியல், சூ. ச. (4)

2. இனி உரையிற் கோடலால் அம்ம என்னும் இடைச் சொல் அம்மாகொற்றா என நீளினும் வல்லெழுத்து இயல்பாத லும், குணகடல், குடகடல், வடகடல், வடதலை எனவிதி அகர ஈற்றுப் பெயர்ச்சொல்முன் இயல்பாதலுங் கொள்க என்பர், இராமாநுச கவிராயர்.

ஒருசொல்லையே பலவிடத்துங் காட்டியது என்னையெனின் :- இங்ஙனங் காட்டியவற்றுள் பலவென்னும் ஒருசொல் பெயரெச்சக் குறிப்பாயும், குறிப்பு வினை முற்றாயும், குறிப்புமுற்று ஈரெச்சமாகும் பெயரெச்சக் குறிப்பாயும், வினையெச்சக் குறிப்பாயும், குறிப்புவினையாலணையும் அஃறிணைப்பன்மைப் பெயராயும், பொருளாதி ஆறனுள் பண்புகாரணமாக வரும் அஃறிணைப் பன்மைப் பெயராயும், அறுவகைப்பட்டுப் பொருள் நோக்கம் முதலியவற்றான் இன்னதென்று துணியப்படுமாதலானென்க. பிறசொற்களும் அன்ன. இவ்விகற்பமெல்லாஞ் சொல்லதிகாரத்துள் காண்க. (கஎ)

கசுஅ. வாழிய என்பதன் ஈற்றின் உயிர்மெய்
ஏகலும் உரித்தஃ தேகினும் இயல்பே.

எ - னின். வியங்கோள் முற்றுச்சொற்கு எய்தாதது எய்துவித்தலும், எய்தியவழிப் புணரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) வாழியவென்னும் வியங்கோள்முற்றினது ஈற்றுயிர்மெய் குறைதலுமுரித்து; குறைந்து இகரவீறாய் நின்றாலும், வல்லினம், பொதுவிதியால் மிகாது, சிறப்புவிதியுள் கூறிய இயல்பேயாம் எ - று.

எ - டு: ஆவாழி, அந்தணர்வாழி, படாதிவாழி என ஈற்றுயிர் மெய் குறைந்து வந்தது. வாழி கொற்றா, சாத்தா, தேவா, பூதா எனக் குறைந்தவழியும் வல்லினம் இயல்பாயின.

ஏகலுமுரித்து என முடித்துப் பின்பு அஃது எனச் சுட்டிப் புணர்ச்சிவிதி கூறுதலானும், செய்யுளிறுதிக்கண் வாழி என முடிந்து நிற்றலானும், இது புணர்ச்சிவிகாரமன்று கடைக்குறை என்பதூஉம், இவ்வடிப்பாடாகக் குறைந்தியலுந் தன்மை செய்யிய என்னும் வாய்பாட்டு வாழிய என்னும் வினையெச்சத்திற்கின்மையின் வாழிய என்னும் வியங்கோள் முற்றிற்கே இவ்விகாரம் _றிறென்பதூஉம் பெற்றாம். (கஅ)

கசுஅ. சாவஎன் மொழிஈற் றுயிர்மெய் சாதலும்விதி.

எ - னின். சாவவென்னும் நிலைமொழிக்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்) சாவ என்னுஞ் செயவெனெச்ச வினைச்சொல்லினது ஈற்றுயிர்மெய் கெட்டுப் புணர்தலும் விதியாம் எ - று.

எ - டு: சாக்குத்தினன் என வரும்.

இப்புணர்ச்சி சாவக்குத்தினன் என்னும் புணர்ச்சிபோல் சிறந்ததன்மையின் சாதலும் என்றும், ஒரோவழி அருகி வருத லின் விதி என்றுங் கூறினர். (கக)

கஎ0. பலசில எனும்இவை தம்முன் தாம்வரின்
இயல்பும் மிகலும் அகரம் ஏக
லகரம் றகரம் ஆகலும் பிறவரின்
அகரம் விகற்பம் ஆகலும் உளபிற.

எ - னின். வருமொழிக்க எய்தியது இகந்துபடாமைக் காத்த லும், அதன்மேற் சிறப்புவிதியும், நிலைமொழிக்க எய்தாதது எய்து வித்தலும் நுதலிற்று. இதனுள் மிகுதல் 'செய்யிய' என்னுஞ் சூத்தி ரத்தான் விலக்கி ஈண்டு விதித்தமையிற் சிறப்புவிதியாயிற்று.

(இ - ள்.) பல சில என்னும் இவ்விருசொல்லும், தம்முன்னர்த் தாம் வருமாயின், இயல்பாதலும், மிகுதலும் அகரங்கெட லகரம் றகரமாகலும், இவற்றின்முன் பிற மொழிகளுள் யாதானுமொன்று வரின், அகரம் நிற்றலும், நீங்கலும் உளவாம் எ - று.

எ - டு: பலபல, சிலசில என இயல்பாயின. பலப்பல, சிலச் சில என மிக்கன. இம்மிகுதி இயல்புபோற் பயின்று வாராமை யின், வல்லினம் விகற்பமாதலும் என்னாது இயல்பும் மிகலும் என்றார். பற்பல, சிற்சில என அகரமேக லகரம் றகரமாயின. பலகலை, பல்கலை; பலசாலை, பல்சாலை; பல தாழிசை பஃறாழிசை, பல படை, பல்படை; பல ஞானம், பன்ஞானம்; பலநாள், பன்னாள்; பலமணி, பன்மணி; பலவளை, பல்வளை; பல யானை, பல்யானை; பலஅணி, பல்லணி; பலவாயம், பல்லாயம் எனப் பிறவரின் அகரம் விகற்பமாயின சில என்பதற்கும் இவ்வாறே கொள்க.

பிற என்ற மிகையானே, பல்பல, சில்சில என அகரமேக லகரம் றகரமாகாது அருகி வருதலும், பிற வல்லினமொழி வரின் லகரம் றகரத்தோடு உறழும்வழி உறழாது இயல்பாதலும், அகர வீற்றுப் புணர்ச்சியுள் அமையாதொழிந்தன உளவேல் அவையுங் கொள்க.

அகரம் நீங்க நின்ற பல்லாயமுதலியன, நன்மை வன்மை மென்மை அன்மை இன்மை என்பனபோல, லகர மெய்யீற்றுப்

பண்படியாய் நின்று வருமொழியோடு புணர்ந்தனவன்றோ, அவற்றை அகரவீற்றனவாக வைத்துப் புணர்த்தது என்னை யெனின்:—அப்பண்படி, பன்மை சின்மை எனப் பகுதிப்பொருள் விகுதியோடேனும், பலர் பல சிலர் சில என விகுதிப்பொருள் விகுதியோடேனும் அன்றித், தனித்து நில்லா ஒற்றுமை நயம் பற்றி யென்க.

இஃது ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல் என்னும் உத்திக்கு இனம்.

அகரம் விகற்பமாம் என்ற துணையானே பல் சில் எனப் பண்படி தோன்றினமையின், இவ்விதி அல்வழிக்கே என்பது கூறுதே அமையுமென்க. (உ0)

## கூ. ஆகாரவீற்றுச் சிறப்புவிதி

### களக. அல்வழி ஆமா மியாமுற்று முன்மிகா.

எ - னின். ஆகாரவீற்றுச் சொல்லுள் சிலவற்றிற்கு எய்தி யது ஒருமருங்கு விலக்குதல் நுதலிற்று.

(இ - ள்) அல்வழிக்கண் ஆவும் மாவுமாகிய இரு பெயரும், மியாவென்னும் முன்னிலையசை இடைச்சொல் லும், ஆகாரவீற்று அஃறிணைப்பன்மை எதிர்மறை முற்று வினையும் நிற்க, இவற்றின்முன் வரும் வல்லினம் மிகா எ - று.

எ - டு: ஆ குறிது, மா குறிது, சிறிது, தீது, பெரிது என வும்; கேண்மியா கொற்றா, சாத்தா, தேவா, பூதா எனவும்; உண்ணு குதிரைகள், தின்னு குதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் எனவும் வரும்.

ஆமா என்ற துணையானே காட்டுஆ எனவும் பொருள்தர இரட்டுற மொழிந்தமையான், ஆமாகுறிது, சிறிது, தீது, பெரிது என மிகாமையும், முற்றுமுன் மிகா என்றமையான் அருத்தா பத்தியான் அவ்வினையாலணையும் பெயர்முன் உண்ணுகுதிரைகள், தின்னுகுதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் என மிகாமையும், அவ்வினைமுற்று வினையெச்சமாய் அவற்றின்முன் உண்ணுகிடந்தன, தின்னுகிடந்தன, சென்றன, தந்தன, போயின என மிகாமையுங் கொள்க. உண்ணுக்குதிரைகள், உண்ணுக்

கிடந்தன எனப் பொதுவிதியான் மிகுமேல், எதிர்மறைப் பெயரெச்சமுஞ் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமுமாம் என்க. (உக)

**கஎஉ. குறியதன் கீழ்ஆக் குறுகலும் அதனோ**
**டுகரம் ஏற்றலும் இயல்புமாம் தூக்கின்.**

எ - னின். ஆகாரவீற்றுள் சில சொல்லினது இறுதிக்கு எய்தாதன எய்துவித்தலும், அவ்வழி வருவதோர் ஐயம் அறுத்த லும் நுதலிற்று.

(இ - ள்.) குற்றெழுத்தின்கீழ் நின்ற ஆகாரங் குறுக லும், அக்குறுகலுடனே உகரம் பெறுதலும், அவ்விரண்டு மின்றித் தன்னியல்பின் நிற்றலுமாகிய மூன்றுவிதியும் பெறுஞ் செய்யுட்கண் எ - று.

எ - டு: [1]"சுறமறிவன துறையெல்லாம்," "நிலவிரி கானல் வாய்" எனவும்; [2]"இறவுப் புறத்தன்ன," [3]"சுறவுக்கோட் டன்ன," "மருவினென் செய்புமோ நிலவு" எனவும்; [4]"நிலா வணங்கு வெண்மணன்மே லின்று," [5]"நெடிய கழியு மிரா" எனவும் முறையே காண்க.

ஈண்டு இயல்பு ஐயமறுத்தற்கு உரைத்தாரென்க.

இம்மூன்றுமாந் தூக்கின் எனவே, வழக்கில் இரண்டும் ஒன்றும் ஆமென்றாராயிற்று.

வ - று: உதித்தது நிலவு, நிலா; கண்டேன் கனவு, கனா எனக் குறுகுதலோடு உகரமேற்றலுந் தன்னியல்புமாகிய இரண்டும் வந்தன. தரா, மிடா எனத் தன்னியல்பு ஒன்றுமாய் நின்றன.

இவ்விகாரங்கள் அல்வழி வேற்றுமைப் புணர்ச்சியான் வந்தன வல்லவென்று ஐயமறுத்தற்குக் கூறப்பட்டனவென்க. இவ்வாறு வருவனவெல்லாம் அன்ன. (உஉ)

1. யாப். வி. மேற்கோள். 2, 3. நற்: கக.
4. யாப். வி. மேற்கோள். 5. திருக்குறள். கககக.

## எ. இகர ஈற்றுச் சிறப்புவிதி

**கஎங.** அன்றி இன்றிஎன் வினைஎஞ் சிகரம்
தொடர்பினுள் உகரம் ஆய்வரின் இயல்பே.

எ - னின். இகரவீற்றுச் சொற்களுள், அன்றி இன்றியென்னும் வினையெச்சக்குறிப்பிற்ந்த எய்தாதது எய்துவித்தலும் எய்திய வழிப் புணரும் வல்லினத்திற்ந்த எய்தியது விலக்கலும் நுதலிற்று.

(இ - ள்.) *அன்றி இன்றி யென்னும் வினையெச்சக் குறிப்புச் சொற்களினது ஈற்றிகரஞ் செய்யுட்கண் உகர மாய் வருமாயின், க ச த பக்கள் பொதுவிதியான் மிகாது இயல்பாம் எ - று.*

*என் என்னும் வினைத்தொகையும், எஞ்சு என்னும் வினைத் தொகையும், சொல் என்னும் முதற்பெயரோடு முடியாது அதனகத்து இகரமென்னுஞ் சினைப்பெயரோடு முடிந்தன.*

*இவ்வாறு [1]உடம்பொடு புணர்த்திக் கூறினமையின் இதற்கிதுவே விதியென்பதூஉம், உகரமாய் வரின் எனவே உகரமாதல் உடன்பாடென்பதூஉம், அஃது ஒருதலையன்றென்பதூஉம் பெற்றாம்.*

எ - டு:

[2]*"நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்*
*பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்*
*வறிது பெயர்குந ரல்லர் நெறிகொளப்*
*பாடான் றிரங்கு மருவிப்*
*பீடுகெழு மலையற் பாடி யோரே."*

*எனவும்; "உப்பின்று, புற்கை யுண்கமா கொற்கை யோனே." எனவும் வரும். பிறவும் அன்ன.* (உ௩)

**கஎச.** உரிவரின் நாழியின் ஈற்றுயிர் மெய்கெட
மருவும் டகரம் உரியின் வழியே
யகரவுயிர் மெய்யாம் ஏற்பன வரினே.

எ - னின். எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

---

*(பாடம்)* 1. *உடம்படுபுணர்த்தி.*

2. *புறநானூறு, கஉச.*

(இ - ள்.) உரி என்னும் அளவுப்பெயர் வரின், நாழி என்னும் அளவுப்பெயரினது ஈற்றுயிர்மெய் கெட, அவ்வழி டகரவொற்று வரும். உரி என்னும் அளவுப்பெயரின் பின் யகரவுயிர்மெய் வரும், அவ்வுயிர்மெய் வருதற்கு ஏற்ற வருமொழிகள் வருமாயின் எ - று.

எ - டு: [1]நாடுரி எனவும்; உரியவுப்பு, உரியபயறு, உரிய மிளகு, உரியவரகு எனவும் வரும்.

ஏற்பன வரின் எனவே, ஏலாதன வரின் உரியரிசி, உரி யாழாக்கு, உரியெண்ணெய் என இச்சிறப்புவிதி பெறாது பொது விதியே பெறுதல்கொள்க. நாடுரி என்பது நாவுரி என இக் காலத்து மரீஇயிற்று. பொதுவிதியான் வரும் உடம்படுமெய்யை இச்சிறப்புவிதி விலக்கினமையின், நாழியுரி என்பது இலக்கணம் அன்றென்க. (உச)

கஎடு. சுவைப்புளி முன்னின மென்மையும் தோன்றும்.

எ - னின். எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுத

(இ - ள்.) புளி என்னும் மாமும் பழமுமன்றி, அறு சுவையுள் ஒன்றை உணர்த்தும் பெயர்முன், வரும் வல்லினம் மிகுதலேயன்றி, அவற்றிற்கினமாய மெல்லினமும் ஒரோவழி மிகும் எ - று.

எ - டு: புளிங்கறி, சோறு, தயிர், பாளிதம் என வரும். பல சுவையும் உடைத்தேனும் மிகுதிபற்றிப் புளிப்பாகிய கறி எனவும் புளிப்பையுடைய கறி எனவும் விரித்தலின், இருவழிக்கும் இவையே காட்டாமென்க.

மென்மையும் என்ற இறந்ததுதழீஇய இழிவு சிறப்பும்மை யாற் புளிக்கறி எனப் பொதுவிதியான் வரும் வல்லெழுத்துப் பேறே சிறப்புடைத்தென்க. (உடு)

---

1. இது தென்பாண்டிநாட்டில் 'நாவுரி' என்று வழங்குகின்றது. உரி - அரைநாழி. நாழியுரியென்பது சிலாசாசனங்களில் சிறுபான்மையாகக் காணப்படுகிறது.

## ௮. இகர ஐகார ஈற்றுச் சிறப்புவிதி

களசு. அல்வழி இஐம் முன்னர் ஆயின்
இயல்பும் மிகலும் விகற்பமும் ஆகும்.

எ - னின். இகர ஐகாரவீற்று அஃறிணைப்பெயர்முன் வரும் வல்லினத்திற்கு ஒருவழி எய்தியது விலக்கலும், எய்தியது இகந்து படாமைக் காத்தலும், எய்தியது விலக்கலுடன் விலக்காமையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இகர ஐகாரவீற்று அஃறிணைப் பெயர்முன், வல்லினம் அல்வழிக்கண் வருமாயின் இயல்பாயும், பொது விதியான் மிகுந்தும் ஒன்றற்கே ஒருகால் மிகாதும் ஒருகால் மிகுந்தும், புணரும் எ - று.

இவ்வீற்று உயர்திணைப்பெயர் பொதுப்பெயர் வினைகட்குப் பொதுச் சூத்திரங்களான் இம்மூன்று விதியும் அமைந்து கிடந்தமையின் இச்சூத்திரத்தாற் கூறுதன்மிகுதியொன்றுமே அமைந்து கிடந்த அஃறிணைப்பெயர்க்கென்பது பெற்றாம்.

ஒப்பின் முடித்தலான் ஐகாரவீறும் உடன் கூறினர்.

எ - டு: பருத்தி, ஒதி, யானை, குதிரை, குறிது, சிறிது, தீது, பெரிது என இயல்பாயின. கிளிகுறிது, கிளிக்குறிது, தினைகுறிது, தினைக்குறிது என விகற்பித்தன. பிறவும் அன்ன.

மிகுதி எய்தியது இகந்துபடாமைக் கூறினமையிற் காட்டிற்றிலம். (உசு)

---

## சு. ஈகார ஈற்றுச் சிறப்புவிதி

களஎ. ஆமுன் பகரவீ அனைத்தும்வரக் குறுகும்
மேலன அல்வழி இயல்பா கும்மே.

எ - னின். தொடர்மொழியுள் பின்னின்ற இடக்கர்ச்சொல் லினது ஈற்று ஈகாரத்திற்கு எய்தாதது எய்துவித்தலும், எய்திய வழி அதன்முன் வரும் வல்லினத்திற்கு மேலைச் சூத்திரத்தான் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) ஆ என்னும் பெயர்முன்னின்ற பகர ஈகாரம், இருவழியும் நாற்கணங்களும் வரின் குறுகும்;

குறுகி விதி இகர ஈறாக நின்ற அதன்மேல் வரும் வல்லினம், அல்வழிக்கண் மேலைச் சூத்திரத்துள் கூறிய விதி மூன்றனுள் இயல்பைப் பெறும் எ - று.

குறுகுதற்குக் காரணம் அனைத்தும் வருதலேயன்றி மேல் நின்ற ஆவுமாம் என்பார், ஆமுன் என்றார்.

பகரவ் என்றது இடக்கரடக்கல். வருஞ் சூத்திரத்துள் பவ்வீயும் அது.

ஆ என்னுஞ் சொல்லும் நாற்கணத்துள் ஒன்று முன்னும் பின்னுந் தொடராதேல் குறுகாதென்பார், வரக்குறுகும் என்றார்.

இருமொழியை நிலைமொழியாக நிறீஇப் புணர்த்தமையான் வரும் விதி இகர ஈறுதலின், எய்தியது இகந்துபடாமை இயல்பாகும் என்றார்.

ஆகும்மே என்றது விரித்தல் விகாரம்.

எ - டு: ஆப்பியரிது, ஆப்பி குளிரும், ஆப்பி நன்று, ஆப்பி வலிது எனவும்: ஆப்பி யருமை, ஆப்பிக் குளிர்ச்சி, ஆப்பி நன்மை, ஆப்பி வன்மை எனவும்; இருவழியும் ஈகாரங் குறுகுதலும் அல்வழிக்கண் வல்லின இயல்பு இகந்துபடாமையுங் காண்க. (உஎ)

கஎஅ. பவ்வீ நீமீ முன்னர் அல்வழி
இயல்பாம் வலிமேலி மிகலுமாம் மீக்கே.

எ - னின். ஈகாரவீற்று இடக்கர்ப் பெயர்க்கும் நீ என்னும் பெயர்க்கும் மீ என்னும் பெயர்க்கும் முன்னர் வரும் வல்லினத்திற்கு ஒருவழி 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கலும், இவற்றுள் மீ என்பதன்முன் வரும் வல்லினத்திற்கு அச்சூத்திரத்தான் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும், எய்தியது விலக்கிப் பிறிதுவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பகரவொற்றை ஊர்ந்து நின்ற ஈகாரவீற்று இடக்கர்ப்பெயரும், நீ என்னும் முன்னிலையொருமைப் பொதுப்பெயரும், மீ என்னும் மேலாய பண்பையும் அப்பண்பாகுபெயராய் மேலாய இடம் முதலியவற்றையும் உணர்த்தி நிற்கும் பலபொருளொரு சொல்லும் நிற்க, இவற்றின்முன் வரும் வல்லினம் அல்வழிக்கண் இயல்பாம். இங்ஙனம் புணரும் மீ என்னுஞ் சொற்குமுன், அல்வழிக்

கண் வல்லெழுத்து மிகலுமாம், மெல்லெழுத்து மிகலுமாம் எ - று.

எ - டு: பீ குறிது, சிறிது தீது, பெரிது எனவும்; நீ குறியை, சிறியை, தீயை, பெரியை எனவும்; மீகண் எனவும் இயல்பாயின. மீக்கூற்று, மீக்கோள் என எய்தியது இகந்துபடாமை மிக்கது. மீந்தோல் என மெலி மிகுந்தது. பிறவும் ஏற்றபெற்றி வருவன ௳ வேற் கொள்க.

மீகண் என்பது, கண்ணினது மேலிடமெனப் பொருள் தந்து நிற்குமேனும், ஆறனுருபின் பயனிலையாகும் மீ என்னும் வரு மொழி நிலைமொழியாய் நின்று வல்லெழுத்து மிகாது புணர்ந் தமையின், இலக்கணப்போலியாய், அல்வழியாயிற்று. மீக்கூற்று என்பது புகழ்; அது, மேலாயசொல்லாற் பிறந்த புகழ் என்னும் மேம்பாடெனப் பொருள் தந்து நிற்றலின் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

மீக்கோள் என்பது மேற்போர்வை: அது யாக்கையின்மேல் கொள்ளுதலையுடைய போர்வை எனப் பொருள்தந்து நிற்றலின் ஏழாம்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை; ஈண்டு மீ என்றது, இடப்பொருளோடு ஏழாம் வேற்றுமையுருபின் பொருள்பட நின்றதேனும், கண்ணெனுருபு வேண்டாமையின் வேற்றுமைத் தொகையாயிற்று. மீந்தோல் என்பது மேற்றோல்; அது மேலாய தோலெனப் பொருள்தந்து நிற்றலின் பண்புத்தொகை: இஃது இக்காலத்துப் பீந்தோல் என ம...

நீ என்பதன்முன் வல்லினம் இயல்பாதல், 'பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்' என்னுஞ் சூத்திரத்தான் அமையாதோ வெனின்:—விகாரமொழியன்றி அல்வழிக்கண் ணும் வேற்றுமைக்கண்ணும் ஆவி ய ரக்களின் ஒற்றீற்றதாய் நின்று புணரும் பொதுப்பெயர்க்கே வன்மை மிகாவென இரு வழிக்குங் கூறியது அமையுமன்றி, அல்வழிக்கண் நீ என உயிரீறு யும் வேற்றுமைக்கண் நின் என நெடில் குறுகி னகரவொற்றீறும் விகாரப்பட்டு நிற்கும் இப்பொதுப்பெயர்க்கு அவ்விதி அமையா தென்க.

(உஅ)

## கo. முற்றுகர ஈற்றுச் சிறப்புவிதி

களகூ. மூன்று மருபெண் வினைத்தொகை சுட்டீ
றாகும் உகரம் முன்னர் இயல்பாம்.

எ - னின் முற்றுகரவீற்றுள் சிலவற்றின்முன் வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) முற்றுகரவீற்று மூன்றும் உருபே, ஆறும் உருபே, இயல்பாயும் விகாரமாயும் வரும் எண்ணே, வினைத்தொகையே, சுட்டுப்பெயரே என்னும் இவற்றின் முன் வரும் வல்லினம் இயல்பாம் எ - று.

மூன்றுறருபு என்புழி ஆம் என்னுஞ் சாரியை தொக்கன.

எ - டு: சாத்தனொடு கொண்டான், சென்றான், தந்தான், போயினான் எனவும்; சாத்தனது கை, செவி, தலை, புறம் எனவும்; எழு, ஒரு, இரு, அறு, கை, செவி, தலை, புறம் எனவும்; அடு களிறு, சேனை, தானை, படை எனவும்; அது, இது, உது, குறிது, சிறிது, தீது, பெரிது எனவும்; கண்டான், செகுத்தான், தந்தான், படைத்தான் எனவும் வரும்.

உது காண், உதுக்காண் என இயல்பாயும் விகாரமாயும் வரப் பெறுமாலோவெனின்:—அஃது 'இயல்பின் விகாரமும்' என்னுஞ் சூத்திரத்து 'அன்ன பிறவும்' என்பதனான் அமையுமென்க. (உக)

கஅo. அதுமுன் வருமன் றான்றும் தூக்கின்.

எ - னின். அது என்னுஞ் சுட்டுப்பெயர் முன் வரும் அன்று என்னுஞ் சொற்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அது என்னுஞ் சுட்டுப்பெயர்முன் வரும் அன்று என்னும் வினைக்குறிப்புச் சொல் முதல் நீளுஞ் செய்யுளகத்து எ - று.

எ - டு: அதான்று என வரும்.

ஆன்றேயாம் என இயல்பை விலக்காமையின், அதுவன்று அதன்று என வருவனவுங் கொள்க. அதுமுன் வருமன்று ஆன்றுமென விதந்தமையான், ஏனை இது உது முன் வரும் அன்று ஆன்று ஆகாதென்பது பெற்றாம். (உo)

## கக. குற்றுகர ஈற்றுச் சிறப்புவிதி

### கஎக. வன்றொடர் அல்லன முன்மிகா அல்வழி.

எ - னின். குற்றுகரவீற்றுள் சிலவற்றிற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது ஒருவழி விலக்குதல் நுதலிற்று.

(இ - ள்.) வன்றொடரொழிந்த ஐந்துதொடர்க் குற்றுகரவீற்றின் முன்னும் வரும் வல்லினம் மிகா அல்வழிக்கண் எ - று.

எ - டு: நாகு, எஃகு, வரகு, குரங்கு, தெள்கு, கடிது, சிறிது, தீது, பெரிது எனவும்; எஃகுகால், அஃகுபிணி, பொருது சென்றான், அறிந்து தந்தான், எய்து கொன்றான் எனவும் வரும். பிறவும் அன்ன. (நக)

### கஎஉ. இடைத்தொடர் ஆய்தத் தொடரொற் றிடையின் மிகாநெடில் உயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இடைத்தொடர் முன்னும், ஆய்தத்தொடர் முன்னும், ஒற்றிடையே மிகாத நெடிற்றொடர் முன்னும், உயிர்த்தொடர் முன்னும் வரும் வல்லினம் மிகா வேற்றுமைக்கண் எ - று.

### சிவஞானமுனிவர் விளக்கம்

எ - டு: [1]தெள்கு கால், சிறை, தலை, புறம் எனவும்; எஃகு கடுமை, சிறுமை, தீமை, பெருமை எனவும்; நாகு கால், செவி, தலை, புறம் எனவும்; வரகு, கதிர், சோறு, தாள், பதர் எனவும் வரும்.

ஒற்றிடையின்மிகா என்பதனை உயிர்த்தொடர் என்பதனோடுங் கூட்டுக.

---

1. தெள்கின்கடுமை, எஃகின்கடுமை எனச் சாரியைகூட்டி வல்லெழுத்து மிகாமைக்கு உதாரணங் காட்டுவாருமுளர்; அது கூடாமைக்கு அவர் காட்டிய வரகு கதிர் என்னும் உதாரணமே சான்றாதல் உணர்க என்பர், இராமாநுச கவிராயர்.

ஒற்றிடையின் மிகும் அவ்விரு குற்றுகரங்களும் வருஞ் சூத்திரத் தாற் கூறுப. அவற்றிற்கு முன்வரும் வல்லினமிகுமென் றுணர்க.

[1]"ஈரெழுத்து மொழியு முயிர்த்தொடர் மொழியும்
வேற்றுமை யாயி னொற்றிடை யினமிகத்
தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி."

[2]"ஒற்றிடை யினமிகா மொழியுமா ருளவே
யத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே."

[3]"இடையொற்றுத் தொடரு மாய்தத் தொடரு
நடையா யியல வென்மனார் புலவர்."

என்றார் ஆசிரியர் தொல்காப்பியருமென்க. (ருஉ)

**கஅரு. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.**

எ - னின். மேலை நிலைமொழிக்கு ஒரு புறனடையாய் எய்தா தது எய்துவித்தலும், வருமொழிக்கு முதல் உயிரேல் இந்நிலை மொழிக்கு 'உயிர்வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் [4]எய்தி யதன்மேற் சிறப்பு விதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நெடிற்றொடர்க் குற்றுகரவீற்று மொழிக ளுள்ளும், உயிர்த்தொடர்க்குற்றுகரவீற்று மொழிகளுள் ளும், அவ்வுகரப் பற்றுக்கோடாகிய வல்லெழுத்து ஆற னுள், டகார றகாரமான இரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டும் எ - று.

குற்றுகரங்கள் என்னும் எழுத்துக் குறிப்பு அம்மொழிகளை உணர்த்தி நின்றது. வருமொழி வரையாமையின், நாற்கணமுங் கொள்க.

1. தொல். எழு. குற்றியலுகரப் புணரியல். சூ. சு.
2. ,, ,, ,, சூ. எ.
3. ,, ,, ,, சூ. அ.
4. "வருமொழிக்கு முதல் உயிரேல் இந்நிலைமொழிக்கு 'உயிர்வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியும்" என்பது புத்தம்புத்துரை.

எ - டு: ஆட்டுக்கால், பாற்றுக்கால், முருட்டுக்கால், முயிற்றுக்கால், செவி, தலை, புறம், ஞாற்சி, நிறம், மயிர், யாப்பு, வன்மை, அடி என வரும்.

இவ்விரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டுமெனவே, சிறுபான்மை வேற்றுமைக்கண் இரட்டாமையும், சிறுபான்மை அல்வழிக்கண் இரட்டுதலும், சிறுபான்மை பிறவொற்றிரட்டுதலுங் கொள்க.

வ - று: [1]"காவிரி புரக்கு நாடுகிழ வோனே," [2]"காடக மிறந்தார்க்கே யோடுமென் மனனே காண்," [3]"கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை." என வேற்றுமைக்கண் இரட்டாவாயின. காட்டரண், களிற்றியானை என அல்வழிக்கண் இரட்டின. [4]வெருக்குக் கண் வெங்கருனை, எருத்துக்கால் எனவும்; எருத்துமாடு எனவும்; இருவழியும் பிறவொற்றிரட்டின. (௩௩)

கஅச. மென்றொடர் மொழியுள் சிலவேற் றுமையில்
தம்மின வன்றொடர் ஆகா மன்னே.

எ - னின். மென்றொடர்க் குற்றுகர மொழிகளுள் சில நிலைமொழிக்கு மூவினமும் வரின் [5]எதிர்மறைமுகத்தான் எய்தாதது எய்துவித்தலும், உயிர்வரின் அவ்வெதிர்மறை முகத்தான் எய்திய தன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மென்றொடர்க் குற்றுகரமொழிகளுள் சில, வேற்றுமைக்கண் தமக்கு இனமான வன்றொடராதலை ஒழிந்தன பெரும்பால எ - று.

சில என்னும் எழுவாய், ஆகா என்னும் எதிர்மறைவினையாலணையும் பெயரகத்து முதனிலையோடு முடிந்தது.

வருமொழி வரையாமையின், நாற்கணமுங் கொள்க.

எ - டு: மருத்துப்பை, சுருப்புநாண், கருப்புவில், கற்று என வரும்

---

1. பொருந: உசஅ.
2. யாப். வி. சூ. கக. மேற்கோள். 3. புறநா - கடவுள்.
4. நாலடி: உகu.
5. "மூவினமும் வரின் எதிர்மறை முகத்தான் எய்தாததெய்துவித்தலும், உயிர்வரின் அவ்வெதிர்மறை முகத்தான் எய்தியதன்மேற் சிறப்பு விதியும்" என்பது புத்தம்புத்துரை. எதிர்மறைமுகம்: இதனை வயதிரேகமென்பர் வடநூலார்.

இவ்வாறு சில வருதலையும் எதிர்மறை முகத்தாற் கூறினமையின், வழக்கின்கண்ணுஞ் சான்றோர் செய்யுட்கண்ணும் ஏற்ற பெற்றி கொள்க. வண்டுக்கால், பந்துத் திரட்சி முதலியன வெல்லாம் வன்றொடராகாதனவென்க.

சில வன்றொடராம் எனவே ஆகாதன பலவென்பது தாமே போதரவும், மன்னே என்ற மிகையானே, எற்புடம்பு, அற்புத்தளை, குரக்குமனம் என அல்வழிக்கண் அருகி வன்றொடராதலுங் கொள்க. (௩௪)

கசரு. ஐயீற் றுடைக்குற் றுகரமும் உளவே.

எ - னின். இதுவும் மேலை நிலைமொழிக்கு எய்தாதது எய்துவித்தலும் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐகாரச்சாரியையை இறுதியிலே பெற்று வரும் மென்றொடர்க்குற்றுகரமொழிகளுஞ் சிலவுள எ-று.

மேலைச் சூத்திரத்தைச் சார வைத்தமையான், இதுவும் மென்றொடர் என்பது பெற்றாம். வருமொழி வரையாமையின், நாற்கணமுங் கொள்க.

எ - டு: பண்டைக்காலம், இற்றைநாள் எனவும்; அற்றைக் கூலி, இற்றை நலம் எனவும் வரும். பிறவும் அன்ன.

மேலைச் சூத்திரத்தைச் சார வைத்தாரேனும், ஐயீற்றுடைக் குற்றுகரம் எனப் பொதுப்படக் கூறினமையின், நேற்றைப் பொழுது எனப் பிற தொடர்கள் ஐகாரம் பெறுதலும், ஐயீற் றுடைக் குற்றுகரம் என உடைமையாக்கிக் கூறினமையின் வருமொழிப் புணர்ச்சியானன்றி ஒற்றை இரட்டை வேட்டை என ஒருமொழியாய் நின்று ஐகாரம் பெறுதலும், ஈராட்டை மூவாட்டை எனத் தொடர்மொழியாய் நின்று ஐகாரம் பெறுதலுங் கொள்க. (௩௫)

கசசு. திசையொடு திசையும் பிறவும் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வோ றழிய நீங்கலும்
றகரம் னலவாத் திரிதலும் ஆம்பிற.

எ - னின். குற்றுகரவீற்றுத் திசைப்பெயர்க்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) திசைச் சொல்லோடு திசைச் சொல்லும் பிறசொல்லும் புணருமிடத்து, நிலைமொழி ஈற்றினின்ற

உயிர்மெய்யும் அதன்மேல் நின்ற ககரவொற்றுங் கெடுத லும், அங்ஙனம் நின்ற றகரவொற்று னகரவொற்றாயும் லகரவொற்றாயுந் திரிதலுமாம் எ - று.

எ - டு: வடகிழக்கு, வடமேற்கு, வடதிசை, வடமலை, வட வேங்கடம், தென்கிழக்கு, தென்மேற்கு, தென்குமரி, தென்வீதி, தென்மலை, மேல்பால், மேனாடு, குடதிசை, குடநாடு, குணகடல், குணபால் எனவரும்.

பிறவென்றமையானே மேற்றிசை மேலைத்திசை, கீழ்த் திசை கீழைத்திசை, கீழ்மேற்றென்வடல் எனவும்; கிழக்கு மேற்குத் தெற்கு வடக்கு, வடக்கூர், தெற்கூர், வடக்குமலை, தெற்குமலை என இங்ஙனம் காட்டிய விகாரமின்றியும் வருமென வும் இவ்விதியெல்லாம் ஏற்றபெற்றிகோடல் வேண்டுமெனவுங் கொள்க.

வடகிழக்கென்பது வடக்குங் கிழக்கும் ஆயதோர் கோணம் என உம்மைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. வடதிசை என்பது வடக்காய திசையெனப் பண்புத்தொகை. வடமலை என்பது வடக்கின்கண் மலை என ஏழாம்வேற்றுமைத் தொகை. கீழ்மேற்றென்வடல், கிழக்கு மேற்குத் தெற்கு வடக்கு என்பன உம்மைத்தொகை. பிறவும் அன்ன. (௩௬)

௧௮௭. [1]தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடும் காய்வரின்

எ - னின். தெங்கு என்னும் பெயர்க்கு எய்தாதது எய்து வித்தல் நுதலிற்று.

(இ - ள்) காய் என்னுஞ்சொல் வருமாயின், தெங்கு என்னும் நிலைமொழி முதல் நீண்டு ஈற்றுயிர்மெய் கெடும் எ - று.

ஈறு கெடும் என்றமையான், முதல் நீளும் என்பது பெற்றாம்.

எ - டு: தேங்காய் என வரும்.

தெங்கு நீண்டு ஈற்றுயிர்மெய் கெட்டே புணரும் என இயல்பை விலக்காமையின், தெங்கங்காய் என வரு முடிபுங் கொள்க. (௩௭)

1. தேங்காய் முதலிய சொற்களைப் புதிதாக விதித்த வென்பர் இலக்கணக்கொத்து நூலார்.

கஓஅ. எண்ணிறை அளவும் பிறவும் எய்தின்
ஒன்று முதலெட் டீறும் எண்ணுள்
முதலீ ரெண்முதல் நீளும் மூன்று
றேழ்குறு கும்மா றேழல் லவற்றின்
ஈற்றுயிர் மெய்யும் ஏழன் உயிரும்
ஏகும் ஏற்புழி என்மனார் புலவர்.

எ - னின். ஒன்று முதல் எட்டீறும் எண்ணுப்பெயர்க்கு, உயிர்வரின் எய்தியதன்மேற் சிறப்புவிதியும், மெய் வரின் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) எண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிற பெயரும் வரின், நிலைமொழியாக நின்ற ஒன்று முதல் எட்டீறும் எண்களுள், முதற்கண்ணவாய ஒன்றிரண்டென்னும் இரண்டெண்ணும் முதல் நீளும்; மூன்றும் ஆறும் ஏழும் முதல் குறுகும்; ஆறும் ஏழுமல்லாத ஆறெண்களின் ஈற்றுயிர் மெய்யும் ஏழென்னும் எண்ணின் ஈற்றுயிருங் கெடும், ஏற்குமிடங்களின் என்று சொல்லுவர் புலவர் எ - று.

இச்சூத்திரத்துட் கூறிய விகாரமும், இப்புணர்ச்சி முற்ற முடித்தற்குப் பின் ஐந்து சூத்திரத்தாற் கூறும் விகாரமும், உயிர் வரின் உகரம் மெய் விட்டோடுதலையும் ஒழிந்த கணங்கள் வரின் தன்னியல்பின் நிற்றலையும் விலக்கியவல்ல; இவ்விகாரமனைத்தும் ஒருங்கு வேண்டுமென்னும் நியதியவல்ல; இவ்விகாரம் பண்புத் தொகைக்கேயுரிய என்பார், ஏற்புழியென்றும், ஏழென்பதனை உயிரீற்று மொழியாகக் கொள்வார் சிலர்; [1]ஒற்றீற்று மொழியாகக் கொள்வார் சிலர், யாம் ஒருதலை துணிந்தாம் என்பார், என்மனார் புலவர் என்றும், ஒற்றீறும் விலக்கப்படுவதன்றென்பார், உடம்பொடு புணர்த்தி ஒற்றீறாக ஏழ்குறுகும் என்றுங் கூறினார்.

ஏழென்பது, முற்றுகரவீற்றதேனும், ஒன்றினமுடித்தல் தன்னினம் முடித்தல் என்னும் உத்தியான் ஈண்டுக் கூறப்பட்டதென்க.

எ - டு: அறுபது, எழுபது, கழஞ்சு, காழி, மீன் எனவும்; ஏழ்கடல் எனவும் வரும். ஏனையவற்றிற்கு உதாரணம் பின்னர்க்

---

1. தொல்காப்பியர் ஒற்றீற்றுமொழியாகக் கொண்டனர்; புள்ளி: கூஅ.

காட்டுதும். இரண்டாயிரம், ஏழாயிரம் என உயிர் வரின் குற்றுகரமும் முற்றுகரமுங் கெட்டுப் புணர்ந்தன. இரண்டு கழஞ்சு, மூன்று படி, நான்கு பொருள், ஏழுகடல் எனத் தன்னியல்பின் நின்று புணர்ந்தன. பிறவும் அன்ன. (கஅ)

கஙக. ஒன்றன் புள்ளி ரகரம் ஆக
இரண்டன் ஒற்றுயிர் ஏகவுவ் வருமே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மேற்கூறிய நால்வகைப் பெயரும் வருமிடத்து, ஈற்றுயிர்மெய் ஏகுமென்றமையான் இறுதி உயிர்மெய் கெட நின்ற ஒன்றென்னும் எண்ணினது னகரவொற்று ரகரவொற்றாக, இரண்டென்னும் எண்ணினது ணகரவொற்றும் ரகரத்தை ஊர்ந்து நின்ற அகர உயிருங் கெட, அவ்விரண்டு ரகரத்தின்மேலும் உகரம் வரும் எ - று.

எ - டு: ஓராயிரம், ஈராயிரம், ஒருபது, இருபது, ஒரு கழஞ்சு, இரு கழஞ்சு, ஒருநாழி, இருநாழி, ஒருவகை, இருவகை என வரும். ஓராயிரம், இராயிரம் என்புழி, உகரக்கேடு 'முற்றும் மற்றொரோவழி' என்பதனாற் கொள்க. பிறவும் அன்ன. (கக)

கஙo. மூன்றனுறுப் பழிவும் வந்ததும் ஆகும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்) நால்வகைப் பெயரும் வருமிடத்து, இறுதி உயிர்மெய் கெட நின்ற மூன்றென்னும் எண்ணினது னகரவொற்றுக் கெடுதலும் வரும் ஒற்றாகத் திரிதலுமாம். எ-று.

எ - டு: மூவொன்று, மூவெடை, மூவுழக்கு, மூவுலகு எனவும்; முப்பது, முக்கழஞ்சு, முந்நாழி, மும்மொழி எனவும் வரும். (சo)

கஙக. நான்கன் மெய்யே லறவா கும்மே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) நால்வகைப்பெயரும் வருமிடத்து, இறுதி உயிர்மெய் கெட நின்ற நான்கென்னும் எண்ணினது னகரவொற்று லகரவொற்றும் றகரவொற்றும் திரியும் எ - று.

எ - டு: நாலொன்று, நாலெடை, நாஞழி, நான்மணி எனவும்; நாற்பது, நாற்கழஞ்சு, நாற்கலம், நாற்கவி எனவும் வரும். (சக)

**ககஉ. ஐந்தனொற் றடைவதும் இனமுங் கேடும்.**

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) நால்வகைப்பெயரும் வருமிடத்து இறுதி உயிர்மெய் கெட நின்ற ஐந்தென்னும் எண்ணினது நகர வொற்று வருமொற்றாகியும், அதற்கு இனமாகியும், கெட்டும் முடிவதாம் எ - று.

எ - டு: ஐம்மூன்று, ஐம்மஞ்சாடி, ஐவ்வட்டி, ஐவ்வண்ணம் எனவும்; ஐம்பது, ஐங்கழஞ்சு, ஐங்கலம், ஐம்பொறி எனவும்; ஐயொன்று, ஐயெடை, ஐயாழாக்கு, ஐயம்பு எனவும் வரும்.

அடைவதும் இனமும் என்றமையின், அருத்தாபத்தியான் ஐந்நூறு, ஐந்தூணி என்புழி ஒற்றுத் தன்னியல்பின் நிற்றல் கொள்க. (சஉ)

**ககரு. எட்டன் உடம்புணவ் வாகும் என்ப.**

எ - னின். இதுவும் அது.

(இ - ள்) நால்வகைப்பெயரும் வருமிடத்து, இறுதி உயிர்மெய் கெட நின்ற எட்டென்னும் எண்ணினது டகர வொற்று ணகரவொற்றாகும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

எ - டு: எண்பது, எண்கழஞ்சு, எண்கலம், எண்குணம் என வரும்.

'எண்ணிறையளவும்' என்னுஞ் சூத்திரத்துள் கூறிய புணர்ச்சிக்கு வேண்டும் விகாரம் இதுகாறும் என்பது தோன்ற, அச்சூத்திரத்துள் கூறிய 'புலவர்' என்னும் எழுவாயைச் சுட்டி, அதன் பயனிலையாக இச்சூத்திரத்து இறுதிக்கண் என்ப என்றார். (சரு)

**ககச. ஒன்பா னொடுபத்து நூறும் ஒன்றின்**
**முன்னதின் ஏனைய முரணி ஒவ்வொடு**
**தகர நிறீஇப்பஃ தகற்றி னவ்வை**
**நிரலே ணளவாத் திரிப்பது நெறியே.**

எ - னின். ஒன்பது என்னும் எண்ணுப்பெயர்க்கு எய்தாதது எய்துவித்தலும், அதனோடு புணரும் பத்து, நூறு என்னும் வருமொழிகட்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தானும் 'எண்மூவெழுத்தீற்று' என்னுஞ் சூத்திரத்தானும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி உணர்த்துதலும் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்பஃதுடனே பத்தென்பதும் நூறென்பதும் வந்து புணருமாயின், அந்நிலைமொழி வருமொழிகளுள் முன்னர்த்தாகிய நிலைமொழியினின்றும், ஏனை வருமொழியாகிய பத்தையும் நூற்றையும் நிரனிறை வகையானே நூறெனவும் ஆயிரமெனவுந் திரித்து, நிலைமொழிக்கு முதற்கண் ஒகர உயிரோடு தகரமெய்யை அதற்காதாரமாக நிறுத்தி, அந்நிலைமொழியிறுதிக்கண் பஃதைக் கெடுத்து, அம்மொழி முதற்கு அயல்நின்ற னகரவொற்றை முறையே ணகரவொற்றும் ளகரவொற்றுந் திரிப்பது முறைமையாம் எ - று.

முன்னதின் என்னும் இன்உருபு, நீங்கற் பொருட்டாய், ஏனைய என்னும் இடைச்சொல்லடியாகத் தோன்றிய வினைக் குறிப்புப் பெயா கொண்டது.

## சிவஞானமுனிவர் விளக்கம்

நிலைமொழித் திரிபுபோல வருமொழித் திரிபும் வகைபடக் கூறாது பொதுப்பட முரணியென்றாரேனும்,

[1]"ஒன்பா னொகரமிசைத் தகரமொற்று
முந்தை யொற்றே ணகார மிரட்டும்
பத்தென் கிளவி யாய்தபக ரங்கெட
நிற்றல் வேண்டு மூகாரக் கிளவி
யொற்றிய தகரம் றகர மாகும்."

எனவும்,

[2]"ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை யொற்றே ளகார மிரட்டு
நூறென் கிளவி நகார மெய்கெட

1. தொல்காப். எழு. குற்றியலுகரப் புணரியல் சூ. கசா௦.
2. " " " சூ. கூ அ.

ஆவா வாகு மியற்கைத் தென்ப
ஆயிடை வருத லிகார ரகார
மீறுமெய் கெடுத்து மகர மொற்றும்."

எனவும் ஆசிரியர் தொல்காப்பியர் கூறியவாற்றால் அவற்றின் திரிபறிந்து திரித்துக்கொள்க.

நெறியேயென்ற இலேசானே தனிக்குறின் முன்னொற்றிரட்டித்தலுங் கொள்க.

எ - டு: தொண்ணூறு எனவும், தொள்ளாயிரம் எனவும் வரும். தொளாயிரமென இக்காலத்து மரீஇயிற்று.

ஒன்பஃது நின்று புணரினும் ஒன்பது நின்று புணரினும் இம் முடிபேயாம் என்பார் பஃதகற்றி என்பதனோடு பொருந்த ஒன்பஃதொடு என்னாது ஒன்பானொடு என்றும், தகரவொற்றை ஒகரவுயிர்க்கு உடம்பாக நிறுத்துகவென்பார் ஒவ்வொடு என்றும், இப்புணர்மொழிகள் ஒகர உயிரொன்றொழிய விகாரப்பட்டுக் கிடந்தமையிற் குறிப்பின்றி முடியும் மரூஉமுடிபென்று கொள்ளற்க என்பார் திரிவது என்னாது திரிப்பது என்றும், இவற்றை இலக்கண முடிபாகத் தொல்லாசிரியர் முடித்தவாறே முடித்தா மென்பார் நெறியே என்றுங் கூறினார்.

இச்சூத்திரத்து முன்னதி னேனைய முரணி என்பதற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது ஒன்பஃதினானே பத்தையும் நூற்றையும் பெருக்கி யெனப் [1]பொருள் கொள்வாருமுளர். முரணி என்னுஞ் சொற்கு அது பொருளன்றாதலானும், அது பொருளாமேனும் அதனால் வருமொழி இவ்வாறு திரிந்தவெனத் தோன்றாமையானும், தோன்றின் நிலைமொழிக்கு விகாரங் கூற வேண்டாமையானும், அது பொருந்தாதென்க.

இன்னும், முன்னதினேனைய முரணியென்பதற்கு, நிலைமொழியாய எட்டின்மேலொன்று ஒன்பஃது எனப் பஃது என்னும் இறுதியதாய்த் திரிந்து நின்றாற்போல, வருமொழியாய எண்பதின்மேல் பத்தை நூறு எனவும் எண்ணூற்றின்மேல் நூற்றை ஆயிரம் எனவுந் திரித்துப் பொருள்கோடலும் ஒன்று. (சச)

---

1. பொருள் கொள்பவர் மயிலைநாதர்; அவர் 'ஒன்றான மான பத்து ஒன்பது; அஃது அக்காலத்துச் சொல்' என்பார்.

கசுரு. முதலிரு நான்காம் எண்முனர்ப் பத்தின்
இடைஒற் றேகல் ஆய்தம் ஆகல்
எனஇரு விதியும் ஏற்கும் என்ப.

எ - னின். ஒன்றுமுதல் எட்டெண்களின் முன்வரும் பத்து என்னும் எண்ணிற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்றுமுதலாகிய எட்டெண்களின் முன்னும் வரும் [illegible] ஒருகால் கெடுதலும், ஒருகால் இடையே தகரம் நின்ற நிலைக்களத்து அது கெட ஆய்தம் வருதலும் என்னும் இவ்விரண்டு விதியையும் ஏற்கும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

இடை என்பதனைப் பின்னுங் கூட்டுக.

இடையே ஆய்தமாகல் என்றமையின், அவ்வழித் தகரக்கேடு கூறாதே அமையுமென்க.

எ - டு: ஒருபது, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது எனவும்; ஒருபஃது, இருபஃது, முப்பஃது, நாற்பஃது, ஐம்பஃது, அறுபஃது, எழுபஃது, எண்பஃது எனவும் வரும். (சுரு)

கசுசு. ஒருபஃ தாதிமுன் ஒன்றுமுதல் ஒன்பான்
எண்ணும் அவையூர் பிறவும் எய்தின்
ஆய்தம் அழியவாண் டாகுந் தவ்வே.

எ - னின். மேலைச் சூத்திரத்தான் எய்திய ஒருபஃதாதியாய நிலைமொழிக்கு, உயிர்வரின் 'உயிர்வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் மெய்வரின் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) ஒருபஃதாதியாய எட்டெண்களின் முன்னும் ஒன்றுதி ஒன்பதெண்ணும் அவையூர்ந்த பிறவும் வந்து புணருமாயின், ஆய்தங் கெட, அந்நிலைக்களத்து இயல்பாய தகரம் வரும் எ - று.

ஐயம் அறுத்தற்கு அவையூர் பிறவும் என்றார்.

எ - டு: ஒருபத்தொன்று, இருபத்தொன்றே காலே யரைக் கால், முப்பத்தொருகழஞ்சு, எழுபத்தொன்பதின்கலனே தூணி, எண்பத்தொன்பதியாண்டு என வரும். பிறவும் அன்ன.

'ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே' எனறமையான், ஆய்த மழிந்தவற்றிற்கும் ஒருபது முதலிய மூற்றுகரவீற்று எண்ணுப் பெயர்கட்கும் வேற்றுமையின்மையின், அருத்தாபத்தியான் அவற்றோடு இவ்வருமொழிகள் புணரினும் ஆண்டாகுந் தவ்வே என்றாராயிற்று. இவற்றிற்குங் காட்டு அவையேயாமென்க. (சகூ)

கக௭. ஒன்றுமுதல் ஈரைந் தாயிரங் கோடி
எண்நிறை அளவும் பிறவரின் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னும் இற்றும்
ஏற்ப தேற்கும் ஒன்பதும் இனைத்தே.

எ - னின். பத்தென்னும் நிலைமொழிக்கு, உயிர்வரின் 'உயிர் வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிது விதியும், மெய்வரின் எய்தாதது எய்துவித்தலும், ஒன்பதென்னும் நிலைமொழிக்கு உயிர்வரின் 'உயிர்வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத் தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியும், மெய் வரின் எய்தாதது எய்துவித்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்று முதலாகிய பத்தும் ஆயிரமுங் கோடியும் என்னும் எண்ணுப் பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிறபெயரும் வந்து புணருமாயின், நிலை மொழியாகிய பத்தென்னும் எண்ணினது ஈற்றுயிர்மெய் யைக் கெடுத்து, அந்நிலைக்களத்து இன் சாரியையேனும் இற்றுச் சாரியையேனும் ஆண்டைக்கேற்பது ஏற்று நிற்கும். ஒன்பதென்னும் நிலைமொழியும், இங்ஙனம் விதந்த எண்ணுதிப்பெயர் வந்து புணருமாயின், இன்னே னும் இற்றேனும் ஆண்டைக்கேற்பது ஏற்று நிற்கப்பெறும் எ - று.

எ - டு: பதினொன்று, பதின்மூன்று, பதினாயிரம், பதின் கழஞ்சு, பதின்கலம், பதின்மடங்கு எனவும்; பதிற்றொன்று, பதிற்றிரண்டு, பதிற்றுமூன்று, பதிற்றுக்கோடி, பதிற்றுத்தூணி எனவும்; ஒன்பதினாயிரம், ஒன்பதின் கழஞ்சு, ஒன்பதின் கலம், ஒன்பதின் மடங்கு எனவும்; ஒன்பதிற்றொன்று, ஒன்பதிற் றிரண்டு, ஒன்பதிற்றுக்குறுணி எனவும் வரும். பிறவும் அன்ன.

பதின்மூன்று என்பது உம்மைத்தொகை. பதிற்றொன்று என்பது பண்புத்தொகை. பிறவுங் கண்டுகொள்க.

பத்துக்கோடி, ஒன்பதுகோடி என இந்நிலைமொழிகள் தம் இயல்பின் திரிதலேயன்றி வழக்கின்கண்ணுஞ் சான்றோர் செய்யுட்கண்ணும் இவ்வாறு அமைந்துகிடந்தனவுங் கொள்கவென்பார் ஏற்பவேற்கும் என்றும். ஒன்பதன் ஈற்றுயிர்மெய்யைக் கெடாது குற்றுகரவீற்றுப் பொதுவிதியான் உயிரொன்றுமே கெட நின்றும் இற்றும் ஏற்பவேற்று நிற்றலின் ஒன்பதும் இற்றே எனத் தன்மையணி யாக்காது உவமையணியாக்கி இனைத்தே என்றுங் கூறினார். 'ஒன்பதென்பதன் இறுதி பத்தென்பது போல முரணி நிற்றலின், அதனோடு இதனை மாட்டெறியப்பட்டதெனினும் அமையும். (சஎ)

ககூஅ. இரண்டு முன்வரின் பத்தினீற் றுயிர்மெய்
கரந்திட ஒற்று னவ்வாகு மென்ப.

எ - னின். இதுவும் பத்தென்னும் நிலைமொழிக்கு 'உயிர் வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) இரண்டென்பது வரின், பத்தென்னும் நிலைமொழியினது ஈற்றுயிர்மெய் கெடத், தகரவொற்று னகர வொற்றாகத் திரியுமென்று சொல்லுவர் புலவர் எ - று.

எ - டு: பன்னிரண்டு என வரும். உம்மைத்தொகைக்கண்ணும் பண்புத்தொகைக்கண்ணும் இரண்டென்னும் எண் வருமொழியாய் வருமேனும், முன்வரின் என வருதலைச் சிறப்பித்தமையான், ஒருசொல் நீர்மையாய்ச் சிறந்த உம்மைத்தொகைக்கு இவ்விதி கூறினாரென்க. (சஅ)

ககூக. ஒன்ப தொழித்த எண் ஒன்பதும் இரட்டின்
முன்னதின் முன்னல ஓட உயிர்வரின்
வவ்வும் மெய்வரின் வந்தது மிகல்நெறி.

எ - னின். ஒன்பதொழித்த ஒன்பதெண்களாய நிலைமொழிகளுள் மூன்றேழொழிந்த 'எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்'

---

1. ஒன்பதன் இறுதிப்பத்து என்பதுபோல நிற்றலின் அதனோடு இதனை மாட்டெறியப்பட்டதென்க. இது மாட்டெறிந்தொழுகல் என்னும் உத்தி என்பர் இராமாநுச கவிராயர்.

என்னுஞ் சூத்திரத்துள் 'மூன்றுரேழ் துறுதும்' என எய்தியதன்மேற் சிறப்புவிதியும், எல்லாவற்றிற்கும் உயிர்வரின் எய்தியது விலக்கிப் பிறிது விதியும் மெய்வரின் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்பதென்னும் எண்ணொன்றனையும் ஒழித்து நின்ற ஒன்றுதி பத்தீறுன எண் ஒன்பதனையும் இரட்டித்துக் கூறின், நிலைமொழி முதலெழுத்தொன்றும் நிற்க, அல்லனவெல்லாங் கெட, உயிர் முதலான எண்வரின் வகரவொற்றும், மெய்முதலான எண் வரின் அவ்வந்த ஒற்றும் மிகுதல் முறைமையாம் எ - று.

எ - டு: ஒவ்வொன்று, இவ்விரண்டு, மும்மூன்று, நந்நான்கு, ஐவைந்து, அவ்வாறு, எவ்வேழு, எவ்வெட்டு, பப்பத்து என வரும்.

நெறி என்றமையானே, நான்கிற் குறுக்கமும், ஐவைந்து என் புழி ஐகாரக்குறுக்கத்தின்முன் ஒற்றிரட்டாமையும், ஒரோவொன்று, ஒன்றொன்று, கழக்கழஞ்சு, கலக்கலம் என இரட்டித்து வருவனவும், குற்றுகரப்புணர்ச்சி விதியுள் கூறுதொழிந்து நெறிப்பட வருவன உளவேல் அவையுங் கொள்க.

ஒவ்வொன்று கொடு என்றால் இம்முறையே பலவற்றையுங் கொடு எனப் பொருள்தந்து நிற்றலின், இஃது அடுக்கன்று, வேற்றுமை அல்லனவெல்லாம் அல்வழியாதலின் தழாத்தொடராய அல்வழியுள் ஒன்றுமென்க. (சக)

## கஉ. ஊகார ஈற்றுச் சிறப்புவிதி

௨00. பூப்பெயர் முன்இன மென்மையுந் தோன்றும்.

எ - னின். ஊகாரவீற்றுப் பூவென்னும் பலபொருளொரு சொல்முன் வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பூவென்னும் பலபொருட் பெயர்ச்சொல் முன் வல்லினம் வரின், பொதுவிதியாற் க ச த ப மிகுதலேயன்றி, அவற்றிற்கு இனமாகிய மெல்லொற்றுக்களும் மிகும் எ - று.

இப்பொருட்டாய பூப்பெயர் என விதவாமையின், பலபொருளொருசொல் என்பது பெற்றாம்.

எ - டு: பூங்கொடி, பூஞ்சோலை, பூந்தடம், பூம்பணை என வரும். இவற்றுள் பூவென்பது, மலரேல் இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்க தொகையாகவும், பொலிவேல் பண்புத்தொகையாகவும், பூங்கணை என்பது மலர் என்னும் ஒரு பொருட்டாய் மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்க தொகையாகவும், பண்புத்தொகையாகவும், பூங்கரும்பு என்பது பொலிவு என்னும் ஒரு பொருட்டாய்ப் பண்புத்தொகை

உறழ்ந்துவரும் என உறுதிகூறாது பூக்கொடி என வல்லினம் மிகுதலை உம்மையால் தழீஇக்கொண்டமையின் இவ்விரு வகைத் தோன்றலும் ஏற்ற பெற்றி கொள்க. (௬௦)

## ௧௧. ஏகார ஓகார ஈற்றுச் சிறப்புவிதி

௨௦௧. இடைச்சொல் ஏஓ முன்வரின் இயல்பே.

எ - னின். ஏகார ஓகார இடைச்சொற்கள்முன் வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) இடைச்சொல்லாய ஆறேகாரத்தின் முன்னும் எட்டோகாரத்தின் முன்னும் வல்லினம் வருமாயிற் பொதுவிதியான் மிகாது இயல்பாம் எ - று

எ - டு: அவனே கொண்டான் என்பது பிரிநிலையும் வினாவும் ஈற்றசையுந் தேற்றமுமாம். அறமே பொருளே காமமே துறவே என்பன எண். "ஏயே தனையென் றோரிருடி வினவ" என்பது இசைநிறை. அவனோ கொண்டான் என்பது ஒழியிசை முதலிய எட்டுமாம். இவற்றுள் வல்லினம் இயல்பாதல் காண்க. இவ்விடைச்சொல் ஒன்று பல பொருள் தருமாறு இடைச்சொல்லியலுள் காண்க. (௬௧)

---

## கசு. ஐகார ஈற்றுச் சிறப்புவிதி

௨0௨. வேற்றுமை யாயின் ஐகான் இறுமொழி
ஈற்றழி வோடும்அம் ஏற்பவும் உளவே.

எ - னின். ஐகாரவீற்று நிலைமொழிக்கு எய்தாதது எய்து வித்தல் நுதலிற்று.

(இ - ள்.) ஐகாரவீற்றுச்சொல் வேற்றுமைக்கண் வருமாயின், இறுதி ஐகாரங் கெடாது அம்முச்சாரியை பெற்று முடிவனவும், ஐகாரங்கெட்டு அம்முச்சாரியை பெற்று முடிவனவுஞ் சில உளவாம் எ - று.

உம்மைகள் இரண்டனுள், முன்னையது எதிர்மறைக்கண்ணும், பின்னையது எதிர்மறையோடு இழிவுசிறப்பின்கண்ணும் வந்தன.

எ - டு: புன்னையங்கானல், கொல்லையஞ்சாரல், கொன்றையந்தீங்குழல், முல்லையம்புறவம் எனவும். வழுதுணங்காய், ஆவிரம்பூ வேர் எனவும் வரும்.

தகுதியாக்காது ஏற்பன என்றமையான், முல்லைப்புறவம் எனவரினுங் கொள்க. அம்மும் என்னுமையின், உம்மையான் வல்லினந் தழீஇயதன்றென்க. வருமொழி வரையாமையின், நாற்கணத்துள் ஏற்பன கொளக. (௩௨)

௨0௩. பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோய் அம்மும் திரள்வரின் உறழ்வும்
அட்டுறின் ஐகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை.

எ - னின். பனையென்னும் நிலைமொழிக்கும் அதனோடு புணருஞ் சில வருமொழிகட்கும், 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தானும் மேலைச் சூத்திரத்தானும் எய்தியவற்றை இகந்துபடாமற் காத்தலும், 'இ ஈ ஐவழி' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) பனை என்னும் பெயர்முன், கொடி என்னும் பெயர் வருமாயின் வந்தது மிகுதலும், க ச த பக்கள் வரின் நிலைமொழி யீற்று ஐகாரங் கெட்டு அம்முப் பெறுதலும், திரள் என்னும் பெயர் வருமாயின் வந்தது மிகுந்

தும் ஐ போய் அம்முப் பெற்றுந் தம்முள் உறழ்தலும், அட்டு என்னும் பெயர் வருமாயின் ஐகாரங் கெட வருமொழி அகரம் ஆகாரம் ஆதலுமாம், வேற்றுமைக்கண் எ - று.

கெட்டு என்பது செயவெனெச்சந் திரிந்து நின்றது.

உ - ம்: பனைக்கொடி எனவும்; பனங்காய், செறும்பு, தூண், பழம் எனவும்; பனைத்திரள் பனந்திரள் எனவும்; பனாட்டு எனவும் வரும். பனைக்கொடி என்பது பனையை எழுதிய கொடி. பனாட்டு என்பது பனையினது தீங்கட்டி. (௯௩)

## உயிரீற்றுப்புணரியல் முற்றிற்று.

# ௪. மெய்யீற்றுப்புணரியல்

## ௧. மெய்யீற்றின்முன் உயிர்

௨௦௪. உடல்மேல் உயிர்வந் தோன்றுவ தியல்பே.

எ - னின். மெய்யீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப்புணர்ச்சி இவ்வியலாற் கூறப்படுதலின், மெய்யீற்றின் முன் உயிர் முதல் வந்து புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *நிலைமொழியீற்றில் நின்ற மெய்யின்மேல் வருமொழி முதலுயிர் வந்து ஒன்றுபட்டு இணங்கி நிற்பது இயல்புப் புணர்ச்சியேயாம் எ - று.*

எ - டு: *தோன்றலழகன், உரிஞுழகிது, புகழழகிது எனவும்; வேலெறிந்தான் எனவும் இருவழியுங் காண்க. பிறவும் அன்ன.*

*இவ்வாறு மெய்யும் உயிருங் கூடி உயிர்மெய்யாய் மெய்யினது புள்ளியும் உயிர் வடிவமுங் கெட்டு நிற்றலின் விகாரமாமென் பாரை விலக்கிச், சிறந்தவொலி வடிவின் யாக்கையும் உயிரும் போல மெய்யினது மாத்திரை உள்ளடங்க ஒன்றுபட்டு இரட்டை யிலைபோல் ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமாய் இணங்கி நிற்றலானும், ஒன்றாத தனிக்குறில் முன் ஒற்று முதலியன விகாரப்படுதலானும், ஒன்றுவது இயல்பே என்றார்.*

*ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.* (௧)

௨௦௫ தனிக்குறில் முன்ஒற் றுயிர்வரின் இரட்டும்.

எ - னின். எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *தனிக்குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டித்து நிற்கும் எ - று.*

எ - டு: *மண்ணரிது, பொன்னரிது எனவும்; மண்ணகம், பொன்னொளி எனவும் வரும். பிறவும் அன்ன.* (௨)

---

## உ. மெய்யீற்றின்முன் மெய்

உ0கூ. தன்ஒழி மெய்ம்முன் யவ்வரின் இகரந்
துன்னும் என்று துணிநரும் உளரே.

எ - னின். யகரம் ஒழிந்த பத்து மெய் முன்னும் வரும் யகரத்திற்கு 'எண்மூ வெழுத்தீற்று' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன் மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) யகரம், தன்னையொழிந்த ஞ ண ந ம ன ர ல வ ழ ள என்னும் பத்து மெய் முன்னும் வந்தால், தன் முன் இகரச் சாரியையைப் பொருந்துமென்று அரிதிற் கொள்வாருஞ் சிலருளர் எ - று.

எ - டு : வேளியாவன், மண்ணியாது எனவும்; வேளியானை, மண்ணியானை எனவும் வரும். பிறவும் அன்ன.

எதிர்மறையாய இழிவு சிறப்பும்மையான், இகரந் துன்னுது பொதுச்சூத்திரத்தான் இயல்பாமென்பார் பலரென்க. (௩)

உ0எ. [1]ஞணநம லவளன ஒற்றிறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி யவ்வல் மெய்வரின்
உவ்வுறும் ஏவல் உறுசில சில்வழி.

எ - னின். முதனிலைத்தொழிற்பெயரும் ஏவற்றும் பொதுவாய சில நிலைமொழிகட்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) ய ர ழக்களை யொழிந்த எட்டொற்றும் இறுதியாகும் முதனிலைத் தொழிற்பெயரும், ஏவல்வினையும், மேல் விதந்த யகரமொழிந்த மெய் வருமாயின், பெரும்பாலும உகரச் சாரியையை இறுதிக்கண் பொருந்தும்; சில ஏவல்வினை அவ்வுகரச்சாரியையைப் பொருந்தா, சிலவிடங்களில் எ - று.

ஏவல்வினையோடு எண்ணினமையின், முதனிலைத் தொழிற்பெயர் என்பது பெற்றாம்.

எ - டு: உரிஞுக் கடிது, உண்ணுக்கடிது, பொருநுக்கடிது, திருமுக்கடிது, தின்னுக்கடிது, நீண்டது, வலிது எனவும்;

1. இஃது ஒரு சூத்திரத்துள் ஒன்றனை ஒன்றொழித்தல் என்பர் இலக்கணக்கொத்து நூலார் - பாயிரம், சூ. கூ.

கடுமை, நீட்சி, வன்மை எனவும் தொழிற்பெயர்கள் இருவழியும் உகரம் பெற்றன. பிறவும் அன்ன.

உரிஞு கொற்றா, உண்ணு கொற்றா, பொருநு கொற்றா, திருமு கொற்றா, தின்னு கொற்றா, ஙாகா, வளவா என ஏவல்வினை உகரம் பெற்றன. பிறவும் அன்ன.

உரிஞு, உண்ணு என வருமொழியின்றி உகரம் பெறுதலும், மணிலவாரு, சருகை வாரு எனச் சிறுபான்மை விலக்கிய ஈறு உகரம் பெறுதலும் உளவென்பார் நனி என்றும், யகரம் வருமொழிக்கு இகரம் விதித்தலின் அதனோடு புணரும் இந்நிலைமொழியிறுதி உகரம் பெறுதென்பார் யவ்வன்மெய் என்றும், உண்ணு கொற்றா, உண் கொற்றா என உகரம் பெற்றும் பெறாதும் வருவனவும் உரிஞு கொற்றா என உகரம் பெற்றே வருவனவும் உளவென்பார் சிலவேவலுறா சில்வழி என்றுங் கூறினார்.

ஏவலுறா என்னாது, ஏவற்குறா எனப் பாடமோதுவாரும் உளராலோவெனின் :—உறும் என்னும் வினைக்குத் தொழிற் பெயர்களையும் ஏவலவினைகளையும் வினைமுதலாக்கிக் கூறுதலானும், அதனை மறுத்த உறா என்னும் பன்மைவினைக்கு ஒருமை உகரம் வினைமுதலாகாமையானும், அது பாடம் அன்றென்க. (எ)

உ0அ. நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை.

எ-னின். நகரவீற்றுத் தொழிற்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) நகரம் இறுதியாகும் முதனிலைத் தொழிற் பெயர்க்கு உகரச்சாரியையேயன்றி அகரச்சாரியையுமாம் வேற்றுமைக்கண் எ-று.

எ-டு: பொருநக்கடுமை, நன்மை, வன்மை என வரும். பிறவும் அன்ன. பொருநுதல், ஒருவர் மற்றொருவர் போல வேடங்கொள்ளும் பொருநாது தொழிலாதலின், ஒத்தல் என்னும் பொருட்டு. (அ)

## ங. ணகர னகர ஈறு

உ0கூ. ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்பும் ஆகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினும் இயல்பா கும்மே.

எ - னின். மேலைச் சூத்திரங்களும் மெய்யீற்றுப் பொதுப் புணர்ச்சி கூறி, அவற்றிற்கே யுரிய ஞகர நகரங்களை ஒழித்து, ஏனையவற்றிற்கு முறையே தனித்தனி சிறப்புவிதி கூறுவான் தொடங்கி, ணகர னகரவீறு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ணகர னகரங்கள், வேற்றுமைக்கண் வல்லினம் வந்தால், முறையே டகாரமும் றகாரமுமாம்; மெல்லினமும் இடையினமும் வந்தால், இயல்பாம்; அல்வழிக்கண் மூவினம் வந்தாலும், இயல்பேயாம் எ - று.

எ - டு: சிறுகட் களிறு, பேரமர்க்கட்பேதை எனவும்; பொற்றட்டு, பொற்றகடு எனவும் வேற்றுமைக்கண் வல்லினம் வரத் திரிந்தன. மணி, பொன், ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வன்மை என வேற்றுமைக்கண் மெல்லினமும் இடையினமும் வர இயல்பாயின. மண், பொன், கடிது, சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எனவும்; உண்டான் கொற்றன், ஞெள்ளன், வளவன் எனவும் அல்வழிக்கண் மூவினமும் வர இயல்பாயின. பிறவும் அன்ன.

ஒப்பின் முடித்தலான், னகரமும் உடன் கூறினார். இவ்வாறு பின் வருவனவும் அன்ன. (சு)

உகO. குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணும் கேடே.

எ - னின். ணகார னகாரவீற்றுள் ஒருசாரனவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறி லொன்றனையும் ஒழிந்து ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்த ணகார னகாரங்கள், வருமொழிக்கு முதலாக வந்த நகரம் மயக்கவிதியின்மையின் திரிந்தவிடத்து, இயல்பாகாது கெடுதலைப் பொருந்தும் எ - று.

எ - டு: பாணன்று, தூணன்று, பசுமணன்று எனவும்; நன்மை எனவும்; அரசனல்லன், செம்பொனன்று எனவும்; நன்மை எனவும்; இருவழியுங் கெட்டன. (எ)

உகக. சாதி குழூஉப்பரண் கவண்பெயர் இறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவேண் சாண்பிற
டவ்வா கலுமாம் அல்வழி யும்மே.

எ - னின். ணகாவீற்றுட் சிலவற்றிற்கு வேற்றுமைக்கண் எய்தியது விலக்கலும், சிலவற்றிற்கு அல்வழிக்கண் எய்தியதன் மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சாதி பற்றியுந் திரள் பற்றியும் வரும் பெயர்களும் பரண் கவண் என்னும பெயர்களுமானவற்றின் இறுதி ணகரம், வேற்றுமைக்கண்ணும் வல்லினம் வந்தால், இயல்பாம்; எண்ண ளவையன்றி உணவிற்குரிய எள்ளின் திரிசொல்லாய எண்ணென்னும் பெயருஞ் சாண் என்னும் நீட்டலளவைப்பெயரும், வல்லெழுத்துக்கள் வரின் திரிந்து டகரமாகலும் பொருந்தும் அல்வழிக்கண்ணும் எ - று.

அல்வழிக்கண் இறந்தது தழீஇய எச்சவும்மையை வேற்றுமைக்கண்ணுங் கூட்டுக.

எ - டு : பாண் உமண், குடி, சேரி, தோட்டம், பாடி எனவும்; அமண்குடி, சேரி, தோட்டம், பாடி எனவும்; பரண் கால், கவண்கால் எனவும் வேற்றுமைக்கண்ணும் இயல்பாயின. எட்கடிது, சிறிது, தீது, பெரிது எனவும்; சாட்கோல் எனவும் அல்வழிக்கண்ணுந் திரிந்தன. டவ்வாகலுமாம் என்னும் இறந்தது தழீஇய எச்சவிழிவு சிறப்பும்மையான், [1]எண்கடிது, சாண் கோல் என இயல்பாதலே வலியுடைத்தென்க.

பிறவென்ற மிகையானே, வேற்றுமைக்கண் பாணக்குடி என அகரச்சாரியை பெறுதலும், அட்டுண்டுழனி என்னும் இயல்பும், மண்குடம் மட்குடம் என்னும உறழ்வும், இருவழிக் கண்ணும் இன்னும் ணகரவீற்றுள் அமையாதன உளவேல் அவையுங் கொள்க.

சாதியுங் குழுவும் ஆகுபெயராய் அவற்றையுடையராய உயர் திணைப்பொருளை உணர்த்தி நின்றனவேனும் தெய்வமென்றாற் போலச் சொல்லான் அஃறிணையாதலிற் "பொதுப்பெய ருயர் திணைப் பெயர்க ளீற்றுமெய், வலிவரி னியல்பாம்." என்பதனுன் அமையாவாயின. மேல்வரும் னஃகான் கிளைப்பெயரும் அது. (அ)

**உகஉ. னஃகான் கிளைப்பெயர் இயல்பும் அஃகான்**
**அடைவும் ஆகும் வேற்றுமைப் பொருட்கே.**

---

1 எண், சாண் என்னும் மொழியிறுதி ணகரத்தை எண், சாண் டவ்வாகலும் என்றது இலக்கணை என்பர் இராமநுச கவிராயர்.

எ - னின். ளகரவீற்றுச் சாதிப்பெயர்க்கு வேற்றுமைக்கண் எய்தியது விலக்கலும் பிறிதுவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்) ளகரவீற்றுச் சாதிப்பெயர், வல்லினம் வர ஈறு திரியாது இயல்பாதலும், அகரச்சாரியை பெறுதலு மாம், வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண் எ - று.

எ - டு: எயின் குடி, எயினக் குடி, சேரி, தோட்டம், பாடி என வரும்.

பொருட்கே என்ற மிகையானே, எயினமரபு, எயினவாழ்வு, எயினவன் என ஏனைக்கணம் வரின் அகரச்சாரியை பெறுதலும், எயினக்கன்னி, எயினப்பிள்ளை, எயினமன்னன் என அல்வழிக் கண் அகரச்சாரியை பெறுதலுங் கொள்க.

கிளை என்னும் பலபொருளொருசொல் ஈண்டுச் சாதிமேல் நின்றது. (௯)

உகரு. மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே.

எ - னின். மீனென்னுஞ் சொற்கு வேற்றுமைக்கண் எய்திய தொருவாற்றன் விலக்கல் நுதலிற்று.

(இ - ள்) மீன் என்னும் மொழியிறுதி னகரம், வேற்றுமைக்கண் வல்லெழுத்து வரின், றகரத்தோடு உறழ்ந்து வரும் எ - று.

எ - டு: மீன்கண், மீற்கண், செவி, தலை, புறம் என வரும்.

றகரமாதல் இக்காலத்துப் பயின்று வாராதேனும், தொன் னெறியாதலின், ஆணைவழி நிற்க என்பார் வழியே என்றார். (கo)

உகச. தேன்மொழி மெய்வரின் இயல்பும் மென்மை
மேவின் இறுதி யழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமாம் இருவழி.

எ - னின். தேன் என்னுஞ் சொற்கு 'ணன வல்லினம் வரட் டறவும்' என எய்தியது விலக்கலும், 'பிறவரி னியல்புமாகும் வேற்றுமைக் கல்வழிக் கனைத்து மெய்வரினு மியல்பா தும்மே' என எய்தியது இகந்துபடாமற் காத்தலும் இச்சூத்திரத்து இயல் பும் என எய்தியதன்மேற் சிறப்புவித்யும் வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவித்யும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) தேன் என்னுஞ் சொல், மூவினமெய்யும் வரின் இறுதி னகரம் இயல்பாதலும், மெல்லினம் வரின் அவ்விறுதி இயல்பாதலேயன்றிக் கெடுதலும், வல்லினம் வரின், இறுதி இயல்பாதலேயன்றிக் கெட, வந்த வல்லினமாதல் அதற்கினமாதல் மிகுதலுமாம், இருவழிக்கண்ணும் எ - று.

[1]'குறிலணை வில்லா ணனக்கள் வந்த, நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே' என்றமையின், இயல்பிற்கு நகரமொழிந்த எட்டு மெய்யும் வருவித்துக் காண்க.

எ - டு: தேன் கடிது, தேன் ஞான்றது, தேன் யாது எனவும்; தேன் மொழி, தேமொழி எனவும்; தேன் குழம்பு, தேக்குழம்பு, தேங்குழம்பு எனவும் அல்வழிக்கண் வந்தன. தேன் கடுமை, தேன் மலிவு, தேன் யாப்பு எனவும்; தேன் மலர், தேமலர் எனவும்; தேன் குடம், தேக்குடம், தேங்குடம் எனவும் வேற்றுமைக்கண் வந்தன. பிறவும் அன்ன.

தேன் என்பது பலபொருள் ஒரு சொல்லாதலின், மணங்கமழ்சோலை என்னும் பொருட்டாய்த் தேங்கமழ்சோலை என இவ்விகாரங்கள் எற்று வருவனவுங் கொள்க. (கக)

உகரு. மரமல் எகின்மொழி இயல்பும் அகரம்
மருவ வலிமெலி மிகலும் ஆகும்.

எ - னின். எகின் என்னுஞ் சொற்கு வேற்றுமைக்கண் 'ணன வல்லினம் வரட் டறவும்' என எய்தியது விலக்கலும், அகர மருவ என்றமையின் அச் சூத்திரத்தால் இருவழிக்கண்ணும் எய்தியது

1. "ண, ன வல்லினம் வரட் டறவும்" என எய்தியதை இதில் மெய்வரினியல்பென்றதனுள் வேற்றுமையில் வலிவர இயல்பாதலும், "வலிவரினீறுபோய் வலிமெலி மிகலுமாம்" என்றதும் விலக்கிற்றெனவும்; "அல்வழி வலிவர இயல்பாம்" என எய்தியதை இதில் மெய்வரி னியல்பென்றதனுள் அல்வழியில் வலிவர இயல்பாதல் காத்ததெனவும்; ண ன வென ஈறு பற்றிச் சொன்ன பொதுவிதியை ஒருபக்கந் தழுவி இச் சூத்திரத்தால் இந்த ஒரு சொல்லுக்கு விதி கூறுதலால் எய்தியதன் மேல் சிறப்பு விதி யெனவும்; "அல்வழிக்கணனைத்து மெய்வரினும் இயல்பாம்" என்றதனுள் அல்வழியில் இயல்பாக வலிவருதல் அதன்மேற் சிறப்பாதலால் வருமொழிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி எனவுங் காண்க என்பர், இராமாநுச கவிராயர்.

விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும், வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மரமன்றிப் பறவையாய அன்னத்தை உணர்த்தும் எகின் என்னுஞ்சொல், வேற்றுமைக்கண்ணும், வல்லினம் வர இறுதியியல்பாதலும், இருவழியும் அகரச் சாரியையைப் பொருந்த வரும் வல்லெழுத்தாதல் அவற்றிற்கு இனமாதல் மிகுதலுமாம் எ - று.

எ - டு: எகின் கால், சிறை, தலை, புறம் என வேற்றுமைக்கண்ணும் இயல்பாயிற்று. எகினப்புள், எகினம்புள் எனவும்; எகினக்கால், எகினங்கால் எனவும் இருவழியும் அகரம் மருவ உலி மெலி மிகுந்தன. அகரம் மருவுதற்கு வருமொழி வரையாமையின், நாற்கணமுங் கொள்க. எகின மாட்சி, வாழ்க்கை, அழகு என வரும். பிறவும் அன்ன (கஉ)

உகசு. குயினூன் வேற்றுமைக் கண்ணும் இயல்பே.

எ - னின். குயின், ஊன் என்னுஞ் சொற்கட்கு 'ணன வல்லினம் வரட் டறவும்' என எய்தியது விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) குயின் என்னும் பெயரும், ஊன் என்னும் பெயரும், வல்லினம் வரின், அல்வழிக்கண் இயல்பாதலேயன்றி வேற்றுமைக்கண்ணும் இயல்பாம் எ - று.

எ - டு: குயின் கடுமை, ஊன் கடுமை, சிறுமை, தீமை, பெருமை எனவரும். குயின் - மேகம். (கங)

உகஎ. மின்பின் பன்கன் தொழிற்பெயர் அனைய
கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்.

எ - னின். மின் பின் பன் கன் என்னும் நான்கு சொற்கும் 'ணன வல்லினம் வரட்டறவும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும், ஈண்டு அகரச்சாரியை முன் வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நான்கு சொல்லும், தொழிற்பெயர் போல யவ்வன் மெய் வரின், உகரச்சாரியையைப் பொருந்தும்: இவற்றுட் கன் என்னுஞ் சொல் உகரச்சாரியையே

யன்றி அகரச்சாரியையும் பெற்று, வல்லினம் வந்தால் வரு மெழுத்தாதல் அதற்கு இனமாதல் மிகப்பெறும் எ - று.

அவ்வும் என்னும் உம்மையும், பெறும் என்னும் முற்றும், விகாரத்தால் தொக்கன.

எ - டு: மின்னுக் கடிது, பின்னுக் கடிது, பன்னுக் கடிது, கன்னுக் கடிது, நன்று, வலிது எனவும்; கடுமை, நன்மை, வன்மை எனவும்; கன்னத்தட்டு, கன்னந் தட்டு எனவும்; கன்னத் தூக்கு, கன்னந் தூக்கு எனவும் அல்வழி வேற்றுமைக் கண் முறையே வந்தன. பிறவும் அன்ன.

கன் என்பது சிறு தராசுத் தட்டு. முன் என்னுஞ் சொல்லை முன்னம் என்றாற்போல இதனைக் கன்னம் என்றும் கூறுப. (கச)

உகூ. தன்னேன் என்பவற் றீற்றுனவ் வன்மையோ
டுறழு நின்னீ றியல்பாம் உறவே.

எ - னின். தன் என்றும் என் என்றும் வரும் விகாரமொழி கட்கு 'ணன வல்லினம் வரட் டறவும்' என எய்தியதொருவாற்றன் விலக்கலும், நின் என்று வரும் விகாரமொழிக்கு எய்தியது விலக் கலும் நுதலிற்று.

(இ - ள்.) தான் என்பது தன் என்றும் யான் என்பது என் என்றும் வரும் விகாரமொழிகளின் ஈற்று னகரம், வல்லினம் வரிற் பொதுவிதியானே றகரமாய்த் திரிதலும், அவ்விதியேலாது இயல்பாதலுமாம்; நீ என்பது நின் என நின்ற விகாரமொழியீற்று னகரம், வல்லினம் வரின் திரியாது இயல்பேயாம் எ - று.

வன்மை என்றது னகரத்திற்கு இனமாய றகரத்தை.

எ - டு: தன்பகை, தற்பகை, என்பகை, எற்பகை எனவும்; நின்பகை எனவும் வரும்.

உறவே என்ற மிகையானே, மின், பின் முதலியன மின் கடிது, மின்கடுமை என இருவழியுஞ் சாரியைப்பேறுந் திரிபு மின்றி வருதலும், மான் குளம்பு, அழன் கை என வேற்று மைக்கண் விதவாதன இயல்பாதலும், வரிற் கொள்ளும் எனச் செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம் பொதுச்சூத்திரத் தான் இயல்பாகாது திரிதலும், இன்னும் னகரவீற்றுள் அமையா தன உளவேல் அவையுங் கொள்க.

நின் என்பது, விகாரமொழியாதலிற் 'பொதுப்பெய ருயர் திணைப் பெயர்களீற்று மெய் - வலிவரின் இயல்பாம்.' என்பத னுள், அடங்காதாயிற்று. (கடு)

---

## ள. மகர ஈறு

உகக. மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவும் ஆகும்.

எ - னின். மகரவீறு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மகரவீற்றுச் சொற்கள், இறுதி மகரங்கெட விதியுயிரீறாய் நின்று இயல்புயிரீறுபோல உயிர்வரின் உடம்படுமெய் தோன்றவும், வல்லினம் வரின் அவை மிகவும், மெல்லினமும் இடையினமும் வரின் இயல்பாகவும் புணர்வனவும், வல்லினம் வரிற் கெடாது அவற்றிற்கு இனமாய்த் திரிவனவுமாம் எ - று.

எ - டு: வட்டவாழி, வட்டக்கடல், நேமி, வாரி எனவும்; மரவடி, மரக்கால், நார், வேர் எனவும்; நாங்கடியம், அடுங் களிறு எனவும்; ஈங்கை எனவும் முறையே இருவழியும் வந்தன. பிறவும் அன்ன.

வன்னமக்கினமாத் திரியும் என்றமையின், அருத்தாபத்தி யால் நாம் பெரியம் எனப் பகரம் வரும்வழித் திரியாதென்பது பெற்றாம். (கசு)

உஉ௦. வேற்றுமை மப்போய் வலிமேலி உறழ்வும்
அல்வழி உயிரிடை வரின்இயல் பும்முள.

எ - னின். சில மகரவீற்றிற்கு மேலைச் சூத்திரத்தான் எய்தி யது இகந்துபடாமற் காத்தலும் விலக்கலும், வரும் வல்லினத் திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தி யதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைக்கண் மகரவிறுதி கெட, அவற்றின் முன் வரும் வல்லினமாதல் அவற்றிற்கு இன மாதல் மிகுதலும், அல்வழிக்கண் உயிரும் இடையினமும் வரிற் கெடாது இயல்பாதலும் உளவாம் எ - று.

எ - டு: குளக்கரை, குளங்கரை எனவும்; குளமழகிது, குளம் யாது எனவும்; அருளுமரசன், கொல்லும் யானை எனவும் வரும். பிறவும் அன்ன. (கஎ)

உஉக. நுந்தம்,

எம்நம் ஈறு மவ்வரு ஞநவே.

எ - னின். சில பொதுப்பெயர்க்கு 'மவ்வீ றொற்றழிந்து' என எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று

(இ - ள்.) இந்நான்கு விகாரமொழிகள் ஈற்று மகரம், மேல் வரும் ஞ நக்களாகத் திரியும் எ - று.

எ - டு: நுஞ்ஞாண், நுந்நூல், தஞ்ஞாண், தந்நூல், எஞ் ஞாண், எந்நூல், நஞ்ஞாண், நந்நூல் என வரும்.

ஞ ந வரின் அவையாய்த் திரியுமெனவே, ஒழிந்த மகரம் வரின் நும்மணி என இயல்பாமென்பது பெற்றாம். (கஅ)

உஉஉ. அகமுனர்ச் செவிகை வரின்இடை யனகெடும்.

எ - னின். அகம் என்னுஞ் சொற்கு 'வன்மைக் கினமாத் திரப வும்' என எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அகம் என்னும் இடப்பெயர் முன்னர்ச் செவி கை என்னுஞ் சினைப்பெயர் வரின், நிலைமொழியிறுதி மகரம் வன்மைக்கு இனமாத் திரிதலேயன்றி, அதனிடை நின்ற ககரவொற்றும் அதனையூர்ந்த அகரவுயிருங் கெடும் எ - று.

எ - டு: "அஞ்செவி நிறைய மந்திரமோதி." "அங்கையு ணெல்லியதன் பயன்." என வரும்.

செவி எனச் சகரத்தை முற்கூறினர், "அஞ்சிறைத் தும்பி." எனவும் வருதலினென்க.

இடையன கெட்டே வருமென நியதி கூறாமையின், அகஞ் செவி, அகங்கை, அகஞ் சிறை என வருதல் விலக்கப்பட்டன வல்லவென்க.

நகர்ப்புறம் என்பதனைப் புறநகர் என்றாற்போலச், செவி யகங் கையகம் என்னும் இடவுறுப்புத் தற்கிழமைப் பெயரோடு முடிந்த ஆறும்வேற்றுமைத் தொகைச்சொல்லை முன்பின்னாக

வழங்கலின், இவ்விரண்டும் இலக்கணப்போலியாய்த் தழாத் தொடராய அல்வழியுள் ஒன்றுமென்க.

அகச்சிறை என்பது, ஏனையவற்றின் சிறைபோலப் புறத்தின்கண்ணவன்றி அகத்தின் கண்ணவாகலின், ஏழாம்வேற்றுமைத்தொகை. (கக)

உஉ௩. ஈமும்,

கம்மும் உருமும் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.

எ - னின். இம் மூன்று சொற்கும் 'மவ்வீ றொற்றழிந்து' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்று சொல்லும், இருவழியும் முதனிலைத் தொழிற்பெயர்போல யவ்வன் மெய்வரின், உகரச் சாரியை பெற்று முடியும்; இவற்றுள் முதற்கண் நின்ற ஈமும் கம்மும், வேற்றுமைக்கண், உகரச்சாரியையன்றி அகரச்சாரியையும் பெறும் எ - று.

இவற்றுள் கம் என்பது, பலபொருளொருசொல்லாதலின், எப்பொருளை உணர்த்தி நிற்பினும், இவ்விதி கொள்க.

எ - டு: ஈமுக்கடிது, கம்முக்கடிது, உருமுக்கடிது, நீண்டது, வலிது எனவும்; கடுமை, நீட்சி, வன்மை எனவும்; ஈமக் குடம், கம்மக்குடம் எனவும் முறையே காண்க. பிறவும் அன்ன. கம் என்பது கம்மியரது தொழில்: அத்தொழிலாற் சமைந்த குடம் என்க. இது முதனிலைத் தொழிலன்றாதலின், மானும் என்றார். (உO)

## [illegible] யரழ ஈறு

உஉ௪. யரழ முன்னர்க் கசதப அல்வழி
இயல்பு மிகலும் ஆகும் வேற்றுமை
மிகலும் இனத்தோ டுறழ்தலும் விதமேல்.

எ - னின். ய ர ழ மெய்யீற்று முன் க ச த ப க்கள் புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றீற்றின் முன்னுங் க ச த பக்கள் வரின், அல்வழிக்கண் இயல்பாதலும் மிகுதலும், வேற்றுமைக்கண் மிகுதலும் வல்லினமாதல் மெல்லினமாதல் மிகுதலும் விதியாம் எ - று.

எ - டு. வேய் கடிது, வேர் கடிது, வீழ் கடிது எனவும்; மெய்க் கீர்த்தி, போய்க்கொண்டான், கார்ப்பருவம், பூழ்ப்பறவை எனவும்; நாய்க்கால், தேர்க்கால், பூழ்க்கால் எனவும்; வேய்க் குழல், வேய்ங்குழல், ஆர்க்கோடு, ஆர்ங்கோடு எனவும் முறையே வந்தன. பிறவும் அன்ன.

மேலென்ற மிகையானே, [1]"வாய்புகு வதனினுங் கால் பெரிது." என வேற்றுமைக்கண் இயல்பாதலும், பாழ்க்கிணறு பாழ்ங்கிணறு எனப் பண்புத்தொகைக்கண் உறழ்தலும், இன்னும் அமையாதன உளவேல் அவையுங் கொள்க. (உக)

**உஉரு. தமிழ்அவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே**
**தாழுங் கோல்வந் துறுமேல் அற்றே.**

எ - னின். இவ்விருசொற்கும் எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) தமிழ் என்னுஞ் சொல், நாற்கணமும் வரின், வேற்றுமைக்கண் அகரச்சாரியையைப் பொருந்தவும் பெறும்; தாழ் என்னும் சொல்லும், கோல் என்னுஞ் சொல் வந்து பொருந்துமாயின், அவ்வகரச்சாரியையைப் பெறும் எ - று.

தமிழ்ற்கு வருமொழி வரையாமையின், நாற்கணமும் என்றாம்

எ - டு: தமிழப் பல்லவதரையர், தமிழநாகன், தமிழவளவன், தமிழவரசன் எனவும்; தாழக்கோல் எனவும் வரும். பிறவும் அன்ன.

அவ்வுறவும் என்னும் எதிரதுதழீஇய எச்சவும்மையானே தமிழின் சுவை என இன்சாரியை பெறுதலுங் கொள்க.

தமிழையுடைய பல்லவதரையர், தாழைத்திறக்குங் கோல் என விரியும். தாழக்கோல் எனினுந் திறவுகோல் எனினும்

1. புறநா. கஅச.

அமையும். தாழாயகோல் என ஒரு பொருட்கு இருபெயரொட்டாக்கலும் ஒன்று. (௨௨)

௨௨௬. கீழின்முன் வன்மை விகற்பமும் ஆகும்.

எ - னின். கீழ் என்னுஞ் சொல்முன் வரும் வல்லினத்திற்கு 'ய ர ழ முன்னர்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது பெரும்பாலும் விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) கீழ் என்னுஞ் சொல்முன் வரும் வல்லினம், ஒருகால் இயல்பாகியும் ஒருகால் மிக்கும் வரும் விகற்பத்தையும் பொருந்தும் எ - று.

எ - டு: கீழ்குலம், கீழ்க்குலம்; கீழ்சாதி, கீழ்ச்சாதி என வரும். பிறவும் அன்ன.

இழிவுசிறப்பும்மையான், இவற்றுள் இயல்பே சிறப்புடைத்தென்க. கீழ்மை என்னும் பண்பொடு புணர்தல் பதவியலுள் முடித்துப் போந்தமையின், [1]"கீழிருந்தும் - கீழல்லார் கீழல்லவர்" என்றாற்போலக் கீழ் என்பது பண்பாகுபெயராய், இத்தொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாமென்க. (௨௩)

## ௩. லகர ளகர ஈறு

௨௨௭. லளவேற் றுமையிற் றடவும் அல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி
மேவி னணவும் இடைவரின் இயல்பும்
ஆகும் இருவழி யானும் என்ப.

எ - னின். ல ளவீறு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) லகார ளகாரமான இரண்டீறும், வல்லினம் வரின், வேற்றுமைக்கண் முறையே றகார டகாரங்களாம்; அல்வழிக்கண்ணே றகார டகாரங்களுடனே உறழ்வனவாம்; இருவழிக்கண்ணும் மெல்லினம் வரின், னகார ணகாரங்களாம்; இடையினம் வரின் இயல்பாம் என்று சொல்லுவர் புலவர் எ - று.

---

1. திருக்குறள், கஎ௩.

எ - டு: கற்குறை, முட்குறை எனவும்; கல் குறிது, கற்குறிது; முள்குறிது, முட்குறிது எனவும்; கன்ஞெரிந்தது, முண்ஞெரிந்தது எனவும்; கன்ஞெரி, முண்ஞெரி எனவும்; கல்யாது, முள்யாது எனவும்; கல் யாப்பு, முள்யாப்பு எனவும் முறையே வந்தன. பிறவும் அன்ன.

அல்வழியவற்றோடுறழ்வும் என்றாரேனும் இவற்றோடு மயங்காதெனவிலக்கிய தகரம் வரின், எற்புழிக்கோடலான் உறழ்ச்சியுள் இயல்பு ஒழித்துத் திரிபு ஒன்றுமே பெறுதல் கொள்க. கற்றீது, முட்டீது என வரும். (உச)

உஉரு. [1]குறில்வழி லளத்தவ் வணையின் ஆய்தம்
ஆகவும் பெறூஉம் அல்வழி யானே.

எ - னின். இவ்விரண்டீற்றிற்கும் மேலைச் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்.) தனிக்குறிலின் பின்னின்ற லகர ளகரங்கள், அல்வழிக்கண்ணே தகரம் வருமாயின், றகர டகரங்களாகத் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரிதலையும் பொருந்தும் எ - று.

எ - டு: கஃறீது; முஃடீது என வரும். (உரு)

உஉகூ. குறில்செறி யாலள அல்வழி வந்த
தகரம் திரிந்தபின் கேடும் ஈரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்பும் திரிபும் ஆவன உளபிற.

எ - னின். 'ல ள வேற்றுமையிற் றடவும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறில் ஒன்றனையுஞ் சாராது வரும் லகார ளகாரங்கள், அல்வழிக்கண் வந்த தகரந் திரியுமிடத்துக் கெடுதலும், இருவழிக்கண்ணும் வந்த நகரந் திரியுமிடத்துக் கெடுதலும், வல்லினம் வரின் அல்வழிக்கண்

1. இதன் பொருளையும் உகூஎ-ஆம் சூத்திரத்தின் பொருளையும், "குறில்வழி லகரம்" (பிரபு. அக்கமா. உஅ) என்னும் செய்யுளில் உவமையாக எடுத்துக்கூறி யிருத்தல் அறிந்து இன்புறற்குரியது.

உறழாது இயல்பாதலுந் திரிதலும், வேற்றுமைக்கண் திரியாது இயல்பாதலும் பொருந்துவன உள எ - று.

திரிபுழுற் கெடுவனவற்றைத் திரிந்தபிற் கேடும் மாய்வும் என்றனமபிற் காலவுழுவமைதி

எ - டு. தோன்றறீயன், வேடீயன் எனவும்; தோன்ற னல்வன், வேணல்வன் எனவும்; தோன்றனன்மை, வேணன்மை எனவும்; கால்கடிது, மரங்கள்கடிய எனவும்; வேற்படைக் குமரன், வாட்படைக் கையன் எனவும்; [1]"கால்குதித் தோடிக் கடல்புக மண்டி" "வாள்போழ்ந் தட்ட நீள்கழன் மறவர்." எனவும் முறையே காண்க.

பிறவென்ற மிகையானே, தோன்றறீமை வேடீமை என வேற்றுமைக்கண்ணுந் தகரந் திரியுமிடத்துக் கெடுதலும், காற் றுணை தாட்டுணை எனக் கெடாமையும், விற்படை என உறழாது திரிதலும், கொல்களிறு கொள்பொருள் என வினைத்தொகை இயல்பாதலும், இன்னும் இவ்விரண்டற்றுள் அமையாதன பிறவுங் கொள்க. இங்ஙனம் உயர்திணைச்சொல்லின்கட் காட்டிய விகாரங்கள், மயக்கவிதியின்மையிற் படுவனவாதலின், 'சில விகாரமா முயர்திணை' என்பதனுள் அடங்காவென்க (௨௬)

**௨௩௰. லளவிறு தொழிற்பெயர் ஈரிடத்தும் உவ்வுறு**
**வலிவரின் அல்வழி இயல்புமா வனஉள.**

எ - னின். விதந்பெற்ற தொழிற்பெயர்க்கும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்க்கும் வருவதோர் ஐயமறுத்தலும் ஒருவாற் றல் 'அல்வழி யவற்றோ டுறழ்வும்' என எய்தியது விலக்கலும் நுதலிற்று

(இ - ள்.) லகாரத்தை இறுதியாகவுடைய விகுதி பெற்ற தொழிற்பெயரும், ளகாரத்தை இறுதியாகவுடைய முதனிலை திரிந்த தொழிற்பெயரும், முதனிலைத் தொழிற் பெயர்போல, யவ்வன்மெய்வரின் உகரம் பெறுமோ பெறாவோ என்று ஐயுறற்க; இருவழியும் உகரம் பெறுவாம். வல்லினம் வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாவனவுஞ் சிலவுள எ - று.

எ - டு: ஆடல் சிறந்தது, ஆடற்சிறந்தது; ஆடனன்று, ஆடல்வலிது எனவும்; ஆடற்சிறப்பு, ஆடனன்மை, ஆடல்வன்மை

1. திருவாசகம், கீர்த்தி: ௧௩௫.

எனவும்; கோள்கடிது, கோட்கடிது; கோணன்று, கோள் வலிது எனவும்; கோட்கடுமை, கோணன்மை, கோள்வன்மை எனவும் இருவழியும் உகரம் பெறாது பொதுவிதியான் முடிந் தன. நடத்தல் கடிது, நடப்பித்தல் கடிது எனச் சில உறழாது அல்வழிக்கண் இயல்பாயின

இறந்தது தழீஇய எச்சவிழிவு சிறப்பும்மையானே, பின்னல் கடிது, பின்னற்கடிது; உன்னல் கடிது, உன்னற்கடிது எனப் பொதுவிதியான் உறழ்தலே பெரும்பாலவென்க. (உஎ)

உ௬க. வல்லே தொழிற்பெயர் அற்றிரு வழியும்
பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.

எ - னின். 'ல ள வேற்றுமையிற் றடவும்' என்னுஞ் சூத்திரத் தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) வல் என்னுஞ் சூதாடுகருவிப் பெயர், யவ்வன் மெய்வரின் தொழிற்பெயரேபோல இருவழியும் உகரச்சாரியை பெறும்; பலகை நாய் என்னும் இருபெயர் வரினும், பிறபெயர் வரினும், வேற்றுமைக்கண், அகரச் சாரியையும் உகரசசாரியையும் பெறும எ - று.

வரினும் என்னும் எதிரது தழீஇய எச்சவும்மையால் பிற பெயர் என்பதூஉம், அவ்வும் என்னும் இறந்தது தழீஇய எசச வும்மையான் உகரச்சாரியை என்பதூஉம் பெற்றாம்.

எ - டு: வல்லுக் கடிது, நன்று, வலிது எனவும்; வல்லுக் கடுமை, நன்மை, வன்மை எனவும்; வல்லப்பலகை, வல்லநாய், வல்லப்புலி, வல்லக்குதிரை எனவும்; வல்லுப்பலகை, வல்லு நாய், வல்லுப்புலி, வல்லுக்குதிரை எனவும் முறையே காண்க. வல்லினது அறை வரைந்த பலகை, வல்லினுள் நாய் என விரியும். வேற்றுமைக்கென்றமையின் வல்லாய நாய் என இருபெய ரொட்டாயவழி அகரச்சாரியை பெறாதென்க. (உஅ)

உ௬உ. நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்வழி யானும் றகரம் ஆகும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்) இந்நான்கு சொல்லும், வல்லினம் வரின் பொதுவிதியான் உறழாது, அல்வழிககண்ணும் வேற்றுமை போல றகரமாய்த் திரிந்து முடியும் எ - று.

உ-ம்: நெற், செற், கொற், சொற், கடிது, சிறிது, தீது, பெரிது என வரும். செல் என்பது மேகம். கொல் என்பது "கூருயிர் குடித்த" என்றாற்போலக் கொல்லன் என்னும் உயர்திணைப்பொருளை உணர்த்தி நின்றதோர் அஃறிணைச் சொல். (உக)

உ௩௩. இல்லென் இன்மைச் சொற்கை அடைய
வன்மை விகற்பமும் ஆகா ரத்தொடு
வன்மை யாகலும் இயல்பும் ஆகும்.

**இ-ன். இல் என்னும் பண்புச்சொற்கு, 'ல ள வேற்றுமையிற் றடவு மல்வழி யவற்றோ டுறழ்வும்' என எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் அவற்றின் முன்வரும் வல்லினத்திற்கு 'அல்வழி இ ஐ முன்ன ராயின்' என்னுஞ் சூத்திரத்தானும் 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தானும் எய்தியது இகந்துபடாமற் காத்தலும் நுதலிற்று.**

*(இ-ள்.) இல் இடத்தை உணர்த்தாது இன்மைப் பண்பை உணர்த்தி நிற்கும் இல் என்னுஞ் சொற்கு ஐகாரச் சாரியை பொருந்த, அவ்வழி வரும் வல்லினம் விகற்பித்தலும், ஆகாரச்சாரியை பொருந்த அவ்வழி வரும் வல்லினம் மிகுதலும், இவ்விருவிதியும் பெறாது இயல்பாதலும் பொருந்தும் எ-று.*

*சாரியைப்பேற்றிற்கு வருமொழி வரையாமையின், நாற்கணமுங் கொள்க.*

*உ-ம்: இல்லைப்பொருள், இல்லைபொருள்; இல்லாப்பொருள், இல்பொருள், ஞானம், வன்மை, அணி என வரும்.*

*இல் என்னும் பண்படி நின்று வருமொழியோடு புணர்வழி வருஞ் சாரியையாதலின், இவ்விருசாரியை தோன்றியவழியும், இல்பொருள் என்னும் இயல்புப் புணர்ச்சிபோற் பண்புத்தொகையேயா மென்க. இது மெய்யீற்றுப்புணரியல் ஆதலானும், லகரவீற்றிற்குப் பொதுவிதி கூறிச சிறப்புவிதி கூறும்வழி இன்மைப்பொருளைத் தரும் இல் என்னுஞ் சொற்கென விதந்தமையானும், விகுதியடைதல் பதவியலுளன்றி ஈண்டுக் கூறவேண்டாமையானும், ஆகாரத்தோடு வன்மையாகலுமென வல்லினப்பேற்றோடு ஆகாரத்தையும் உடனிகழ்த்திக் கூறுதலானும், இயல்புமாகும் என்றமையானும், மறைப்பொருளை இல்லென்னும் பகுதியன்றி ஆகாரந்தரவேண்டாமையானும், தருமேல் இன்மைக்கு மறையாய உண்மைப்பொருளைத் தரவேண்டும்*

ஆதலானும், ஆகார மறைவிகுதி தெரிநிலைக்கன்றிக் குறிப்பிற்கு வாராமையானும், ஈண்டுப்பெறும் ஐகாரவாகாரங்கள் சாரியையே யன்றிக் குறிப்புமுற்று விகுதியும், எச்சத்தின்கண் வந்த மறை விகுதியும் அல்லவென்க.

இல்லைபொருள் இல்லைப்பொருள் என்பன இங்ஙனங் கூறிய வாறே பண்புத்தொகையாகவும் ஐகாரவீற்றுக் குறிப்புமுற்றுப் பயனிலையோடு முடிந்த தொகாநிலையாகவுங் கொள்ளப்படுமாத லின் தம்முள் வேற்றுமை யாதோவெனின்:—தொகைநிலை ஒரு மொழிபோல் நடத்தலுந் தொகாநிலை விட்டிசைத்து நடத்தலுந் தம்முள் வேற்றுமையென்க. இல்லாப்பொருள் என்பது, இங்ஙனங் கூறியவாறே பண்புத்தொகையாகவும், இல்லாத என்னும் பெயரெச்சக்குறிப்பினது இறுதி கெட்டுப் பயனிலையோடு முடிந்த தொகாநிலையாகவுங் கொள்ளப்படும். இவற்றிற்குத் தம்முள் வேற்றுமை அதுவாமென்க.

இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும்,

[1]"இல்லென் கிளவி யின்மை செப்பின்
வல்லெழுத்து மிகுதலு மையிடை வருதலு
மியற்கை யாதலு மாகாரம் வருதலுங்
கொளத்தகு மரபி னாகிட னுடைத்தே."

என்றார். (௩0)

உ௩௪. புள்ளும் வள்ளும் தொழிற்பெயரு மானும்.

எ - னின். 'ல ள வேற்றுமையிற் றடவும்' என்னுஞ் சூத்திரத் தான் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விரு சொற்களும், இருவழியும் யவ்வன் மெய் வரின் பொதுவிதியான் முடிதலேயன்றித் தொழிற் பெயர்போல, உகரச்சாரியை பெற்றும் புணரும் எ - று.

எ - டு : புள்ளுக்கடிது, வள்ளுக்கடிது, நன்று, வலிது எனவும் ; கடுமை, நன்மை, வன்மை எனவும் வரும். (௩௧)

---

## எ. வகர ஈறு

உ௩௫. சுட்டு வகரமு வினமுற முறையே
ஆய்தமும் மென்மையும் இயல்பும் ஆகும்.

1. தொல்காப்பியம், எழு. புள்ளிமயங்கியல், சூ. எஎ.

எ - னின் வகரவீற்றுச் சுட்டுப்பெயர் மூவினத்தோடும் புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அவ், இவ், உவ் என்னும் அஃறிணைப் பன்மைச்சுட்டுப் பெயர்ற்று வகரம், வல்லினமும் மெல்லினமும் இடையினமும் வர, முறையானே ஆய்தமும் வரு மெல்லினமும் இயல்புமாம் எ - று.

எ - டு: அஃகடிய, இஃகடிய, உஃகடிய எனவும்; அஞ்ஞானம், இஞ்ஞானம், உஞ்ஞானம் எனவும்; அவ்யானை, இவ்யானை, உவ்யானை எனவும் வரும்.

வேற்றுமைப்புணர்ச்சிக்கு அற்றுச்சாரியை பெறுமென மேல் விதத்தலின், இவ்விதி அல்வழிக்கென்க. (௬௨)

உ௬௬. தெவ்வென் மொழியே தொழிற்பெயர் அற்றே
மவ்வரின் வஃகான் மவவும் ஆகும்.

எ - னின். தெவ் என்னுஞ் சொல் யவ்வன்மெய்யோடு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெவ் என்னுஞ்சொல், யவ்வன் மெய்யோடு புணருமிடத்துத், தொழிற்பெயர்போல உகரச் சாரியை பெற்று முடியும்; அவற்றுள் மகரம் வருங்கால், உகரச்சாரியை பெறுதலேயன்றி, ஒரோவழி ஈற்று வகரம் மகரமாகத் திரியவும் பெறும் எ - று.

எ - டு: தெவ்வுக் கடிது, மாண்டது, வந்தது எனவும்; தெவ்வுக் கடுமை, மாட்சி, வன்மை எனவும்; தெவ்வுமன்னர், தெம்மன்னர் எனவும்; தெவ்வுமுனை, தெம்முனை எனவும் இருவழியினும் முறையே காண்க. இப்பகை என்னும் பண்புப் பெயர் பண்பியாய்ப் பகைப்பொருளை உணர்த்தி ஆகுபெயராய் நின்றவழியும், இவையே காட்டெனக. (௬௬)

## ௮. வருமொழித் தகரநகரத்திரிபு

உ௬எ. னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகும் தநக்கள் ஆயுங் காலே.

எ - னின். முன்னர்ப் புணர்த்திய வருமொழிக்கு முதலாய மெய்களுள் திரிதற்பாலன இவையென விதந்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) னகர லகரங்கண் முன்னர் வருந் தகரம் றகரமாம், அவற்றின் முன்னர் வரும் நகரம் னகரமாம், ணகர ளகரங்களின் முன்னர் வருந் தகரம் டகரமாம், அவற்றின் முன்னர் வரும் நகரம் ணகரமாம், ஆராயுங் காலத்து எ - று.

எ - டு: பொன்றீது, கற்றீது, பொன்னன்று, கன்னன்று, மண்டீது, முட்டீது, மண்ணன்று, முண்ணன்று என வரும். தீமை, நன்மை என வருவித்து, வேற்றுமைக்கண்ணுந் திரியுமாறு காண்க.

ஆயுங்காலே என்றதனுன், அல்வழி வேற்றுமைப்பொருள் நோக்கத்தானன்றி மயக்கவிதியின்மையின் இங்ஙனம் புணரும் முதல் ஈறு இரண்டனுள் ஒன்றேனும் இரண்டுமேனும் விகாரப் பட்டு மயங்குதற்கு உரியனவாகி நின்று புணருமென்பதூஉம், மயக்கவிதி உள்ளனவற்றிற்கு வரும் விகாரம் அல்வழி வேற்று மைப் பொருள் நோக்கத்தான் வருமென்பதூஉம் பெற்றாம். (௩௪)

### வேற்றுமைப் பொருட்புணர்ச்சியை உருபுபுணர்ச்சியோடு மாட்டெறிதல்

உ௩௫. உருபின் முடிபவை ஒக்குமப் பொருளினும்.

என்னின். உயிரீற்றுப்புணரியற்கண்ணும் இவ்வியற்கண்ணும் முடிந்த வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் உருபுபுணர்ச்சிக்கண் முடியு முடிபு கள் அப்பொருட்புணர்ச்சிக்கண்ணும் ஒக்கும் எ - று.

எ - டு: எல்லாவற்றதும், எல்லாவற்றுக்கோடும் என, அஃறிணைக்கண் அற்றும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போலப், பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன. எல்லாநமதும், எல்லா நங்கை யும் என உயர்திணைக்கண் நம்மும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போலப், பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன. எல்லார் தமதும், எல்லார்தங்கையும், எல்லீர்நுமதும், எல்லீர்நுங்கையும்; தனது, தன்கை; தமது, தங்கை; நமது, நங்கை; எனது, என்கை; எமது, எங்கை; நினது, நின்கை; நுமது, நுங்கை என உருபு புணர்ச்சிபோற் பொருட்புணர்ச்சியும் முடிந்தவாறு காண்க. பிறவும் அன்ன. (௩௫)

## கூ. புணரியல்களுக்குப் புறனடை

உ௩௧. இடையுரி வடசொலின் இயம்பிய கொளாதவும்
போலியும் மரூஉவும் பொருந்திய வாற்றிற்கு
இயையப் புணர்த்தல் யாவர்க்கும் நெறியே.

எ-னின். இப்புணரியல்கட்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இடைச்சொல்லினும் உரிச்சொல்லினும் வடசொல்லினும் உயிரீறும் ஒற்றீறுமான புணரியலில் தோன்றல் திரிதல் கெடுதல் இயல்பு என ஓதிய புணர்ச்சி யிலக்கணங்கள் பொருந்தாது வேறுபட்டு வருவனவும், இலக்கணப்போலி மொழிகளும், மரூஉமொழிகளும், இருவகை வழக்கினும் நடக்கும் முறைமையறிந்து அதற்குப் பொருந்துமாறு புணர்க்கை அறிவுடையோரெல்லார்க்கும் முறைமை எ-று.

ஆன் கன்று, உண்டின்கால் என வேற்றுமைப்புணர்ச்சிக்கண் சாரியை இடைச்சொல் திரியாது இயல்பாயின. மழகளிறு, தடந்தோள் என அகரவீற்றுரிச்சொல்முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயும் மெல்லெழுத்து மிகுந்தும் வந்தன. அளிகுலம், தனதடம் என இயல்பீறும் விதியீறுமான உயிரீற்று வடசொல் முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயின. இன்முன் முன்றில், பொது இல பொதியில் என இலக்கணப்போலி மொழிகளும், அருமருந்தன்னபிள்ளை அருமந்தபிள்ளை, குணக்குள்ளது குணாது, தெற்குள்ளது தெனாது, வடக்குள்ளது வடாது, சோழனாடு சோணாடு, பாண்டியனாடு பாண்டிநாடு, மலையமானாடு மலாடு, தஞ்சவூர் தஞ்சை, ஆற்றூர் ஆறை, ஆதன்றந்தை [1]ஆந்தை, பூதன்றந்தை பூந்தை, வடுகன்றந்தை வடுகந்தை என மரூஉ மொழிகளும் நிலைமொழி வருமொழிகளுள் ஏற்குஞ் செய்கை யறிந்து முடிக்க. பிறவும் அன்ன. (௧௬)

மெய்யீற்றுப்புணரியல் முற்றிற்று.

---

1. ஆந்தை; பூந்தை: இம்மரூஉ மொழிகளின் முடிபை, "இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்", "ஆதனும்பூதனும்" (தொல். புள்ளி. சூ. 52-53.) என்பவற்றால் உணர்க.

# ரு. உருபுபுணரியல்

## க. உருபுகள்

*எட்டுருபுகளுஞ் சாருமிடவகையால் இத்தனையாமென்பது*

உ௪௦. ஒருவன் ஒருத்தி பலர்ஒன்று பலஎன
வருபெயர் ஐந்தொடு பெயர்முதல் இருநான்கு
உருபும் உறழ்தர நாற்பதாம் உருபே.

எ - னின். வேற்றுமையுருபுகள் நிலைமொழியோடும் வருமொழியோடும் புணருமாறு இவ்வியலாற் கூறுவான் தொடங்கி, அவ்வெட்டுருபுகளுஞ் சாரும் இடவகையான் இத்துணைத்தென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *இப்பாற்பொருளின என்று கருத வரும் ஐந்து பெயருடனே எழுவாய் வேற்றுமையான பெயர் முதலாக விளியிறாக நின்ற எட்டுருபினையும் உறழ, வேற்றுமையுருபுகள் நாற்பதாம் எ - று.*

*சொல்மேல் வைத்தோதின் இப்பெயர்களோடன்றிப் பொதுப்பெயர்களோடு உருபு வாராவெனப் பொருள்படுமாதலின், எல்லாப்பெயரும் அடங்குதற்குப் பொருள்மேல் வைத்து, என வருபெயர் என்றார்.*

வ - று: *நம்பி, சாத்தி, மக்கள், மரம், மரங்கள் என்னும் இவற்றுள், நம்பி, நம்பியை, நம்பியால், நம்பிக்கு, நம்பியின், நம்பியது, நம்பிகண், நம்பீ என ஒருவன் என்னும் வாய்பாட்டு உயர்திணை ஆண்பாற் பெயரோடு எட்டுருபுகளும் வந்தன. ஏனை நான்கு பெயரோடும் இவ்வாறே ஒட்டுக.* (க)

*வேற்றுமையுருபுகள் வருதற்குக் காரணமும் வருமிடமும்*

உ௪க. பெயர்வழித் தம்பொருள் தரவரும் உருபே.

எ - னின். வேற்றுமையுருபுகள் வருதற்குக் காரணமும் வரும் இடமும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *வேற்றுமையுருபுகள் தம்பொருளைத் தரப் பெயர்க்குப் பின் வரும் எ - று.*

வ - று : நம்பி பெற்றான், நம்பியைப்பெற்றான், நம்பியாற் பெற்றான் என வரும். பிறவும் அன்ன.

தம்பொருள்தர வருவன எழுவாய் முதலிய எட்டுருபும், வழி வருவன பெயர் முழுவதூஉம் உருபாய எழுவாயொழிந்த ஏழுருபும் எனக்கொள்க. (௨)

## ஐம்முதலிய ஆறுருபும் நிலைமொழி வருமொழியோடு புணருமாறு

௨௪௨. ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன் அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.

எ - னின். ஐம்முதலிய ஆறுருபும் நிலைமொழி வருமொழி யோடு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தொகாநிலையாய வேற்றுமைப்புணர்ச்சிக் கண் இடையே நின்று நிலைமொழியோடும் வருமொழி யோடும் புணரும் ஒற்றுயிர்களை முதலும் ஈறுமாகவுடைய ஐம் முதலிய வேற்றுமையுருபு ஆறும், இடைச்சொல்லே னும், இயல்பொடு விகாரத்தினையும் புணர்ச்சிவகையாற் பெரும்பாலும் ஒக்கும், போன இரண்டியலுள்ளும் வேற் றுமைப்புணர்ச்சிக்கண் இயல்பொடு விகாரத்து இயைந்த ஒற்றுயிர் முதலீற்றுப் பெயர்களை எ - று.

மன் என்றமையாற் சிறுபான்மை ஒவ்வா என்பதாம்.

எ - டு : நம்பிகண் வாழ்வு என்புழி, 'ஆவி யரமுன் வன்மை மிகா' என்றும், 'ண ன வல்லினம் வரட் டறவும் பிறவரி னியல்பு மாகும் வேற்றுமைக்கு' என்றுங் கூறியவாறே, கண் உருபின் முதலும் ஈறும் இயல்பாயின.

உறிக்கட்டயிர் என்புழி, 'இயல்பினும் விதியினு நின்ற உயிர் முன் க ச த ப மிகும்' என்றும், 'ண ன வல்லினம் வரட்டறவும்' என்றுங் கூறியவாறே, கண் உருபின் முதலும் ஈறும் விகார மாயின.

பழிக்கஞ்சி என்புழி, 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்' என்றும், 'முற்றுமற் றொரோவழி' என்றுங் கூறியவாறே, குவ்வுருபின் முதலும் ஈறும் விகாரமாயின.

நம்பிக்குப்பிள்ளை என்புழி, 'ஆவியரமுன் வன்மைமிகா' என்ற விதி ஒவ்வாது, குவ்வுருபின் முதல் வல்லொற்று மிக்கது. பிறவும் அன்ன.

இவ்வுருபு, சாத்திக்கு, கிளிக்கு எனப் பொதுப்பெயரஃறிணைப் பெயர்க்கண்ணும் மிகுதலிற் 'சில விகாரமா முயர்திணை' என்னும் விதியன்று.

ஒற்றுயிர் முதலீற்றுருபுகள் என்றமையின் 'நாற்பதாமுருபே' எனத் தொகை கொடுத்துக் கொணர்ந்தவற்றுள் எழுவாயும் விளியும் ஒழித்துத் தமக்கென உருபு முதலீறுமுடைய ஐம்முதலிய ஆறுருபிற்கும் இவ்விதி கூறுகின்றார் என்பதூஉம், இவ்வுருபுகளின் முதல் ஈறுகட்கு மாட்டேற்றான் இவ்விதி கூறவே உருபின் இருமருங்கும் புணரும் நிலைமொழியீறும் வருமொழி முதலும் படும் பாகுபாட்டிற்கு விதி போன இரண்டியலுள்ளும் வேற்றுமைப்புணர்ச்சிக்கென விதித்தவற்றுள் அடங்குமாதலின் அவையும் இம்மாட்டேற்றான் அமைத்தாரல்லர் என்பதூஉம், அங்ஙனம் அடங்குதற்கு 'மூன்றூறுருபெண்' என்னுஞ் சூத்திரமே கரியென்பதூஉம், 'தான்று நாமுதல் குறுகும்' என்றல் தொடக்கத்துருபோடு புணரு நிலைமொழிகளின் விகாரங்கள் தொகைநிலைக்கண்ணும் நாற்கணத்தின் முன்னும் வருதலின் அவ்விகாரம் எழுத்துப்புணர்ச்சியான் வந்தனவல்ல, வேற்றுமைப் பொருள் நோக்கத்தானே வந்தன, அதனல் இவ்வியலுட் கூறப்படுமென்பதூஉம், ஒக்குமன்னப்பெயர் என்றமையின் வினையிறுதி வேற்றுமைப்புணர்ச்சிக்கு வாராமையின், அதனை ஒழித்துப் பெயரை உவமித்தார் என்பதூஉம், வேற்றுமைப்புணர்ப்பே என்றமையின் வேற்றுமையுருபின் புணர்ச்சியாதலின், அதற்கு அல்வழிப் புணர்ச்சி ஒவ்வா என்பதூஉம் பெற்றாம். (ரு)

## உ. சாரியை

### சாரியை வருமாறு

உசரு. பதமுன் விகுதியும் பதமும் உருபும்
புணர்வழி ஒன்றும் பலவும் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமும் ஆகும்.

எ - னின். உருபுபுணர்ச்சிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியாகச் சாரியைமேல் விதிப்பான் தொடங்கி அவை வருமாறு இவ்வாறெனை உணர்த்தும்வழி ஒப்பின்முடித்தலான் விகுதிப் புணர்ச்சிக்கும் பதப்புணர்ச்சிக்கும் உடனுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பதத்தின் முன் விகுதியேனும் பதமேனும் உருபேனும் புணருமிடத்துச், சாரியை யொன்றேனும் பலவேனும் வருதலும், வாராதொழிதலும், இவ்விரண்டு மாகிய விகற்பமுமாம் எ - று.

புணர்ந்தவழி புணரும்வழி என்னாது புணர்வழி எனப் பொதுமையிற் கூறவே, இம்மூவகைப் புணர்ச்சியுள் சாரியை விதித்தனவற்றுள்ளும் விதிப்பனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள் ளும் அவை வருமாறு இஃவாறெனவுய்த்துணர்க என்றாராயிற்று.

வ - று: நடந்தனன் எனவும்; நடந்தான் எனவும்; நடந் தன, நடந்த எனவும் விகுதிப் புணர்ச்சியுட் சாரியை வேண்டியும் வேண்டாதும் விகற்பித்தும் வந்தன. புளியமரம், புளியங்காய்; உரினுக்கடிது, உரினுக் கடுமை எனவும்; புளிக்கறி எனவும்; நெல்லின்குப்பை, நெற்குப்பை எனவும்; பதப்புணர்ச்சியுட் சாரியை அவ்வாறாயின. அவற்றை, அவற்றினை; மரத்தை, மரத்தினை எனவும்: தன்னை, என்னை எனவும்; ஆனை, ஆவை எனவும்; உருபுபுணர்ச்சியுட் சாரியை அவ்வாறாயின. பிறவும் அன்ன.

மாடத்துக்கு, மாடக்கு என்றற்றொடக்கத்தன, வேண்டிய வழி இன்மையிற் செய்யுள் விகாரமாமென்க. (ச)

சாரியைகள் இவையென்பது

உசச. அன் ஆன் இன் அல் அற்றிற் றத்தம்
தம்நம் நும்ஏ அஉ ஐகுன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.

எ - னின். மேற் சாரியையென்றார், அவை யிவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அன்னும் ஆனும் இன்னும் அல்லும் அற்றும் இற்றும் அத்தும் அம்மும் தம்மும் நம்மும் நும் மும் ஏயும் அவ்வும் உவ்வும் ஐயும் குவ்வும் னவ்வும், இவை போல்வன பிறவும், விகுதி பதம் உருபென்னும் மூன்று புணர்ச்சிக்கண்ணுந் தனிமொழிக்கண்ணும் வருதலிற், பொதுச் சாரியையென்னும் பெயரவாம் எ - று.

வ - று: ஒன்றன் கூட்டம், ஒருபாற்கு, வண்டின்கால், தொடையல், பலவற்றை, பதிற்றுப்பத்து, மரத்திலை, மன்றம்,

எல்லார்தம்மையும், எல்லாநம்மையும், எல்லீர்நும்மையும், கலனே தூணி, நடந்தது, சாத்தனுக்கு, "கேழலட்ட பேழ்வாயேற்றை"[1], "துறுகன் மறையினும் உய்குவை போலாய்"[2], ஆன் என முறையே காண்க.

இன்னபிற என்றதனானே, அவன்றனை என்புழித் தன் என்னுஞ் சாரியையும், அவன்றான் அவர்தாம் என்புழித் தான் தாம் என்னுஞ் சாரியையும், புற்றுஞ்சோறு என்புழி ஆஞ்சாரியையும், இல்லாப்பொருள் என்னும் பண்புத்தொகைக்கண் ஆகாரச் சாரியையும் வந்தன. இன்னும் வருவனவுங் காண்க. (௫)

## ௩. உருபுபுணர்ச்சிக்குச் சிறப்புவிதி

௨௪௫. எல்லாம் என்ப திழிதிணை ஆயின்
அற்றோ டுருபின் மேலும் உறுமே
அன்றேல் நம்இடை அடைந்தற் றாகும்.

எ - னின். ஒருசார் நிலைமொழியோடு உருபுபுணர்தற்கு 'ஒற்றுயிர் முதலீற் றுருபுகள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன் மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எல்லாமென்னும் பொதுப்பெயர் அஃறிணைக்கண் ஆனகாலை, அதனோடு ஆறுருபும் புணரின் இடையே அற்றுச்சாரியையும் உருபின்மேன் முற்றும்மையும் பெறும், உயர்திணைக்கண் ஆனகாலை இடையே நம்முச் சாரியையும் உருபின்மேன் முற்றும்மையும் பெறும் எ-று.

எ - டு: எல்லாவற்றையும், எல்லாவற்றாலும் எனவும்; எல்லாநம்மையும், எல்லாநம்மாலும் எனவும் வரும்.

இனி, இரட்டுறமொழிதல் என்னும் உத்தியான், எல்லாமென்ப திழிதிணையாய் எனவும்; இன்னற்றோடு எனவும் பிரித்து, அஃறிணைக் கண்ணுகி இன்சாரியை அற்றுச்சாரியையோடெனப் பொருள்தந்து எல்லாவற்றினையும் என வருதலுங்கொள்க. ஏனையவற்றோடும் இவ்வாறே ஒட்டுக.

இச்சொற்கு இருதிணைக்கண்ணும் அற்றுச்சாரியையும் நம்முச் சாரியையும் உருபுபுணர்ச்சிக்கண் 'பதமுன் விகுதியும்' என்னுஞ்

---

1. அகநா: அ, கூ. 2. புறநா: ௩௦௦, ௨,

சூத்திரத்துட் கூறியவாறே வேண்டியே வருதல் தோன்ற இன்றி யமையா முற்றும்மையோடு உடனிகழ்ச்சிப்பொருளவாய் அற்றே டென்றும் அடைந்தற்றாகுமென்றுங் கூறினார்.

தாம் நாம் நீர் என்னும் மூவிடப்பெயர் வேற்றுமைப்புணர்ச்சிக் கண் வந்தமையானே தம் நம் நும் என விகாரப்பட்டுத் தமக்கின மான மூவிடப்பெயர்களை முறையே சார்ந்து சிறப்புப்பொருள் தாராமையின் ஒருபொருட்பன்மொழியல்லவாய் வருதலின், இம் மூன்றுஞ் சாரியையிடைச்சொல்லெனப் படுமாதலின் தம் என்ப தைப் படர்க்கைப்பெயர்க்கும் நும் என்பதை முன்னிலைப் பெயர்க்கும் வருஞ் சூத்திரத்து அமைத்தாற்போல நம் என்பதனை ஈண்டுத் தன்மைப்பெயர்க்கு அமைத்தாரென்பதூஉம், தன்மை யாயினுந் திணைப்பொதுமையின் நில்லாது பாணரேம் என்றாற் போல எல்லாநம்மையும் என்ற துணையானே உயர்திணைத்தன்மை உணர்த்துமென்பதூஉம் பெற்றாம். (௬)

௨௪௬. எல்லாரும் எல்லீரும் என்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லும் உருபின் பின்னர் உம்மே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்) எல்லாருமென்னும் உயர்திணைப்படர்க் கைப் பெயரோடும் எல்லீருமென்னும் முன்னிலைப் பொதுப் பெயரோடும் ஆறுருபும் புணருமிடத்து, அவ்விருபெயரின் இறுதிகளினின்ற முற்றும்மைகளைத் தள்ளி, அந்நிலைக் களங்களிற் படர்க்கைப்பெயர்க்குத் தம்முச்சாரியையும் முன்னிலைப்பெயர்க்கு நும்முச்சாரியையும் பொருந்த, அவற்றால் தள்ளுண்ட முற்றும்மைகள் உருபின் பின்னே வந்து பொருந்தும் எ - று.

எ - டு: எல்லார்தம்மையும், எல்லாரையும் எனவும்; எல்லீர் நும்மையும், எல்லீரையும் எனவும் விகற்பித்து வந்தன. ஏனைய வற்றோடும் இவ்வாறே ஒட்டுக.

நந்தம்மை நுந்தம்மை எனப் படர்க்கைக்குரிய தம்முச்சா ரியை தன்மை முன்னிலைகளின் வருதல் 'ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே' என்னும் வழுவமைதியென்க. (எ)

எ - னின். [1]நிரனிறைப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயரும் வினையுமாகிய சொற்களையும் அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும் வேறு வேறு நிறையாக நிறுத்தி முறையாயேனும் எதிராயேனும் இதற்கு இது பயனிலையென்பது படக் கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப் பொருள் கோளாம் எ - று.

வ - று:

[2]'கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்தமுகம் வாய்முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்'

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறை நிரனிறை.

[3]'காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய—நீதியான்
மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு
நண்ணிய வாய பொருள்'

இது வினைப்பயனிலைகளும் பெயர்ச்சொற்களுமாய் நின்ற முறை நிரனிறை.

---

1. நிரனிறைப் பொருள்கோளை ஓரணியாகவும் கொண்டார் தண்டியலங்கார ஆசிரியர்.

2 தொல். எச்சவியல். சூ. க. இளம். மேற். கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டைமேனி, மதிமுகம், பவளம் வாய், முத்தம் முறுவல், பிடிநடை, பிணைநோக்கு, மஞ்ஞைசாயல் என இயைத்துப் பொருள் கொள்க.

3. யாப் வி. ஒழிபு. சூ. உ. மேற்: மண்ணைக்கா, அமிர்தத்தைத் து(உண்), மங்கையர் தோளைச்சேர், மாற்றாரைத் தாழ் (தாழ்த்தி), ஏற்றார்க்குக் குழை (இரங்கு), நண்ணியவாய பொருள் ஆய் (ஆராய்வாய்) என இயைத்துப் பொருள் கொள்க.

எதிரதுதழீஇய வெச்சவும்மையானே, குவ்வுருபிற்கு னகரச் சாரியையொன்றுமே அமையாது ஆனுக்கு, மானுக்கு, கோனுக்கு என உகரச்சாரியை உடன்பெறுதலும்; ஆவுக்கு, மாவுக்கு, கோவுக்கு என உகரச்சாரியை யொன்றுமே பெறுதலும்; ஆவினுக்கு, மாவினுக்கு, கோவினுக்கு என இன்சாரியையும் உகரச்சாரியையும் உடன்பெறுதலும்; ஆவினை, மாவினை, கோவினை என இன்னொனவரூஉம் வேற்றுமையுருபு ஒழிந்தவற்றிற்கு இன் சாரியை பெறுதலுங் கொள்க.

இனி இரட்டுறமொழிதலான் ஆமா என ஒரு சொல்லாய்க் காட்டாவினை உணர்த்திநின்று இவ்விதிகள் பெறுதலும், அனையவு மென்னொழியாது பெறுமே என்றமையானே ஆன் மான் கோன் ஆமான் என னகரச்சாரியை தனிமொழிக்கண்ணும் வருதலுங் கொள்க.

ஆ என்பதனோடு கோ என்பதனைச் சார வையாது மா என்பதனைச் சார வைத்தமையானே, கோ என்பது இறைவனை உணர்த்தியதென்பதூஉம், மா என்பது விலங்கு மா என்பதூஉம் பெற்றாம். (கூ)

உஅகூ. ஒன்று முதலெட் டீறும் எண்ணூர்
பத்தின்முன் ஆன்வரின் பவ்வொற் றொழியமேல்
எல்லா மோடும் ஒன்பதும் இற்றே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) ஒன்றுமுதல் எட்டீறும் எண்களோடு புணர்ந்த பத்தென்னும் எண்முன்னர் உருபுகள் புணருமிடத்து இடையே ஆன்சாரியை வரின், அப்பத்தென்னும் எண்ணினது பகரவொற்று ஒன்றுமே நிற்க மேல்நின்ற எல்லாவெழுத்துங் கெடும்; ஒன்பதென்னும் எண்முன்னரும் உருபுகள் புணருமிடத்து ஆன்சாரியை வரின், அதன் பகரவொற்று நிற்க மேல்நின்ற எல்லாவெழுத்துங் கெடும் எ - று.

எ - டு: ஒருபானை, ஒருபதை, ஒருபஃதை; இருபானை, இருபதை, இருபஃதை எனவும்; ஒன்பானை, ஒன்பதை, ஒன்பஃதை எனவும் விகற்பித்துவரும். பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக.

ஒருபது ஒருபஃது என விகாரப்பட்டு வரும் பத்தென்பார், எண்ணூர் பத்தென்றார்.

வரின் என்றமையான் வருதற்கும் இதுவே விதியென்பதூஉம், இவ்வாறு ஆன் வருதலைப் பாராமுகமாகக் கூறினமையின் உகரச்சாரியை இன்சாரியைகளும் வேண்டுழி வருமென்பதூஉங் கொள்க. (கo)

உரு0. வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.

எ - னின். இதுவும் அது.

(இ-ள்.) அஃறிணைப்பன்மையவாய வகரவீற்று மூன்று சுட்டுப்பெயர்க்கும் உருபுகள் புணருமிடத்து, அற்றுச் சாரியை பொருந்தல் முறையாம் எ - று.

எ - டு: அவற்றை, இவற்றை, உவற்றை என அற்றுச் சாரியை வேண்டியே வருதல் காண்க.

வழியேயென்ற மிகையானே, அவற்றினை இவற்றினை உவற்றினை என இன்சாரியை வருதலுந் தனிக்குறின் முன்னொற்று உயிர்வரின் இரட்டாமையுங் கொள்க. பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. (கக)

உருக. சுட்டின்முன் ஆய்தம் அன்வரிற் கெடுமே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) அஃது இஃது உஃது என வரும் மூன்று சுட்டுப்பெயர்களோடு உருபுகள் புணருமிடத்து இடையே அன்சாரியை வரின், மொழிமுதற் சுட்டெழுத்துக்கள் மூன்றின் முன்னின்ற ஆய்தங் கெடும் எ - று.

எ - டு: அதனை, அஃதை; இதனை, இஃதை; உதனை, உஃதை எனச் சாரியை விகற்பித்து வருதலும், வந்தவழி ஆய்தங் கெடுதலுங் காண்க.

அன்சாரியை வருதல்நோக்கி ஆய்தங் கெட்டவழி, அது இது உது என ஆய்தமில்லாச் சுட்டுப்பெயர்களாய்ப் பின்னர் அன்சாரியை பெறுதலின், அவற்றிற்கும் இதுவே விதியெனக் கொள்க.

வ - று: அதனை, அதை; இதனை, இதை; உதனை உதை என விகற்பித்து வருதல் காண்க.

அன் வருதலைப் பாராமுகமாகக் கூறினமையிற், குவ்வுருபு புணர்வழி, அதற்கு என அன்சாரியை தனித்து வருதலேயன்றி, அதனுக்கு என உகரச்சாரியையுடன் வருதலுங் கொள்க. (கஉ)

உ௫௨. [1]அத்தின் அகரம் அகரமுனை இல்லை.

எ - னின். அத்துச் சாரியைக்கு ‘இ ஈ ஐ வழி’ என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) அத்துச்சாரியையின் அகரவுயிர், இயல்பினும் விதியினும் நின்ற அகர உயிரீற்றின் முன் வரின், வகரவுடம்படுமெய் பெறாது கெடும் எ - று.

எ - டு: மகத்துக்கை, மரத்துக்குறை என இரண்டு அகர வீற்றின் முன்னுங் கெட்டது. (கஈ)

---

## ௩. புறனடை

### சாரியைக்குப் புறனடை

உ௫௩. இதற்கிது சாரியை எனின்அள வின்மையின்
விகுதியும் பதமும் உருபும் பகுத்திடை
நின்ற எழுத்தும் பதமும் இயற்கையும்
ஒன்ற உணர்த்தல் உரவோர் நெறியே.

எ - னின். சாரியைக்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) விகுதி முதலிய புணர்ச்சிக்கண் இதற்கு இது சாரியையென்று வரையறுத்து விதித்தனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளுந் தனித்தனி சொல்லப்புகின் வரையறைப்படாமையின், விகுதிப்புணர்ச்சியினையும் பதப்புணர்ச்சியினையும் உருபுபுணர்ச்சியினையுங் கண்டுழிப் பகுத்து, இடையே நின்ற ஏகாரம் அகரம் முதலிய எழுத்துச்சாரியையினையும், அன் ஆன் முதலிய பதச்சாரியையினையும், இவ்விரண்டு சாரியையுந் தோன்றா இயல்பினையுந் தெரிய அறிவித்தல் பெரியோரது நெறியாம் எ - று.

எ - டு: “ஆனமணி யியம்புங் கானத்தான” எனவும்; “ஆனநெய் தெளித்து நான நீவி.” எனவும் விதித்த பொருட்

---

1. தொல்காப்பியம், எழு. புணரியல், ௬. உ௬.

புணர்ச்சிக்கண் 'உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்' என்ற மாட்டேற்றான் அமைந்த னகரச்சாரியையன்றி அகரச் சாரியையும் உடன்வந்தன.

இனி, விதியாதொழிந்தனவற்றின்கண், பாட்டின்பொருள் எனக் குற்றியலுகரத்து இன்சாரியையும், மரத்திலே என மகரான் புள்ளிக்கு அத்துச்சாரியையும் வந்தன. தன்கை, என்கை எனச் சாரியையின்றி இயல்பாய் வந்தன. இவ்வாறே மூவகைப் புணர்ச்சியும் பகுத்துணர்ந்து கொள்க.

எல்லாச்சாரியையும் இடைப்பதமேனும், எழுத்துச்சாரியை பதச்சாரியையெனப் பகுத்தல் வேறறிதற்கு இட்ட இலச்சினை யாம் என்க. (கச)

நான்குபுணர்ச்சிக்கும் புறனடை

உரூச விகுதி பதஞ்சா ரியைஉரு பனைத்தினும்
உரைத்த விதியிஞேர்ந் தோப்பன கோளலே.

எ - னின். இங்ஙனங் கூறிய நான்கின் புணர்ச்சிக்கும் ஆவ தோரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) விகுதியே பதமே சாரியையே உருபே என்னும் நான்கின் புணர்ச்சிக்கண்ணும் விதிகள் பொதுப் படக் கூறப்பட்டனவேனும், அவ்விதிகளுள் இவ்விதி இதற் குப் பொருந்தும் இவ்விதி இதற்குப் பொருநதாதென உய்த்துணர்ந்து, எவ்விதி எதற்குப் பொருந்துமோ அவ் விதியை அதற்குக் கொள்க எ - று.

[1]விகுதிப்புணர்ச்சியுள் 'றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவும்' எனப் பொதுப்பட விதித்தாரேனும், விதியுளதென்று கருதி, இவ்விகுதி வந்தழியெல்லாம் இவ்விருகாலமும் பொருந்து மென்று கொள்ளற்க. சென்று என்புழி இறந்தகாலமும், சேறு என்புழி எதிர்காலமும் பொருந்துமென்று கொள்க.

பதப்புணர்ச்சியுள் 'அல்வழி இ ஐம் முன்ன ராயின்—னியல்பு மிகலும் விகற்பமு மாகும்.' எனப் பொதுப்பட விதித்தாரேனும், விதியுளதென்று கருதி, ஆடி திங்கள் என இயல்பாமென்றும், பருத்திக்குறிது என மிகுமென்றுங் கொள்ளற்க. பருத்தி குறிது

1. விகுதிப்புணர்ச்சியுள் 'தவ்வொடி றப்பும்' என்பதற்கும் இவ்வாறே கொள்க என்பர் இராமாநுச கவிராயர்.

என எழுவாய்க்கண் இயல்பாமெனவுங், ஆடித்திங்கள் எனப் பண்புத்தொகைக்கண் மிகுமெனவுங் கொள்க.

சாரியைப்புணர்ச்சியுள் 'பதமுன் விகுதியும் பதமு முருபும்—புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை—வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்.' எனப் பொதுப்பட விதித்தாரேனும், விதியுள தென்று கருதி, நாட்டினின்கிளுன் என இன்னென வரூஉம் வேற்றுமையுருபிற்கு இன்சாரியை வருமென்றும் நாட்டுக்கணிருந் தான் எனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வாராதென்றுங் கொள்ளற்க; நாட்டின்கணிருந்தான் எனக் கண்ணுருபிற்கு இன் சாரியை வருமென்றும், நாட்டினீங்கிளுன் என இன்னுருபிற்கு இன்சாரியை வாராதென்றுங் கொள்க.

உருபு புணர்ச்சியுள் 'ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியி—னொக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே' எனப் பொதுப்பட விதித்தாரேனும், விதியுளதென்று கருதி, நம்பிகு என உயர்திணைப்பெயர்முன் வந்த குவ்வுருபு மிகாவென்றும், நம்பிக்கண் என மன் என்றமையாற் கண்ணுருபு மிகுமென்றுங் கொள்ளற்க; நம்பிகண் எனக் கண்ணுருபு மிகாவென்றும், நம்பிக்கு எனக் குவ்வுருபு மன் என்றமையான் மிகுமென்றுங் கொள்க. பிறவும் அன்ன.

சாரியைப்புணர்ச்சி எனை மூவகைப் புணர்ச்சியினையுஞ் சார்ந்து இடையே தோன்றல் விகாரமாய் வந்து புணர்தலின், விகுதி பதஞ்சாரியை உருபென உருபிற்கு முற்கூறினர்.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது, இந்நால் வகைப் புணர்ச்சியுள் ஒன்றற்குச் சொன்ன விதி மற்றொன்றற்குங் கொள்கவெனப் [1]பொருள் கொள்வாருமுளர். அப்பொருட்கு அமைந்த சொல் இச்சூத்திரத்து இன்மையானும், 'சாரியை சந்தி விகாரமாறினு மேற்பவை முன்னிப் புணர்பப முடியுமெப் பதங்களும்' என்றும், 'ஈறுபோதல்' என்னுஞ் சூத்திரத்து அவ் விகாரம் விகுதிப்புணர்ச்சிக்கணன்றிப் பதப்புணர்ச்சிக்கண்ணும் வருமென்பது தோன்றப் 'பண்பிற் கியல்பே' என்றும், புணரியல் விதி பெயர்வினை இடை உரி நான்கிற்கும் பொருந்துமென்பது தோன்ற 'மெய்யுயிர் முதலீ றமிரு பதங்களும்' என்றும் விதந் துரைத்த சிறப்பு விதிகளுள் 'உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்' என்றும், 'ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியி—னொக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே' என்றுங் கூறியவாற்ருன், அப்பொருள் அமைந்துகிடத்தலானும், அது பொருந்தாதென்க. (௧௫)

1. பொருள் கொள்பவர் மயிலைநாதர்.

வேற்றுமைப்புணர்ச்சிக்குப் புறனடை

உ௫௫. இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை இடத்து விரிந்துந் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவும் ஆகும்ஐ உருபே.

எ - னின். வேற்றுமைப்புணர்ச்சிக்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைப்புணர்ச்சிக்கு விதித்த பொது விதியோடு தானும் ஒருங்கு முடிதலேயன்றி, அங்ஙனம் விதித்த இயல்பின்கண் விகாரமாயும் விகாரத்தின்கண் இயல்பாயும், உயர்திணைக்கண் விரிந்துந் தொக்கும், [1]விரவுப்பெயர்க்கண் விரிந்தும் விரிதலொழிந்தும், இவை போல்வன பிற வேறுபாடாயும் வரும், இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சி எ - று.

உயிரே ஒற்றே சாரியையே யென்றிவை தோன்றல் திரிதல் கெடுதல் உறழ்ச்சி விகற்பங்களையெல்லாம் உள்ளடக்கி 'இயல்பின் விகாரமும் விகாரத்தியல்பும்' என்றும், எல்லா வேற்றுமையும் விரிந்துந் தொக்கும் வருதல் போலாது இவ்வேற்றுமை உயர் திணைப்பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் விரிதலே தகுதியாய்த் தொகுதல் தகுதியாயும் வலித்துகோடலாயும் வரு மென்பது தோன்ற விரிந்துந்தொக்கும் விரிந்தும் விரிதல் நின்றும் என்றும், நெருநலளவும் வருத்திய பிணி இன்று நின்றது என்பதுபோல ஒழிதற்பொருள் தோன்ற நின்றென்றுங் கூறினார்.

மேலைச்சூத்திரத்து 'ஒப்பன கொளலே' என்றமையான், இவ்விதிகளை இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சி வந்துழி யெல்லாங் கூட்டாது, வேற்றுமைப் பொதுப்புணர்ச்சியோடு ஒருங்கொத்து முடிவன இவை இப்புறனடைச் சிறப்புவிதியான் முடிவன இவையென உய்த்துணர்ந்து, ஏற்பனவற்றோடு கூட்டுக.

வ - று: [2]"வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" என இயல்பின் விகாரமாயிற்று. மண்கொணர்ந்தான் என விகாரத்து இயல்பாயிற்று. நம்பியைக் கொணர்ந்தான் என உயர்திணைக்கண்

1. விரவுப்பெயர்-இங்கே திணைப்பொதுப்பெயர்; "பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப்பெயர்." தொல் கிளவி. ௫௪.

2. தொல். செய். ௧௧0.

விரிந்தது. [1]ஆடுஉவறிசொல், மகடூஉவறிசொல், பல்லோரறியுஞ் சொல், 'நான்முகற்றொழுது' என அதன்கண் தொக்கது. கொற்றனைக் கொணர்ந்தான் என விரவுப்பெயர்க்கண் விரிந்தது. ஆண் பெற்றான், பெண்பெற்றாள், [2]"தற்கொண்டான் வளத்தக்காள் வாழ்க்கைத் துணை." "வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" என அதன்கண் தொக்கது. இவ்விரண்டிடத்துத் தொகையுட் சில தகுதியாயுஞ் சில வலிந்துகோடலாயும் வருதல் காண்க.

அன்ன பிறவும் என்றமையானே, தற்கொண்டான், எற்பணியாளாட் என உறழப்படுவன திரிந்தே வருதலும், இன்னும் வருவனவுளவேல அவையுங் கொள்க.

இங்ஙனம் எண்ணின்கணின்ற இறந்தது தழீஇய இழிவுசிறப்பும்மைகளானே, வேற்றுமைக்கென விதித்த பொதுவிதியோடு ஒருங்கொத்து வாகு கட்டினான் என இயல்பின்கண் இயல்பாயும், விளக்குறைத்தான் பலாக்குறைத்தான் கடுக்குறைத்தான் என விகாரத்தின்கண் விகாரமாயும் வருதலே பெரும்பாலவென்க.

இனி, விரவுப்பெயர்க்கண் விரிந்துநின்றுமென்பதற்கு, இவ்வாறன்றி, எழுந்திருந்தென்பதற்கு இருந்தென்பதனை அசைநிலையாக்கி, எழுந்தென ஒருபொருள கோடல்போல, நின்றென்பதனை அசைநிலையாக்கி விரிந்தென ஒருபொருள் கொள்ளின், வழக்கின் கண்ணுஞ் செய்யுட்கண்ணுந் தொக்கு வரும் இலக்கியங்கட்கு இலக்கணம் இன்றாமென்க. (கசு)

உருசு. புள்ளியும் உயிரும் ஆயிறு சொன்முன்
தம்மின் ஆகிய தொழில்மொழி வரினே
வல்லினம் விகற்பமும் இயல்பும் ஆகும்

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) மூன்றும் வேற்றுமைப் புணர்ச்சியுள் ஒற்றும் உயிரும் இறுதியாய் நின்ற சொல் முன்னர்க் 'கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்' என்பவற்றுட் கருத்தாவாகிய நிலைமொழிப்பொருள் தம்மாலாகிய தொழிற்சொல் வரின், அங்ஙனம் வரும் வல்லினம், வேற்றுமைப் பொதுமுடிபு எலாது, விகற்பமும் இயல்புமாம் எ - று.

---

1. தொல். சொல். கிளவி : உ.
2. திருக்குறள், ருக.

இவ்விதியும் ஒப்பன கொள்க.

வ - று : [1]பேய்கோட்பட்டான், பேய்க்கோட்பட்டான் ; சூர் கோட்பட்டான், சூர்க்கோட்பட்டான் : புலிகோட்பட்டான், புலிக்கோட்பட்டான் எனவும் ; பேய்பிடிக்கப்பட்டான், புலிகடிக் கப்பட்டான் எனவும் வரும். உம்மையால், சுறாப்பாயப்பட்டான் அராத்தீண்டப்பட்டான் என வேற்றுமைப் பொதுவிதியான் மிக்கு முடிவனவே பெரும்பாலவென்க. இவற்றுள் தம்மினாகிய தொழில் பட்டானென்பதாம் ; கோளென்பது முதலியவாய் இடைப்பிற வருவன தந்தொழிலாம். இங்ஙனமாயினும், இவ் விரண்டனையும் ஒரு சொல்லாக்கித் தம்மினாகிய தொழின்மொழி யென்றார், பட்டானென்புழி இது பட்டானென்னும் பொருள் தோன்றக் கோளென்பது முதலியன அதனை விசேடித்து நிற்கும் ஒற்றுமை நயங்கருதியென்க. வேற்றுமை நயங்கருதின் கோட்பட்டானென்பதொழிந்தன எழுவாய்ப் பயனிலையாகிய வினையெச்சம் முற்றுவினை கொண்டதாம். எழுவாய்க்கண்ணும் மூன்றாம் வேற்றுமைக்கண்ணும் கருத்தா உளவாகலின் தம் தொழிலையே ஈண்டுத் தம்மினாகிய தொழிலென்றாரெனின் :— பேய் பிடித்தது என்னும் எழுவாய்க்கண் பேயாற் பிடித்தது என மூன்றாம் உருபும் விரித்தற்கு அமையும் ; அங்ஙனம் விரித்தல் கூடாமையின் தந்தொழிலுந் தம்மினாகிய தொழிலும் எழுவாய்க் கண் கருத்தாவும் மூன்றாம் வேற்றுமைக்கண் கருத்தாவுந் தம்முள் வேறுபாடுடையவாம். அவ்வேறுபாடு அவ்விலக்கணங் கூறும் வழிக் காட்டுதும். (கஎ)

## எழுத்ததிகாரத்துக்குப் புறனடை

உருஎ. இதற்கிது முடிபேன் றெஞ்சா தியாவும்
விதிப்பளவு இன்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கோளலே.[1]

எ - னின். இவ்வதிகாரத்திற்கு ஆவதோரு புறனடை உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) இதற்கு இது முடிபென்று இவ்வதிகாரத் துள் விதிக்கத் தகுவனவற்றையெல்லாந் தனித்தனி வரை யறுத்து விதிக்கப்புகின் அதற்கு ஒரு வரையறையின்மை யின், வகுத்து விதித்தனவற்றின் இலக்கணங்களை ஏது

1. மேல் ஒப்பனகொளலே என்றதனால் இரண்டாம் வேற்று மைக்குச் சொன்னபடி இதற்குங் கொள்க என்பர், இராமாநுச கவிராயர்.

வாகக்கொண்டு, வகுத்து விதியுரையாதனவற்றையுங் கருத லளவையான் வகுத்து விதியுரைத்துக் கொள்க எ - று.

வ - று: எழுத்தியலுள் 'மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி - யெழுத்து' எனவுரைத்தமையானே,

" கட்புல னில்லாக் கடவுளைக் காட்டுஞ்
சட்டகம் போலச் செவிப்புல வொலியை
யுட்கொளற் கிடுமுரு பாம்வடி வெழுத்தே."

எனப் பிறர் கூறியவாறு இவ்வொலிவடிவைக் காட்டுதற்கு ஒரு கருவியாக வரைந்து கொள்ளப்பட்டது வரி வடிவு எழுத்தெனவும், பதவியலுள் 'அன் ஆன் அள் ஆள்' என்னுஞ் சூத்திரத்து முறையே அன் ஆன் விகுதி ஆண்பாற்கென உரைத்தமையானே பெருமாளென்னும் பதம் பெருமையை யுடையாளென்னும் பொருள்தோன்ற நின்ற பெருமானென்னும் பதத்தினது இறுதி ஆன்விகுதி ஆள்விகுதியாய் ஓரோவிடங்களில் திரிந்து ஆண் பாலையே உணர்த்தி நின்றதெனவும், உயிரீற்றுப்புணரியலுள் 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்' என உரைத்தமையானே 'ணன வல்லினம் வரட் டறவும்' என்புழி டகரமும் வல்லினமாதலின் மிகுந்ததெனவும், மெய்யீற்றுப் புணரியலுள் 'நுந்தம் எம்நம் மீறுமவ் வருஞவே.' என உரைத்தமையானே அம்மென்னுஞ் சொல்லிறுதி மகரமுங் குற்றொற்றாதலிற் றன்னொடு மயங்காத மெல்லினம் வரின் அதுவாய்த் திரிந்து அந்நலம் என அழகினது நலமென்னும் பொருட்டாய் வருமெனவும், உருபுபுணரியலுள் 'வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே' என உரைத்தமையானே அதுபோலும் வினவும் எவற்றை என அற்றுச்சாரியை பெறுமெனவும், இரண்டாம் வேற்றுமைக்கும் மூன்றாம் வேற்றுமைக்கும் புறனடை உரைத்தமையானே ஏழாம் வேற்றுமையும் 'மண் புகுந்தும் விண்பறந்து மாலு மயனுங் காணுவொரு பொருள்" என வேற்றுமைப் பொது விதியேலாது சிறுபான்மை வருமெனவுங் கொள்க.

இன்னும், இவ்வைந்தியலுள்ளும் வகுத்து உரையாதன வற்றை யெல்லாம் இடர்ப்படாது இதுவே நிலனாக வகுத்து உரைத்துக்கொள்க. (கஅ)

உருபுபுணரியல் முற்றிற்று.

## எழுத்ததிகாரம் முற்றுப்பெற்றது.

அடையெண் பெயர்முறை தோற்றம் வடிவள வாதியந்தம்
இடைநிலை போலியென் றிரைந் தெழுத்தும் இருபதமும்
படுபுணர் மூன்றின் இயல்பும் விகாரமும் சாரியையும்
உடனுணர் வாரை எழுத்தறி வாரென்பர் உத்தமரே.

# இரண்டாவது

# சொல்லதிகாரம்

## சிவஞான முனிவர் விளக்கம்

*சொல்லதிகாரம் என்பது, சொல்லினது அதிகாரத்தையுடைய தென அன்மொழித்தொகையாய், அப்படலத்திற்குக் காரணக்குறியாயிற்று.*

*சொல் என்றது, எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப்பொருட் டன்மையும், ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசையாகிய பெயர் வினை இடை உரி என்னும் நால்வகைச் சொல்லும் பிறவுமாம். அவை 'இயற்சொற்றிரிசொல்' என்னுஞ் சூத்திரத்தாற் பிற் கூறுபவாகலின், ஈண்டு எதிரது போற்றி ஆளப்பட்டது.*

*அதிகாரம் அதிகரித்தல். அதனை மேலையதிகாரமுகத் துரைத் தாங்கு உரைத்துக்கொள்க. எனவே, சொல்லை நுதலி வரும் பல ஒத்தினது தொகுதி சொல்லதிகாரம் என்றூ ராயிற்று.*

*எழுத்தினான் ஆக்கப்படுதல் மேலை அதிகாரத்திற் போந்த பதவியலுள் காண்க. இருதிணைப்பொருள் முதலியன பின் வருஞ் சூத்திரங்களான் உணர்க.*

*இனிப் பொருட்டன்மையாவது, ஒருபொருட்குக் கேடு பிறந் தாலும் தனக்குக் கேடின்றித் தானொன்றேயாய்ப் பல வகைப்பட்ட பொருள்தோறும் நிற்குமென் றுணர்க.*

---

இவ்விதியும் ஒப்பன கொள்க.

வ - று : [1]பேய்கோட்பட்டான், பேய்க்கோட்பட்டான் ; சூர் கோட்பட்டான், சூர்க்கோட்பட்டான் : புலிகோட்பட்டான், புலிக்கோட்பட்டான் எனவும் ; பேய்பிடிக்கப்பட்டான், புலிகடிக் கப்பட்டான் எனவும் வரும். உம்மையால், சுரூப்பாயப்பட்டான் அராத்தீண்டப்பட்டான் என வேற்றுமைப் பொதுவிதியான் மிக்கு முடிவனவே பெரும்பாலவென்க. இவற்றுள் தம்மினாகிய தொழில் பட்டானென்பதாம் ; கோளென்பது முதலியவாய் இடைப்பிற வருவன தந்தொழிலாம். இங்ஙனமாயினும், இவ் விரண்டனையும் ஒரு சொல்லாக்கித் தம்மினாகிய தொழின்மொழி யென்றார், பட்டானென்புழி இது பட்டானென்னும் பொருள் தோன்றக் கோளென்பது முதலியன அதனை விசேடித்து நிற்கும் ஒற்றுமை நயங்கருதியென்க. வேற்றுமை நயங்கருதின் கோட்பட்டானென்பதொழிந்தன எழுவாய்ப் பயனிலையாகிய வினையெச்சம் முற்றுவினை கொண்டதாம். எழுவாய்க்கண்ணும் மூன்றும் வேற்றுமைக்கண்ணும் கருத்தா உளவாகலின் தம் தொழிலையே ஈண்டுத் தம்மினாகிய தொழிலென்றாரெனின் :— பேய் பிடித்தது என்னும் எழுவாய்க்கண் பேயாற் பிடித்தது என மூன்றும் உருபும் விரித்தற்கு அமையும் ; அங்ஙனம் விரித்தல் கூடாமையின் தந்தொழிலுந் தம்மினாகிய தொழிலும் எழுவாய்க் கண் கருத்தாவும் மூன்றும் வேற்றுமைக்கண் கருத்தாவுந் தம்முள் வேறுபாடுடையவாம். அவ்வேறுபாடு அவ்விலக்கணங் கூறும் வழிக் காட்டுதும். (கஎ)

எழுத்ததிகாரத்துக்குப் புறனடை

உ௫எ. இதற்கிது முடிபேன் றெஞ்சா தியாவும்
விதிப்பளவு இன்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கோளலே.[1]

எ - னின். இவ்வதிகாரத்திற்கு ஆவதோரு புறனடை உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) இதற்கு இது முடிபென்று இவ்வதிகாரத் துள் விதிக்கத் தகுவனவற்றையெல்லாந் தனித்தனி வரை யறுத்து விதிக்கப்புகின் அதற்கு ஒரு வரையறையின்மை யின், வகுத்து விதித்தனவற்றின் இலக்கணங்களை ஏது

1. மேல் ஒப்பனகொளலே என்றதனால் இரண்டாம் வேற்று மைக்குச் சொன்னபடி இதற்குங் கொள்க என்பர், இராமாநுச கவிராயர்.

**எ - னின். மேற்சொல்லென்றது இஃதென்பது உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) ஒருமொழியுந் தொடர்மொழியும் பொதுமொழியுமென மூன்று கூற்றினதாய், இருதிணையாகிய ஐம்பாற்பொருளினையும் அப்பொருளையன்றித் தன்னையும், மூன்றிடத்தினும், வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும், வெளிப்படையானுங் குறிப்பினானும், விளக்குவது சொல்லாம எ - று.

எனவே, எல்லாச்சொல்லும் பொருளும் ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்னும் மூன்றுயும் இருதிணை ஐம்பாலாயும் அடங்குமென்பதூஉம், இருதிணை முதலிய காரணத்தான் உயர்திணைச்சொல், அஃறிணைசசொல், ஆண்பாற்சொல், பெண்பாற்சொல், பலர்பாற்சொல், ஒன்றறிசொல், பலவறிசொல், தன்மைசசொல், முன்னிலைச்சொல், படர்க்கைச்சொல், வழக்குச்சொல், செய்யுட்சொல், வெளிப்படைச்சொல், குறிப்புச்சொல் எனவும்; உயர்திணைப்பொருள், அஃறிணைப்பொருள், ஆண்பாற்பொருள், பெண்பாற்பொருள், பலர்பாற்பொருள், ஒருபொருள, பலபொருள், தன்மைப்பொருள், முன்னிலைப்பொருள், படர்க்கைப்பொருள், வழக்குப்பொருள், செய்யுட்பொருள், வெளிப்படைப்பொருள், குறிப்புப்பொருள் எனவும் வழங்கப்படுமென்பதூஉம், உயிர்க்கு அறிவு கருவியாய் நின்று தன்னையும் பொருளையும் உணர்த்துமாறுபோல ஒருவர்க்குச் சொல் கருவியாய் நின்று, தன்னையும், உள்பொருள் இல்பொருள், மெய்ப்பொருள், பொய்ப்பொருள், சித்துப்பொருள், சடப்பொருள், நித்தியப்பொருள் அநித்தியப்பொருள், உருவப்பொருள் அருவப்பொருள், காட்சிப்பொருள் கருத்துப்பொருள், இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள், முதற்பொருள் சினைப்பொருள், இயங்கியற்பொருள் நிலையியற்பொருள் எனப் பலவாற்றானும் பகுத்துக் கூறப்படும் இருதிணை ஐம்பாற் பொருளையும் உணர்த்துமென்பதூஉம் பெற்றாம். (உ)

## மூவகை மொழி

**உகO ஒருமொழி ஒருபொரு ளனவாம் தொடர்மொழி**
**பலபொரு ளனபொது இருமையும் ஏற்பன.**

**எ - னின். மேலைச்சூத்திரத்து நிறுத்தமுறையானே மூவகைமொழிக ளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) ஒருமொழிகளாவன பகாப்பதமேனும் பகுபதமேனும் ஒன்றுநின்று தத்தம் ஒருபொருளைத் தருவனவாம்; தொடர்மொழிகளாவன அவ்விருவகைப் பதங்களுந் தன்னோடும் பிறிதோடும் அல்வழி வேற்றுமைப் பொருள் நோக்கத்தான் இரண்டு முதலியவாகத் தொடர்ந்து நின்று இரண்டு முதலிய பலபொருளைத் தருவனவாம்; பொதுமொழிகளாவன ஒன்றாய் நின்று ஒரு பொருள் தந்தும் அதுவே தொடர்ந்து நின்று பலபொருள் தந்தும் இவ்விரண்டற்கும் பொதுவாய் நிற்பனவாம் எ - று.

வ - று: நிலம், நிலத்தன், நட, நடந்தான், நில், மன், தவ நனி என்றற்றொடக்கத்தன ஒருமொழி. நிலம் வலிது, அது கொல், சாலப்பகை, நிலங்கடந்தான், நிலத்தைக் கடந்தான், நிலங் கடந்த நெடுமால் என்றற்றொடக்கத்தன தொடர்மொழி. எட்டு, கொட்டு, தாமரை, வேங்கை, எழுந்திருந்தான், வாராநின்றான், உரைத்திட்டான் என்றற்றொடக்கத்தன பொதுமொழி இவை, ஒருமொழிகளாய் ஒருபொருள் தருவதன்றி, எள்ளைத் து, கொள்ளைத் து, தாவுகின்ற மரை, வேகின்ற கை, எழுந்து பின்னிருந்தான், வந்து நின்றான், உரைத்துப் பின்னிட்டான் எனத் தொடர்மொழிகளாய்ப் பல பொருள் தருதலுங் காண்க.

மொழிகள், தொடராது யாங்கணுந் தனித்து நில்லாவேனும், இப்பொருட்கு இச் சொல்லென இறைவனாலும் அறிவுடையோராலும் படைக்கும் படைப்புக்காலத்தும், தொடர்மொழிக்கண் நின்ற இரண்டு முதலிய சொற்களுள் ஒன்று நின்று மற்றைய எஞ்சியவழியுந் தனித்து நிற்றலின், ஒருமொழி என்றார். எஞ்சிய வழித் தனித்து நிற்றல் வருமாறு:—ஒருவனுழை ஒருவன் வந்துழி வாவென்றல் உலகியல்; அவ்வழி வருதற்கு வினை முதலாகிய நீயென்னுஞ் சொல் எஞ்சி வாவென்னுஞ் சொல் தனித்து ஒருமொழியாய் நின்றது. இத்தொடக்கத்தனவெல்லாம் கொள்க.

சேனை குழாம் என்றற்றொடக்கத்தன ஒருமொழி பல பொருள் தந்ததென்னையெனின்:—ஈண்டுத் தொடர்மொழி பல பொருளன வென்றது பலசொல்லிற் பலபொருளையன்றி இப் பொருளை அன்றென்க.

இப்பொருளைப் பலபொருளான் இயைந்த ஒருபொருளென ஆசிரியர் அகத்தியனார்,

"பலவி னியைந்தவு மொன்றெனப் படுமே
யடிசில் [1]புத்தகஞ் சேனை யமைந்த
கதவ மாலை கம்பல மனைய."

எனக் கூறுமாறு காண்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனி, இவ்வொருமொழியைத் தனிமொழி எனவும்; தனிமொழியாவது சமயவாற்றலாற் பொருள் விளக்குவதெனவும், அது பெயர்ச்சொல் முதலாக நான்கு வகைப்படு மெனவுங் கூறித், தொடர்மொழியாவது இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் என இருவகைப்படுமெனவும், அவை தொடருங்காற் பயனிலைவகையானுந் தொகைநிலைவகையானும் எண்ணுநிலைவகையானுந் தொடருமெனவும், அவ்வாறன்றி வடநூலார் கூறியவாறே அவாய்நிலையானும் அண்மையானுந் தகுதியானுந் தொடருமெனவும், அவற்றிற்கு உதாரணம் முறையே சாத்தன் வந்தான், யானைக்கோடு, நீ நீர், ஆவைக்கொணு, ஆற்றங்கரைக்கண் ஐந்து கனிகள் உளவாகின்றன, நீரானேனை எனவும்; அறம்வேண்டி அரசனுலகம் புரந்தான் எனவும் கூறுப. அவையெல்லாம் இருவகைப் பதத்துள்ளும் அல்வழி வேற்றுமைப்பொருள்களுள்ளும் அடங்குமாறு உய்த்துணர்க. (௲)

### இருதிணை

உ௬௧. மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை.

எ - னின். நிறுத்தமுறையானே இருதிணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மக்களுந் தேவரும் நரகரும் உயர்திணையாம்; அவரையொழிந்த விலங்கு முதலிய உயிருள்ளனவும், நிலம் நீர் முதலிய உயிரில்லனவும் அஃறிணையாம் எ - று

மக்கள் தேவர் நரகர் எனப்படுதல் அவ்வவ் யாக்கையும் உயிருங்கூடி நின்றவழி ஆதலின், அவை பிரிந்தவழியும் வேறு கருதியவழியும் அவருயிரையும் உடம்பையும் உயிரில்லனவாகிய

---

1. பொத்தகம் - புத்தகம்; உகரத்துக்கு ஒகரம் போலியாக வந்தது; "நிறைநூற் பொத்தக நெடுமனை யேற்றி" (பெருங். க. ௬௪, உ௬.); நன். மயிலை. க௫௫, உ௬௬-ஆம் பக்கங்களிற் காண்க.

அஃறிணையாகக் கொள்ளப்படுமென்க. விலங்கு முதலியவற்றின் உயிருடம்புகளும் அன்ன.

## சிவஞானமுனிவர் விளக்கம்

மக்களாகப் பிறந்து புண்ணிய பாவமியற்றிப் புண்ணியமிகுதியால் தேவராயும் பாவமிகுதியான் நரகராயும் பிறத்தலின், மக்கள் தேவர், நரகரெனச் சாதன சாத்திய முறையே வைத்தாரென்க. அன்றியும், ஆசிரியர் தொல்காப்பியர் [1]“உயர்திணையென்மனார் மக்கட்சுட்டே.” என முன்னர்க் கூறிப், பின்னர் [2]“இவ்வென வறியு மந்தந் தமக்கில” வாகிய “தெய்வஞ் சுட்டிய பெயர்” முதலியனவும் “உயர்திணை மருங்கிற் பாற்பிரிந் திசைக்கும்.” எனக் கூறலின், உயர்திணைப்பாற் படுத்து, மக்கள் தேவர் நரகருயர்திணையென முறை தெரித்தோதினரெனக் கோடலுமாமென்க.

[3]“திணைசிலங் குலனொழுக்கம்” என்பவாகலின், திணையென்னும் பலபொருளொருசொல் ஈண்டுக் குலத்தினையுணர்த்தி நின்றது. உயர்திணையல்லாத திணை அஃறிணை எனப்பட்டது. இவ்விரண்டும் பண்புத்தொகை; உயர்வாகிய குலம், அஃதன்மையாய குலம் என விரியும். அடையடுத்த இவ்விரண்டு சாதிப் பண்புகளும், ஆகுபெயராய்ப், பண்பிகளை உணர்த்தி நின்றன. திணை என்பது ஒழுக்கம். அஃது ஆகுபெயராய் ஒழுக்கத்தை உடைய பொருள்களை உணர்த்தி நின்றதெனவும், உயர்திணை என்பது வினைத்தொகை எனவுங் கூறுவாருமுளர். சாதிவேற்றுமை கருதி உலகப் பொருள்களையெல்லாம் உயர்திணை அஃறிணை என இரண்டு சாதியாக வகுத்து அவ்வேற்றுமை கருதி அவற்றை இரண்டு பாலாகப் பகுத்தலே எல்லா ஆசிரியர்க்குங் கருத்தாவதன்றி, ஈண்டொழுக்கங் கருதவேண்டுவது இன்மையானும், அவ்வொழுக்கமும் உயிரில்லனவற்றிற்குப் பொருந்தாமையானும், ஈண்டுத் திணை என்பதற்கு அது பொருளன்று எனவும், உயர்திணையை உயர்ந்த திணை என இறந்தகால வினைத்தொகையாக விரிக்கின் மரம் நாடோறும் உயர்ந்தமை கருதி உயர்மரம் எனவுங் கல்வியறிவு நாடோறும் உயர்ந்தமை கருதி அதனையுடையார் மேலேற்றி உயர்மக்கள் எனவுங் கூறும் வினைத்தொகைபோல உயர்திணை என்பதற்கு உயரும் புடைபெயர்ச்சி வினை காட்சி

1. தொல். சொல். கிளவி, சூ. ௧.
2. ” ” ” ” ௪.
3. சூடாமணி நிகண்டு. ஒருசொற் பலபொருட் டொகுதி. செ. ௭௭.

வகையானுங் கருத்துவகையானும் இன்மையின் அது வினைத் தொகை அன்றெனவுங் கொள்க. (௪)

ஐம்பால்

உ௯உ ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை.

எ - னின். நிறுத்தமுறையானே ஐம்பாலுட் சிலபாலும் அவற்றிற்குரிய திணையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) ஆண் பெண் பலர் என்னும் இம்மூன்று பாலினையும் உடைத்து உயர்திணை எ - று.

ஆடவர் என்றற்றொடக்கத்து ஆண்பன்மையும், பெண்டிரென் றற்றொடக்கத்துப் பெண்பன்மையும், மக்களென் றற்றொடக்கத்து இருவர் பன்மையும் அடக்கிப், பலர் எனப்பட்டதென்க. மேல் பல என்பதும் அது. (௫)

உ௯௩. ஒன்றே பலஎன் றிருபாற் றஃறிணை.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) ஒன்றும் பலவும் என்னும் இரண்டுபாலினை யும் உடைத்து அஃறிணை எ - று.

அஃறிணைக்கண்ணுஞ் சேவல் என்றற்றொடக்கத்து ஆண் பாலும் பெடை என்றற்றொடக்கத்துப் பெண்பாலும் உளவேனும், அவ்வாண்பாலும் பெண்பாலும் உயிருள்ளனவற்றுள் சிலவற்றிற் கும் உயிரில்லனவற்றிற்கும் இன்மையின், அப்பகுப்பு ஒழித்து, எல்லாவற்றிற்கும் பொருந்த ஒன்று எனப்பட்டதென்க.

திணைபால்களுக்குப் புறனடை

உ௯௪. பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையும் அஃறிணை அன்னவும் ஆகும்.

எ - னின். திணைபால்கட்கு ஆவதோர் புறனடை உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) பெண்தன்மையினை விட்டு ஆண்தன்மை யினை அவாவுவனவாகிய பேடுகள் உயர்திணை ஆண்பாலாம்; ஆண்தன்மையினை விட்டுப் பெண்தன்மையினை அவாவுவன

வாகிய பேடுகள் உயர்திணைப் பெண்பாலாம்; இவ்விரு வகைப் பேடுகளும் உயர்திணையாமன்றி அஃறிணையை ஒப்பனவுமாம் எ - று.

ஆணிலக்கணமும் பெண்ணிலக்கணமும் விரவி ஒருவகையேனும் நிரம்பாது நிற்கும் பேட்டினைப் பாற்பொதுமையின் நீக்கி உயர்திணை ஆண்பாலோடும் பெண்பாலோடுஞ் சேர்த்தமையின், அவ்விலக்கணங்களுள் விட்ட இலக்கணமும் அவாவும் இலக்கணமுஞ் சிறந்தன என்பதூஉம், விடாத இலக்கணமும் அவாவாத இலக்கணமும் உள ஆவை அத்துணைச் சிறப்பினவல்ல என்பதூஉம், விடுதலும் அவாவுதலும் இலக்கணை என்பதூஉம், பேட்டிலக்கணங்களுள் சிறந்தொன்றையே கருதாது சிறவாதனவற்றையும் உடன்கருதியவழி இருவகைப்பேடும் ஆண் பெண் என்னும் இரண்டனுள் ஒன்றன்பாற்படுதல் கூடாமையின் அப்பாலினவாம் உயர்திணையுமன்றி, அஃறிணை இலக்கணமின்மையின் அஃறிணையுமன்றி, உயிருள்ளனவற்றுள் ஆண்பெண் என்னும் பகுப்பிலவாகி நின்ற அஃறிணையை யொக்குமென்பதூஉம் பெற்றாம். பேடு, அலிதூஉ, அலி, மகண்மா என்பன ஒருபொருட்கிளவி. அலி, மகண்மா என்பனவற்றை வேறு கூறுவாருமுளர்.

> [1]"பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ
> கண்ணவாத் தக்க கலம்."

எனப் பெண்ணிலக்கணஞ் சிறந்தமையிற் பெண்பாற்பட்டது. ஆண்பாற்பட்டதற்கும் அஃறிணையொத்து நின்றதற்கும் இலக்கியம் வந்தவழிக் காண்க. (எ)

**மூன்றிடத்துஞ் சொல் தன்மையும் பொருளையும் உணர்த்துதல்**

**உசஅ. படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்**
**பெறப்படுந் திணைபால் அனைத்தும் ஏனை**
**இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே.**

**எ - னின். நிறுத்தமுறையானே மூன்றிடத்துஞ் சொல் தன்மையும் பொருளையும் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) வெளிப்படைச் சொல்லாயுங் குறிப்புச் சொல்லாயும் வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும் நிற்

1. நாலடியார், செ. உருக.

கும் படர்க்கை வினைமுற்றுச் சொல்லையும் படர்க்கைப் பெயர்ச்சொல்லையும் முன் குறித்தால், பின் அவ்விருவகைச் சொல்லுங் கருவியாக இருதிணையும் ஐம்பாலும் பெறப் படும்; ஒழிந்த தன்மை முன்னிலை வினைமுற்றுச் சொல்லை யுந் தன்மை முன்னிலைப் பெயர்ச்சொல்லையும் முன் குறித் தால், பின் அந்நால்வகைச் சொல்லுங் கருவியாக இரு திணை ஐம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் பெறப்படும் எ - று.

வினைமுற்று நாமம் என்பனவற்றையும், குறிப்பின் என்னும் வினையெச்சத்தையும், பெறப்படும் என்பதனையும் ஏனையிடத்துங் கூட்டுக.

வ - று. நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந் தன எனவும்: அவன், அவள், அவர், அது, அவை எனவும்; படர்க்கை வினைமுற்றுச்சொல்லும், படர்க்கைப் பெயர்ச்சொல் லும், முன்பு தம்மையுணர்த்திப், பின் இருதிணையும் ஐம்பாலு மாகிய பொருள்களைபுணர்த்தின. நடந்தேன், நடந்தேம் என வும்; யான், யாம் எனவும்; நடந்தாய், நடந்தீர் எனவும்; நீ, நீர் எனவும்; தன்மை வினைமுற்றுச்சொல்லும், தன்மைப் பெயர்ச் சொல்லும், முன்னிலை வினைமுற்றுச்சொல்லும், முன்னிலைப் பெயர்ச்சொல்லும், முன்பு தம்மையுணர்த்திப், பின் இருதிணை ஐம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் உணர்த்தின. பிறவும் அன்ன.

வினைமுற்றை முற்கூறினமையான் அவை,

"இருதிணை மருங்கி னைம்பா லறிய
ஈற்றினின் றிசைக்கும்"

விகுதிகளோடு பயின்று வருதலின் இருதிணை ஐம்பாற்பொருள் களை உணர்த்தும் நெறியிற் பெயர்களிற் சிறந்தன என்பதூஉம், குறிப்பின் என்றமையாற் சொல் தன்னை உணர்த்துமென்ப தூஉம், தன்னை முன்உணர்த்திப் பொருளைப் பின்உணர்த்துமென் பதூஉம், ஒலியெழுத்தை உணர்தற்கு வரிவடிவு ஓர்குறியாய் நின்றாற்போலப் பொருளை உணர்தற்குச் சொல் ஒரு குறியாய் நின்றதென்பதூஉம், அக்குறியினைக் குறித்தாலன்றி இருதிணை ஐம்பாலாகிய பொருட்பேறு இன்றென்பதூஉம் பெறப்படும் என்றமையாற் செவிப்புலனாகிய சொல்லையொழிந்த கட்பொறி மாத்திரையின் இருதிணை ஐம்பாற்பொருள்களை ஒருவன் உண ரும் உணர்ச்சி விலங்குணர்ச்சி போலுமன்றி அது பொருட்பேறு

ஆகாதெனபதூஉம், ஒருமைப் பன்மைப்பாலே என்றமையால் தன்மை முன்னிலைகளால் ஆண் பெண் பலர் ஒன்று பல என்னும் பால்விகற்பத்தோடு இருதிணையுந் தோன்றுமென்பதூஉம், மூவிடங்களின் ஒன்றற்குரிய வினைமுற்றும் பெயருந் தம்மையும் பொருளையும் உணர்த்துமாறு இங்ஙனமெனவே இவ்விடங்கட்குப் பொதுவாகிய வினைமுற்றுக்களும் பெயர்களும் பொதுமை நீங்கி ஓரிடத்திற்கு உரியவாகி இவ்வாறு தம்மையும் பொருளையும் உணர்த்துமென்பதூஉம், பெயரெச்சமும் வினையெச்சமும் வினைத் தொகையும் பண்புத்தொகையுங் குறைச்சொல்லாதலின், தம் பயனிலையாகிய வருமொழியோடு புணர்ந்து பொருள் முற்றி இம் மூவிட வினைமுற்றுக்களும் பெயர்களும் அடங்குதலின், இவ்வாறு தம்மையும் பொருளையும் உணர்த்துமென்பதூஉம், இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர்வினையுள் அடங்குதலின் அவ்வாறு தம்மையும் பொருளையும் உணர்த்துமென்பதூஉம், இவ்வாறு எல்லாச் சொல்லையும் வினைமுற்றுக்களும் பெயர்களும் அடக்கி மூவகையிடத்து நின்ற சொல் இருதிணை ஐம்பாற்பொருளையுந் தன்னையும் உணர்த்துஞ் சிறப்புவிதி கூறினார் என்பதூஉம், பெற்றாம்.

"வயிர வூசியு மயன்வினை யிரும்புஞ்
செயிரறு பொன்னைச் செம்மைசெய் யாணியுந்
தமக்கமை கருவியுந் தாமா மவைபோ
லுரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே."

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க.

இனி. இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி, இருதிணை ஐம்பாலைப் பொருளகத்து அறிவித்தலன்றிச் சொல்லகத்து அறியுமாறு கூறினரெனப் பொருள் கூறின்,

[1]"இருதிணை மருங்கி னைம்பா லறிய
ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந்
தோற்றந் தாமே வினையொடு வருமே."

என, ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறே படர்க்கை வினைமுற்று ஒன்றுமே கூறிலமையும், படர்க்கை நாமம் என்றல் மிகைபடக் கூறலாம்; ஏனையிடத்தவற் றொருமைப் பன்மைப்பாலே என்றல் தன்மை முன்னிலைகள் ஒருமை பன்மை மாத்திரையன்றி இருதிணை ஐம்பாலை விளக்காமையின் மற்றொன்று விரித்தலாம். இவ்வாறன்றி, மூவிடங்களின் ஒவ்வொன்றற்குரிய முற்றும்

1. தொல். சொல். கிளவி. சூ. ௧0.

டெயருமே இருதிணை ஐம்பாற்பொருளினை விளக்கும். ஒழிந்தன விளக்கா எனப் பொருள் கூறின், எல்லாச் சொல்லும் மூவகை யிடத்து நின்று இருதிணை ஐம்பாற்பொருளை விளக்குமெனக் கூறிய 'ஒருமொழி தொடர்மொழி' என்னும் பொதுச் சூத்திரத் தோடு மாறுகொளக் கூறலாம்.

இச் சூத்திரத்துள் குறிப்பின் என்னுஞ் சொல்லை வினையெச்ச மாக்காது குறிப்பினாலும் இருதிணை ஐம்பாலும் விளக்குமெனப் பொருள் கூறின், வெளிப்படையுங் குறிப்புமாஞ் சொற்கள் இரு திணை ஐம்பாற்பொருள்களை விளக்குநெறியன்றி மூவிடச் சொற் போலக் குறிப்புச் சொல்லென வேறொன்று இன்மையானும், ஒருவர் அறிவு தந்தாரென்றால்,

"பெண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே."

என்பவாகலின், அறிவு பெண்பாலாற் பெறுதல் கூடாமையின் அதனை ஒழித்து ஒருவர் என்னும் படர்க்கைப்பெயரும் அதன் பயனிலையாகிய தந்தார் என்னும் படர்க்கைமுற்றும் உயர்திணை யினையும் ஆண்பாலினையுங் குறிப்பான் விளக்குதலின், இப்பெயர் வினைகளை யொழித்துப் படர்க்கைவினைமுற்று நாமம் என்றாரல்ல ராதலானும், சொற்கள் வெளிப்படையானுங் குறிப்பினானும் இருதிணை ஐம்பாற்பொருள்களை விளக்குதல் நிறுத்த முறையே 'ஒன்றொழி பொதுச்சொல்' என்னுஞ் சூத்திரத்தாற் பிற்கூறுத லானும், ஈண்டுங் கூறுதல் கூறியது கூறலாம் ஆதலானும், அது பொருளன்றென்க. (அ)

## மூவிடம்

உகக தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே.

**எ - னின். நிறுத்தமுறையானே மூவிடமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) மூவிடமாவன தன்மையும் முன்னிலையும் படர்க்கையுமாம் எ - று.

வ - று: யான், நீ, அவன் எனவும்; வந்தேன், வந்தாய், வந்தான் எனவும் வரும்.

சொல்வானுங் கேட்பானுமாகிய இருவர் கூட்டத்துப் பிறந்த சொல், அவ்விருவரிடத்து நில்லாது அயலானிடத்திற் படர்தலின், படர்க்கை யெனப்பட்டது. (க)

## வழக்கு இன்னதென்பது

உகூஎ. இலக்கணம் உடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகும் மூவகை யியல்பும்
இடக்கர் அடக்கல் மங்கலம் [1] குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.

எ - னின். நிறுத்தமுறையானே வழக்காமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) இலக்கணமுடையதென்றும், இலக்கணப் போலியென்றும், மரூஉவென்றும் வழங்கும் மூவகை இயல்பு வழக்கும், இடக்கரடக்கலென்றும், மங்கலமென்றும், குழூஉக்குறியென்றும் வழங்கும் மூன்று தகுதி வழக்குடனே கூட, அறுவகைப்படும் வழக்கிலக்கணம் எ - று.

வ - று: நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், நன்னிறம், தண்ணீர் என்றற் றொடக்கத்தன இலக்கணமுடையன. இல் முன் என்பதனை முன்றில் என்றும், நகர்ப்புறம் என்பதனைப் புறநகர் என்றும், புறவுலா என்பதனை உலாப்புறம் என்றும், கண்மீ என்பதனை மீகண் என்றும், கோவில் என்பதனைக் கோயில் என்றும், பொதுவில் என்பதனைப் பொதியில் என்றும் வழங்கும் இத்தொடக்கத்தன இலக்கணப்போலி. அருமருந்தன்னபிள்ளை என்பதனை அருமந்தபிள்ளை என்றும், மலையமானாடு என்பதனை மலாடு என்றும், சோழநாடு என்பதனைச் சோணாடு என்றும், பாண்டியனாடு என்பதனைப் பாண்டிநாடு என்றும், இந்நாடு என்பதனை இந்த நாடு என்றும் ஆதன்றந்தை என்பதனை ஆந்தை என்றும், பூதன்றந்தை என்பதனைப் பூந்தை என்றும், மரவடி என்பதனை மராடி என்றும், குளவாம்பல் என்பதனைக் குளாம்பல் என்றும், யாவர் என்னும் பெயரை யார் என்றும் ஆர் என்றும், யார் என்னும் குறிப்புவினையை ஆர் என்றும், எவன் என்னுங் குறிப்புவினையை என் என்றும் என்ன என்றும், ஆற்றூர் என்பதனை ஆறை என்றும், வழங்கும் இத்தொடக்கத்தன மரூஉ.

---

1. குழூஉக்குறியையும் உடனெண்ணினார். குழூஉவின் வந்த குறிநிலை வழக்கு சான்றோர் வழக்கின்கண்ணும் அவர் செய்யுட்கண்ணும் வாராமையின், அமைக்கப்படாவெனச் சேனாவரையர் மறுத்தமையான், அது வழக்குநெறி ஆகாமை யறிக என்பர் சிவஞானமுனிவர். இலக்கண விளக்கச் சூறாவளி, சொல், சூ. க0.

கண்கழீஇ வருதும், கால்கழீஇ வருதும், வாய்பூசி வருதும், ஆமுன் டகரவ், பலவ், புலிநின்றிறந்த நீரல்லீரத்து, கருமுகமந்தி, செம்பினேற்றை என்றற்றொடக்கத்தன இடக்கரடக்கல். செத்தாரைத் துஞ்சினார் என்றும், ஓலையைத் திருமுகம் என்றும், காராட்டை வெள்ளாடு என்றும், இடுகாட்டை நன்காடு என்றும், வழங்கும் இத்தொடக்கத்தன மங்கலம். பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றும், யானைப்பாகர் ஆடையைக் காரை என்றும், வேடர் கள்ளைச சொல்விளம்பி என்றும் வழங்கும் இத்தொடக்கத்தன குழூஉக்குறி.

இலக்கண நெறியால் வருவதனை இலக்கணமுடையது என்றும், இலக்கணமுடையதன்றிப் படைப்புக்காலத்து இலக்கணமுடையதோடு ஒருங்கு படைக்கப்பட்டதுபோல வருவதனை இலக்கணப்போலி என்றும், தொன்று தொட்டன்றி இடையே இலக்கணப்போலி என்றும் தொன்று தொட்டன்றி இடையே இலக்கணஞ் சிதைந்து மரீஇயதனை மரூஉ என்றும் இம்மூன்றுந் தகுதிவழக்குப் போலாது எப்பொருட்கு எச்சொல் அமைந்ததோ அப்பொருளை அச்சொல்லாற் கூறுதலின் இயல்புவழக்கு என்றும், "இடக்கர் என்பது மறைத்துமொழி கிளவி" என்பவாகலின் இடக்கர் தோன்றாது அதனை மறைத்ததை இடக்கரடக்கல் என்றும், இடக்கர்போற் கூறத் தகாததன்றேனும் மங்கலமில்லதை யொழித்து மங்கலமாகக் கூறுவதை மங்கலம் என்றும், ஒவ்வொரு குழுவினுள்ளோர் யாதானும் ஒரு காரணத்தான் ஒருபொருளினது சொற்குறியை யொழித்து வேறோர் சொற்குறியாற் கூறுவதைக் குழூஉக்குறி என்றும், இம்மூன்றும் இப்பொருளையறிதற்கு அமைந்துகிடந்த இச்சொல்லாற் கூறுதல் தகுதியன்று வேறோர் சொல்லாற் கூறுதல் தகுதியெனக் கருதிக் கூறுதலின் தகுதிவழக்கு என்றும், பெயர் பெற்றன. இலக்கணப்போலியினையும் மரூஉவினையும் வேறறிதற்குச் சான்றோர் ஆட்சியே காரணமென்க. அன்றி நிலைமொழி வருமொழிகள் முன்பின்னாக மாறி நிற்பன இலக்கணப்போலி. ஒழிந்த சிதைவெல்லாம் மரூஉ என்று கோடலும் ஒன்று.

இவ்வறுவகை வழக்குந் திரிசொற்கண்ணும் வருதலின், இயற்சொல்லாகிய உலகவழக்கையுந் திரிசொல் திசைசசொல் வடசொல்லாகிய செய்யுள் வழக்கையுந் தொகுத்து, இச்சூத்திரத்தான் வழக்கெனப்பட்டதென்க. அங்ஙனமாயிற் செய்யுள் என வேறுகூறுவது யாதுகருதி யெனின்:—இவ்வுலக வழக்குஞ் செய்யுள் வழக்கும் வழக்காய் நில்லாது தொடைப்பட்டமை கருதி யென்க. வழக்கு என்பது சொல் நடை.

## சிவஞான முனிவர் விளக்கம்

இனி, ஆசிரியர் தொல்காப்பியர், இடக்கர் என்றதனை "அவையல் கிளவி"[1] எனவும், அவையல் கிளவியாவது இழிந்தோர் சொல்லும் இழிந்தசொல்லாதலான் அதனை நன்மக்களிடை மறைத்துக் கூறுகவென்பார் "அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்" எனவும், மறைத்துக் கூறுங்கால் மேற்றொட்டு மரீஇ வழங்கியதனை மறைத்தலை நீக்குகவென்பார் "மறைக்குங் காலை மரீஇய தொராஅல்"[2] எனவுங் கூறினார். மேற்றொட்டு மரீஇ வழங்கியது "ஆப்பிநீ ரெங்குந் தெளித்துச் சிறுகாலை." பாகலிலைப்பட்டம், யாட்டுப் பிழுக்கை என வரும். தம்பொருள்மேல் நில்லாது அணிகுறித்து நின்ற "பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி." என்றற்போல்வன தம்பொருளை உணர்த்துங்கால் மறைத்துக் கூறப்படு மாறும் உணர்க. (௩)

### செய்யுள் இன்னதென்பது

௨௬௮. பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்.

எ - னின். நிறுத்தமுறையானே செய்யுளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேதநீர் என்னும் எழுவகைத் தாதுக்களினாலும் உயிர்க்கிடனாக இயற்றப்பட்ட உடம்புபோல, இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்னும் நால்வகைச் சொற்களால் பொருட்கு இடனாகக் கல்வியறிவினால் செய்யுளியற்றவல்லோர் அலங்காரம்பெற இயற்றுவன செய்யுளாம் எ - று.

ஈண்டுப் பொருள் என்றது அகமும் புறமுமாகிய பொருள்களை.

இங்ஙனங் கூறவே, எழுத்தாலியன்றது சொல்லாதலின், எழுத்துச் சொல் பொருள் அணியென்னும் நான்கினும் நடப்பது யாப்பு என்பதாயிற்று.

---

1. தொல்காப்பியம், சொல். எச்சவியல், சூ. ௪௬.
2. " " " " ௪௭.

வ - று :

"[1]வருங்குன்ற மொன் றுரித் தோன்றில்லை யம்பல வன்மலயத்
திருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தலெம்மூர்ப்
பெருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே."

என்னும் இக்கட்டளைக்கலித்துறை. இடமணித்தென்னும் பொருட்கு இடனாகித், தன்மை உவமை உருவக அணிகளும் பிறவும் உடைத்தாய் வருதல் காண்க. பிறவும் அன்ன. (கக)

குறிப்பும் வெளிப்படையும்

உ௬௬. ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி
ஆகு பெயர்அன் மொழிவினைக் குறிப்பே
முதல்தொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பின் தருமொழி அல்லன வெளிப்படை.

எ - னின். நிறுத்தமுறையானே வெளிப்படையுங் குறிப்பு மாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இருதிணை ஆண்பெண்ணுள் ஒன்றனை யொழிக்கும் பொதுச்சொல்லும், வலித்தல் முதலிய ஒன்பது விகாரச்சொல்லும், மூவகைத் தகுதிவழக்குச் சொல்லும், ஆகுபெயர்ச் சொல்லும், அன்மொழித்தொகைச் சொல்லும், வினைக்குறிப்புச் சொல்லும், முதற்குறிப்புச் சொல்லும், தொகைக்குறிப்புச் சொல்லும், இம்முதல் தொகையல்லாத பலவாற்றானும் வரும் குறிப்புச்சொல்லும், இவை போல்வன பிறவும், குறிப்பினான் இருதிணை ஐம்பாற் பொருளைத் தருஞ்சொற்களாம்; இவை அல்லனவெல்லாம் வெளிப்படையான் அப்பொருள்களைத் தருஞ்சொற்களாம் எ - று.

வெளிப்படை அல்லனவெல்லாங் குறிப்புச்சொல்லாயினும், அக்குறிப்புச்சொல்லுள்ளும் வேற்றுமை தோன்றற்கு ஏகாரம் இடையிட்டுக் கூறினாரென்க.

வ - று: ஆயிரமக்கள் பொருதார், பெருந்தேவி பொறை யுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களிருந்தார் என்புழி, மக்கள்

1. திருக்கோவையார், செ. கூ.

என்னும் பொதுப்பெயரும், பொருதார் இருந்தார் என்னும் பொதுவினையும், உயர்திணை ஆண்பால் பெண்பாலுள் ஒன்றனை யொழித்து ஒன்றனைக் குறிப்பான் உணர்த்தின. இப்பெற்றம் உழவொழிந்தன; இப்பெற்றம் அறத்திற்கே கறக்கும் என்புழிப், பெற்றம் என்னும் பொதுப்பெயரும், ஒழிந்தன கறக்கும் என்னும் பொதுவினைகளும், அஃறிணை ஆண்பால் பெண்பாலுள் ஒன்றனை யொழித்து ஒன்றனைக் குறிப்பான் உணர்த்தின. இவற்றுட் பொருதார் கறக்கும் என்னும் வினைகள் விகுதிமாத்திரையிற் பொதுவினையாயின. குறுத்தாட்பூதம், மரைமலர், குவிகமொ டகவிய அங்கை என்புழி இவ்விகாரச்சொற்கள் குறுந்தாள் தாமரை இக்குவிகம் என்பனவற்றைக் குறிப்பால் உணர்த்தின. கால்கழீஇ வருதும், நன்காடு, பறி என்புழி, இத்தகுதிகள் தத்தம் பொருளைக் குறிப்பால் உணர்த்தின. புளித்தின்றான், கடுத்தின்றான் என்புழி, இவ்வாகுபெயர்கள் அவற்றின் பழத்தினைக் குறிப்பால் உணர்த்தின. 'பொற்றொடி தந்த புனைமடல்,' 'அறற்கூந்தற் கில்லை யருள்' என்புழி, இவ்வன்மொழித்தொகை அவற்றையுடைய மகளிரைக் குறிப்பால் உணர்த்தின.

[1]" சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது."

என்புழி வல்லன் இலன் என்னுஞ் சொற்கள் பெயர்ப் பொருளையொழித்து வினைக்குறிப்புப்பொருளைக் குறிப்பால் உணர்த்தின.

[2]" அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிப்பு"

என்புழி இம்முதற்குறிப்புச் சொற்கள்,

[3]" அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை"

என்னும் பாட்டைக் குறிப்பால் உணர்த்தின.

[4]" அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட."

என்புழி ஐவர் என்னுந் தொகைக்குறிப்புச்சொற் பாண்டவரைக் குறிப்பால் உணர்த்திற்று.

1. திருக்குறள், செ. ௬௪௭. 2. யா. கா. ௧௬.
3. " " ௩௭. 4. புறநா: ௨.

"ஒன்றி னிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்
வென்று களங்கொண்ட வேல்வேந்தே-சென்றுலாம்
ஆழ்கடல்சூழ் வையகத்து ளைந்துவென் றாறகற்றி
ஏழ்கடிந் தின்புற் றிரு."

என்பதும் அது.

இனிப் பலவாற்றானும் வருங் குறிப்புச்சொற்கள் பொருளைக் குறிப்பால் உணர்த்துமாறு:—கற்கறித்து நன்கட்டாய். நீயிர் பெரிது மறிதிர். பறவாக்குளவி, பாயாவேங்கை,

"உவர்க்கட லன்ன செல்வரு முளரே
கிணற்றூற் றன்ன நீயுமா ருளையே
செல்வர்தம் பெருந்திரு வறுக பல்பகல்
நீவா ழியரோ வெஃதே பியாச
சிறுவிலைக் காலத் தாயினும்
உறுபொரு டந்தென் சொற்கொள் வோயே."

"பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே."

"அறனோ மற்றிது விறன்மாண் குடுமி
இன்னா வாகப் பிறர்தம் மண்கொண்
டினிய செய்திநின் னார்வலர் முகத்தே."

"நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க வென்னா
இறையே தவறுடை யான்."

"மையார் தடங்கண் மயிலன்னாய் தீத்தீண்டு
கையார் பிரிவித்தல் காண்."

1. பு. வெ: உஉகூ.
2. பழம்பாடல்.
3. புறநா: ககூ.
4 புறநா. கஉ.
5. கலி. ருசு.
6. திணைமாலை, ரு.

"சோலைமலை நாடெழுத்தா மென்சொல்லுந் தொக்கதன்மே
லிட்டமெ யெழுத்தி னிரம்பு—மாலைக்
குடைவேந்தன் சென்னி குலநிதியின் பேரைக்
கடைசேர்த்த மெய்யெழுத்தாற் காண்."

கா, காவி. காவிரி என்பது பொருள். [1]இஃதெழுத்துப் பெருக்கம்.

"சுற்றின்மெய் முற்றி னெழுத்தொழிய வின்பஞ்சேர்
நாற்கால தாயிர் றுயிர்கடப்ப—நற்புடைய
உண்பயறு மாற்கதனி னிறுதிக்தா [2]லோதுநூற்
கின்பஞ்சேர் செப்பமா மின்று."

பாலாறு, பாலா. பால், பா என்பது பொருள். இஃதெழுத்துச் சுருக்கம்.

"வாம மணிமே கலையார் மயிர்குறைகின்
ஆமவர் மெய்ப்பு மணிகுழை—ஏம
மயிர்நுனி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பின்
செயிர்தீர் மாமாகுஞ் சென்று."

கூழை, குழை. ஓரி, ஒரி என்பது பொருள். இது மாத்திரைச் சுருக்கம்.

"பூமேலா ளாரென்பர் பூம்போர்வை யென்செய்யுந்
தீமேற் படிற்கொடுத்தாற் கொள்வதெவன்—ஆமே
நலந்திகழுஞ் செங்கை நயதீர னெங்கோன்
சிலம்பன் றிருவேங் கடன்."

ம.

"நீத்தொழிந்த வாறைந் நடக்கிப்பின் னிச்சயமே
வாய்த்தமைந்த வாயில்வென் றனையும்—கூத்தற்கு
வானேறே டோசை விட்டநில மிவ்வல்லாற்
கேனா புடன்வருவ தில்."

---

1. எழுத்துப்பெருக்கம்: இஃது ஒருவகைச் சொல்லணி; எழுத்து வருத்தனமென்றும் வழங்கப்படும்; தண்டி. சொல்லணி. சூ. ௭. உரையைப் பார்க்க; யா. வி. சூ. ௯௪, உரை.

(பாடம்) 2. லோதுநருக்.

நிலையாமை கடைப்பிடி சிவபுண்ணியஞ் செய் என்பது பொருள். இத்தொடக்கத்தனவெல்லாங் குறிப்பினால் தத்தம் பொருள்களை உணர்த்தின.

இன்னபிறவும் என்றமையானே, தெரிநிலைவினை குறிப்பு வினையாலணையும் பெயரும், வினைமுற்றனுங் குறிப்புமுற்றனும் வருமெச்சங்களும், செய்யும் என்னும் முற்றும், அன்று இன்று என்னும் வினையெச்சக்குறிப்பும், கேட்குந போலவுங் கிளக்குந போலவும் இயங்குந போலவும் இயற்றுந போலவும் அஃறிணை மருங்கினும் அறையப் படுதல் முதலிய இலக்கணைகளும் இவை போல்வன பிறவுங் கொள்க.

இவ்வாறன்றி நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்றற்றொடக்கத்தனவெல்லாம் வெளிப்படையிற் பொருள் உணர்த்தின.

வடநூலார் சொற்பொருளை வாச்சியம், [1]வியங்கியம், இலக்கணை என மூன்றெனவும், [2]இலக்கணையை வியங்கியத்துள் அடக்கி இரண்டெனவுங் கூறுப. இவற்றுள் வாச்சியமென்பது வெளிப்படை. வியங்கியம் என்பது குறிப்பு. இலக்கணை என்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது. அது விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும் விடாத இலக்கணை என மூவகைப்படும். அவை வருமாறு:

“சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையும்
நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி—முன்றில்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
குழைந்துபின் சென்றவென் னெஞ்சு.”

என்புழி மருங்குங் கையும் ஊன்றுதலும் முதலிய இலக்கணங்கள் நெஞ்சிற்கு இன்மையின் விட்ட இலக்கணை. கங்கையின்கண் இடைச்சேரி புளித்தின்றான் என்புழி இடைச்சேரி கங்கைக்கரைக்கண் இருத்தலும், புளியினது பழத்தைத் தின்றலும் உண்மையின் விடாத இலக்கணை.

[3]“பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி.”

---

(பாடம்) 1. வெங்கியம்.

2. இலக்கணையும் சத்தத்தின்கணுளதென்றும், அது ஆற்றலுடைத்தாதற்பாலதன் சம்பந்தமென்றுங் கூறுவர், தருக்கசங்கிரக நூலார்.

3. பெரும்பாண். க-உ.

என்புழி இருளைப் பருகுதலும் பகலைக் காலுதலும் பரிதிக்கு இன்மையானும் இருளைப் போக்குதலும் பகலைத் தருதலும் அதற்கு உண்மையானும் விட்டும்விடாத இலக்கணை. இவையுங் குறிப்பினுள் அடங்குமாதலின் 'வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே' எனத் தொகுத்தும இவ்வாறு வகுத்துங் கூறினரென்க. (௬௨)

---

## ௨. சொற்பாகுபாடு

### சொல் இத்தனை வகைப்படுமென்பது

௨௭௦. அதுவே,

இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர்வினை
எனஇரண் டாகும் இடையுரி அடுத்து
நான்குமாம் திசைவட சொல்அணு காவழி.

எ-னின். மேலைச் சூத்திரங்காறுஞ் சொல்லாவது இஃதெனக்காட்டக் கண்ட சொல் இத்துணையாமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்காட்டிய சொல் இயற்சொல் திரிசொல் என்னும் இயல்பினையுடைய பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் என இரண்டாம்; இவற்றுடன் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் அடுத்து நான்குமாம், இவற்றுடன் திசைச்சொல்லும் வடசொல்லும் அணுகாவிடத்து எ - று.

'செய்யுட்குரியன உரிச்சொல்' எனக் கூறுதலானும், வருஞ் சூத்திரஞ் 'செந்தமிழாகி' எனக் கூறுதலானும் இயற்சொல் என்றதைப் பெயர்வினை இடையினுந் திரிசொல் என்றதை எல்லாவற்றினும் பிரித்து உரைத்துக்கொள்க. எனவே, அதுவே எனச் சுட்டிய சொல் பெயரியற்சொல், பெயர்த்திரிசொல், வினையியற்சொல், வினைத்திரிசொல், இடையியற்சொல், இடைத்திரிசொல், உரித்திரிசொல் என ஏழுவகைப்படுமென்பதூஉம், திசைச்சொல்லும் வடசொல்லும் அணுகியவழி ஒன்பது வகைப்படுமென்பதூஉம் பெற்றாம். [1]உரியியற்சொல் இன்றாகவும் உரித்திரிசொல் என்றது இயற்சொல் திரிசொல் என்னும் பொது இலக்கணம் நோக்கியென்க.

1. மயிலைநாதர் உரியியற் சொல்லும் உண்டென்பர்.

இச் சொற்களை ஒருங்கோதாது முறைதெரித்து ஓதியது என்னையெனின்:—ஒருவன் ஒருத்தி என்ற மாத்திரையின் அவர் கை கால் முதலிய அகத்துறுப்பும் உடை அணி முதலிய புறத்துறுப்பும் அடங்குதல்போலப் பெயர்வினை என்ற மாத்திரையின் அவற்றின் அகத்துறுப்பாகிய விகுதி உருபு முதலிய இடைச்சொற்களும் புறத்துறுப்பாகிய வேற்றுமைஉருபு முதலிய இடைச்சொற்களும் அடங்குதலானும், உரிச்சொல், 'பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி' என்பவாகலிற் பெயருள் அடங்குதலானும், திசைச்சொல்லும் வடசொல்லும் இவற்றுள் யாதானும் ஒன்றாய் அடங்குதலானும், இவற்றை அடக்கி நின்ற தலைமையுஞ் சிறப்புந் தோன்றப் பெயர்வினை என இரண்டாகுமென உரையாசிரியரும், பெயர்வினையுள் அடங்கி நின்றவற்றையே வேறுபாடறிதற்கு வேறுபடுத்துத் தொகைகோடலின் இடைஉரிக்கு அத்தலைமையுஞ் சிறப்பும் இன்றென்பது தோன்ற அடுத்து நான்குமாம் என்றும், கொடுந்தமிழ் முதலிய சொல் செந்தமிழோடு விராயவழி அவற்றைத் திசைச்சொல் என்றும், ஆரியச்சொல் தமிழ்நடைபெற்றுச் செந்தமிழோடு விராயவழி அதனை வடசொல் என்று தமிழோடு தழுவப்படுமாயினும் செந்தமிழ்ச்சொல்லோடு தொகைகோடல் ஒருதலையன்றென்பது தோன்ற அணுகாவழி என்றும் முறை தெரித்தோதினரென்க.

வடக்கும் ஒரு திசையன்றோ திசைச்சொல்லன்றி வடசொல் என வேறு கூறுவது என்னையெனின்:—தமிழ்நாட்டிற்கு வடதிசைக்கட் பதினெண்மொழிகளுள் ஆரிய முதலிய பலமொழியும் உளவேனுந் தென்றமிழ்க்கு எதிரியது வடசொல்லாகிய ஆரியம் ஒன்றுமே என்பது தோன்ற அவற்றுள் தமிழ்நடை பெற்றதை வடசொல் என்றும், ஏனையவற்றுள் தமிழ்நடை பெற்றதைத் திசைச்சொல் என்றுஞ் சான்றோரால் நியமிக்கப் பட்டனவென்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

அன்றியும் ஆரியச்சொல் எல்லாத் தேயத்திற்கும் விண்ணுலக முதலியவற்றிற்கும் பொதுவாகலான் அவ்வாரியச்சொல் தமிழ்நடை பெற்றதைத் திசைச்சொல் என்றல் கூடாதெனக் கோடலுமாம். அங்ஙனமாயின் வடசொல் என்றதென்னை யெனின் ஆண்டுப் பயிற்சி மிகுதிபற்றியெனக் கொள்க.

இச் சொற்களைப் பெயர் முதலியவாக வைத்தது என்னை யெனின்:—பெயர்ச்சொல் பொருளை விளக்குதலானும், வினைச் சொல் பொருளது புடைபெயர்ச்சியை விளக்குதலானும், இடைச் சொல் பொருளையும் பொருளது புடைபெயர்ச்சியையுந் தம்பா

*சங்கப் புலவருந் தழைத்தினி திருக்குமு*
*மங்கலப் பாண்டி வளநா டென்ப."*

இவ்வாறன்றிச் 'செந்தமிழ் நிலம் வையையாற்றின் வடக்கெனக் கூறுவாருமுளர்.[1] கொடுந்தமிழ் நிலத்துட் புனனாடு எனப்படுவது சோணாடு ஆதலானும், பாண்டியநாடே தமிழ்நாடென எனச் சான்றோர் கூறுதலானும் அஃதுரை அன்றென்க. ௩௪)

## திரிசொல்

உ௭உ. ஒருபொருள் குறித்த பலசொல் ஆகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் ஆகும்.

எ - னின். நிறுத்தமுறையானே திரிசொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருபொருளைக் கருதிய பலசொல்லாகியும், பலபொருளைக் கருதிய ஒருசொல்லாகியும், கற்றோர் உணரும் பொருளவாய் வருவன திரிசொல்லாம் எ - று.

அரிதுணர் பொருளன என்றமையான் ஒருபொருள் குறித்த பலசொல்லுள்ளும் பலபொருள் குறித்த ஒருசொல்லுள்ளும் வரும் இயற்சொல் ஒழியக் கொள்க.

வ - று: கிள்ளை, சுகம், தத்தை என்றற்றொடக்கத்தன ஒருபொருள் குறித்த பலபெயர்த்திரிசொல். "யானையுங் கோழியுஞ் சங்கும் வாரணம்"[2] என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த ஒருபெயர்த்திரிசொல். படர்ந்தான், சென்றான் என்றற்றொடக்கத்தன ஒருபொருள் குறித்த பலவினைத்திரிசொல். கரைந்தான் ஆர்த்தான் என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த ஒருவினைத்திரிசொல். சேறும் வருதும் என்றற்றொடக்கத்து விகுதிகள் ஒருபொருள் குறித்த பல இடைத்திரிசொல். 'கொல்லே யைய மசைநிலைக் கூற்றே.' என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த ஓரிடைத்திரிசொல். 'சால உறு தவ நனிகூர்

---

1. செந்தமிழ் நிலம் வையையாற்றின் வடக்கெனக் கூறுபவர் மயிலைநாதர்: தொல். எச்ச. உ-ஆம் சூத்திரவுரையில் இளம்பூரணர், சேனாவரையர் நச்சினார்க்கினியர் என்பவர்களும், யாப்பருங்கலக்காரிகை உரையாசிரியரும் இங்ஙனமே எழுதியுள்ளார்.

2. திவாகரம்.

கழிமிகல்' என நற்றொடைக்கண்ணும் ஒருபொருள் குறித்த பலபெயர்த் திரிசொல். 'கயமனார் கிளவி காப்பே கூர்மை.' என்றற்றொடைக் கண்ணும் பலபொருள் குறித்த ஒருபெயர்த் திரிசொல். திசைச்சொல்லும் வடசொல்லும் ஒருபொருள பலபொருள் என்னும் விகற்பத்தான் வருதலைமேற் காண்க.

ஈண்டு இயற்சொல் திரிசொல் என்றது அவற்றின் எழுத்துக்கள் சிதைவையுஞ் சிதையாமையையுங் கருதியன்று. வானரத்தின் முகம் தன் இயல்பா யிருந்ததேனும் நாரமுகச் செவ்விக்கு மறைதலைப்பட்டமை கருதி வலிமுகம் எனப்பட்டதுபோலக் கல்வியேதுவானன்றி இயல்பாகத் தம்பொருளை உணர்த்தலின் இயற்சொல் என்றும் அவ்வியல்பிற்கு மறைதலைப்பட்டுக் கல்வியேதுவால் தம்பொருளை உணர்த்தலின் திரிசொல் என்றுங் கூறப்பட்டன வென்க. (௨௭௨)

திசைச்சொல்

௨௭௩. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினில் தமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப.

எ - னின் நிறுத்தமுறையானே இயற்சொல் திரிசொல் என்றவற்றின் பின்னின்ற அவ்வியல்பினவாய பெயர் வினை இடையுரிகளை இவ்வியலுள் 'இடுகுறி காரணம்' என்னுஞ் சூத்திரந் தொட்டு இவ்வதிகாரத்து ஐந்தியலானும் உணர்த்த நிறீஇ ஒழிந்த திசை வடசொற்களுள் திசைச்சொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலத்தின்கண்ணும் பதினெண் மொழியுள் தமிழும் மேற்கூறும் வடசொற்குக் காரணமாகிய ஆரியமும் ஒழிந்த பதினாறுமொழியும் வழங்கும் பதினாறு நிலத்தின்கண்ணும் உள்ளோர் தம் குறிப்பினவாய்ச் செந்தமிழோர் குறிப்பினவன்றி அத்திசைகளினின்றுஞ் செந்தமிழ்நிலத்து வந்து வழங்குவன திசைச்சொல் என்று கூறுவர் புலவர் எ - று.

---

1. இக் கொள்கையை யுடையவர்கள் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்பவர்கள்.

[1]செந்தமிழ் என்றமையாற் கொடுந்தமிழ் என்பதூஉம், ஆரியத்திற் காரியமாய வடசொல்லை வேறு கூறுதலின், தமிழ்மொழி நிலம் பதின்மூன்றென்பதூஉம், கற்றோரையும் மற்றோரையுந் தழீஇத் தங்குறிப்பினவெனப் பொதுவாயிற் கூறாமையின் இத்திசைச் சொற்கள் அந்நிலத்தோர்க்கு இயற்சொல்லாய்ச் செந்தமிழோர்க்கு அவ்வாறு குறிக்கப்படாத திரிசொல்லாய் நிற்குமென்பதூஉம் பெற்றாம்.

கொடுந்தமிழ்நிலம் பன்னிரண்டாவன:

"தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா வதன்வடக்கு—நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்."

என்பனவாம். இவற்றுள், செந்தமிழ்ப் பாண்டிநாட்டின் தென்கீழ்பாலதாகிய தென்பாண்டிநாட்டார் ஆவினைப் பெற்றம் என்றும், சோற்றைச் சொன்றி என்றும், குட்டநாட்டார் தாயைத் தள்ளை என்றும், குடநாட்டார் தந்தையை அச்சன் என்றும், கற்காநாட்டார் வஞ்சரைக் [2]கையர் என்றும், வேணாட்டார் தோட்டத்தைக் கிழார் என்றும், [3]பூழிநாட்டார் சிறுகுளத்தைப் பாழி என்றும், [4]பன்றி [5]அருவாநாட்டார் செறுவைச செய் என்றுஞ் சிறுகுளத்தைக் கேணி என்றும், அருவாவடதலையார் புளியை எகின் என்றும், சீதநாட்டார் தோழனை எலுவன் என்றும் தோழியை இகுளை என்றும் வழங்குவர். இவை முதலியனவுந்

---

1. செந்தமிழ் என்றதினுலே கொடுந்தமிழ் என்றது அருத்தாபத்தியால் பெறப்பட்டது என்றும், அந்தோ என்பது சிங்களச் சொல் என்றும், எருத்தை - பாண்டில் என்பது தெலுங்குச்சொல் என்றும், மாமரத்தை - கொக்கு என்பது துளுவச்சொல் என்றும், பிறவும் உரைப்பர் இராமானுச கவிராயர்.

2. கையரென்பது மலைநாட்டுச் சொல் என்பர், தக்கயாகப் பரணி உரையாசிரியர்; தாழிசை, உ௬உ.

3. கொங்கு நாட்டினர் மலைமேலுள்ள சுனையைப் பாழி என்பர்.

4. பன்றிநாட்டாரும் அருவாநாட்டாரும் எனக் கொள்க.

5. அருவாநாட்டார்: அருவாளர், 'வடுகாருவாளர்' (தொல். கிளவி சூ. ௫௬, இளம், மேற்.) என்று ஒரு நாட்டாரின் பெயர் காணப்படுதலால் இப்பெயர் அருவாள் நாட்டார் என்று இருத்தல் வேண்டுமோ என்று ஊகிக்கப்படுகின்றது.

தமிழொழிந்த பதினாறு நிலத்து மொழிகளுள் ஏற்பனவுஞ் செந்தமிழோடு விரவிவருதல் காண்க. (௬௩)

### வடசொல்

௨௭௪. பொதுஎழுத் தானும் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைவன வடசொல்.

எ - னின். வடசொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொதுவெழுத்தானும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்துத் திரிந்தவெழுத்தானும் இவ்விரண்டினானும் செந்தமிழ்ச் சொல்லே ஒப்பனவாகி வடதிசைக்கண்ணின்றுஞ் செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன வடசொல்லாம் எ - று.

பதவியலுள், 'பொதுவெழுத் தொழிந்த நாலேழுந் திரியும்' எனக் கூறினமையிற் சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்தானும் என்பது பெற்றாம்.

அவ் வடசொற்கு ஆரியச்சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்து ஆதிகாரணமாயும் அச்சிறப்பெழுத்து அநாதிகாரணமாயும் நிற்றலிற் சிறப்பெழுத்தானும் என்றார். அது பருத்தியான் இயன்ற படாம் என்றாற்போலும்.

ஆரியச்சொற் சிதைந்து வடசொல்லாதலின் இவை சொல்லாற் செந்தமிழ்ச் சொல்லை ஒவ்வாமை கருதி எழுத்தானென்னும் என்பார் எழுத்தான் இயைவன என்றார்.

வ - று: அமலம், உருவம், கமலம், காரணம், காரியம் என்றற்றொடக்கத்தன பொதுவெழுத்தான் இயைந்தன. சுகி, போகி, சுத்தி என்றற்றொடக்கத்தன சிறப்பெழுத்தான் இயைந்தன. அரன், அரி, கடினம், சலம் என்றற்றொடக்கத்தன ஈரெழுத்தானும் இயைந்தன.

அரன் என்புழித் தமிழின் சிறப்பாகிய னகரவீறு பதவியலுள் 'உக்கமாம் பிற' என்றமையான் அமைந்தமையின், ஈண்டு விதந்து கூறாராயினார். பிறவும் அன்ன.

---

1. இதற்றைப் பதினேழ் நிலமென்பர், இராமாநுச கவிராயர்.

"[1]வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
யெழுத்தொடு புணர்ந்த சொல்லா குமே."

"[2]சிதைந்தன வரினு மியைந்தன வரையார்."

என்று ஆசிரியர் தொல்காப்பியனாருங் கூறினா ரென்க. (கஎ)

## க. பெயர்ச்சொல்

### பெயரின் பொதுவிலக்கணம்

உஎரு. இடுகுறி காரண மரபோ டாக்கந்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்றா
வேற்றுமைக் கிடனாய்த் திணைபால் இடத்தொன்
றேற்பவும் பொதுவும் ஆவன பெயரே.

இவ்வதிகாரத்து ஐந்தியலானும் உணர்த்த நிறீஇய பெயர் வினை இடை உரியென்னும் நான்கனுள் பெயரிலக்கணம் உணர்த்துவான் தொடங்கி அதன் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இடுகுறியுங் காரணக்குறியும் மரபினையும் ஆக்கப்பாட்டினையுந் தொடர்ந்து வினையாகலேயுங் காரணக் குறியொன்றுங் காலந்தோற்ற அல்லன காலந்தோற்றாவாய் எட்டு வேற்றுமையுஞ் சார்தற்கிடமாய் இருதிணை ஐம்பால் மூவிடத்துள் ஒன்றனை ஏற்பவும் பலவற்றனை ஏற்பவுமாய் வருவன பெயர்களாம் எ - று.

வ - று: ஆண், பெண், மரம், தெங்கு, கடுகு என்றற்றொடக்கத்தன இடுகுறி மரபு தொடர்ந்தன. அவன், அவள், காளை, காரிகை, விலங்கு, பறவை என்றற்றொடக்கத்தன காரணக்குறி மரபு தொடர்ந்து வந்தன.

"[3]பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
யென்பேதை செல்லற் கிசைந்தனளோ—மின்போலு

1. தொல். சொல். எச்சவியல் - சூ. ரு.
2. ,, ,, ,, ,, சு.
3. தமிழ்நாவலர் சரிதை: கப.

> மாணவேன் முட்டைக்கு மாறுப தெவ்வர்போர்
> காணவேன் முட்டைக்குக் காடு.”

எனவும் பொய்யாமொழிப் புலவன் பாடலில் வேட்டுக்குமரன் தன்பெயர் முட்டை என்றற்றொடக்கத்தன இடுகுறியாக்கத் தொடர்ந்தன. பொன்னன், பூணன். “மலைமான் மகனே மாற்றோர் கூற்றே.” என்றற்றொடக்கத்தன காரணக்குறியாக்கத் தொடர்ந்தன. நடந்தானை நடந்தானே என்றற்றொடக்கத்தன வினையாலணையுங் காரணக்குறி காலங்காட்டின. ஏனை இலக்கணங்கள் மூன்றும் பின்னும் பெறப்படுதலின் ஈண்டுக் காட்டிற்றிலம்.

ஆண் பெண் முதலிய இடுகுறிப்பெயரும் அவன் அவள் முதலிய காரணப்பெயரும் இடையே ஒருவரான் ஆக்கப்பட்டன வன்றி அவ்விலக்கணங்களோடு தோன்றிய பொருள்கட்கெல்லாந் தொன்றுதொட்டு மரபு பற்றி வருதலானும், முட்டை என்றற்றொடக்கத்த இடுகுறிப்பெயரும் பொன்னன் என்றற்றொடக்கத்தக் காரணப்பெயரும் மரபுபோலத் தொன்றுதொட்டன வன்றி அப்பொருள்கட்கு இடையே ஒருவரான் ஆக்கப்பட்டு வருதலானும், இடுகுறி காரணம் இரண்டும் மரபையும் ஆக்கத்தை யுந் தொடர்ந்த என்றார். இதற்கு இவ்வாறன்றி, இடுகுறிப் பெயர் காரணப்பெயர் இரண்டும் ஒழிய இடையன் பாகன் என்னும் மரபுப்பெயர் தெங்கு கடு என்னும் ஆகுபெயர் எனப் பொருள்கொள்வாருமுளர். எல்லாப் பெயரும் இடுகுறிப்பெயர் காரணப்பெயர் என்னும் இரண்டாய் அடங்குவதன்றி வேறின்மை யானும், ‘இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.’ என வுரையமை கூறிப் போந்தமையானும் அது பொருந்தாதென்க. ()

### உயர்திணையாண்பாற்பெயர்

௨௭௯. அவற்றுள்,

> கிளைஎண் குழூஉ முதல் பல்பொருள் திணைதேம்
> ஊர்வா னகம்புற முதல நிலன்யாண்
> டிருது மதிநாள் ஆதிக் காலம்
> தோள்குழல் மார்புகண் காது முதலுறுப்
> பளவறி வொப்பு வடிவு நிறங்கதி

1. முருகு: உதிசா.

2. மரபும் ஆக்கமும் இடுகுறிப் பெயர் காரணப்பெயர்களைச் சார்ந்தனவல்ல, வேறு என்பர் மயிலைநாதர்.

சாதி குடிசிறப் பாதிப் பல்குணம்
ஓதல் ஈதல் ஆதிப் பல்வினை
இவைஅடை சுட்டு வினாப்பிற மற்றே
றேற்ற னவ்வீறு நம்பி ஆடூஉ
விடலை கோவேள் குரிசில் தோன்றல்
இன்னன ஆண்பெயர் ஆகும் என்ப.

எ - னின். மேல் 'திணைபா லிடத்தொன் றேற்பவும்' என்ற வற்றுள் உயர்திணை ஆண்பாற்குரிய பெயர்கள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் 'பெயரே' என்றவற்றுள் இங்ஙனம் பகுத்துக் கூறிய பொருளாதி ஆறனோடும் இவற்றை யடையுஞ் சுட்டினோடும் வினாவினோடும் பிறவென்பதனோ டும் மற்றென்பதனோடும் பொருந்திய னகரவீற்றுப் பெயர் களும் நம்பி முதலாக எடுத்தோதிய பெயர்களும் இவை போல்வன பிறவும் உயர்திணை ஆண்பாற் பெயர்களாம் என்று சொல்லுவர் புலவர் எ - று.

"த க ந எம்முதன் மகர மிடையிட்டு
ன ள ர வா மீற்றன சுற்றப் பெயரே."

என்பவாகலிற் கிளைப்பெயரறிக.

சுட்டு முதலிய நான்கிடைச்சொற்குந் தமக்கென ஒரு பொருளின்றிப் பொருளாதி ஆறனுள் யாதானும் ஒன்றைக் கூறுவான் குறிப்பின்வழி அடைந்து உணர்த்தலின், இவையடை சுட்டு வினாப்பிற மற்று என்றார். 'வினைச் சுட்டடனும் வேறுமாம்' என்பதும் அது.

வ - று : தமன் நமன் நுமன் எமன் என்பன கிளையான் வரு பெயர். ஒருவன் என்பது எண்ணான் வருபெயர். அவையத் தான் அத்திகோசத்தான் என்பன குழூஉவான் வருபெயர். பொருளன், பொன்னன், முடியன் என்றற்றொடக்கத்தன முத லென்பவற்றான் வருபெயர். இவை பொருளான் வருபெயர்.

வெற்பன், பொருப்பன், சிலம்பன் எனவும்; மறவன், எயினன் எனவும்; இடையன், ஆயன் எனவும்; ஊரன், மகிழ்நன் என வும்; சேர்ப்பன், துறைவன் எனவும் வருவன குறிஞ்சி முதலிய ஐந்திணையானும் வருபெயர். சோழியன், கொங்கன் என்பன

தேயத்தான் வருபெயர். கருவூரான், மருவூரான் என்பன ஊரான் வருபெயர். வானத்தான், அகத்தான், புறத்தான் என்பன வான் முதலிய மூன்றானும் வருபெயர். மண்ணகத்தான், பாதலத்தான் என்றற்றொடக்கத்தன முதலவென்பவற்றான் வரு பெயர் இவை இடத்தான் வருபெயர்.

மூவாட்டையான், வேனிலான், தையான், ஆதிரையான் என்பன யாண்டு முதலிய நான்கானும் வருபெயர். நெருநலான், காலையான், மாலையான் என்றற்றொடக்கத்தன ஆதியென்பவற்றான் வருபெயர். இவை காலத்தான் வருபெயர்.

திணிதோளன், செங்குஞ்சியன், வரைமார்பன், செங்கண்ணன், குழைக்காதன் என்பன தோள் முதலிய ஐந்தானும் வரு பெயர். குறுந்தாளன், நெடுங்கையன் என்றற்றொடக்கத்தன முதலென்பவற்றான் வருபெயர். இவை சினையான் வருபெயர்.

பெரியன், புலவன், பொன்னொப்பான், கூனன், கரியன், மானுடவன், பார்ப்பான், சேரன், ஆசிரியன் என்பன அளவு முதலிய ஒன்பதானும் வருபெயர். நல்லன், தீயன் என்றற்றொடக்கத்தன ஆதியென்பவற்றான் வருபெயர். இவை குணத்தான் வருபெயர்.

ஓதுவான், ஈவான் என்பன அவ்விரண்டானும் வருபெயர். கணக்கன், பிணக்கன் என்றற்றொடக்கத்தன ஆதி என்பவற்றான் வருபெயர். இவை தொழிலான் வருபெயர்.

அவன், இவன், உவன், எவன், யாவன், ஏவன், பிறன், மற்றையான் என்பன சுட்டு முதலிய நான்கானும் வருபெயர். நம்பி முதலிய பெயர்கள் ஏழும் உரைக்கிடையிற் காண்க.

இன்னன என்றமையான், வில்லி, வாளி, சென்னி, கிள்ளி என்றற்றொடக்கத்து உயர்திணை ஆண்பாற்பொருள் குறித்து வருவனவெல்லாங் கொள்க.

இவை யடைசுட்டு வினாப்பிற மற்றோடுற்ற னவ்வீறு என்பவற்றிற்கு அப்பொருளன், இப்பொருளன், உப்பொருளன், எப்பொருளன், பிறபொருளன், மற்றப்பொருளன் என [1]உதாரணங் காட்டுவாருமுளர். சுட்டு முதலிய நான்கனோடும் னகரவீறு உறுதலின்மையான் அவற்றிற்கு அவை காட்டாகாவென்க. (௬௬)

1. மயிலைநாதர் இக்கருத்துப் புலப்பட உதாரணங் காட்டுவார்: நன். சூ. ௨௭௫, உரையைப் பார்க்க. இளம்பூரணரும், சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் இக்கொள்கை உடையவர்களென்று தெரிகின்றது. தொல. பெயர், சூ. ௯. முதலியவற்றின் உரைகளைப் பார்க்க.

உயர்திணைப்பெண்பாற்பெயர்

உஎஎ. கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற ஈற்றவும்
தோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே.

எ - னின். உயர்திணைப் பெண்பாற்குரிய பெயர் உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) மேலைச் சூத்திரத்துக் கிளைமுதலாகப் பகுத்துக் கூறிய அறுவகைப் பொருள்களுள் ளகரவொற் றும் இகரவுயிரும் உறுதற்கேற்ற அவ்விரண்டீற்றவாய் வரும் பெயர்களுந் தோழி முதலாக எடுத்தோதிய பெயர் களும் இவற்றுடனே இவைபோல்வன பிறவும் உயர்திணைப் பெண்பாற் பெயர்களாம் எ - று.

வ - று: தமள், நமள், நுமள், எமள், அவையத்தாள், அத்தி கோசத்தாள், பொருளாள், பொன்னள் எனவும்; ஒருத்தி, அவையத்தி, அத்திகோசத்தி, பொன்னி எனவும் பொருளாதி ஆறனுள்ளும் ளகரஒற்றிற்கும் இகரஉயிர்க்கும் ஏற்பன அறிந்து ஒட்டிக்கொள்க.

ஏற்றவீற்ற என்றமையாற் கிளைப்பெயர் இகரஈறு ஏலாமை யும் எண்ணுப்பெயர் ளகரவொற்றீறு ஏலாமையுங் காண்க. பிற வும் அன்ன. தோழி முதலிய ஐந்து பெயரும் உரைக்கிடையிற் காண்க.

இன்னன என்றமையான் இகுளை மாது அங்கனை என்றற் றொடக்கத்து உயர்திணைப் பெண்பால் குறித்து வருவன வெல்லாங் கொள்க. (உ0)

உயர்திணைப்பலர்பாற்பெயர்

உஎஅ. கிளந்த கிளைமுதல் உற்றரவ் வீற்றவும்
கள்ளேன் ஈற்றின் ஏற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி ஆகும்.

எ-னின். பலர்பாற்கு உரிய பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறப்பட்ட கிளை முதலிய அறு வகைப் பொருளையும் பொருந்திய ரகர ஒற்றீற்றுப் பெயர்

களும் கள என்னும் விகுதியை ஈறாகவுடைய பெயர்களுள் ஈண்டைக்குப் பொருந்தி வருவனவும் இவைபோல்வன பிறவும் பலர்பாலின் பெயர்களாம் எ - று.

கள்ஈறு பகுதிப்பொருள் விகுதியாயும் விகுதிமேல் விகுதியாயும் வருதலின் உம்மை இடையிட்டு வேறோதினார்.

கள்ளொ டீற்றி னேற்பவும் என்றார், அஃறிணைக்கண்ணுங் கள்ளீற்றுப் பெயர் வருதலின்.

பல்லோர் பகுதியின் பெயராமெனக் கூட்டுக. பகுதி என்பது பால். தொகுப்புத் தொகுதி என நின்றாற்போலப் பகுப்புப் பகுதி என நின்றது. பகுப்பு பல்லோர் பெயரின் பகுப்பாகும் எனினும் அமையும்.

வ - று: தமர், நமர், நுமர், எமர், இருவர், மூவர் எனப் பொருளாதி ஆறனோடும் ஒட்டுக. கோக்கள், மனுக்கள் என்றற்றொடக்கத்தன பகுதிப்பொருள் விகுதியீற்றுப் பெயர்கள். தமர்கள், நமர்கள், அரசர்கள், மறவர்கள் என்றற்றொடக்கத்தன விகுதிமேல் விகுதியீற்றுப் பெயர்கள். இவ்விகுதிமேல் விகுதி இடைச்சொல்லாதலின் 'ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ' என்னுஞ் சூத்திரத்தாற் கூறும் வழுவமைதியாய் வந்தன.

பிறவும் என்றமையான் மாந்தர், மக்கள் என்றற்றொடக்கத்துப் பலர்பால் குறித்து வருவனவெல்லாங் கொள்க. (உக)

அஃறிணையொன்றன்பாற்பெயர்

உஎகூ. வினைச்சுட் டுடனும் வேறும் ஆம்பொருள்
ஆதி யுறுதுச் சுட்டணை யாய்தம்
ஒன்றெனெண் இன்னன ஒன்றன் பெயரே.

எ - னின். அஃறிணை ஒருமைப்பாற்குரிய பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினவின்கண்ணுஞ் சுட்டின்கண்ணுங் கரந்து அவற்றினுடனும் வினவுஞ் சுட்டும் படாது வேறாயும் வரும் பொருளாதி ஆறனையும் பொருந்திய துவ் விகுதி ஈற்றுப்பெயரும், சுட்டோடு கூடிய ஆய்தத்தைப் பொருந்திய துவ்விகுதி ஈற்றுப்பெயரும், ஒன்றென்னும் எண்ணுகு பெயரும் இவைபோல்வன பிறவும் அஃறிணை ஒருமைப் பெயராம் எ - று.

வ - று: எது, யாது, ஏது எனவும்; அது, இது, உது எனவும்; குழையது, நிலத்தது, மூலத்தது, கோட்டது, குறியது, ஆடலது எனவும்; அஃது, இஃது, உஃது எனவும்; ஒன்று எனவும் வரும்.

இன்னன என்றமையால், பிறிது, மற்றையது என்றற் றொடக்கத்து அஃறிணை ஒருமைப்பொருள் குறித்து வருவன வெல்லாங் கொள்க.

சுட்டணையாய்தம் இப்பகுதி விகுதிப் புணர்ச்சிக்கண் சந்தி வகையான் வந்தது அன்மையின் இச்சுட்டுப் பெயர்கள் வேறோதப் பட்டன என்பதூஉம், இவைபோல் எடுத்தோதாமையின் ஆய்தம் அணையாச் சுட்டுப்பெயர்களே விளைச்சுட்டுடனும் என்றவற்றுள் அமைந்து கிடந்தன என்பதூஉம், விளைச்சுட்டுடனும் என்பதற்கு எக்குழையது அக்குழையது என [1]உதாரணங் காட்டுவது பொருந் தாது என்பதூஉம் பெற்றாம். (உஉ)

அஃறிணைப்பலவின்பாற்பெயர்

உ௩௦. முன்னர் அவ்வொடு வருவை யவ்வும்
சுட்டிறு வவ்வுங் கள்ளிறு மொழியும்
ஒன்றல் எண்ணும் உள்ள இல்ல
பல்ல சில்ல உளஇல பலசில
இன்னவும் பலவின் பெயர் ஆகும்மே.

எ - னின். அஃறிணைப் பன்மைப்பாற்குரிய பெயர் உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) முன்னர்க் கூறிய 'விளைச்சுட்டுடனும் வேறுமாம் பொருளாதி' ஆறனோடும் ஏற்ற பெற்றி வரும் வகர ஐகாரஈற்றுப் பெயர்களும் அகரஈற்றுப் பெயர்களும் வகரஒற்றீற்றுச் சுட்டுப்பெயர்களும் கள் என்னும் பகுதிப் பொருள் விகுதி இறுதியாகிய பெயர்களும் ஒன்றல்லாத இரண்டு முதலிய எண்ணுகு பெயர்களும் உள்ளவென்பது முதலிய குறிப்புவினையாலணைந்த எட்டுப் பெயர்களும் இவைபோல்வன பிறவும் அஃறிணைப் பன்மைப் பெயர் களாம் எ - று.

1. இக்கருத்துத் தோன்ற உதாரணங் காட்டுவர் மயிலை நாதர்.

மேலைச்சூத்திரங்களுள் கூறியவாறே உறுதி கூறாது வருவை யென்றதனால் ஏற்றபெற்றி என்பதூஉம், உள்ள இல்ல முதலிய பண்பொடும் வரும் அகரஈற்றுப் பெயர்கள் 'முன்னர் அவ்வொடு வருவை யவ்வும்' என்பவற்றுள் அடங்குதலின் பின்னர்க் கூறிய உள்ள இல்ல முதலிய எட்டும் குறிப்புவினையாலணையும் பெயர் என்பதூஉம் பெற்றாம்.

வ - று: எவை, யாவை எனவும்; அவை, இவை, உவை எனவும்; நெடியவை, கரியவை, நல்லவை, தீயவை, உள்ளவை, இல்லவை எனவும்; பொருள, பொருளன, அகத்த, அகத்தன, மூலத்த, மூலத்தன, கோட்ட, கோட்டன, கரிய, கரியன, உள்ள, உள்ளன, இல்ல, இல்லன, ஓதுவ, ஓதுவன, ஈவ, ஈவன எனவும்; அவ், இவ், உவ் எனவும்; யானைகள், குதிரைகள் எனவும்; இரண்டு, மூன்று, பத்து, நூறு, ஆயிரம் எனவும் வரும். உள்ள முதலிய எட்டும் உரைக்கிடையிற் காண்க.

இன்னவும் என்றமையான், யா, பிற, மற்றைய என்றற்றொடக் கத்து அஃறிணைப் பன்மைப் பொருள் குறித்து வருவன வெல் லாங் கொள்க.

(உரு)

அஃறிணையிருபாற்பொதுப்பெயர்

உடுக. பால்பகா அஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய.

எ - னின். மேல் 'பொதுவுமாவன பெயரே' என்றார், அவற் றுள் அஃறிணை இருபாற்குமுரிய பொதுப்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அஃறிணைப் பெயர்களுள் இங்ஙனம் பால் பகுத்தலே ஒழிந்துநின்ற பெயர்களனைத்தும் அத்திணை இருபாற்குமுரிய பொதுப்பெயர்களாம் எ - று.

வ - று: யானை வந்தது, யானை வந்தன, குதிரை வந்தது, குதிரை வந்தன, மரம் வளர்ந்தது, மரம் வளர்ந்தன, கண் சிவந் தது, கண் சிவந்தன என வரும்.

இச்சூத்திரம் திணைப்பொதுப் பெயரின் பிற்கூறாது ஈண்டுக் கூறிய தென்னையெனின் :—விளங்குதற்பொருட்டு ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்னும் உத்தியாற் கூறப்பட்ட தென்க.

(உசு)

## இருதிணைப்பொதுப்பெயர்

உ௪உ. முதற்பெயர் நான்கும் சினைப்பெயர் நான்கும்
சினைமுதற் பெயர்ஒரு நான்குமுறை யிரண்டும்
தன்மை நான்கும் முன்னிலை யைந்தும்
எல்லாந் தாம்தான் இன்னன பொதுப்பெயர்.

எ - னின். இருதிணைக்கு முரிய பொதுப்பெயர்களைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதற்பெயர் முதலான ஒன்பது கூற்றுப் பெயர்களும் இவைபோல்வன பிறவும் இருதிணைக்குமுரிய பொதுப்பெயர்களாம் எ - று.

பெயர் என்பதனை முறை முதலியவற்றிேனாடுங் கூட்டுக.

எல்லாம் என்பது முதல் இன்னன என்பது ஈறாக நின்ற செவ்வெண்ணின் இறுதிக்கண் நான்கும் என்னுந் தொகையோடு உம்மை தொக்கன.

எல்லாம், தாம், தான் என விதந்து மூன்று பெயரும் ஒழிய இன்னன என்றமையால், சூரியனுதித்தான் சூரியனுதித்தது என ஒருபொருளையே உயர்திணைப் பொருளாக்கியும் அஃறிணைப் பொருளாக்கியுங் கூறப்படும் பொதுப்பெயர் முதலியனவும், ஊமை வந்தான் ஊமை வந்தாள் என உயர்திணை இருபாலையும் [1]உரைக்கும் பொதுப்பெயர் முதலியனவும், தன்மை முன்னிலை வினையாலணையும் பெயரும் பிறவுங் கொள்க.

முதற்பெயர் முதலாக முன்னிலைப்பெயர் ஈறாகக் கூறிய அறுவகைப் பெயர்கட்கும் உதாரணம் பின்வருந் தத்தம் வகைச் சூத்திரங்களுள் காண்க.

உயர்திணைக்குச் சிறந்த பெயர் அஃறிணைக்கண் விரவியும், அஃறிணைக்குச் சிறந்த பெயர் உயர்திணைக்கண் விரவியும் வருதலின், இவற்றை விரவுப்பெயர் என்றுங் கூறுப. அங்ஙனம் வருதல் காட்டும் உதாரணங்களுள் காண்க. (உ௫)

## முதற்பெயர் முதலிய நான்கையும் வகுத்தல்

உ௪௩. ஆண்மை பெண்மை ஒருமை பன்மையின்
ஆம்அந் நான்மைகள் ஆண்பெண் முறைப்பெயர்.

(பாடம்) 1. உணர்த்தும்.

எ - னின். மேல் தோகுத்து உணர்த்தியவற்றுள் முதற்பெயர் முதன் முறைப்பெயரீறாகக் கிடந்தவற்றை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆண்மை முதலிய இந்நான்கு பாலுங் காரணமாக முற்கூறிய முதற்பெயர் சினைப்பெயர் சினை முதற் பெயர் என்னும் மூன்றும் ஒவ்வொன்றும் நந்நான் காம் ஆண்மை பெண்மை என்னும் இருபாலுங் காரணமாக முறைப்பெயர் இரண்டாம் எ - று.

மேலைச் சூத்திரத்து இரண்டென்பதனையும் இச்சூத்திரத்து ஆம் என்பதனையுங் கூட்டி முறைப்பெயர் இரண்டாமென உரைத் துக் கொள்க.

உயர்திணைக்கேயுரிய பலர்பாலையும் அஃறிணைக்கேயுரிய ஒன்று பல என்னும் இருபாலையும் ஒழித்து இருதிணைக்கும் பொது வாகிய ஆண்மை பெண்மை ஒருமை பன்மை என்னும் நான்கு பாலினையும் இவற்றுள் முறை கூறுதற்குரிய ஆண்மை பெண்மை என்னும் இருபாலினையுங் காரணமாக இச்சூத்திரத்துள் கூறினார். இவற்றின் காரியங்களை இனைத்தென்று அறிபொருளாக மேலைச் சூத்திரத்துள் கூறியவாறு உய்த்துணர்தற்கென்க. எனவே, ஆண்மை முதற்பெயர் பெண்மை முதற்பெயர் ஒருமை முதற்பெயர் பன்மை முதற்பெயர் எனவும்; ஆண்மைச் சினைப்பெயர் பெண்மைச் சினைப்பெயர் ஒருமைச சினைப்பெயர் பன்மைச் சினைப்பெயர் எனவும்; ஆண்மைச் சினைமுதற்பெயர் பெண்மைச் சினைமுதற் பெயர் ஒருமைச் சினைமுதற்பெயர் பன்மைச சினைமுதற்பெயர் எனவும்; ஆணமை முறைப்பெயர் பெண்மை முறைப்பெயர் எனவும் பெயர்பெறும் என்பதாயிற்று.

வ - று: சாத்தன், சாத்தி, கோதை, கோதைகள் இவை முதற்பெயர் நான்கு. முடவன், முடத்தி, செவியிலி, செவியிலிகள் இவை சினைப்பெயர் நான்கு. முடக்கொற்றன், முடக்கொற்றி, கொடும்புறமருதி, கொடும்புறமருதிகள் இவை சினைமுதற்பெயர் நான்கு. தந்தை, தாய் இவை முறைப்பெயர் இரண்டு. கள்விகுதி அஃறிணைப்பன்மைக்குச் சிறந்ததாய் உயர்திணைப் பன்மைக்கண் ணும் விரவி வருதலின் ஒருமைப் பொதுப்பெயரோடு கள்விகுதி புணர்த்ததுணையானே அவை பன்மைப் பொதுப்பெயராயின. ()

திணைப்பொதுப்பெயர் பாற்பொதுவாதல்

உ௮௪. அவற்றுள்,

ஒன்றே இருதிணைத் தன்பால் ஏற்கும்

எ - வின். திணைப்பொதுவாய் நின்ற பெயர்கள் பாற் பொதுவாய் நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதற்பெயர் நான்கு முதலவாகக் கூறப் படுகின்ற இருபத்தாறும் பிறவுமாகிய பொதுப்பெயர்க ளுள் ஒவ்வொன்று இருதிணைக்கண்ணுந் தன்தன் பால்களை ஏற்கும் எ - று.

எனவே, ஆண்மைப் பொதுப்பெயர் உயர்திணை யாண்பாலினை யும் அஃறிணையாண்பாலினையும், பெண்மைப் பொதுப்பெயர் உயர்திணைப் பெண்பாலினையும் அஃறிணைப் பெண்பாலினையும், ஒருமைப் பொதுப்பெயர் உயர்திணையாணொருமை பெண்ணொருமை யினையும் அஃறிணையொருமையினையும், பன்மைப் பொதுப்பெயர் உயர்திணைப் பன்மையினையும் அஃறிணைப்பன்மையினையும் ஏற்கு மென்பதாயிற்று.

வ - று: சாத்தன் இவன், சாத்தன் இவ்வெருது எனவும்; சாத்தியிவள், சாத்தி இப்பசு எனவும்; [1]கோதை இவன், கோதை இவள் கோதை இது எனவும்; கோதைகள் இவர், கோதைகள் இவை எனவும்; தந்தை இவன், தந்தை இவ்வெருது எனவும்; தாய் இவள், தாய் இப்பசு எனவும்; யான் நம்பி, யான் நங்கை, யான்பூதம் எனவும்; யாம் மக்கள், யாம் பூதங்கள் எனவும்; நீ நம்பி, நீ நங்கை, நீ பூதம் எனவும்; நீயிர் மக்கள், நீயிர் பூதங்கள் எனவும்; அவரெல்லாம் அவையெல்லாம் எனவும்; அவர்தாம், அவைதாம் எனவும்; அவன்றான், அவள்தான், அதுதான் எனவும் வரும். இவற்றுள் காட்டாதொழிந்தனவும் பிறவும் இவ்வாறே ஒட்டிக்காண்க.

ஆண்மைப் பொதுப்பெயர் பெண்மைப் பொதுப்பெயர்கட்கு ஆண்மக்கள் ஆண்விலங்கு, பெண்மக்கள் பெண்விலங்கு, காளை வந்தான் காளை வந்தது, மான் வந்தாள் மான் வந்தது என இக் காலத்துப் பயின்றுவருவன காட்டலுமொன்று; பிறவும் அன்ன.

செஞ்ஞாயிறு என்றாற்போலத் தன்னோடியைபின்மை நீக்கிய விசேடணத்தான் விசேடிக்கப்பட்டனவன்றிச் செந்தாமரை என் றாற்போலப் பிறிதோடு இயைபு நீக்கிய விசேடணத்தான் விசேடிக்கப்பட்டனவாகி ஆண்மைப் பொதுப்பெயர் பெண்மைப்

---

1. கோதை என்பது சாத்தன், சாத்தி, மருதி, செவிலி என்றாற்போல ஈற்றால் பால் விளக்குதலின்றிப் பொதுவாய் நிற்றலின், பன்மை சுட்டிய பெயராமென்க என்பர்: சிவஞான முனிவர், இலக்கணவிளக்கச் சூறாவளி, சூ. உகு.

பொதுப்பெயர் என்றும் ஒருமைப் பொதுப்பெயர் பன்மைப் பொதுப்பெயர் என்றும் இனச்சுட்டுளவாய் வருதலின், தன்பால் ஏற்குமெனக் கூறினரென்க.

இனி, ஆசிரியர் தொல்காப்பியர் பன்மைசுட்டிய பெயரென்றது பலபாலையுஞ் சுட்டி நிற்றலின், பிறிதின் இயைபு நீக்கிய விசேடணம் அடுத்து நின்றதென்பார்,

[1]"பன்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றே பலவே யொருவ ரென்னு
மென்றிப் பாற்கு மோரன் னவ்வே."

எனக்கூறித் தன்பால் ஏற்றலை உம்மையால் தழீஇயினர். அவ்வாசிரியர் கருத்தறியாது, பன்மைப் பொதுப்பெயருள பன்மை என்பது பிறிதோடு இயைபு நீக்கிய விசேடணம் அன்றெனத் தோன்றியவாறே விசேடண இலக்கணஞ்சிதைத்து [2]இடர்ப்பட்டு உரை கூறுவாருமுளர். அதனைத் தோன்றக் கூறிற் பெருகும். அவ்வாசிரியர் கூறியவாறே பன்மைப் பொதுப்பெயர்க்கு உதாரணம்: யானை வந்தது, யானை வந்தன, யானை வந்தான், யானை வந்தாள் என வருமாறும், இங்ஙனம் யானையென்னும் பால் பகா அஃறிணைப்பெயர்க்குக் கள்விகுதியின்மையின் அஃறிணை யொருமைக்கே சிறந்ததாய் அதன் பன்மைக்கண்ணும் விரவி ஆகுபெயராய் உயர்திணை ஆணொருமை பெண்ணொருமையினும் விரவி வருமாறுங் காண்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

பலபாலையுஞ் சுட்டி நிற்றலின், பன்மைசுட்டிய பெயரெனின் ஆண்மை சுட்டிய பெயர் முதலியனவும் பலபாலையுஞ் சுட்டி நிற்றலின் அவற்றையும் பன்மைசுட்டிய பெயர் எனல் வேண்டுமாலெனின்: அது பொருந்தாது, நான்கு பாலுஞ் சுட்டி நிற்குந் தன்னை நோக்க ஏனை மூன்று பாலும் இரண்டு பாலுஞ் சுட்டி நிற்கும் பெயர்கள் சின்மை சுட்டிய பெயரெனப்படுவன வல்லது பன்மைசுட்டிய பெயரெனப்படாவாகலான் என்க. அற்றேல் அவற்றைச் சின்மைசுட்டிய பெயரெனவே அமையும் பிறவெனின், அவற்றுள் ஆண்மை

1. தொல். சொல். பெயரியல், சூ. உஅ.

2. உதாரணங்காட்டியவர் மயிலைநாதர்; இளம்பூரணரும், சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் இவ்வாறே காட்டினர்; தொல். பெயர். சூ. உஅ. உரை. இவ்வுதாரணங்கள் பொருந்தா வென்று இராமநுச கவிராயர் விளக்கியுள்ளார்.

சுட்டுதன் முதலிய பகுப்புண்மையின் அவற்றைப் பகுத்துக் கூறவேண்டுதலான் அமையாவென்க. [1]இக்கருத்தே பற்றி யன்றே, பஃறொடைவெண்பா என்றாற்போல ஏனைய வற்றையும் பஃறொடைவெண்பா எனக் கூறாததூஉம், பகுப் புண்மையிற் சிஃறொடைவெண்பா என்றொழியாததூஉம், பஃறாழிசைக் கொச்சகம் என்றதனை நோக்கி அதிற் குறைந் ததனைப் பகுப்பின்மையாற் சிஃறாழிசைக் கொசசகம் என்றே போந்ததூஉம் என்க. இனி இவ்வாறன்றி ஆணொருமை பெண்ணொருமை அஃறிணையொருமை என்ற மூன்றும் ஒருமைப்பாலென ஒன்றாயடங்குதலிற் பல பால் களையுஞ் சுட்டி நின்றனவல்லவாகலான் அம்மூன்றொருமை யுஞ் சுட்டிய பெயர்களை ஒருமைசுட்டிய பெயரெனவும், இஃதொருமையும் பன்மையுமென்னும் இருபால் சுட்டி நிற்றலாற் பன்மைசுட்டிய பெயரெனவுங் கொள்ளினும் இழுக்காது. (உஎ)

### தன்மை முன்னிலை படர்க்கைப்பெயர்கள்

உ௮௫. தன்மை யான்நான் யாம்நாம் முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை எல்லாம் எனல்போது.

எ - னின். 'தன்மை நான்கு முன்னிலை யைந்து' என்றார் அவை இவை என்பதூஉம் 'இடத்தோன்றேற்பவும் பொதுவும்' என்றார் அவை இவை என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தன்மைப்பெயர் நான்காவன: யான் நான் யாம் நாம் என்பனவாம்; முன்னிலைப்பெயர் ஐந்தாவன எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ என்பனவாம்; திணைபாலுள் ஒன்றற்கேற்பவும் பொதுவுமாகிய பெயர்களுள் இவ்விரண் டிடத்து ஒன்பது பெயருமல்லாத பெயர்களனைத்தும் படர்க்கையிடத்திற்குரியவாம்; அவற்றுள் எல்லாம் என் னும் பெயர் ஒன்று மூவிடத்திற்கும் உரித்தாம் எ - று.

எல்லாம் என்னும் பெயர் மூவிடத்தும் வருமாறு: யாமெல் லாம் நீயிரெல்லாம் அவரெல்லாம் அவையெல்லாம் என வரும்.

---

1. இலக்கணவிளக்கச் சூறாவளி, பெயரியல், சூ. உ௮-ல், சிவஞானமுனிவர் இதனையே கூறியிருப்பதனைக் காண்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இத்தன்மை முன்னிலைப்பெயர்களை உரைத்தலுங் கேட்டலும் இல்லா அஃறிணைக்கண் இவ்வொன்பது பெயரும் விரவிப் பொதுப்பெயராமாறு என்னையெனின் :—ஆசிரியர் தொல்காப்பியர் [1]“அவ்வழி—அவனிவ னுவனென வரூஉம் பெயரும்” என்னுஞ் சூத்திரத்து யான் யாம் நாமென வரூஉம் பெயரும் உயர்திணைப்பெயரெனக் கூறினாரேனும் மரபியலுள் [2]“மக்க டாமே யாறறி வுயிரே-பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே,” “ஒருசார் விலங்கு முளவென மொழிப,” என்னுஞ் சூத்திரங்களின் விலங்கினுள் ஒருசாரன கிளியுங் குரங்கும் யானையும் முதலாயினவும் மனவுணர்வுடையன வாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்குமெனக் கூறலின் அம்மரபுபற்றிப் பொதுப்பெயரெனப் பட்டன வென்க. மேல்வருந் தன்மை முன்னிலை வினைகளும் அவ் வினையாலணையும் பெயர்களும் அன்ன. அங்ஙனமாகவே ‘கேட்குந போலவுங் கிளக்குந போலவு—மியங்குந போலவு மியற்றுந போலவு—மஃறிணை மருங்கினு மறையப் படுமே.’ என்பது புனைந்துரைவகையால் வழுவமைதியாகக் கூறப் பட்டனவேயாம் ஆதலின், அவைபற்றிப் பொதுப்பெயரெனப் பட்டனவெனக் கோடல் பொருந்தாமையும் அறிக.

### தொழிற்பெயருக்கும் வினையாலணையும் பெயருக்கும் இடம் வகுத்தல்

உ௪௯. வினையின் பெயரே படர்க்கை வினையால்
அணையும் பெயரே யாண்டும் ஆகும்.

எ - னின். சில வினையின்பெயர்க்கு ‘அல்லன படர்க்கை’ என்பதனான் எய்திய இடம் யாண்டுமாகும் என்பதனான் இகந்து படாமற் படர்க்கை என்பதனாற் காத்தலும் வினையாலணையும் பெயர்க்கு அதனை விலக்கி இடம் வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) யானுணல் நீயுணல் அவனுணல் என மூவிடத்து வினையாயினும் அவ்வுணல் தினல் என்றற் றொடக்கத்து வினையின்பெயர் படர்க்கைக்கே உரியவாம்; அவ்வினையாலணையும்பெயர் அவ்வினையின் பெயர்போற் படர்க்கைக்கே உரியவாகாது உண்டேனை உண்டாயை

1. தொல். சொல். பெயரியல், சூ. ௧௬௨.
2. ,, பொருள். மரபியல், சூ. ௬௬.

உண்டானெனத் தனித்தனி மூவிடத்திற்கும் உரியவாம் எ - று.

யானுண்டேன் நீயுண்டாய் அவனுண்டான் என இடத்தான் ஒன்றுபட நின்ற நிலைமொழி வருமொழிபோல அம்மூவிட முற்றின்கண் தொழில்படனிலையாகி யானுணல் நீயுணல் அவனுணல் என ஒன்றுபட நிற்பனவற்றிற்கன்றி எனதுணல் நினதுணல் அவனதுணல் என்றும் உணல் என்றும் வேறுபட்டு நிற்கும் வினையின் பெயர்கட்கு எய்திய இடம் இகந்துபடுதல் இன்றென உணர்க.

இவ்வாறன்றி வினையின்பெயரே படர்க்கை என்பதற்கு வினையின்பெயரனைத்தும் படர்க்கையெனப் [1]பொருள்கொள்ளிற் கூறியது கூறலாம்; அது பொருந்தாதென்க. (உக)

பன்னிரண்டு பொதுப்பெயர்

உ௨எ. தான்யான் நான்நீ ஒருமை பன்மைதாம்
யாம்நாம் எலாம் எலிர் நீயிர்நீர் நீவிர்.

எ - னின். இப்பன்னிரண்டு பொதுப்பெயர்களும் இருதிணைக்கும் பொதுவாகிய ஆண்மை பெண்மை ஒருமை பன்மை என்னும் நான்கு பொதுப்பால்களுள் இப்பாலுள் அமைந்து கிடந்தனவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தான் யான் நான் நீ என்னும் நான்கும் [2]இருதிணை முக்கூற்று ஒருமைப்பெயராம்; தாம் யாம் நாம் எல்லாம் எல்லீர் நீயிர் நீர் நீவிர் என்னும் எட்டும் [3]இருதிணை இருகூற்றுப் பன்மைப்பெயராம் எ - று.

இதனை 'அவற்றுள்—ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்.' என்னுஞ் சூத்திரத்தின் முற்கூறாது ஈண்டுக் கூறியது என்னையெனின்:—தன்மை முன்னிலைப் பெயர்களின் வகையுணர்ந்தன்றி

---

1. பொருள்கொள்பவர் மயிலைநாதர்; இ-வி. உரையாசிரியர் கொள்கையுமிதுவே. சூ. க௮௮ உரை.

2. இருதிணை முக்கூற்று ஒருமை - உயர்திணை ஆண்பால் பெண்பாலும் அஃறிணை ஒன்றன்பாலும்.

3. இருதிணை இருகூற்று-உயர்திணையில் வரும் பலர்பாலும் அஃறிணையில் வரும் பலவின்பாலும் நாலடியார், செ. ககக. இச் செய்யுளில் ஒருவர் என்பது உரையிற்கண்டது.

ஒருமை பன்மை தோன்றுமையின் ஈண்டுக் கூறி, அவற்றின்பின் நின்றவாகலின் எல்லாம் தாம் தான் என்பனவற்றிற்கும் ஈண்டொருமை பன்மை உடன்கூறினுரென்க. (௬0)

எண்ணுல் வரும் உயர்திணைப்பெயருக்குப் புறனடை

உ௮அ. ஒருவன் ஒருத்திப் பெயர்மேல் எண்ணில.

எ - னின். எண்ணுன் வரும் உயர்திணைப்பெயர்க்காவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எண்ணுன் உயர்திணையாண்பாற் பெயரும் பெண்பாற்பெயரும் வருங்காலத்து ஒன்றென்னும் எண்ணுனே ஒருவன் ஒருத்தி என வருவனவன்றி இவற்றின் மேல் இரண்டு முதலிய எண்களான் இப்பெயர்கள் வருவன இல்லாம் எ - று.

இருவன் இருத்தி என்றற்றொடக்கத்தனவாகி வரிற் பன்மைப்பகுதியோடு ஒருமைவிகுதி புணர்ந்து பால்வழுவாமாதலின் எண்ணிலவென்றூர். (௬௧)

உ௮௯. ஒருவர் என்ப துயிரு பாற்றுய்ப்
பன்மை வினைகோளும் பாங்கிற் றேன்ப.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) ஒருவரென வழங்குஞ் சொல் உயர்திணையாண்பால் பெண்பாலிரண்டற்கும் பொதுவாய் அத்திணைப் பன்மை வாய்பாட்டு வினையைக்கொண்டு முடியும் பாங்கினையுடைத்தென்று சொல்லுவர் புலவர் எ - று.

வ - று: ஆடவருள் ஒருவர் அறத்தின்வழி நிற்பார் ஒருவர் நில்லார், பெண்டிருள் ஒருவர் கொழுநன்வழி நிற்பார் ஒருவர் நில்லார் எனவும்; [1]"யாஅ ரொருவ ருலகத்தோர் சொல்லில்லார்" எனவும் வரும்.

இவ்வொருவர் என்னுஞ் சொல் பொதுவியலுள் கூறும் உவப்பு உயர்வு முதலியவற்றுன் வரும் ஒருவர் என்னுஞ் சொல்லன்றித் தன்னியல்பால் வந்ததாகலின் ஈண்டுக் கூறப்பட்டதென்றுணர்க. இச்சொல்லின்கண் பகுதிக்கேற்ப இருபாற்றாய் என்றும், விகுதிக்கேற்பப் பன்மைவினைகொளும் என்றும், உயர்

1. நாலடி: ௧௧௬.

திணை முப்பாலுள் பன்மையைப் பின் விதத்தலின் ஆண் பெண் என விதவாது உயரிருபாற்கும் என்றும், உயரென முன் விதத்தலின் உயர்திணைப் பன்மையென விதவாது பன்மை என்றும், ஒருவர் வந்தார் ஒருவரவர் என வினையும் பெயருங்கொள வருவது உவப்பு உயர்வு முதலியவற்றான் வருவதாம். இங்ஙனந் தன்னியல்பாய் வரும் ஒருவரென்பது வினையும் வினைக்குறிப்புமே கொள்ளுமென்பார் பெயரையொழித்து வினைகொள்ளும் என்றும், இச்சொல் ஒருமைப்பகுதியோடு பன்மை விகுதி மயங்கிப் பால்வழுவாய் நின்றதேனுந் தன்னியல்பாய் மயங்கி நின்றமையின் வழாநிலைபோலும் என்பதூஉம் பன்மைவினை என்றது சொல்மாத்திரையிற் பன்மைவினையன்றிப் பொருள்மாத்திரையின் ஒருமை வினையாம் ஆதலின் இப்பயனிலையை ஒருவர் என்னுஞ்சொல் கொள்ளுதல் வழுவன்று என்பதூஉந் தோன்றப் பாங்கிற்று என்றும், இங்ஙனமாதல் சான்றோர்க்கு ஒப்ப முடிந்ததென்பார் என்ப என்றுங் கூறினர். (௬௨)

## ஆகுபெயர்

உ௯0. பொருள்முத லாறோ டளவைசொல் தானி
கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகு பெயரே.

எ - னின். மேற்கூறிய ஒன்றற்கேற்பவும் பொதுவுமாகிய பெயர்க்கண் வருங் காரணப்பெயர்களுள் ஆகுபெயராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளே இடமே காலமே சினையே குணமே தொழிலே என்னும் ஆறுடனே இவற்றின் பகுதியவாகிய நால்வகை யளவையே சொல்லே தானியே கருவியே காரியமே கருத்தாவே என்னும் ஆறும் ஆதியாக வரும் பொருள்களுள் ஒருபொருளின் இயற்பெயரானே அப்பொருளினுக்கு இயைந்த பிறிதொருபொருளைத் தொன்று தொட்டு வருமுறையே கூறிவருவன ஆகுபெயர்களாம் எ - று.

பொருளாதி ஆறன்றி வேறுபொருள் இன்றேனும் அவற்றுள் பயிற்று வருவனவற்றைப் பிரித்து அளவை முதலாக விதந்தமையின் பொருள் முதலாறு என்பன இவை ஒழிந்தனவற்றை

என்பதூஉம், அதற்கியைபிறிதை என்றமையான் இயையாதனவற்றிற்கு வருவன பலபொருளொருசொல்லன்றி ஆகுபெயர் ஆகாவென்பதூஉம், தொன்முறையுரைப்பன என்றமையான் ஆகுபெயர்மேல் ஆகுபெயராயும் அடையடுத்தும் இருபெயரொட்டாயும் வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும் பயின்று பலபொருள் ஒருசொல்போல வருவனவன்றி இடையே தோன்றியவாறு ஆக்கப்படுவன அல்ல என்பதூஉம் பெற்றாம்.

வ - று: "தாமரை புரையுங் காமர் சேவடி." "ஆம்பலூறுந் தேம்பொதி கிளவி" என முதற்பொருளின் பெயர் சினைப்பொருளுக்கு ஆயின [1]"அகனமர்ந்து செய்யாளுறையும்," "புறங்கொடை யறியா மறந்திகழ் வேலோன்." என இடப்பெயர் சித்தத்திற்கும், முதுகிற்கும் ஆயின. காரறுத்தது, கார்த்திகை பூத்தது எனக் காலப்பெயர் பைங்கூழிற்குந் தோன்றிக்கும் ஆயின. இவற்றுள் கார் என்பது நிறத்தின் பெயர் மேகத்திற்காய் மேகத்தின்பெயர் பருவத்திற்காய்ப் பருவத்தின்பெயர் பைங்கூழிற்கு ஆனமையின், மும்மடியாகுபெயர். [2]அறுபதமூரலும், மருக்கொழுந்து நட்டான், வெற்றிலை நட்டான், புளி முளைத்தது என அடையடுத்துந் தனித்தும் வந்த சினைப்பெயர் முதலுக்காயின. இவற்றுள் புளியென்பது, சுவைப்பெயர் பழத்திற்காய்ப் பழத்தின்பெயர் மரத்திற்கானமையின் இருமடியாகுபெயர். "நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள்," "கார்நிகர் வண்கை" புளித் தின்றான் என நிறமுஞ் சுவையுமாகிய குணப்பெயர்கள் குவளைக்கும் மேகத்திற்கும் பழத்திற்கும் ஆயின. வற்றலோடுண்டான் என வற்றல் என்னுந் தொழிற்பெயர் அதனையுடைய உணவிற்கு ஆயிற்று. ஒன்று, இரண்டு, அரை, கால் என எண்ணலளவைப்பெயர் அஃறிணை ஒருமைக்கும் பன்மைக்கும் யாக்கையின்கண் உறுப்பிற்கும் ஆயின. துலாக்கோல், துலாபாரந் தூக்கினான், துலாவிறைத்தான் என எடுத்தலளவைப்பெயர் நிறைகோலிற்குந் தராசிற்குங் கிணற்றிறைவை மரத்திற்கும் ஆயிற்று. இவற்றுள் துலாக்கோல் என்பது இருபெயரொட்டு முன்மொழியாகுபெயர். நாழி, உழக்கு, ஆழாக்கு என முகத்தலளவைப்பெயர் அளவுகருவிகட்காயின. கீழைத்தடி, மேலைத்தடி எனத் தடியென்னும் நீட்டலளவைப்பெயர் விளைநிலத்திற்கு ஆயிற்று. அவன் மொழியுணர்ந்தான், இந்நூற்குரைசெய்தான் என மொழி, உரை என்னுஞ் சொல்லின்பெயர் அதன்பொருட்கு ஆயின. விளக்கு முரிந்தது, நெஞ்சு நொந்தது என விளக்கும் ஒளியையுடைய பிழம்பும் உணர்வுமாகிய தானிகளின்பெயர்

1. திருக்குறள், செ. அசு.
2. தேவாரம், திருவெழுகூற்றிருக்கை.

அவற்றிற்குத் தானமாகிய விளக்குத் தண்டினுக்கும், மார்பினுக்கும் ஆயின. திருவாசகம், திருவாய்மொழி என அடையடுத்த வாசகம் மொழி என்னும் முதற்கருவியின் பெயர் அவற்றின் காரியமாகிய யாப்பிற்கு ஆயின. இந்நூலலங்காரம், இந்நூல் பாட்டியல் என இவ்விலக்கணங்களாகிய காரியத்தின்பெயர் இவற்றைத் தருதற்குக் கருவியாகிய நூல்கட்கு ஆயின. இந்நூல் திருவள்ளுவர் எனக் கருத்தாவின் பெயர் காரியத்திற்கு ஆயிற்று.

ஆதி என்றமையானே, காளை வந்தான் என்றற்றொடக்கத்து உவமையான் வருவனவும், தேவர் முதலியோர் பெயரை மக்கட்கிட்டு வழங்குவனவும், பிறவுங் கொள்க.

அறுபத முதலியனவற்றைப் பொற்றொடி முதலியனபோல அன்மொழித்தொகைப் பெயரென்றால் என்னையெனின்:—அன்மொழித்தொகைப்பெயர் செய்யுள் இயற்றுவோன் ஒருவரை வியப்பு முதலியவற்றால் தன்கூற்றும் பிறர் கூற்றும் உரைப்புழி ஆங்காங்கு வருவதன்றி இதுபோல நியதிப்பெயராய் வருவதன்றென்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

அங்ஙனமாயினும் [1]ஆகுபெயரும் அன்மொழித்தொகையுந் தம் பொருள் உணர்த்தாது பிறிதுபொருள் உணர்த்துதலான் ஒக்குமாகலின் அவை தம்முள் வேற்றுமை யாதோவெனின்:- ஆகுபெயர் ஒன்றன்பெயரான் அதனோடியைபுபற்றிய பிறிதொன்றனை யுணர்த்தி ஒருமொழிக்கண்ணதாம்; அன்மொழித்தொகை இயைபுவேண்டாது இருமொழியுந்தொக்க தொகையாற்றலாற் பிறிது பொருளுணர்த்தி இருமொழிக் கண்ணதாம்; இவை தம்முள் வேற்றுமை யென்க.

"இருபெயரொட்டாகுபெயர் இருமொழிக்கண் வந்ததன்றோ வெனின் அன்று: என்னை? வகரக்கிளவி அதுவாகு கிளவி மக்கட்சுட்டு என்னும் இருபெயரொட்டாகுபெயருள் வகரமும் அதுவாகலும மக்களுமாகிய அடைமொழிகள் கிளவி, சுட்டு என்னும் இயற்பெயர்ப்பொருளை விசேடித்து நில்லாது எழுத்துஞ் சொற்பொருளும் பொருளுமாகிய ஆகுபெயர்ப் பொருளை விசேடித்து நிற்பக் கிளவி, சுட்டு என்பனவே ஆகுபெயர்ப்பொருளை யுணர்த்த இருபெயரும் ஒட்டி நிற்கு மாகலின். இனிப் பொற்றொடி என்னும் அன்மொழித் தொகையிற் பொன் என்பது அவ்வாறு அன்மொழித்

1. "ஆகுபெயரும் என்பது தொட்டு உளர்" என்பதுகாறும் தொல்காப்பியச் சூத்திர விருத்தியிலும் காணலாம்.

தொகைப்பொருளை விசேடித்து நில்லாது தொடியினையே விசேடித்து நிற்ப அவ்விரண்டன தொகையாற்றலான் அன்மொழித் தொகைப்பொருளை யுணர்த்துமாறும் அறிக. இக்கருத்தேபற்றி மக்கட்சுட்டு முதலியவற்றைப் பின்மொழி யாகுபெயரென்பாரும் உளரெனவறிக.

[1]இப்பட்டுச்சீனம், இப்பொன்கழஞ்சு, இந்நெல்நாழி, இம்மனை ஐங்கோல், இப்புண் ஓரம்பு, இந்நெல்அவல், இவ்வாடை கோலிகன் என வருவனவற்றுள் சீனம் கழஞ்சு, நாழி, கோல், அம்பு, அவல், கோலிகன் என்பனவற்றை [2]ஆகுபெயர் எனவும், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என ஐந்து அதிகாரங்கட்கும் வருங் காரியவாகுபெயரைச் சொல்லாகுபெயர் எனவும், அகத்தியந் தொல்காப்பியம் என்பனவற்றை [3]ஆகுபெயர்த்திரிபு எனவும் கூறுவாருமுளர். இப்பட்டுச் சீனத்துள்ளது என்பார் இசை யெச்சமாக்கி இப்பட்டுச் சீனம் எனக் குறைத்துக் கூறலான் இப் பட்டு என்னும் எழுவாய்க்கு உள்ளது என்பது பயனிலையன்றிச் சீனம் என்பது பயனிலையன்றாதலானும் சுட்டிக்கூறாது சீனம் என வாளா கூறின் அது பலபொருளொருசொற்போல் அவ்விடத் தினையும் பட்டினையும் உணர்த்தாமையானும் இத்தொடக்கத்தன வாகிய இசையெச்சங்களை ஆகுபெயரென்பாருக்கு,

> [4]"திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
> குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண்டோங்கு
> மருவளர் மாலை." [தெய்வ

என வரும் உருவகங்களையும் ஆகுபெயரெனக் கூறல்வேண்டு மாதலானும் இவையெல்லாம் ஆகுபெயரிலக்கணத்தான் வந்தன வல்ல வெனவும், சொல்லாகுபெயர்க்கு அவர் காட்டியவற்றுள் சொல்லினது பெயர் அவற்றிற்கு ஆனதின்மையின் அவை

1. 'இப்பட்டுச்சீனம்' என்பது முதலியவற்றை ஆகுபெய ரென்பவர் மயிலைநாதர்.

2. ஆகுபெயர்க்குதாரணமாக, "இவ்வாடை கோலிகன்" என்பதைச் சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் காட்டியுள்ளார். தொல். வேற்றுமை மயங். சூ. ௩௪. உரை. சீனம் முதலியவற்றை ஆகுபெயரெனவும காரியவாகுபெயரைச் சொல்லாகுபெயரெனவும் கூறுபவர் மயிலைநாதர்.

3. அகத்தியம் தொல்காப்பியம் என்பவற்றை ஆகுபெயர்த் திரிபெனக் கூறுபவர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்; தொல். பாயிரவிருத்தியைப் பார்க்க.

4. திருக்கோவையார், செ. க.

சொல்லாகுபெயராகாவெனவும், வெளிப்படைச்சொல் குறிப்புச சொல் என்னும் இரண்டனுள் ஆகுபெயர் குறிப்புச்சொல்லாத லானும் அகத்தியந் தொல்காப்பியம் என்பன கருத்தாவோ காரியமோ என ஐயமுற்று ஒன்றனைக் குறிப்பான் உணரவேண் டாது காரியமாகிய நூல்களை வெளிப்படையான் உணர்த்தலா னும் கருத்தாவின்மேற் செல்லாமையானும் விகுதிச் சூத்திரத்துப் பிற என்பதனுன் வரும் அம் விகுதியோடு பகுதி புணர்ந்து இந்திர னாற் செய்யப்பட்ட நூலுக்கு ஐந்திரம் என வந்த ஆரியச் சொற் போல வந்தனவன்றி ஈறு திரிந்தனவல்லவெனவு முணர்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இவற்றுள், எழுத்துச் சொற்பொருள் யாப்பலங்காரம் என்பன காரியவாகுபெயரெனக் கோடலன்றி அப்பெயர்களான் அவ் விலக்கணங்களைக் கூறுதற்குத் தானமாகிய படலங்களைக் கூறினமையான் இவை தானியாகுபெயரெனக் கோடலுமா மென்க. இனித் [1]திருவாசகந் திருவாய்மொழி என்பன உண்மையால் நோக்குவார்க்கு அன்மொழித்தொகையாவன வன்றி ஆகுபெயராகாமையும் உணர்க.

இனி ஆகுபெயர்கள்தாந் தத்தம் பொருளை நீங்காது நின்று தம் பொருளின் வேறல்லாத பொருளோடு புணர்தலும் பொருத்த மில்லாத கூற்றால் நின்று பிறிதுபொருளை உணர்த்தலுமாகிய அவ்விரண்டிலக்கணத்தையுடைய விடாத வாகுபெயரும், விட்டவாகுபெயரும் என இருவகைய எனவும் அவற்றிற்கு உதாரணம் முறையே கடுத்தின்றான், குழிப்பாடி நேரிது எனவுங் கூறுவர். அவ்வாறு ஆகுபெயாகள் வருமாறும் உய்த்துணர்ந்துகொள்க. (௬௬)

## ௩. வேற்றுமை

**வேற்றுமை இனைய என்பதும் இத்துணைய என்பதும்**

**உ௬௧. ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறாய்ப்பொருள்**
**வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை.**

1. இது இலக்கணவிளக்கச் சூறாவளியில் கண்டது. சொல். சூ. ௬௪.

எ - னின். மேல் வேற்றுமைக்கிடனும் என்றார் அவ்வேற்றுமை இனைய எனவும் இத்துணைய எனவும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தம்மை ஏற்றுக்கோடற்குரிய எவ்வகைப்பட்ட பெயர்கட்கும் இறுதியாய் அப்பெயர்ப்பொருளை வேற்றுமைப்படுத்துவனவான வேற்றுமைகள் எட்டேயாம் எ - று.

வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டேயெனக் கூட்டுக.

எல்லாப்பெயரும் எல்லாவேற்றுமையும் ஏலாதென்பார் ஏற்கும் என்றும், வினைச்சொல், இடைச்சொல் உரிச்சொற்களுள் பெயர்பட நின்றனவுந் தழீஇக்கோடற்கு எவ்வகை என்றும், வினைமுதலிய மூன்றும் வேற்றுமை கொள்ளாதென்பார் பெயர் என்றும், ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீறாய் என எய்தியதனை விலக்கி 'எழுவாயுருபு திரிபில்பெயரே' எனப் பிறிதுவிதி வகுத்தலின் பெயர் முழுவதூஉம் உருபாம் எழுவாயுருபினையொழித்து விளியுருபிற்குப் பெயரிறுதியாகிய அகப்பாட்டெல்லையினையும் ஏனை ஆறுருபிற்கும் அதன் இறுதியாகிய புறப்பாட்டெல்லையினையுந் தழீஇக்கோடற்குப் பொதுமையின் ஈறாய் என்றும், பொருளையேயன்றிச் சொல்லையும் ஒரோவழி வேறுபடுப்பது ஐம்முதலிய எழுருபிற்குமேயன்றி எழுவாய்க்கு ஒவ்வாமையானும் பொருளொன்றனையும் வேறுபடுத்தல் எட்டுருபிற்கும் ஒப்ப முடிந்தமையானுஞ் சொல்லையும் உடன் கூறாது பொருள் என்றும், வேற்றுமை என்னுங் காரியத்தைச் செய்யுங் கருத்தாவாகிய எட்டு வேற்றுமையுருபிற்கும் வேற்றுமை யெனவும் பெயர் போந்தது காரியவாகுபெயராகிய காரணக்குறி என்பார் வேற்றுமை செய்வன வேற்றுமை யென்றும்,

> [1]" ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
> வேறெனை விளம்பான் பெயரது விகாரமென்
> றோதிய புலவனு முளனொரு வகையா
> னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன் "

1. விளி வேற்றுமையை எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கல் ஆண்டெல்லார்க்கும் ஒப்பமுடிந்ததன்று: ஏழியன்முறைய தெதிர்முகவேற்றுமை என ஆசிரியர் அகத்தியனார் கூறியதை எடுத்தோதி, ஐந்திர நூலார் விளிவேற்றுமையை எட்டாம் வேற்றுமையாக நேர்ந்தார் என்பது பெறப்படுதலான், ஆசிரியர் அவர் மதம்பற்றிக் கூறினாராகலின் அதனோடு மாறுகொள்ளார் என்பர் - சேனாவரையர்-தொல். சொல். வேற்றுமையியல், கஙு-ஆம் சூத்திர வுரையிற் காண்க.

என ஆசிரியர் அகத்தியனூர் கூறுபவாகலின் விளியுருபு படர்க்கைச் சொல்லையும் பொருளையும் முன்னிலைச்சொல்லும் பொருளுமாக வேற்றுமை செய்தலின் அதனை [1]எழுவாயுள் அடக்காது வேறுகோடலே தந்துணிபென்பார் எட்டே என்றுங் கூறினூர். வேற்றுமை என்னும் பண்புப்பெயர் பண்பிக்காமையின் பண்பாகு பெயரன்றாயிற்று.

இனி இரட்டுற மொழிதலான் வேற்றுமை செய்வன வேற்றுமை யெட்டே எனக் கொண்டு கூட்டாது ஆற்றொழுக்காக நிறீஇ ஏகாரத்தைத் தேற்றமாக்காது பிரிநிலையாக்கி இங்ஙனம் வருவனவாகிய எட்டுருபும் வேற்றுமை; அவையன்றி [2]ஒருசாரார் கூறும் உருபடைந்த பெயரும் உருபின் பயனிலையும் வேற்றுமையல்ல வெனவும் பொருளுரைத்துக்கொள்க. (௩௪)

வேற்றுமையின் பெயரும் முறையும்

௨௬௨. பெயரே ஐஆல் குஇன் அதுகண்
விளியென் றாகும் அவற்றின் பெயர்முறை.

எ - னின். வேற்றுமைகள் தம் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் 'எட்டே வேற்றுமை' என்றவற்றின் பெயரென்னை கிடக்கை முறையென்னையெனிற் பெயர் முதலாக விளியீறாக இங்ஙனங் கூறிய பெயரும் முறையுமாம் எ - று.

ஏகாரம் எண். மேல் 'எட்டே' என்ற தொகைக்கு வகை தோன்றப் பெயர் கூறினூர் அன்றி இவ்வேற்றுமைகளின் பெயர் விகற்பமெல்லாங் கூறப் புகுந்தாரல்லராதலின் அவையெல்லாம் வருஞ் சிறப்புச் சூத்திரங்களான் உணர்க. இவை இம்முறை நிற்றற்குக் காரணமும் அங்ஙனங் காட்டுதும்.

---

1. விளியை எழுவாயுள் அடக்குபவர் பாணினி முனிவர்: பிரயோக. சூ. க. உரை.

2. உருபையும் உருபேற்ற பெயரையும் வேற்றுமை யென்பது பிரயோக விவேக நூலுடையோர் கொள்கை (காரக. அ, உரை) உருபையேற்ற பெயரையும் உருபை முடிக்கவந்த சொல்லையும் வேற்றுமையென்பது இலக்கணக் கொத்துடையார் கொள்கை; வேற்றுமை அ-ஆம் சூத்திரத்தையும் அதன் உரையையும் பார்க்க.

### சிவஞானமுனிவர் விளக்கம்

[1]அன்றியும், நாராயணன் பூவோராயிரத்தைக் கரத்தாற் கொய்தோ ரரற்கே கொடுத்துச் சக்கரச் சிறுமையி னீங்கி நற்கூவைப் பாற்கடற்கண்ணே பள்ளிகொண்டான் என்பத னுனும் அறிக. (கூ)

### எழுவாயுருபு மற்றையுருபுகளையேற்றல்

உகூரு. ஆறன் உருபும் ஏற்கும்அவ் வுருபே.

எ - னின். மேற்கூறிய வேற்றுமையுருபு எட்டனுள் எழுவா யுருபே ஏனையருபுகளையும் ஏற்குமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுவாய் வேற்றுமையாவது பெயர்மாத் திரையாய்த் தோன்றி நிற்கு நிலை யென்பவாகலின் அவ் வெழுவாயாய் நின்ற உருபே ஐம்முதலிய ஆறு வேற்றுமை களின் உருபும் ஏற்கும் எ - று.

### சிவஞானமுனிவர் விளக்கம்

எனவே, வினையுருபாவது பெயரது விகாரமேயாதலின் அவ் வெழுவாயுருபின் வேறல்லவெனவும்படும் என்பதுபற்றி 'ஆறனுருபு மேற்குமவ் வுருபே' என்றார். இங்ஙனம் [2]ஆறனுரு பும் என அன்சாரியை தவிர்வழி வந்தமையாற் செய்யுள் விகாரம்.

இனி இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது பெயரே யன்றி ஆறும் வேற்றுமையுருபும் அவ்வுருபுகளை ஏற்குமெனப் பொருள்கொண்டு சாத்தனது, சாத்தனதை, சாத்தனதால், சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்தனதனது, சாத்தன தன்கண், சாத்தனதே என உதாரணங் காட்டுவாருமுளர். உருபேற்றல் பெயர்க்கேயுரிய இலக்கணமன்றி வினைமுதலிய வற்றிற்குரிய இலக்கணமன்றுமாதலானும் 'பெயர்வழித் தம்பொரு டாவரு முருபே' என்றும், 'ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கு மீறுய்' என்றும் வரையறை கூறிப் போந்தமை

---

1. இலக்கணக்கொத்து வேற்றுமையியல் சூ. ரு.

2. எழுவாயாய் நின்ற உருபே ஆறு வேற்றுமைகளின் உரு பும் ஏற்குமென்னும் கருத்தான் 'ஆறனுருபு மேற்குமவ் வுருபே' என்றது நன்னூலார் கருத்தென்பர், இலக்கணவிளக்கச் சூறுவளி யார் - சொல். ருஎ.

யானும் ஈண்டு இடைச்சொல் உருபேற்குமெனின் மாறு கொளக் கூறலாமாதலானும் சாத்தனதை, சாத்தனதால் என்புழிச் சாத்தனது என்பது குழையது, கோட்டது என்றாற்போலத் துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று உருபேற்றுநின்ற வினைக்குறிப்புப் பெயராமாதலானும், அன்றியும் உருபேற்புழிப் பெயர்போலத் தனித்துநின்றுரு பேற்றல் வேண்டுமாதலானும், அதனை, அதனால் என உருபேற்குமெனிற் சுட்டுப்பெயர் உருபேற்றதாமன்றி உருபு உருபேற்றதன்றுமாதலானும் அது பொருந்தாதென்க. (கசு)

## ஐ முதலிய உருபேலாப் பெயர்கள்

**உகூச. நீயிர் நீவிர்நான் எழுவாய் அலபெறா.**

**எ - னின். மேல் 'ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கும்' என்றமையின் ஏலாப்பெயருமுள வென்றாராதலின் அவற்றுள் இரண்டாவது முதலிய ஏழுரும் ஏலாதன இவையென உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) இம்மூன்று பெயருள் எழுவாய்வேற்றுமையினையன்றி ஏனை எழுவேற்றுமையினையும் ஏலா எ - று.

எனவே, நீர் என்னும் ஈரெழுத்தொருமொழி அதுபோல ஈரெழுத் தொருமொழியாகிய நும் எனவும் யான் என்னும் யகர முதன்மொழி யகரத்தோடு பிறப்பொத்த எகரமுதன்மொழி யாகிய என் எனவுந் திரிந்து ஐம்முதலிய ஆறுருபும் ஏற்றாற்போல நீயிர், நீவிர், நான் என்னும் மூன்றும் அங்ஙனம் வாராமையின் நும், என் எனத் திரிதலும் அவ்வுருபுகளை ஏற்றலும் இலவென்பதாயிற்று. (கஎ)

## பெயர் வேற்றுமை

உகூரு. அவற்றுள்,

எழுவாய் உருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கோளல் அதன்பய னிலையே.

**எ - னின். நிறுத்தமுறையானே பெயர் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) மேற்கூறிப்போந்த எட்டுவேற்றுமையுள், முதல்வேற்றுமையின் உருபாவது திரிபில்லாத பெயரே யாம்; அதன் பொருள்நிலையாவது வினையையும் பெயரையும் வினாவையுங் கொள வருதலாம் எ - று.

## சிவஞானமுனிவர் விளக்கம்

திரிபில்லாமையாவது, உருபும் விளியும் ஏலாது முடிக்குஞ் சொல்லும் நோக்காது ஆ என்றாற்போலத் தன்னிலையில் நிற்றலாம்.

பயனிலையென்றது ஈண்டு முடிக்குஞ் சொலன்று, பொருள் நிலையென உணர்க. பொருள்நிலை எனினும் பயனிலை எனினும் ஒக்கும்.

பொருள் என வாளா கூறாது பொருள் நிலை என்றது என்னை யெனின்:—ஏனைவேற்றுமையின் பொருள்கட்கெலலாம் அப் பொருள் முதற்கண் நிலைபெறுதலின் என்க. கொள வருத லாவது முடிக்குஞ்சொற் கொளவருந் தன்மை.

எனவே, எழுவாய் வேற்றுமையுருபாவது தன்னிலையில் நிற்கும் பெயரே என்பதூஉம், பெயரே என்றமையான் இதற்கு இது என வேறுருபு இன்றென்பதூஉம், அதன் பொருளாவது வினைமுதற் பொருண்மையாகத் தன்னைத்தானே வேற்றுமை செய்தல் என்பதூஉம் பெற்றாம்.

தன்னைத்தானே வேற்றுமைசெய்தல்,

[1]"தன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானு நிலையினு
மேன்மே லுயர்த்தி நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்."

என்பதனானும் உணர்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

வினையெனப் பொதுப்படக் கூறினமையின், வினையும் வினைக் குறிப்புமாகிய விகற்பமெல்லாங் கொள்க.

இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும்,

[2]"எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே."

எனவும்,

---

1. நாலடி : உசஅ.
2. தொல். சொல். வேற்றுமையியல், சு. ச.

"[1] பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்
றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே."

எனவுங் கூறிய முறைமையும் பொருண்மைசுட்டல் முதலியவாகக் கூறிய ஆறும் இம்மூன்றுள் அடங்குமாறுங் காண்க.

எ - டு: ஆவுண்டு என்பது ஒருபொருளின் பண்பு முதலாயின சுட்டாது, அப்பொருட்டன்மையது உண்மைத் தன்மையே நிற்க வருதலாம். ஆசெல்க என்பது தானே ஏவலைக் கொள்ள வருதலாம். ஆகிடந்தது என்பது தனது தொழிலினைச் சொல்லவருதலாம். ஆகரிது என்பது தனது பண்பினைத் தான் கொள வருதலாம். வினைக்குறிப்பாதல் ஒப்புமையான் ஆவில்லை, ஆவல்ல என்னுந் தொடக்கத்துக் குணப்பொருள வல்லா வினைக்குறிப்புக் கொளவருதலுங் கொள்க. இவை யெல்லாம் வினைப்பாற்பட்டன. ஆ பல என்பதுதான் பெயரைக்கொண்டு முடிய வருதலாம், ஆயாது, ஆவெவன் என்பன தான் வினாவுதற்குப் பொருந்திவருதலாம் எனப் பகுத்துக் காண்க. அங்ஙனம் பகுத்துக் காண்புழி அவிகாரி யாய் நின்றபெயர் இம்முடிக்குஞ் சொற்களை அவாவிய காலத்து அவிகாரியின் நின்றும் விகாரியாகத் தன்னைத் தானே வேற்றுமை செய்து நின்றமையுங் காண்க. இதனை முதல்வேற்றுமை என்றது என்னையெனிற் பெயரேயாய் நிற்ற லானும் வினைமுதற் பொருண்மையைத் தருதலானுமென்க.

இனிப் பயனிலையென்றது முடிக்குஞ்சொல் எனக் கூறுவாரு முளர். வினைபெயர் வினாக்கொளும் என முற்றுச்சொல்லாற் கூறுது வினைபெயர் வினாக்கொளல் எனத் தொழிற்பண்புச் சொல்லாற் கூறுதலானும், இரண்டாம் வேற்றுமை முதலிய வற்றிற்கு உருபும் பொருளுங் கூறுதலான் இம் முதல் வேற்றுமைக்கும் உருபும் பொருளுங் கூறவேண்டுமாதலா னும், இவ்வெட்டு வேற்றுமைக்கும் முடிக்குஞ் சொல் 'எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்—அல்ல வினை கொளும்' என்னுஞ் சூத்திரத்தாற் பிற்கூறுதலானும், ஈண்டுங் கூறிற் கூறியது கூறலாமாதலானும், அது பொருந்தா தென்க.

இன்னும் அவருட் சிலர் வினாக்கொளல் என்பதற்குச் சாத்தனே என வினாவிடைச் சொற்களைக் கொள்ளுமென உதாரணங் காட்டுவர். அங்ஙனமாயின் தெரிநிலை, தேற்றம் முதலிய

1. தொல். சொல். வேற்றுமையியல், சூ. ௬.

பொருள் தரும் இடைச்சொற்களையுங் கொள்ளுமெனக் கூறல்வேண்டுமாதலானும், இஃது இடைச்சொற் சந்தியன்றி எழுவாய்ச் சந்தியன்றும் ஆதலானும், அவர்க்கு அது கருத்தன்றென்க.

இவ்வினைமுதற்பொருள்,

[1]"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்."

[2]"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையா
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு."

என்பவற்றுள் இன்னா தாமே வரும், கேண்மை தானே நந்தும், தொடர்புதானே தேயும் எனச் செயப்படுபொருட்கண்ணும், ஆதித்தன் கற்றீப் பிறப்பித்தான், காற்றுப் பழமுதிர்த்தது என ஏதுவின்கண்ணும், சாத்தனுண்டான் எனத் தன் வசம் என்பதன்கண்ணும், மாடஞ் செயப்பட்டது என வினைமுதலென்று தெரியப்படாமல் வினைமுதலாயே நிற்பதாகிய தெரியா நிலைக்கண்ணும், "ஒத்தகிழவனுங் கிழத்தியுங் காண்ப" என ஒருபொருளே ஒருகால் வினைமுதலாயும் ஒருகாற் செயப்படுபொருளாயும் நிற்குந் தடுமாற்றத்தின்

[3]"அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்."

என்பதனுட் கொல்லாமை அறவினையெல்லாந் தரும், கோறல் பிறவினையெல்லாந் தரும் எனத் தொழிற்பெயர்க்கண்ணும், கண்காணும், செவிகேட்கும் எனக் கருவியின் கண்ணும், குன்று குவட்டைத் தாங்கும், தூண் போதிகையைத் தொட்டது என இடத்தின்கண்ணும், [4]"இரப்பவரென்பெறினுங் கொள்வர்" எனக் கொள்பவன்கண்ணும் வருமெனவும், தாய் மகவுக்கூட்டினாள் ஆசிரியன் மாணாக்கனைப் படிப்பித்தான் தலைவன் தலைவியைப் புல்லினான் என "இருவினைமுதலா லொருவினையும் முள" எனவும், அரசன் தேர்செய்தான், தச்சன் தேர்செய்தான், சாத்தனுறங்கினான்

1. குறள். செ. ௩௱௧௰௯. 2. நாலடி. ௧௨௫.
3. குறள். செ. ௩௱௨௰௧. 4. ஔவையார் தனிச்செய்யுள.

என [1]"ஏவுத லியற்றுத லிவையின்வே றுதல் என விணை முதன் மூவகையாம்" எனவுங் கொள்க. இவையெல்லாம் உரையிற்கோடல் என்னுந் தந்திரவுத்தி. இவ்வாறு பிற வருவனவும் அன்ன. (௩அ)

## இரண்டாம் வேற்றுமை

உ௩௯. இரண்டா வதனுரு பையே அதன்பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதி ஆகும்.

எ - னின். இரண்டாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இரண்டாம் வேற்றுமையினது உருபு மேற்கூறிய ஐயுருபு ஒன்றுமே; அதன் பொருள்களாவன தன்னையேற்ற பெயர்ப்பொருளை ஆக்கப்படுபொருளாகவும் அழிக்கப்படுபொருளாகவும் அடையப்படுபொருளாகவுந் துறக்கப்படுபொருளாகவும் ஒக்கப்படு பொருளாகவும் உடைமைப் பொருளாகவும் இவைபோல்வன பிறவாகவும் வேற்றுமை செய்தலாம் எ - று.

ஈண்டுத் தந்துரைத்தனவெல்லாம் மேற்போந்த 'ஏற்குமெவ் வகை' என்னுஞ் சூத்திரத்திற்கு இயையவந்த இசையெச்சம். மேல்வருனவும் அன்ன.

வ - று: குடத்தை வனைந்தான், உடைத்தான் அடைந்தான் துறந்தான் ஒத்தான் உடையான் என வரும். குடத்தையொத்தான் என்புழிச் சுதந்திரமின்றி ஒழுகினுனென்பது பொருள்.

ஆதி என்றமையான் இவ்வாறு செயப்படுபொருளாக வேற்றுமை செய்தனவெல்லாங் கொள்க.

ஒருவன் ஒருவினை செய்ய அதனுற்றோன்றிய பொருள் யாது அது செயப்படுபொருளென்பதாம். ஒருவன் ஒருவினை செய்யத் தொழிற்படுபொருள் யாது அது செயப்படுபொருளெனினும் அமையும். செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒருபொருட் கிளவி.

அழித்தல் முதலிய வினை செய்தவழித் தோன்றிய காரியங்கள் என்னையெனின் :—அழிபொருளாதன் முதலியனவுங் குறிப்பு

---

1. இலக்கணக்கொத்து, வேற்றுமையியல், சூ. ௧௯.

வினையுள் ஒன்றனையுடையனாகிய காலத்து அஃதுடைமையாதலு மாம். [1]பிறவும் அன்ன.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இச்செயப்படுபொருள் கருத்துண்டாதல், கருத்தின்றாதல் இருமையு மாதல், ஈருருபிணைதல், கருத்தாவாதல், அகநிலையாதல், தெரிநிலை என இவை முதலியனவாகியும் வருமெனக் கொள்க. இவற்றிற்கு உதாரணம்: சோற்றையுண்டான் எனவும்; சோற்றைக் குழைத்தான் எனவும்; எறும்பை மிதித்து வழியைச் சென்றான், பசும்புல்லை மிதித்துப் பலவூரையடைந் தான், தூயொடு கூழையுண்டான், நஞ்சினைக் கலந்த பாலைக் குடித்தான், கத்தரிக்காயையும் புழுவையுங் கறித்தான், பதரையும் நெல்லையும் பணத்திற்குக் கொண்டான் எனவும்; ஆரியனை ஐயுற்ற பொருளை வினவினான் எனவும்; பசுவினைப் பாலினைக் கறந்தான், யானையைக் கோட்டைக் குறைத்தான் [பசுவினது யானையது என்பனபோல ஆரியனது என வாராமைபற்றி இங்ஙனம் ஈருருபிணைதல் இருவகைப்பட் டன.] எனவும்; தன்னைப் புகழ்ந்தான், தன்னைக் குத்தினான், தன்னைப் பேணினான், தன்னைக் காதலித்தான் எனவும்; வருதலைச் செய்தான் எனவும்; மாடஞ் செய்யப்பட்டது எனவும் முறையே காண்க.

தெரிநிலையாவது வினைமுதலுருபேற்றுஞ் செயப்படுபொருளே யெனத் தெரியநிற்றல். எயிலையிழைத்தான் பொருளைப் பெற்றான் கயிற்றை யறுத்தான் என முறையே இயற்றப் படுதலும், எய்தப்படுதலும், வேறுபடுக்கப்படுதலும் முதலி யன அவற்றுள்ளே அடங்கும். முதலியன வென்றதனால், ஆரியன் மாணாக்கனை ஊர்க்குப்போக்கினான், தாய் மகளை ஊர்க்குப் போக்கினாள் என்புழி, மாணாக்கன் மகள் என்னும் இருவரும், போதலாலே வினைமுதலாயும், ஏவப்படுதலாற் செயப்படுபொருளாயும், ஏவுவித்துக்கொள்ளுதலால் ஏவுதற் கருத்தாவாயும், ஏவப்போதலால் இயற்றுதற்கருத்தாவாயும் வந்தன.

இவ்வேற்றுமை தன் பெயர்ப்பொருளை மேற்போந்த கருத்த னாலாகிய காரியம் ஆக்குதலின் இரண்டாம் வேற்றுமை எனப் பட்டது. (௩௧)

1. இதன்பின்னர், சிவஞானமுனிவர் செயப்படுபொருளின் வகைகளை இலக்கணக்கொத்தைப் பின்பற்றி விரித்துரைப்பர்.

## மூன்றும் வேற்றுமை

உகஎ. மூன்று வதனுரு பாலான் ஓடோடு
கருவி கருத்தா உடனிகழ் வதன்பொருள்.

என்- னின் மூன்றாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) மூன்றும் வேற்றுமையின் உருபு மேற் கூறிய ஆலேயன்றி ஆனும் ஓடும் ஒடுவுமாம்; அவற்றின் பொருள்களாவன தம்மையேற்ற பெயர்ப்பொருளைக் கருவி யாகவும் ஏதுப்பொருட்டாகிய கருத்தாவாகவும் உடனிகழ் வதாகவும் வேற்றுமை செய்தலாம என - று.

மூன்றும் வேற்றுமைப் பொருளாதலின் ஏதுப்பொருட்டா கிய கருத்தா என்றும், அதன் பொருள் என்பது தொகுதி ஒருமையாதலின் அதற்கு அவற்றின் பொருளென்றும், பொருள் கூறினும்.

கருவி, காரணம், ஏது, நிமித்தம் என்பன வேறுபொருட் கிளவியாயும் ஒருபொருட்கிளவியாயும் வருதலின், காரணமூன்ற னுள் முதற்காரணந் துணைக்காரணம் என்னும் இரண்டனையுங் கருவியென்றும், ஏவுதற்கருத்தாவும் இயற்றுதற்கருத்தாவும் ஆகிய நிமித்தகாரணமிரண்டனையுங் கருத்தாவென்றுங் கூறினர். வனைந்தான் என்புழிக் குடமாகிய காரியத்திற்கு அதுவதுவாகிய மண் முதற்காரணம். குலாலனது அறிவும் அந்தக்கரணமும் முதலிய ஞாபகக்கருவியுந் தண்டசக்கரம் முதலிய காரகக்கருவி யும் அம்முதற்காரணத்துக்குத் துணையாய் நின்று காரியத்தைத் தருதலின் துணைக்காரணம். குலாலன் நிமித்தமாக அக்காரியந் தோன்றுதலின் அவன் நிமித்தகாரணம். ஞாபகக்கருவி என்பது அறிதற்கருவி. காரகக்கருவி என்பது செய்தற்கருவி. நடந்தான் என்புழிக் குடம்போல்வதோர் காரியமின்றேனும் நடத்தலைச் செய்தான் எனபது பொருளாதலின் நடத்தல் காரியம். அவய வத்தாற் பல வேறுவகைப்பட்ட குடமுதலிய கலன்களிற் பொதுமையின் நிற்கும் மண்போலப் பலவேறுவகைப்பட்ட வினைகளிற் பொதுமையின் நிற்குந் தொழில் நடத்தற்கு முதற் காரணம். அறிவுங் காலும் முதலியன துணைக்காரணம். வினை முதல் நிமித்தகாரணம். பிறவும் அன்ன.

வ - று: அறிவாலாக்கிய காட்சி, அறிவாலாகிய காட்சி என்புழி ஆல் உருபு பெயர்ப்பொருளை ஞாபகமுதற்கருவியாக வேற்றுமை செய்தது. கண்ணாலாக்கிய காட்சி, கண்ணாலாகிய

காட்சி என்புழி ஞாபகத்துணைக்கருவியாக வேற்றுமைசெய்தது. காட்சி என்றது காட்சி உணர்வை. மண்ணாலாக்கிய குடம், மண்ணாலாகிய குடம் என்புழிக் காரகமுதற்கருவியாக வேற்றுமை செய்தது திரிகையாலாக்கிய குடம், திரிகையாலாகிய குடம் என்புழிக் காரகத்துணைக்கருவியாக வேற்றுமை செய்தது. இங்ஙனம் ஆக்குதற்கு வினைமுதல் அறிவனுங் குலாலனுமாம். ஆதற்கு வினைமுதல் காட்சியுணர்வுங் குடமுமாம். இக்காட்சி யுணர்வுங் குடமும் வினைமுதலாகிய காலத்து இக்கருவிகள் ஏதுப்பொருளவாய் நின்றன. அரசனாலாகிய தேவகுலம், தச்சனாலாகிய தேவகுலம் என்புழி முறையே ஏதுப்பொருளவாகிய ஏவுதற் கருத்தாவாகவும் இயற்றுதற் கருத்தாவாகவும் வேற்றுமை செய்தது ஆக்கிய தேவகுலமென வரின் மூன்றாமுருபு ஏலாவாய் அரசனுந் தச்சனும் எழுவாயாம். இஃது எழுவாய்க் கண்வருங் கருத்தாவிற்கும் இவ்வேற்றுமைக்கண் வருங் கருத்தாவிற்குந் தம்முள் வேற்றுமையென்க.

[1]"தூங்கு கையா னோங்குநடைய"

"உறழ்மணியா னுயர்மருப்பின"

[2]"பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு."

என்புழி உடனிகழ்வதாக வேற்றுமை செய்தது. ஆனுருபை யும் இவ்வாறே யொட்டிக் காண்க.

[3]"நாவீற் றிருந்த கலைமா மகளோடு நன்பொற்
பூவிற் றிருந்த திருமா மகள்புல்ல நாளும்"

எனவும்,

[4]"மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை."

எனவும், முறையே ஓடும் ஒடுவும் உடனிகழ்வதாக்கின. ஏற்புழிக் கோடலான் இவ்விரண்டுருபிற்கும் உடனிகழ்ச்சிப் பொருளொன் றுமே கொள்க.

இங்ஙனம் வருங் கருத்தா ஏதுப்பொருட்டாய் வருதலின் விதந்துகூறாது கருவியின்பாற் படுத்தினும் அமையுமென்பது தோன்ற, இவ்வுருபிற்குச் சிறந்த கருவிப்பொருளை முற்கூறினார்.

---

1. புறநானூறு, உ௨.
2. குறள். செ. ௧0௮௩.  3. சிந்தாமணி, ௩0.
4. குறள். செ. உ௯௫.

## சிவஞானமுனிவர் விளக்கம்

[1]இக்கருவிப்பொருள் அகக்கருவி, புறக்கருவி, ஒற்றுமைக்கருவி என மூன்றும் வருமெனக் கொள்க. அவையாவன மனத் தானினைத்தான், வாளால் வெட்டினான், அறிவாலறிந்தான் என முறையே.

இரண்டாம்வேற்றுமைப்பொருளாகிய காரியத்திற்கு வேண்டுங் கருவிப்பொருளைத் தருதலின் இது மூன்றாம் வேற்றுமை எனப்பட்டது.

" ஆலு மானு மோடு மொடுவுஞ்
சாலு மூன்றாம் வேற்றுமைக் கருவே
செய்வோன் காரணஞ் செயத்தகு கருவி
யெய்திய தொழின்முத லியைபுட னதன் பொருள்."

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் எனக. முதற்காரணத்தைக் காரணம் என்றும் ஏவற்கருத்தாவைத் தொழின்முதல் என்றும் விதந்து கூறினாராதலின் இங்ஙனம் பொருள் ஐந்தாயின (௬0)

### நான்காம் வேற்றுமை

உ௬௮. நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கோடைபகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறை ஆதியின் இதற்கிதெனல் பொருளே.

எ - னின். நான்காம்வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நான்காம்வேற்றுமைக்குருபு மேற்கூறிய குவ்வொன்றுமேயாம்; அதன்பொருளாவது கொடையும், பகையும், நேர்ச்சியும், தகவும், அதுவாதலும், பொருட்டும், முறையும் முதலான பொருள்தோன்றப் புணரும் புணர்ச்சிக்கண் இதற்கிதெனை அங்ஙனம் வருதற்குரிய எப்பொருளினையும் ஏற்றுக்கொள்ளும் பொருளாகத் தன்னையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் எ - று.

---

1. இக்கருவி, அகக்கருவி முதலியவாக 'மூவகைப்படுமென்பதனை அகம்புறமொற்றுமையாகுங் கருவி' எனக் கூறுமாற்றானு முணர்க - இலக்கணக்கொத்து, வேற்றுமையியல், சூ. உக.

இதற்கிது என்றமையான் ஏற்றுக்கொள்ளும் பொருளென்பது பெற்றாம்.

வ - று: [1]"இரப்பார்க்கொன் றீவார்மே னிற்கும் புகழ்" என்பது கொடை. [2]"பிணிக்கு மருந்து" என்பது பகை. "விளக்கிற்கெண்ணெய்" என்பது நோக்கி. நட்பு என்பதும் இது. [3]"அருங்கலமூலகின் மிக்கவாசர்க்கே யுரிய" என்பது தகுதி. ஆடைக்கு நூல் என்பது அதுவாதல். கூழிற்குக் குற்றேவல் செய்யும் என்பது பொருட்டு. சாத்தற்கு மகன் என்பது முறை.

ஆதி என்றமையானே கைக்கியாப்புடையது கடகம் என்னும் யாப்புடைமை முதலியவாய் இதற்கிதென்பது பட வருவன வெல்லாங் கொள்க. இவற்றுள் ஏற்றுக்கொள்ளும் பொருளாக வேற்றுமை செய்தல் காண்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இவ்வேற்றுக்கோடற்பொருள் [4]'கேளாதேற்றல், கேட்டேயேற்றல், எலாதேற்றல், ஈவோனேற்றல், உயர்ந்தோனேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போனேற்றல், உணர்வின்றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல் என இவை முதலாகப் பலவுமாமெனக் கொள்க.

எ - டு: ஆவிற்கு நீர் விட்டான் எனவும்; வறியார்க்கீந்தான் எனவும்; மாணுக்கனுக்கறிவைக் கொடுத்தான் எனவும்; தனக்குச சோறிட்டான், தனக் கரிசி கொடுத்தான் எனவும்; [5]"அருமறை சோரு மறிவிலான் செய்யும் — பெருமிறை தானே தனக்கு." எனவும்; அரனுக்குக் கண்ணலர் கொடுத்தானரி எனவும்; அரிக்குச் சக்கரங்கொடுத்தானரன் எனவும்; சோழற்கு விருந்து கொடுத்தான் சேரன் எனவும்; சோற்றிற்கு நெய் விட்டான், நீர்க்கு வாசமூட்டினான், வாளிற்குறை வழங்கினான், தண்டிற்குத் தங்கங் கட்டினான், சுவர்க்குச சித்திரமெழுதினான் எனவும்; மாணுக்கனுக்குக் கசையடி கொடுத்தான் ஆரியன் எனவும்; கள்ளனுக்குக் கசையடி கொடுத்தானரசன் எனவும்; முறையே காண்க.

---

1. திருக்குறள், உஙஉ. 2. திருக்குறள், கக0உ.
3. சூளாமணி, கல்யாணச். கஅக.
4. இலக்கணக்கொத்து, வேற்றுமையியல், சூ. உச.
5. திருக்குறள். அசஎ.

முதலென்றதனால், மருகனுக்கு மகட்கொடுத்தான் என்பது வழக்கு. மகனுக்கரசு கொடுத்தான் என்பது உரிமை. அரசர்க்குத் திறை கொடுத்தான் என்பது அச்சம். தந்தை தாய்க்குத் திதி கொடுத்தான் என்பது பாவனை எனவும் உரும்.

ஒருவன் ஒரு காரியத்தை ஒருகருவியாற் செய்தல் அக்காரியந் தனக்கேனும் பிறர்க்கேனும் உதவுதற்பொருட்டன்றி வினைகாரியஞ் செய்யானாதலின், இஃது இம்முறையானே நான்காம் வேற்றுமை எனப்பட்டது. (௪௪)

## ஐந்தாம் வேற்றுமை

௨௯௯. ஐந்தா வதனுரு பில்லு மின்னும்
நீங்கலொப் பெல்லை ஏதுப் பொருளே.

எ - னின். ஐந்தாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐந்தாம் வேற்றுமையின் உருபாவன இல்லும் மேற்கூறிய இன்னுமாம்; அவற்றின் பொருளாவன நீங்கற்பொருளாகவும் உவமைப் பொருளாகவும் எல்லைப்பொருளாகவும் ஏதுப்பொருளாகவும் தம்மை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் எ - று.

ஏதுப்பொருள் மூன்றும் வேற்றுமைக்கன்றி இதற்கு அத்துணைச்சிறப்பின்மையிற் பிற்கூறப்பட்டது.

வ - று: தமரிற்றீர்ந்தானிவன் வரையின் வீழருவி [1]"தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்—நிலையி னிழிந்தக் கடை." எனவும்; அரசிற் பெரிய ரந்தணர் ஆவினிழிந்தது மேதி எனவும்: வருவழி இன்னுருபு நீங்குதற்பொருளவாக வேற்றுமை செய்தது. பாலின் வெளிது கொக்கு, காக்கையிற் கரிது களம்பழம், [2]"நாயிற் கடைப் பட்ட நம்மை" என்பனவும் ஒப்புமை கருதாது உயர்வுந் தாழ்வுங் கருதியவழி நீங்குதற்பொருளவாம்.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இந்நீக்கப்பொருள் நிலைத்திணை இயங்குதிணை பண்பாதியின் வருமெனவுங் கொள்க. அவையாவன மலையினிழிந்தான் என

1. திருக்குறள், செ. ௯௬௪.
2. திருவாசகம், திருப்பூவல்லி - ௩.

வும்; யானையினிழிந்தான் எனவும்: சிறுமையினீங்கிய எனவும் வரும். ஆதி என்றமையால், [1]"குடிப்பிறந்து குற்றத்தினீங்கி" [2]"ஐயத்தி னீங்கி" என வருமெனவுங் கொள்க. இவ்விலக்கணத்தான் முன்னர்க் காட்டிய உதாரணங்களையும் உய்த்துணர்ந்து கொள்க.

[3]"திறல் வேனுதியிற் பூத்த கேணி" "பொன்னிற் பிதிர்ந்த பொறிசுணங் கிளமுலை" என்புழி உவமைப்பொருளாக வேற்றுமை செய்தது. கருவூரின் கிழக்கு, [4]மருவூரின் மேற்குச் சோணாடு என்புழி எல்லைப்பொருளாக வேற்றுமை செய்தது. [5]"கோட்டிச் செய்த கொடிஞ்சி நெடுந்தேர்," அறிவிற் பெரியன் என்புழி ஏதுப் பொருளாக வேற்றுமை செய்தது. இல்லுருபினையும் இவ்வாறே ஒட்டிக்காண்க.

இங்ஙனம் கூறவே எல்லாப்பொருளையும் இதனின் இற்றிதென விகற்பித்துணர்தற்கு வருவன இவ்வுருபென்பதாயிற்று. ஆகவே நான்காம்வேற்றுமைப் பொருளாகிய கொள்வோனையுங் கொடைப்பொருளினையும் இவ்வாறு விகற்பித்துணர்ந்தல்லது கொடுத்தல் கூடாமையின் இஃது ஐந்தாம் வேற்றுமை எனப் பட்டது. (சஉ)

### ஆறும் வேற்றுமை

ந௨௦௦. ஆறன் ஒருமைக் கதுவும் ஆதுவும்
பன்மைக் கவ்வும் உருபாம் பண்புறுப்பு
ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் ஆம்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

எ - னின். ஆறம்வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று

---

1. திருக்குறள், செ. ௬௦௨.
2. " " ௩௫௩.
3. சிறுபாண். கஎஉ.
4. மருவூர்: மாயூரத்தின் கிழக்கேயுள்ளது; காவிரிப்பூம் பட்டினத்தின் பகுதியாகிய மருவூர்ப்பாக்கமென்பதனாற் சுட்டப் படும் மருவூரென்பது இதுபோலும். செந்தமிழ் நாட்டின் கிழக் கெல்லையாகக் கூறப்படும். தொல். எச்ச. சூ. உ. இளம். சே. ந. ந தொல். வேற்றுமை. சூ. கசு.
5. பொருநராற்றுப்படை, கசுந.

(இ - ள்.) ஆறும்வேற்றுமையினது ஒருமைப்பொருண்மைக்கு மேற்கூறிய அதுவென்பதேயன்றி [1]ஆதுவென்பதும் பன்மைப்பொருண்மைக்கு அகரமும் உருபாம்; அவற்றின் பொருளாவன குணமுந் தொழிலுமாகிய பண்புஞ் சினையும் ஒருபொருட் கூட்டமும் பலபொருட் கூட்டமும் ஒன்றுதிரிந் தொன்றானதுமாகிய ஐந்து தற்கிழமைப் பொருளினையும் பிறிதின்கிழமைப் பொருளினையும் உடையதாகத் தம்மையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் எ - று.

கிழமை என்பது ஆகுபெயர்.

வ - று: நிலத்ததகலம், சாத்தனதியல்பு, சாத்தனது நன்மை, சாத்தனதிருக்கை, சாத்தனது நிலை, சாத்தனது வரவு, கபிலரது பாட்டு எனவும்; சாத்தனது கை, சாத்தனது கால் எனவும்; மரந்தரது தொகுதி, நெல்லது குப்பை எனவும்; படையது தொகை, விலங்கின திட்டம் எனவும்; நெல்லினது பொரி, கோட்டது நூறு எனவும்; ஐவகைத் தற்கிழமையும் முறையே வந்தன. ஒன்றன்கூட்டத் தற்கிழமை மாறிக் குப்பையது நெல் என வரின் உறுப்புத் தற்கிழமை பலவினீட்டம் மாறி நிற்பினும் அது. சாத்தனது ஆடை சாத்தனது பிள்ளை எனப் பிறிதின்கிழமை வந்தன. பாட்டு என்பது வரிவடிவை நோக்கிய காலத்துப் பிறிதின்கிழமையாம். எனதுகை, தனதுதாள், எனதுநிலம், தனதெயில் என ஆது உருபோடும் என கைகள் தன தாள்கள், என யானைகள், தன தானைகள் என அகரவுருபோடும் ஒட்டுக.

சாத்தனது ஆடை என்புழிச் சாத்தனது கை என்றாற் போலாது ஆடைக்குச் சாத்தன் பிறிதாதலின் அப்பிறிதினது கிழமை பிறிதின்கிழமை எனப்பட்டது.

அஃறிணையொருமை பன்மைகட்கு இயைந்த உருபு இங்ஙனங் கூறவே, உயர்திணையொருமை பன்மையாகிய கிழமைப் பொருட்கு இவ்வுருபுகள் ஏலாவென்பது பெற்றாம். அவை வருங்கால் அவனுடைய விறலி அவனுடைய விறலியர் என மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாய் முன்னது எழுவாய்ச்சந்தியும் பின்னது பெயரெச்சக்குறிப்புச் சந்தியுமாமென்க. அவன் விறலி என்புழி, உடையவென்பது இசையெச்சம். சாத்தனுடையவியல்பு

---

1. அதுவென்பதன் விகாரம் ஆது என்பர் நேமிநாத உரையாசிரியர்; சொல். சூ. கஅ. உரை.

சாத்தனுடைய கை என்றற்றொடக்கத்தனவும் அன்ன. இவற்றை ஆறும் வேற்றுமைச் சந்தி என்றும் உடைய என்பதனைச் சொல்லுருபு என்றும் கூறுவாருமுளர். ஆசிரியர் தொல்காப்பியனாரும் உயர்திணையொருமை பன்மைகட்கு இவ்வுருபுகள் ஏலாவென்பது கருதி,

[1] " அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயி
னதுவெ னுருபுகெடக் குகரம் வருமே "

என்றார்.

## சிவஞான முனிவர் விளக்கம்

இவ்வாறும் வேற்றுமைப்பொருளாகிய [2]குறைப்பொருள் ஒற்றுமை வேற்றுமை என உரைக்கப்படும் எனவும்; அவற்றுள் ஒற்றுமையாவதோர் பொருளேயாகும் எனவும்; வேற்றுமையாவது ஒன்றாய்த் தோன்றல், உரிமையாய்த் தோன்றல், வேறாய்த் தோன்றல் என மூவகைப்படும் எனவும்; அம்மூவகையுள் ஒன்றாய்த் தோன்றல், ஒன்றன் கூட்டம், பலவினீட்டம், திரிபினாக்கம், சினை, குணம், தொழில் என அறுவகைப்படும் எனவும்; உரிமையாய்த் தோன்றல் பொருள், இடம், காலம், இருவகைநூல் என ஐவகைப்படும் எனவும்; வேறாய்த் தோன்றல் வேறிடத்துஞ் செலும் நிலைமையினுடைமைகள் பலவுமாகும் எனவுங் கொள்ளப்படும்.

எ-டு: என்னுயிர், இராகுத்தலை என்றாற்போல்வன ஒற்றுமை வேற்றுமை வகையுள் ஒன்றாய்த் தோன்றலுக்கு உதாரணம் முன்னர் ஐவகைத் தற்கிழமைக்குக் காட்டியனவேயாம். உரிமையாய்த் தோன்றலுக்கு உதாரணம்: முருகனது வேல், முருகனது குறிஞ்சி, வெள்ளியதாட்சி, சம்பந்தனது

1. தொல்காப்பியம், சொல். வேற்றுமை மயங்கியல், சூ. கசு.

2. இதனை "ஒற்றுமை வேற்றுமை யுரைக்கப் படுங்குறை, யொற்றுமை யாவதோர் பொருளே யாகு. மொன்றாய்த் தோன்ற லுரிமையாய்த் தோன்றல், வேறாய்த் தோன்ற லெனவேற் றுமையா, மொன்றன் கூட்டம் பலவி னீட்டந், திரிபினாக்கஞ் சினைகுணந் தொழிலென, வோரறு வகையா மொன்றாய்த் தோன்றல், பொருளிடங் கால மிருவகை நூலென, வுரிமையாய்த் தோன்ற லுரைக்கப்படுமே, வேறாய்த் தோன்றல் வேறிடத்துஞ் செலு, நிலைமையி லுடைமைகள் பலவு மாகும்." (எனவும்); "குறையை யின்னுங் கூறிற் பெருகும்." (எனவும்); கூறியதனுணர்க. இலக்கணக்கொத்து, வேற்றுமையியல் சூ. உஅ, உகூ.

தமிழ், சம்பந்தனது பிள்ளைத்தமிழ் என முறையே காண்க. வேறாய்த் தோன்றலுக்கு உதாரணம்: சாத்தனது பசு, சாத்தனது சோறு, சாத்தனது பொன் என வரும். இவை முன்னொருவருக்கு உரிமையாயும் பின் வேறொருவர்க்கு உரிமையாயும் வருதலின் நிலைமையில் உடைமையாயின. இம்மூவகை வேற்றுமையை வடநூலார் நூற்றொரு பேதமாக்குவர்.

மேற்போந்த கொள்வோனையுங் கொடைப்பொருளினையும் இதனின் இற்று இதுவென விகற்பித்துணர்ந்து கொடுத்தல் இவ்விருகிழமைப் பொருளுடையோர் செயலென்பது தோன்ற இஃது ஆறாம் வேற்றுமை எனப்பட்டது.

> "ஆற னுருபே யதுவா தவ்வும்
> வேறொன் றுடையதைத் தனக்குரி யதையென
> விருபாற் கிழமையின் மருவுற வருமே"

என்றார், ஆசிரியர் அகத்தியனாருமென்க. (சூ)

## ஏழாம் வேற்றுமை

௩0௧. ஏழன் உருபுகண் ஆதி ஆகும்
பொருள்முதல் ஆறும் ஓர்இரு கிழமையின்
இடனாய் நிற்றல் இதன்பொருள் என்ப.

எ - னின். ஏழாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஏழாம் வேற்றுமையின் உருபு மேற்கூறிய கண்ணேயன்றி அஃதாதியாய பிறவுமாம்; இவற்றின் பொருளாவன தம்மையேற்ற பெயர்ப்பொருளாகிய பொருளாதியாறும் மேற்போந்த [1]இருகிழமைப் பொருட்கும் இடமாகி நிற்க அவற்றினை வேற்றுமை செய்தலாம் என்று சொல்லுவர் புலவர் எ - று.

இடப்பொருளேயன்றி ஏனை ஐந்து பொருளும் ஈண்டு இடனாய் நிற்றலிற் பொருண்முதலாறும் என்றும், வினை வரினும் அவ்வினைமுதல் இவ்விருகிழமையின் பாற்படுமாதலின் கிழமையினிடன் என்றுங் கூறினார்.

---

1. தற்கிழமை, பிறிதின்கிழமை என்பன.

ஈண்டு இது என்றதூஉந் தொகுதியொருமை.

வ - று : மணியின்கணொளி, மணியின்கணிருந்தவொளி எனவும்; பனையின்கணன்றில், பனையின்கணிருந்தவன்றில் எனவும்; இருகிழமைக்கும் பொருளிடமாயிற்று. ஊரின்கணில்லம் ஊரின்கணிருந்தவில்லம் எனவும்; ஆகாயத்தின்கட் பருந்து, ஆகாயத்தின்கட் பறந்தது பருந்து எனவும் இடமிடமாயிற்று. நாளின்கணாழிகை, நாளின்கண் வந்தது நாழிகை எனவும்; வேனிற்கட் பாதிரி, வேனிற்கட் பூத்தது பாதிரி எனவும் காலமிடமாயிற்று. கையின்கண் விரல், கையின்க ணிருந்தது விரல் எனவும்; கையின்கட் கடகம், கையின்கட் கிடந்தது கடகம் எனவும் சினையிடமாயிற்று. கறுப்பின்க ணழகு, கறுப்பின்க ணிருந்ததழகு எனவும்; இளமையின்கட் செல்வம், இளமையின்க ணிருந்தது செல்வம் எனவும் குணமிடமாயிற்று. ஆடற்கட்சதி, ஆடற்கணிகழ்ந்தது சதி எனவும்; ஆடற்கட்பாட்டு, ஆடற்கட் பாடப்பட்டது பாட்டு எனவும் தொழிலிடமாயிற்று. ஆதி என்றமையான் வரும் உருபுகள் வருஞ் சூத்திரத்தாற் கூறுபவாகலின், அவை அங்ஙனங் காட்டுதும்.

இது பெயர்ப்பொருளை மேற்போந்த இருகிழமைப்பொருள்கட்கும் இடமாக வேற்றுமைசெய்தலின் ஏழாம் வேற்றுமை எனப்பட்டது.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இவ்விட வேற்றுமைப்பொருள் உரிமை, இருவகை ஓரிடம், எங்கும் என நான்கென்றே சிலர் இயம்புவர். அவற்றிற்கு உதாரணம்: நிலத்தின்கட்டேரோடுகின்றது, கடற்கணவாயோடுகின்றது, ஆகாயத்தின்கட் பருந்து பறந்தது, காட்டின்கட் புலி வாழ்ந்தது எனவும்; மதிக்கண் மறு, கையின்கண் விரல், குன்றின்கட் குவடு, நெற்றியின்கண் விழி, ஆண்டின்கணிருது, நாளின்கண் வைகறை எனவும்; ஊர்க்கணிருந்தான், தேர்க்கணிருந்தான் எனவும்; மணியின்கணொளி, உயிரின்கணுணர்வு, பாலின்கட்சுவை; நெய், தீயின்கட் சூடு, நீரின்கட் சீதம் எனவும் முறையே காண்க. இவையெல்லாம் முற்கூறியவற்றுள் அடங்கும்.

இனி இடமல்லாவிடம் மூவகைப்படும், கூட்டிப்பிரித்தல், பிரித்துக்கூட்டல், இருவரின் முடியும் ஒருவினைத்தொழிற்பெயர் என. அவையாவன 'உடையா னரசரு ளேறு' 'அவற்றுள், அ இ உ எ ஒக்குறில்' எனவும்; 'வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்' 'மற்றையான் செத்தாருள் வைக்கப் படும்.' எனவும்; 'புல்லி விடாஅப் புலவியுட் டோன்றும்' தட்டுப்

புடைக்கண் வந்தான், புல்லுதற்கண் வேர்வை வந்தது, பொருதற்கண் மழைபெய்தது, சூதாடற்கட் டேக்கம் வந்தது எனவும் முறையே காண்க. (சச)

### கண்முதலிய உருபுகள்

ருOஉ. கண்கால் கடைஇடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலம்இடம் மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதேம் உழைவழி உழிஉளி
உள்அகம் புறம்இல் இடப்பொருள் உருபே.

எ - ன். மேல் 'கண்ணாதி' என்றார் அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வனங் கண்முதலாக இல்ஈறாக எண்ணப்பட்ட இருபத்தெட்டும் இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம் எ - று.

தொடர்பு தோன்றக் கண்ணுருபை ஈண்டும் அநுவதித்தார்.

வ-று: [1]'ஊர்க்கா னிவந்த பொதும்பருள்,' [2]'வேலின்கடை மணிபோற் றிண்ணியான்,' [3]'நல்லாரிடைப் புக்கு,' [4]'வலைத்தலை மானன்ன நோக்கியர்,' [5]'குரைகடல்வா யமுதென்கோ,' 'தேர்த் திசை யிருந்தான்,' 'அவர்வயிற் செல்லாய்,' [6]'கற்றார்முற் றோன்றா கழிவிரக்கம்,' 'காட்டுச் சாரோடுங் குறுமுயால்,' 'காழ்வரை நில்லாக் களிறன்னான் கைவலத் தியாழ்வரை நின்றது,' 'இல்லிடப் பரத்தை,' [7]'தன்மேற் கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும்,' 'பிண்டிக்கண்ணார் நிழற்கி ழெழுந்தமடிகள்,' 'கடைப்புடை கொள்ளிய நீர்,' [8]'சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை,' [9]'காதலிபின் சென்றதம்ம,' 'நம்பா டணையாத நாள்,' 'கல்லளைச் சுனைநீர் கையி லுண்மையான்,' [10]'தோழிக் குரியவை கோடாய் தேஎத்து,' [11]'அவனுழை வந்தான்,' 'நின்றதோர் நறவேங்கை நிழல்வழி யசைந்தன்ன,' [12]'உறைப்புழியோலைபோல,' 'குயில்சேர் குளிர்

1. கலி. ரு௬. க.
2. திரிகடுகம், ருரு.
3. நாலடி. ருகச.
4. திருவா. நீத்தல். சO.
5. திருவா. உயிருண்ணி. அ.
6. நான்மணி. அ.
7. பு. வெ. கக.
8. நற். ரு: ௬.
9. நாலடி. ருகரு.
10. இறை. கு. கச.
11. சிலப். பதிகம். கO.
12. புறநா. உகO.

காவுளிசேர் புறையும்,' [1]'முல்லையங்குவட்டுள் வாழும்,' [2]'பயன் சாராப் பண்பில்சொற் பல்லா ரகத்து,' [3]'செல்லுமென் னுயிர்ப் புறத் திறுத்த மருண்மாலை,' 'ஊரிலிருந்தார்' என இவை, பல திறத்தன போலுமேனும் அவையாகாது ஒரு திறத்தனவாய்க் கண் உருபின் பரியாய உருபாய் வருதல் காண்க.

இனிக் கண் கால் முதலியன இடவிகற்பங்களை உணர்த்தின் ஒருதிறத்தவாகிய உருபாகாது பலதிறத்தவாகிய இடங்களை உணர்த்தும் பெயராகி, [4]'கண்ணகன் ஞாலம்,' [5]'கடைநாள்,' [6]'இடைச்சுரம்,' [7]'தலையாயார்,' [8]'தென்றிசை' என்றற்றொடக் கத்தனவாய் வருதல் காண்க. மணியின்கணொளி என்புழிக் கண் என்பது பெயராயின் மணியினிடத்தொளி என்பது பொருளாய் மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாமென்க. ஏனையவும் அன்ன.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனிப் பெயர்முதலாகக் கூறிய எழுருபுகளுந் தமக்குரிய பொருளல்லனவற்றையும் உணர்த்துமெனக் கொள்வர். அவையாவன மாடஞ்செயப்பட்டது என்புழி வினைமுதலன்றிச் செயப்படுபொருளும் உணர்த்திற்று. வீட்டை விரும்பினன் என்புழிச் செயப்படுபொருளையன்றி வேறுபொருளை விளக்கிற்று. 'மலையொடு பொருத மால்யானை,' [9]'தொடி யொடு தொல்கவின் வாடிய தோள,' [10]'பாலொடு தேன்கலந் தற்றே,' 'மதியோ டொக்கு முகம்' [11]'விலங்கொடு மக்க ளனையர்' 'எழுத்தொடு புணர்ந்த சொல்' என்புழிக கருவி கருத்தா உடனிகழ்வதன்றி, வினையின்மை, வேறுவினை, மயக்கம், ஒப்பு, ஒப்பலொப்பு, ஒற்றுமை எனப் பல பொருளும் உணர்த்தின. சோற்றிற்கரிசி, கூழிற்குக் குற்றேவல், பூவிற்குப் போனான், உணற்கு வந்தான், பிணிக்கு மருந்து, உணற்குக் கருவி கை என்புழிக் கொள்வோனை விட்டு ஆதிகாரண காரியம், நிமித்தகாரண காரியம், இருவகைப் பெயர்ப்பின் வினையெச்சம், இருவகைப்பெயர்ப்பின் பெயரெச்சம் எனப் பலபொருளும் உணர்த்தின. [12]'பித்தரிற் பேதையாரில்,'

---

| | |
|---|---|
| 1. சீவக. கஉகூஉ. | 2. குறள். ககூச. |
| 3. கலி. கசஅ: எ. | 4. திரிகடுகம், காப்பு. |
| 5. சிலப். க0: கூ. | 6. |
| 7. நாலடி. உகக. | 8. புறநா. கஙஉ: அ. |
| 9. திருக்குறள், கஉகூ௬. | 10. திருக்குறள், ககஉக. |
| 11. திருக்குறள், சக0. | 12. நாலடியார், ௬உ. |

வேங்கடத்தின் தெற்கு, குமரியின் வடக்கு, வாணிகத்தி ஞயிஞன், காக்கையிற் கரிது களம்பழம் என்புழி ஒப்பு, எல்லை, ஏது, ஒப்பின்மை எனப் பலபொருளும் உணர்த்தின. வாளது வெட்டு என்புழிக் குறையேயன்றி வேறுபொருளும் உணர்த்திற்று. அறிவின்கட் டிரிபு என்புழி இடமேயன்றி வேறுபொருளும் உணர்த்திற்று எனக் கூறுவர். அவை யெல்லாம் இவ்வாசிரியர் கூறியவற்றுட் சில உருமாறும் ஏனையவற்றை இலக்கியங்களுள்ளுங் காண்க. (௩௩)

## எட்டாம் வேற்றுமை

௩0௩. எட்டன் உருபே எய்துபெயர் ஈற்றின்
திரிபு குன்றல் மிகுதல் இயல்பயல்
திரிபும் ஆம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தான்அழைப் பதுவே.

**எ - னின்.** **எட்டாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) எட்டாம் வேற்றுமையாகிய வேறுருபின்று அவ்விளியடைந்த பெயரீற்றின் திரிபும், கேடும், மிகுதலும், இயல்பும், ஈற்றயல் நின்றதன் திரிபுமே உருபாம்; இவற்றின் பொருளாவன இவற்றினையேற்ற படர்க்கைப்பெயர்ப்பொருளை ஒருவன் தனக்கெதிர்முகமாக அழைக்கப்படுவதாக வேற்றுமை செய்தலாம் எ - று.

எய்துபெயரீற்றின் என்றமையான் வேறுருபின்றென்பது இசையெச்சமாய் நின்றது.

இயல்பு என்றமையான் இவ்வியல்பாய விளியுருபிற்கும் எழுவாயுருபிற்குஞ் சொல்லான் வேற்றுமை இன்றேனும் பொருளான் வேற்றுமை உண்டென்பதூஉம், படர்க்கையோரை எனவே 'ஒருமொழியொழிதன் னினங்கொளற் குரித்து' ஆகலிற் படர்க்கையைம்பாலும் விளி ஏற்குமென்பதூஉம், ஏனைத் தன்மை முன்னிலைகள் ஏலாவென்பதூஉம் பெற்றும்.

தான் என்பது அசைநிலை.

ஈறுதிரிதல் முதலிய ஐவகை உருபும் பொருளும் பின் வருஞ் சிறப்புச் சூத்திரங்களானுணர்க.

இஃது எழுவாயினின்றும் ஒருவாற்றான் வேறுபட்டமையின் இறுதிக்கண் தந்து எட்டாம் வேற்றுமை எனப்பட்டது. (சகூ)

விளிக்கப்படு பெயர்கள்

௩௦௪. இஉ ஊவோ டையோ னளரல
யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு
ணஃகான் ஆவீ றாகும் பொதுப்பெயர்
ஞநவொழி அனைத்தீற் றஃறிணை விளிப்பன.

எ - னின். பொருள் விளிக்கப்படுவன இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இ உ ஊ ஐ ஓ ன ள ர ல ய என்னும் பத்தீற்று உயர்திணைப்பெயரும், இவற்றுள் ஓகாரமும் ரகாரமுமான இரண்டுமொழித்து நின்ற எட்டுடனே ணகாரமும் ஆகாரமுமான இரண்டுங்கூடிய பத்தீற்றுப் பொதுப்பெயரும், 'நாலாறுமீறே' என்றவற்றுள் ஞகாரமும் நகாரமும் இன்னோரன்ன இடங்களின் ஈறுகாதென மேலையதிகாரத்து விலக்கிய எகரமும் ஒழிந்த இருபத்தோரீற்று அஃறிணைப்பெயரும் விளிக்கப்படுவனவாம் எ - று.

இ உ ஊவோடு என்புழிக் குற்றுகரம் முற்றுகரம் என உகரத்தை விதவாமையின் இரண்டுங் கொள்க.

பெயர் என்பதனை இருதிணைக்கண்ணுங் கூட்டுக.

விளிப்பன என்பது வினைமுதல்வினையைச் செயப்படு பொருள்மேல் ஏற்றப்பட்டது.

இவ்வீற்றுப்பெயர்கள் விளிக்கப்படுமெனவே, ஏனையீற்றுப் பெயர்கள் விளிக்கப்படாவென்பது பெற்றாம். (சஎ)

பொதுவாகிய விளியுருபு

௩௦௫. இம்முப் பெயர்க்கண் இயல்பும் ஏயும்
இகர நீட்சியும் உருபா மன்னே.

எ - னின். மூவகைப்பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் விளிக்கப்படுமென்ற மூவகைப் பெயர்க்கண்ணும் இயல்பாதலும் ஏகாரமிகுதலும் இகரஈறு ஈகாரஈறாய்த் திரிதலும் விளியுருபாம் பெரும்பாலும் எ - று.

வ - று: முனி கூறாய், வேந்து கூறாய், ஆடூஉக் கூறாய், விடலை கூறாய், கோக்கூறாய், கோன்கூறாய், வேள்கூறாய், மாந்தர் கூறீர், தோன்றல் கூறாய் சேய் கூறாய் முனியே, வேந்தே, நம்பீ என உயர்திணைக்கண் மூன்றுருபும் வந்தன. பிதாக்கூறாய், ஆண்கூறாய், பிதாவே, ஆணே சாத்தீ எனப் பொதுப்பெயர்க்கண் மூன்றுருபும் வந்தன. விளக்கொடியை, புறாக்கொடியை, புல்வாய் கொடியை, விளவே, புறாவே, புல்வாயே, மந்தீ என அஃறிணைக் கண் மூன்றுருபும் வந்தன. பிறவும் அன்ன.

மன்னே என்றமையான் இவ்வுருபுகள் சிலவற்றிற்கு ஏலாமை யும் இப்பொதுவிதியினும் மேல்வருஞ் சிறப்புவிதியினும் அடங் காது வருமுருபுகள் சிலவுளவேல் அவையுங் கொள்க. (சஅ)

விளியுருபுக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

௩0௬. ஐயிறு பொதுப்பெயர்க் காயும் ஆவும்
உருபாம் அல்லவற் றாயு மாகும்.

எ - னின். ஐகாரவீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐகாரவீற்றுப் பொதுப்பெயர்க்கு இயல்பும் ஏகாரமிகுதலுமன்றி ஐகாரம் ஆயும் ஆவுமாய்த் திரிதலும் உயர்திணை அஃறிணைப் பெயர்க்கு அவ்வுருபுகளன்றி ஐகாரம் ஆ எனத் திரிதலும் உருபாம் எ - று.

வ - று: அன்னாய், தந்தாய் எனவும்; 'ஆவன்னா வலந்தே னெழுந்திராய்' எனவும் விரவுப்பெயர்க்கண் இரண்டுருபும் வந்தன. விடலாய் மடந்தாய் எனவும்; [1]"சிறுமீன் கவுட் கொண்ட செந்தூவி நாராய்" [2]"கொன்றாய் குருந்தே கொடி முல்லாய்" எனவும் இருதிணைப் பெயர்க்கண்ணும் ஆய் உருபு வந்தது. (சக)

௩0எ. ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவயல் நீட்சி அதனோ

1. ஐந்திணை யெழுபது, கூஅ. 2. திணைமா. நூற்றை. அக.

ஈறு போத லவற்றோ டோவுறல்
ஈறழிந் தோவுற லிறுதியவ் வாதல்
அதனோ டயல்திரிந் தேயுறல் ஈறழிந்
தயலே யாதலும் விளியுரு பாகும்.

எ - னின். னகரவீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொதுவிதியன்றி னகரவீற்றுயர்திணைப் பெயர்களுள் சில அளபெழுதலும், சில ஈறு கெடுதலும், சில ஈற்றயல் நீடலும், சில ஈற்றயல் நீண்டு ஈறு கெடுதலும், சில ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டு ஓகாரம் மிகுதலும், சில ஈறு கெட்டு ஓகாரம் மிகுதலும், சில இறுதி னகரவொற்று யகரவொற்றாய்த் திரிதலும், சில இறுதி னகரவொற்று யகரவொற்றாய்த் திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகார மிகுதலும், சில ஈறுகெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம் எ - று.

ஒருசார் என்பதனை விளியதிகாரம் அனைத்தினுங் கூட்டுக.

வ - று: அம்பர்கிழாஅன், வல்லங்கிழாஅன் என அளபாயின. [1]"எலுவ சிறாஅ ரேம்முறு நண்ப, புலவர் தோழ" என ஈறழிந்தன. நம்பான், பெருமான் என ஈற்றயல் நீண்டன. இறைவா, மன்னா என அயல் நீண்டு ஈறு கெட்டன. ஐயாவோ, அப்பாவோ என ஈறுகெட்டு அயல் நீண்டு ஓகாரமிக்கன. இறையவோ, ஐயவோ என ஈறழிந்து ஓகாரமிக்கன வாயிலாய், ஆதிரையாய் என இறுதி யவ்வாயின. வாயிலோயே என இறுதி யவ்வொற்றாய் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரமிக்கது. "ஐயேயெமக் கருண்மடவை", [2]"மன்ற வாழிய முருகே" என ஈறழிந்து அயலில் அகரம் ஏகாரமாயின. (௬0)

௩௦௪. ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல்
நீட்சி இறுதி யவ்வொற் றாதல்
அயலி லகரமே யாதலும் விளித்[3]தனு.

1. குறுந். ௧௨௯.  2. நற். ௩௪ : ௧௧.

3. தனு: உருபு. "ஆறு மானு மோடு மொடுவும் சானு மூன்றும் வேற்றுமைத் தனுவே." அகத்தியம்.

எ - னின். ளகரவீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன் மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ளகரவீற்று உயர்திணைப்பெயர்க்குப் பொது விதியன்றி அளபெழலும் ஈறுகெடலும் அயல் நீடலும் இறுதி ளகரவொற்று யகரவொற்றாதலும் ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம் எ - று.

வ - று: 'மேவார்த் தொலைத்த விறன்மிகு வேளள்' என அளபாயிற்று. 'துனிகொள்ள லெல்லா நீ' என ஈறுகெட்டது. நமர்காள், எமர்காள் என ஈற்றயல் நீண்டன. குழையாய், வாயி லாய் என இறுதி ளகரவொற்று யகரவொற்றாயின. 'தலைமீது கொள்வமடி சேஎள்.' என ஈற்றயல் அகரம் ஏகாரமாயிற்று.

எல்லா என்பது தோழிமுன்னிலைப்பெயரன்றோ விளியேலா தென விலக்கப்பட்ட அம்முன்னிலைப்பெயரை ஈண்டுக் காட்டியது என்னையெனின் :—'முன்னிலை யெல்வீர் நீயிர் நீவிர் நீர் நீ யல்லன படர்க்கை' என வரையறுக்கப்பட்டமையின் தோழன் என்னும் பொருட்டாகிய ஏடன் என்னும் படர்க்கைப்பெயர் விளியேற்றமையின் [1]ஏடா என்பது தோழன் முன்னிலைப்பெய ரென்றும் தோழி என்னும் பொருட்டாகிய எல்லாள் ஏடி என் னும் படர்க்கைப்பெயர்கள் விளியேற்றமையின் 'எல்லாவு மேடியுந் தோழி முன்னிலைப்பெயர்' என்றுங் கூறப்பட்டனவன்றி அவை இயல்பாய் நின்ற முன்னிலைப்பெயரல்ல வென்க. (நிக)

 கூ0கூ. ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழல் ஈற்றயல்
அகரம் இஈ ஆதல் ஆண்டையா
ஈயாத லதனோ டேயுற வீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனயல் நீடல்
ஈற்றின் ஈருறல் இவையும்ஈண் டுருபே.

எ - னின். ரகாரவீற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன் மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொதுவிதியன்றி ரகாரவீற்று உயர்திணைப் பெயர்க்கு அளபெழலும் ஈற்றயலகரம் இகரமாதலும் ஈகார

1. "ஏடா வழிய லெழுந்திது கொள்ளாய்" (மணி. கச: கஉ.) சேடனென்பது ஏடனென்றாகி விளியுருபேற்று நின்றதெனக் கொள்வர் சிலர்.

மாதலும் அவ்விடத்து ஆகாரம் ஈகாரமாதலும் அதனோடு ஏகாரமேற்றலும் ஈற்றில் ஏகாரமிக்கு அயலில் யாக் கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாதலும் ஈற்றின் ஈராதலும் விளியுருபாம் எ - று.

வ - று : சிறாஅர், மகாஅர் என அளபாயின. [1]"என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்" என ஈற்றயல் அகரம் இகரமாயிற்று. வேந்தீர், நாய்கீர் என அகரம் ஈகாரமாயின. சான்றீர், மடவீர் என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயின. 'பல்சான்றீரே பல்சான்றீரே,' கணியீரே என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரமேற்றன. நம்பீரே, தம்பீரே, தோழீரே, தொழும்பீரே என ஈற்றில் ஏகாரமிக்கு அயல்யாக் கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாயின. எமரீர், தமரீர் என ஈரேற்றன.

ஈண்டு என்ற மிகையானே கடலாரே, கடலீரே, கழியாரே, கழியீரே, சாத்தியாரே, சாத்தியீரே, கொற்றியாரே, கொற்றியீரே என அஃறிணைப்பெயர் விரவுப்பெயர்களைச் சிறப்பித்து ரகரவீற்றுயர்திணைப்பெயர் போலக் கூறிய வழியும் இவ்வுருபேற்றல் கொள்க. (௩௨)

௩௧0. லகாரவீற் றுயர்பெயர்க் களபயல் நீட்சியும்
யகார வீற்றிற் களபுமாம் உருபே.

எ - னின். லகார யகாரவீற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொதுவிதியன்றி லகாரவீற்று உயர்திணைப் பெயர்க்கு அளபெழலும் ஈற்றயல் நீடலும் யகாரவீற்று உயர்திணைப் பெயர்க்கு அளபெழலும் உருபாம் எ - று.

உயர்திணைப்பெயர் என்பதனை யகாரவீற்றின்கண்ணும் உம்மையை அளபு என்பதன்கண்ணுங் கூட்டுக.

வ - று : 'வலம்புரித் தடக்கைமாஅ னின்னிறம்.' எனவும் ; தோன்றால், மடவரால், தாழ்குழால் எனவும் ; சேஎய் எனவும் வரும். (௩௩)

௩௧௧. னவ்வீற் றுயர்திணை அல்லிரு பெயர்க்கண்
இறுதி அழிவத னோடயல் நீட்சி.

1. திருக்குறள், ௭௭௧.

எ - னின். னகாரவீற்று அஃறிணைப்பெயர்க்கும் விரவுப் பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) *பொதுவிதியன்றி னகரவீற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் இறுதி கெடுத லும் அதனோடு ஈற்றயல் நீடலும் விளியுருபாம் எ - று.*

*இறந்தது தழீஇய எச்சவும்மைகளும் விளியுருபாம் என் பதூஉந் தொக்கு நின்றன.*

வ - று: *அலவ, இகல, கலுழ எனவும்; அலவா, இகலா, கலுழா எனவும்; சாத்த, கொற்ற எனவும்; சாத்தா, கொற்றா எனவும் வரும்* (௩௪)

௩௧௨. லளவீற் றஃறிணைப் பெயர்ப்பொதுப் பெயர்க்கண்
ஈற்றயல் நீட்சியும் உருபா கும்மே.

எ - னின். லகார ளகாரவீற்று அஃறிணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *பொதுவிதியன்றி லகார ளகாரவீற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் ஈற்றயல் நீடலும் விளியுருபாம் எ - று.*

வ - று: *'காட்டுச்சா ரோடுங் குறுமுயால்,' கிளிகாள் என வும்; தூங்கால், மக்காள் எனவும் வரும்.* (௩௫)

விளியுருபுகளுக்குப் புறனடை

௩௧௩. அண்மையின் இயல்பும் ஈறழிவும் சேய்மையின்
அளபும் புலம்பின் ஓவு மாகும்.

எ - னின் மேல்விதந்த விளியுருபுகட்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *மேற்போந்த விளியுருபுகளுள் இயல்பு களும் ஈறழிவுகளும் அண்மை விளிக்கண்ணும் அளபுகள் சேய்மை விளிக்கண்ணும் ஓகாரங்கள் புலம்பல் விளிக் கண்ணும் வரும் எ - று.*

*எனவே, ஏனை விளிஉருபுகள் அண்மை சேய்மை புலம்பு என் னும் மூன்றிடத்தும் விராய் வரும் என்பது பெற்றாம்.* (௩௬)

விளியுருபேலாப் பெயர்கள்

௩௪௪. நுவ்வோடு வினைச்சுட் டுற்ற னளர
வைதுத் தாந்தான் இன்னன விளியா.

எ - னின். இ உ ஊ வோடு என்னுஞ் சூத்திரத்திற்கு ஆவ தோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் விளிக்கப்படுமென்றவற்றுள், நுவ் வுடனே மூன்று முதல் வினையையும் மூன்று சுட்டையும் வரன்முறையே பொருந்திய ன ள ர வென்னும் மூன்றீற்று உயர்திணைப் பெயர்களும், வை து என்னும் இரண்டீற்று அஃறிணைப்பெயர்களும், தான் என்னும் பொதுப்பெயரும் விளிக்கப்படா எ - று.

இங்ஙனம் விதந்த கிளைப்பெயர், வினைப்பெயர், சுட்டுப்பெயர் களின் இடைநிற்கும் எழுத்தை ஒழித்து முதலெழுத்தோடு உற்றதாக இறுதி ன ள ரக்களைக் கூறினமையின் வரன்முறை யென்றாம்.

நுவ்வொடு வை து என்னும் ஈறிரண்டும் பொருந்தாவென் பார் அதனை ஒடுக் கொடுத்துப் பிரித்தார்.

மகரவீற்றுப் பொதுப்பெயர் முன்னரே விலக்கப்பட்டமை யின் ஈண்டு தாம் என்றது அசைநிலை.

வ - று: நுமன், நுமள், நுமர் எனவும்; எவன், எவள், எவர், எவை, எது எனவும்; யாவன், யாவள், யாவர், யாவை, யாது எனவும்; ஏவன், ஏவள், ஏவர், ஏவை, ஏது எனவும்; அவன், அவள், அவர், அவை, அது எனவும்; இவன், இவள், இவர், இவை, இது எனவும்; உவன், உவள், உவர், உவை, உது எனவும்; தான் எனவும் வரும்.

இன்னன என்றமையானே, பிறன், மற்றையான் என்றற் றொடக்கத்தனவுங் கொள்க. (௬௭)

முதல் சினைத் தொடர்பின்கண் அவ்விரண்டினும் இரண்டனுருபு வாராதெனல்

௩௪௫. முதலை ஐயுறிற் சினையைக் கண்ணுறும்
அதுமுதற் காயிற் சினைக்கை யாகும்.

எ - னின். முதல்சினைத் தொடர்பின்கண் இரண்டாம் உருபு வரின் முதல்சினை இரண்டன்பாலும் வாராது தமொழி வந்தலே மரபெனப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதலினை ஐ உருபு பொருந்தின் சினை யினைக் கண் உருபு பொருந்தும்; அது உருபு முதலுக்கு வரின் சினைக்கு ஐ உருபு வரும் எ - று.

'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே.' என்பத னன் ஆறுவதன் பன்மை உருபுங் கொள்க.

இனி இரட்டுறமொழிதல் என்னும் உத்தியான் அது என்பத னைச் சுட்டாக்கிக், கண் உருபு முதற்காயிற் சினைக்கு ஐயாகும் எனவும் பொருளுரைத்துக்கொள்க.

வ - று: யானையைக் காலின்கண் வெட்டினன், யானையது காலை வெட்டினன், யானையினகால்களை வெட்டினன், யானை யின்கட்காலை வெட்டினன் எனவும்; கையினை விரலின்கட் பிடித் தான், கையது விரலைப்பிடித்தான், கையின விரல்களைப் பிடித் தான், கையின்கண் விரலைப் பிடித்தான் எனவும் வரும்.

இங்ஙனங் கூறவே யானையைக் காலை வெட்டினன் என இரண்டன்பாலும் ஐஉருபு வாராதென்றாராயிற்று வரின் செயப்படு பொருள் இரண்டாய் முதல் சினைகள் ஒருபொருட்பகுதிய வல்லவா மாதலின் இங்ஙனஞ் செயப்பட்டது ஒருபொருளே, முதல் சினைகள் ஒருபொருட்பகுதியவே என்பது தோன்றக் கண்உருபும் அது உருபும் வருமென்பதாயிற்று.

இவ்வாறன்றி ஒரோவழி முதல்சினை இரண்டன்பாலும் ஐஉருபு வரின் 'யாத னுருபிற் கூறிற் றாயினும்' என்னுஞ் சூத்திரததான் முதலின்பால் ஐஉருபை அது உருபாயேனுஞ் சினையின்பால் ஐஉருபைக் கண் உருபாயேனுந் திரிக்கப்படுமென்க. (கஅ)

ஐயுருபு முதல் சினையிரண்டினும் வாராமைக்குக் காரணமும் மேலைச் சூத்திரப்பொருளோடு இப்பொருளைப் பிண்டப்பொருளுக்கும் ஏற்பித்தலும்

௬௯. முதல்இவை சினைஇவை எனவே றுளஇல
உரைப்போர் குறிப்பின அற்றே பிண்டமும்.

எ - னின். மேல் முதல்சினை இரண்டன்பாலும் ஐஉருபு வாராத தென அருத்தாபத்தியாற் கூறினர்; அங்ஙனம் வாராமைக்கு

ஏதுவும் மேலைச்சூத்திரப்பொருளோடு இப்பொருளைப் பிண்டப் பொருளுக்கும் ஏற்பித்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கடங்களிவை படங்களிவை என்றாற்போல முதற்பொருள்களிவை சினைப்பொருள்களிவை என இரண்டாக வேறுள்ளன இலவாம் ஒருபொருளையே இரண்டாகப் பகுத்துக் கூறுவார் குறிப்பின் மாத்திரையவேயாம் பிண்டப் பொருளும் அத்தன்மைத்தாம் எ - று.

யானையைக் குறித்தவழி, யானையுண்டாய்க் கால் கை கோடு முதலியன வேறில்லையாய்க் கால் கை கோடு முதலியவற்றைக் குறித்தவழி அவையுண்டாய் யானைவேறில்லையாய் நிற்கும் ஒரு பொருட்பகுதியவாதலின் இவ்வாறு கூறப்பட்டன.

வேறுளவில என்றமையான் யானையைக் காலை வெட்டினான் என ஐஉருபு முதல்சினை இரண்டன்பாலும் வாராமைக்கு ஏது கூறினாராயிற்று.

இனி ஒருபொருட்கண் முதலைக் கருதிச் சினையெனவுஞ் சினையைக் கருதி முதலெனவுங் கூறுதல்போலப் பிண்டித்த பொருள்களைக் கருதியல்லது பிண்டம் எனல் கூடாமையிற் பிண்டமுமற்றே என்ற துணையானே பிண்டித்த பொருள்களும் அனையவே என்பது தாமே போதருமென்க. அவை வருமாறு: நெல்லைப் பொலியின்கண் வாரினான், நெல்லினது பொலியை வாரினான் என வரும். நெல்லைப் பொலியை வாரினான் என இரண்டன்பாலும் ஐஉருபு வாரா இப்பிண்டப் பொருளாகிய பொலிக்குப்பையும் பிண்டித்த பொருள்களாகிய நெல்லும் முதல் சினையனையவாய் வேறுளவிலவாம் ஆதலினென்க.

இச் சூத்திரத்திற்கு இவ்வாறன்றி யானையது கோடு, கோட்டது நுனி என ஒன்றற்குச் சினை மற்றொன்றற்கு முதலாயும் ஒன்றற்கு முதல் மற்றொன்றற்குச் சினையாயும் நியதியின்றி வருதலின் இவையே முதல் இவையே சினை என வேறறியக் கிடப்பன வில்லை அவை சொல்லுவோர் குறிப்பின் ஆங்காங்கு முதல் சினை என உணரப்படுவனவாம். நெல்லினது குப்பை, குப்பையினது நெல் எனப் பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாய்க் கிழமையாய் நின்றது கிழமைத்தாயுங் கிழமைத்தாய் நின்றது கிழமையாயும் நியதியின்றிச் சொல்லுவோர் குறிப்பினான் அறிய வரும் எனப் [1]பொருள் கூறுவாருமுளர். இப்பொருள் முதல் சினை இரண்டன் பாலும் ஐஉருபு வாராமைக்கு ஏதுவாகாமையானும் இவ்வாறு

1. பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

முதலுஞ் சினையும் வருதல் வெளிப்படையாதலின் இவற்றை உரைப்போர் குறிப்பினவெனக் கூறவேண்டாமையானும் ஆசிரியர் தொல்காப்பியரும் முதல் சினைகள் ஒருபொருட்பகுதிய என்பது தோன்ற [1]"முதலுஞ் சினையும் பொருள்வேறு படா" என்றமையானும் இப்பொருளும் இதனோடு மாட்டெறிந்த பொருளும் பொருந்தாவென்க. (௩௧)

## உருபு மயக்கம்

௩௧௭. யாத னுருபின் கூறிற் றாயினும்
பொருள்சேல் மருங்கின் வேற்றுமை சாரும்.

எ - னின். வேற்றுமையுருபுகள் மயங்கி ஒன்று நிற்கும் நிலைக்களத்து மற்றொன்று வரினும் அமையுமெனப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒரு வேற்றுமைப்பொருள் மற்றொரு வேற்றுமை உருபால் கூறப்பட்டதாயினும் அவ்வுருபு மயங்கி வந்தமையின் அவ்வுருபு சென்றவழியே பொருள் சாராது பொருள் சென்றவழியே அவ்வுருபு சாரும் எ-று.

எனவே, அங்ஙனம் மயங்கி வந்த உருபைப் பொருளுக் கியைந்த உருபாகத் திரித்துப் பொருள் கொள்க என்பதாயிற்று.

வ - று: 'நாகு வேயொடு நக்கு வீங்குதோள்' என்புழி நாகு வேய் உடனிகழ்ச்சிப் பொருளாகாது செயப்படுபொருளாய் நிற்ற லின் ஒடுஉருபை ஐ உருபாகத் திரித்துக்கொள்க. 'இளையரி நாணற் கிறங்குமணற் கீன்ற—முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர் வாய்' என்புழி மணல் ஏற்றுக்கோடற் பொருளாகாது இடப்பொரு ளாய் நிற்றலின் கு உருபைக் கண் உருபாகத் திரித்துக் கொள்க. பிறவும் அன்ன. வேற்றுமைஉருபு மயங்கிவரின் பொருள் நோக்கித் திரித்துக்கொள்ளவேண்டும் என்பதாயிற்று.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனி இவ்வாறு மாறுபட நிற்றலன்றி, உரையிற்கோடல் என்ப தனால் [2]"தடுமாறுருபுக"ளாஞ் சிலவுள எனவும் ஒருபொருட்கே

1. தொல். சொல். வே. மய. ௬. ௬.
2. இலக்கணக் கொத்து, வே. ௬. ௨௧.

தத்தம் உருபுகள்போல வேற்றுருபுகள் வருவனவுள எனவுங் கொள்க.

"தடுமாறுருபுக டாஞ்சிலவுள" ஆதற்கு உதாரணம்: [1]"அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ—டவ்வையைக் காட்டி விடும்.' என வரும். இதனுள் ஐயுங் குவ்வும் தடுமாறி வருமாறு காண்க.

ஒருபொருட்கே தம்தம் உருபுகள்போல வேற்றுருபுகள் வருவன வினைமுதன் முதலாக முறையே உரைக்கின்றாம்.

[2]"ஒன்று மூன்றுநான் காறெனு முருபொடு—வருமே வினைமுதலெனவுருத் தனரே."

எ - டு: அவர்செய்தார், அவராற் செய்யத்தகும் அக் காரியம், அவர்க்குச் செய்யத்தகும் அக்காரியம் அவரது வரவு என முறையே காண்க.

"எல்லா வுருபொடுஞ் செயப்படு பொருளெழும்."

எ - டு: சோறடப்பட்டது, சோற்றையட்டான், அரிசியாற் சோறாக்கினான், அவட்குக்கொள்ளுமிவ் வணிகலம், பழியினஞ்சும், நூலது குற்றங் கூறினான், தூணின்கட் சார்ந்தான் என முறையே காண்க.

"ஒன்று மூன்றுநான் கைந்தா றுருபொடு—கருவி வருமெனக் கருதினர் பெரியோர்."

எ - டு: கணகாணும், கணணாற காணபன், கண்ணிற்குக் காணலாம், கண்ணிற் காணலாம், கண்ணினது காட்சி என முறையே காண்க.

"எல்லா வுருபொடுங் கொள்வோ னெழுமே."

எ - டு: 'இரப்பவ ரென்பெறினுங் கொள்வர்,' 'செய்யவ டவ்வையைக் காட்டிவிடும்,' நாகராற்பலி, நாகர்க்குப்பலி, நாகரினன்புசெய்தான், நாகரது பலி, நாகர்கணன்புசெய்தான் என முறையே காண்க.

[3]"இரண்டுநான் கைந்தொடு மெழுமே நீக்கம்."

எ - டு: மதுரையை நீங்கினான், மதுரைக்கு வடக்குச் சிதம்பரம், மதுரையின் வடக்குச் சிதம்பரம் என முறையே காண்க.

---

1. குறள். செ. கசுஎ.
2. இலக்கணக் கொத்து, வே. சூ. கூஉ-கூரு.
3. " " " கூசு-கூஅ.

"நான்கைந் தாறே ழொடுகுறை நடக்கும்."

எ - டு: சாத்தனுக்கு மகன், மரத்தினீங்கின கொம்பு, சாத்தனது கை, உயிரின்கணுணர்வு என முறையே காண்க.

"ஒன்றி ரண்டுநான் கேழோ டடமெழும்."

எ - டு: ஆண்போ திகை தொட்டது, அணைச்சார்ந்தான், இன்றைக்கு, நாளைகு, பகலைக்கு, அந்திக்கு, சந்திக்கு, மாலைக்கு, காலைக்கு, ஊர்க்கு, வீட்டிற்கு, வருவான்; தூணின்கட் சார்ந்தான் என முறையே காண்க. (கூ0)

சில வேற்றுமையுருபு செய்யுளிடத்துத் திரிந்து வருதல்

நூகஅ. ஐயான்குச் செய்யுட் கவ்வும் ஆகும்
ஆகா அஃறிணைக் கானல் லாதன.

எ - னின். சிலவேற்றுமையுருபு செய்யுட்கண் திரிந்துவரினும் அமையுமெனப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐ ஆன் கு என்னும் மூன்றுருபுஞ் செய்யுளகத்து ஒரோவழி அகரமாகத் திரிந்துவரவும்பெறும் அஃறிணைக்கண்ணெனின் ஆனொன்றுமே திரியும் ஐயுங் குவ்வுந் திரியா எ - று.

'ஆகா வஃறிணைக் கானல் லாதன' எனவே உயர்திணைக்கண் மூன்றுருபுந் திரியும் என்பது பெற்றாம்.

வ - று: 'காவலோனைக் களிறஞ்சும்மே' என்பது 'காவலோனக் களிறஞ்சும்மே' என்றும், 'புலவரான்' என்பது 'புலவரான' என்றும், [1]'கடிநிலை யின்றே யாசிரியற்கு' என்பது 'கடிநிலை யின்றே யாசிரி யற்க' என்றும் உயர்திணைக்கண் மூன்றுருபுந் திரிந்தன. புள்ளினான் என்பது புள்ளினன என ஆனுருபொன்றும் அஃறிணைக்கண் திரிந்தது அவ்வுமாகும் என்னும் இழிவு சிறப்பும்மையான் இங்ஙனந் திரிதல் ஒருதலையன்றென்க.

அகரமாகத் திரியுமென்றமையின் ஆனுங் குவ்வுந் திரிந்துழி அவற்றின் முன்னின்ற ஆனுங் குவ்வுஞ் சாரியையென்பது பெற்றாம். அல்லது அவ்வுமாகும் என்பதனை இறட்டுறமொழிதலாக்கி ஐயுருபு அகரமாய்த் திரியவும்பெறும்; ஆனுருபுங் குவ்வுருபும் அகரத்தின் கண்ணுகவும் பெறுமெனப் பொருள்கோடலுமொன்று. (கூக)

1. தொல். புள்ளி. சூ. கூச.

## எட்டுவேற்றுமைக்கும் முடிக்குஞ்சொல்

௩௧௧. எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும் நான்கேழ் இருமையும்
புல்லும் பெரும்பாலும் என்மனார் புலவர்

எ - னின். எழுவாய் முதலிய எட்டுவேற்றுமைக்கும் முடிக்குஞ் சொல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) 'நீங்கலொப் பெல்லை யேதுப்பொருளே' என்னும் நான்கு பொருள்களுள் எல்லைப்பொருட்டாகிய ஐந்தாம் வேற்றுமையும் ஆறும்வேற்றுமையும் பெயரைக் கொண்டு முடியும்; ஒழிந்த எழுவாய் முதலிய வேற்றுமைக ளெல்லாம் வினையைக்கொண்டு முடியும்; அவற்றுள் நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையினையே யன்றி வினையொடு பொருந்தும் பெயரையுங் கொண்டு முடியும், பெரும்பாலும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

நான்கேழ் பெயரும் புல்லும் என்னாது இருமையும் புல்லும் என்றமையான், வினையொடு பொருந்தும் பெயரென்றும்.

பெரும்பாலும் என்றமையானே வினைகொளற்குரியன சிறுபான்மை தொழிற்பெயர் கோடலும் வினையாலணையும்பெயர் கோடலும் அவற்றுள் எழுவாய்வேற்றுமை வினைகொண்டு முடிதலேயன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையுங்கொண்டு முடிதலுங் கொள்க.

வ - று: கருவூரின் கிழக்கு, சாத்தனது கை என எல்லை இன்னும் அதுவும் பெயர்கொண்டன. சாத்தன் வந்தான், சாத்த னல்லன், குடத்தை வனைந்தான், குடத்தையுடையன், வாளால் வெட்டினான், வாளால் வலியன், சாத்தனுக்குக் கொடுத்தான், சாத்தனுக்கு நல்லன், நோயினீங்கினான், நோயிற்கொடியன், அவையின்கணிருந்தான், அவையின்கட் பெரியன், கொற்றா கொள், கொற்றா வலியை என அல்லன வினைகொண்டன. பிணிக்கு மருந்து, மணியின்கணொளி என நான்காம் வேற்றுமை யும் ஏழாம் வேற்றுமையும் வினையேயன்றிப் பெயருங்கொண்டன. இப்பெயர்கள் எல்லையின்னுமதுவுங் கொள்ளும் பெயர்கள் போலாது பிணிக்குக் கொடுக்கு மருந்து, மணியின்கணிருக்கு மொளி என வினைவேண்டி நிற்றலின் வினையொடு பொருந்தும் பெயர்களாயின. இங்ஙனமாதலின் இவற்றிற்கும் வினைப்பயனிலை

ஒன்றுமே சிறந்ததென்பதூஉம் இது கருதி அல்லவினைகொளும் என முடித்தோதினரென்பதூஉம் பெற்றும்.

வினைகொளும் எனப் பொதுப்படக் கூறினமையிற் காட்டா தொழிந்த வினைவிகற்பங்களெல்லாம் வருவித்து முடித்துக் காண்க.

## சிவஞானமுனிவர் விளக்கம்

"சாத்தன் வருதல், சாத்தன் வந்தவன், குடத்தை வனைதல், குடத்தை வனைந்தவன் எனச் சிறுபான்மை தொழிற்பெயரும் வினையாலணையும் பெயருங் கொண்டன. பிறவும் அன்ன. இங்ஙனங் காட்டாதொழிந்த உருபுகளோடும் இவ்வாறே ஒட்டுக.

சாத்தனவன், சாத்தன் யாவன், சாத்தன் யார் எனப் பெயரே யாகிய எழுவாய் வேற்றுமை சிறுபான்மை சுட்டுப்பெயரும் வினுப்பெயரும் வினுவினைக் குறிப்புங் கொண்டது.

இங்ஙனம், சாத்தன் என்பான் பிறனொருவனுற் சுட்டவும் வினுவ வும் பட்டு நிற்றல் மாத்திரையேயன்றி இவன் இத்தொழிலில் இயற்றினனென வாராமையின் இவ்வெழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலே சிறந்ததென்பார் ஏனை உருபுக ளோடு சேர்த்துப் பொதுப்பட அல்ல வினைகொளும் என வரையறுத்தும், சுட்டவும் வினுவவும்பட்டு நிற்றலிற் பெயரும் வினுவுங்கொண்டு முடிதலைப் பெரும்பாலும் என்பதனுல் தழுவவுங் கூறினரென்க. (கூஉ)

பெயரியல் முற்றிற்று.

# ௨. வினையியல்

## க. வினைச்சொல்

தெரிநிலைவினைச்சொல்லின் பொதுவிலக்கணம்

௩௨௦. செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே.

எ - னின். 'பெயர் வினையென இரண்டாகும்' என நிறுத்த முறையானே வினைச்சொல் இலக்கணம் உணர்த்துவான் தொடங்கி அவற்றுள் தெரிநிலை வினைச்சொல்லின் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

வருஞ்சூத்திரத்தான் வினைக்குறிப்பென்றமையின் இது தெரிநிலையென்பது பெற்றாம்.

(இ - ள்.) கருத்தாவும் கருவியும் இடமும் செயலும் காலமும் செயப்படுபொருளுமாகிய அறுவகைப் பொருளையுந் தருவது தெரிநிலைவினைச் சொல்லாம் எ - று.

வினை என்றது ஆகுபெயர். நட வா முதலியவெல்லாந் தழுவுதற்குச் செய் என்றார்.

செய்பவன் என ஒருபான்மேல் வைத்தோதினாரேனும் [1]'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்பதனான் ஐம்பாலுங் கொள்க.

செய்பவன் என்றுங் கருவி என்றும் பொதுப்படக் கூறினமையின் இயற்றுதற்கருத்தா, ஏவுதற்கருத்தா என்னும் இரண்டனையும் முதற்காரணம், துணைக்காரணம் என்னும் இரண்டனையுங் கொள்க.

செய்பவன் என்பது செய்பவனாகிய பொருளென்னும் பயத்ததாய் நிற்றலின் ஆறுமென்னும் அஃறிணைத்தொகைச்சொல்லோடு முடிந்தது. அன்றித் திணைவிரவி அஃறிணைமுடிபினவாயின எனினும் அமையும்.

வ - று: வனைந்தான் என்புழிக் குலாலனாகிய இயற்றுதற் கருத்தாவும் மண்ணாகிய முதற்காரணமும் தண்டசக்கர முதலிய

---

1. இதனை வடநூலார் உபலக்கணம் என்பர்.

துணைக்காரணங்களும் வினையுமிடமும் வினைதற்குச் செயலும் இறந்தகாலமும் குடமுதலிய செயப்படுபொருளுந் தோன்றுதல் காண்க. அரசன் ஆலயஞ் செய்தான் என்பது ஏவற்கருத்தா. இஃது இயற்றினான் றொழிற்கு ஏவினானைக் கருத்தாவாக்கிக் கூறுதலின் ஏவற்கருத்தா எனப்படும். அரசன் ஆலயஞ்செய்வித்தான் என்பது ஏவற்கருத்தா என்பாருமுளர். செய்தற்றொழிலைச் தச்சனியற்றினாற்போலச் செய்வித்தற்றொழிலை அரசனியற்றுதலின் இத்தொழிற்கு அரசனும் இயற்றுதற்கருத்தா வேயாமென்க.

[1] 'முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.' என்பதனான் ஆறுந்தருவது வினையென்பதற்கு இத்தொகையிற் சில குறைந்து வரவும் பெறுமெனப் பொருளுரைத்துக்கொள்க. அவை வருமாறு: கொடியாடிற்று கொடி துஞ்சும் என்புழி முன்னையது செயப்படுபொருளும் பின்னையது செயப்படுபொருளோடு கருவியுங் குறைந்து வந்தன. கொடிதுஞ்சும் என்பதற்குக் காற்றினது அபாவத்தைக் கருவியாகக் கூறினும் அமையும்.

ஆறும் என்னும் முற்றும்மையை உயர்வு சிறப்பும்மையாக்கி இழிந்தன சிலவுள, அவையும் வேண்டுமேற் கொள்க எனவும்; பொருளுரைத்துக்கொள்க. அவை யாவையெனின், இன்னதற்கு எனவும் இதுபயன் எனவும் வருவனவாம். குடத்தைத் தனக்கு வனைந்தான், பிறர்க்கு வனைந்தான் என்னும் இன்னதற்கென்பதூஉம், அறன்முதலிய பயன் கருதி வனைந்தான் என்னும் இது பயனென்பதூஉம், ஏதுவின்பாற்பட்டுக் கருவியுள் அடங்கவும் பெறாஉமாதலின் இழிந்தனவாயின. இப்பொருளை 'முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்' எனபதன்பாற் படுத்து ஆறுந் தருவது வினையே எட்டுந் தருவது வினையே என அமையாதோவெனின், இவ்விரண்டுடன் எட்டாய் வருவதன்றி ஆறே வருவதோர் வினையின்மையின் அமையாதென்க.

முற்றுவினைகளுள், பகுதியாற் செயலும் விகுதியாற் கருத்தாவும் இடைநிலை முதலியவற்றாற் காலமும், பெயரெச்ச வினையெச்சங்களின் இம்முறையே செயலுங் காலமும் தோன்றின. அங்ஙனமாதலின் முற்றுச்சொல்லான் மூன்றும் எச்சச்சொல்லான் இரண்டுமென்றன்றோ ஆறுந்தருவது வினைச்சொலென்றது என்னையெனின்:—இவ்வாறுங் காரணமாகக் கூடுங் கூட்டத்து இவற்றுட் செயலென்னும் முதற்காரணத்தினின்றும் ஒருவினையாகிய காரியம் நிகழுமாதலின் இவ்வாறு காரணத்தையுந் தருங் காரியமாகிய வினையின்றொழிலை ஒற்றுமை நயங்கருதி அதன் சொன்மேலேற்றப்பட்டது. காரணத்தைக் காரியந் தருமென்

1. இங்ஙனம் கூறுபவர் மயிலைநாதர்.

பது "புகைதன் னுதியாய வனல்காட்ட லாகும்" என்றாற் போலும். இங்ஙனமாகவே செய்பவன் முதலிய ஆறனுள் முற்றின்கண் மூன்றும் எச்சத்தின்கண் இரண்டும் வெளிப்படையாயும் ஏனைய குறிப்பாயுந் தோன்றுமென்பதாயிற்று. இவ்வாறுங் காரணமாகவே, இவற்றுட் செயலென்றது காரியமாகிய வினையடியையன்றென உணர்க.

> "கால மறிதொழில் கருத்தனோ டியையப்
> பால்வகை தோறும் படுமொழி வேறே."

என ஆசிரியர் அவிநயனார் கூறியவாறும்,

> [1]"வினையெனப் படுவது வேற்றுமை கொளாது
> நினையுங் காலைக் காலமொடு தோன்றும்."

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறுங் காண்க. (க)

### குறிப்புவினைச்சொல்லின் பொதுவிலக்கணம்

௩உக. பொருள்முதல் ஆறினும் தோற்றிமுன் ஆறனுள்
வினைமுதல் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே.

எ - னின். குறிப்புவினைச்சொல்லினது பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளாதியாறும் அடியாக அவற்றின்கட் டோன்றி, மேற் கருத்தாமுதலாகச் சொன்ன ஆறனுட் கருத்தா வொன்றையுமே விளக்குதல் வினைக்குறிப்புச் சொல்லினது இலக்கணமாம் எ - று.

மேலையதிகாரத்துப் பகுபதவுறுப்புக் கூறியவழித் தெரிநிலை வினைக்கு வினையடிகள் விளங்கிக் கிடந்தமைபோலக் குறிப்பு வினையடி அங்ஙனம் வகைப்பட விளங்காமையின் ஈண்டு விளங்கப் பொருண்முதலாறினுந் தோற்றியென்றும், தெரிநிலைவினைபோல் இக்குறிப்புவினைக் கண்ணுஞ் செய்பவன் முதலிய ஆறுமுள வென்பார் முன்னுறனுளென்றும், அவற்றுட் செய்பவனை இச் சொல்லினது விகுதிவிளக்கும் மற்றுள்ளனவற்றுள் ஒன்றேனும் விளக்குதற்குரிய உறுப்பு இதனகத்து இன்றென்பார் வினைமுதல் மாத்திரையென்றும், இது குறிப்புவினையாதலின் இதற்குக் கருத்தாவாக விகுதிப்பொருளைக் கோடலுங் குறிப்பாமென்பார் தருதலென்னுது விளக்கலென்றுங் கூ

1. தொல். வினை. ரு. க.

வ - று : குழையினன், குழையினள், குழையினர், குழையிற்று, குழையின, குழையினென், குழையினெம், குழையினை, குழையினிர் எனவும்; அகத்தினன், புறத்தினன் எனவும்; ஆதிரையான், ஓணத்தான் எனவும்; குறுந்தாளன், செங்கண்ணன் எனவும்; கரியன், நெடியன், நல்லன், உண்மையன், உடையன் எனவும்; கடுநடையன், இன்சொல்லன் எனவும்;

[1]" மதிபாய் சடைமுடித்து மாசுணப்பைம் பூட்டுச்
சதிபாய் குறுந்தாட்டுத் தான—நதிபா
யிருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தென் னுள்ள
முருகவிட்டு நின்ற வொளி"

எனவும் வரும். பிறவும அனன.

இவை பொருளாதியாறன் ஒருபொருளை வழங்குதற்கு வரும் பெயராய் நில்லாது இவன் குழையையுடையனுயினன் என ஆறும் வேற்றுமையினது உடைமைப்பொருட்கண்ணும், அகத்தின்கண் இருந்தனன் புறத்தின்கண் இருந்தனன் என ஏழாம் வேற்றுமைபது நிலப்பொருட்கண்ணும், ஆதிரைநாளில் பிறந்தான் ஓணநாளிலுதித்தான் என அவ்வேழாம் வேற்றுமையது காலப்பொருட்கண்ணும், குறுந்தாளையுடையான் செங்கண்ணையுடையான் என அவ்வாறும்வேற்றுமையது உடைமைப்பொருட்கண்ணும், கருவண்ணமாயிருப்பன் நெடுவடிவாயிருப்பன் நற்குணமாயிருப்பன் உண்மைத்தன்மையன் உடைப்பொருள் சிறந்தான் எனப் பண்பின்கண்ணும், கடுநடையாக நடப்பான் இன்சொல்லாகச் சொல்லுவான் எனத் தொழிற்பண்பின்கண்ணும் வருதலின், வினைக்குறிப்புச்சொல்லாயின.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இவை முன்பு வினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்குதற்குவரும் பெயராய் வரின் அவை குறிப்புவினையாலணையும் பெயராம். இவை தம்முள் வேற்றுமை யென்க.

இவற்றுட் குணமடியாகத் தோன்றிய வினைக்குறிப்புச் சொற்கள் குணவிகற்பம் பலவாதலிற் பலவிகற்பப்பட்டு வரும். அவை யாவன :—பொன்னன்னன் புலிபோல்வன் என ஒப்புணர்த்தியும், எப்பொருளுமல்லனிறைவன். பொய்யர் நெஞ்சிற் புனிதனிலன், எவ்வுயிர்க்கண்ணும் இறைவனுளன், மெய்வலியன் எனப் பண்புணர்த்தியும், ஆவுண்டு என உண்மை

1. உரிச்சொல் நிகண்டு, காப்பு.

புணர்த்தியும், அவைதாமிவையல்ல, மாற்றருந்துப்பின் மாற்றோர் பாசறையிலன், சொலல்வல்லன் எனக் குறிப் புணர்த்தியும், குழையிலன், கச்சிலன் என உடைமைக்கு மறையாயும் வருவனவாம். ஒப்பாவது வினைபயன் மெய் உருவென்பனவற்றால் ஒன்றனையொன்றொத்தல். பண்பாவது ஒரு பொருடோன்றுங் காலத்து உடன்றோன்றி அது கெடுந்துணையும் நிற்பது. உண்மையாவது ஒருபொருட்குக் கேடு பிறந்தாலுந் தனக்குக் கேடின்றித் தானொன்றேயாய்ப் பலவாகப்பட்ட பொருடோறு நிற்பது. குறிப்பாவது பொருட்குப் பின்றோன்றிச் சிறிதுபொழுது நிகழ்வது. இவையெல்லாந் தொல்காப்பியக் கடலிற்றோன்ற விளங்கும் இந்நூல் சுருங்கிய நூலாதலின் இன்றியமையாதனவற்றைச் சிலவிடங்களில் விரித்தெழுதுகின்றனவுமுள; அவை ஆராய்ந்தறிந்துகொள்க.

குழையினன் என்புழிக் குழையையுடையான் வினைமுதல்; இது விகுதியான் விளங்கிற்று. குடத்தின்கண் மண்போல் இவ் வினையாகிய காரியத்தின்கண் முதற்காரணமாகிய செயலுண்டெனவும் காலமின்றேல் இது வினையன்றாமாதலானும் முக்காலங்களுள் ஒன்றன்பாற்சார்தற்குரிய இடைநிலை இதற்கு வேண்டாமையானும் முக்காலமுமுண்டெனவும், வினைமுதற்கு ஓர் ஆதாரம் வேண்டுதலின் இடன் உண்டெனவும், ஒன்றை வனைந்தான் ஒன்றால் வனைந்தான் என்றாற்போல இரண்டாவதற்கும் மூன்றாவதற்கும் இது பயனிலையாக ஒன்றைக் குழையினன் ஒன்றாற்குழையினன் என இயையாமையின் இதன்கட் செயப்படுபொருளுங் கருவியும் இலவெனவும் உய்த்துணர்க. ஒன்றாற் குழையினன் என ஒரோவழி இயையின் அங்ஙனங் கருவியுளதென்று கொள்க. உடையன் என்னுங் குறிப்புவினை ஒன்றையுடையன் ஒன்றினுடையன் என வருதலின் இதன்கண் ஆறுமுண்டென்க. இவ்வாறே தெரிநிலைவினைபோலக் குறிப்புவினை பிறவற்றுள்ளுஞ் செய்பவன் முதலிய ஆறும் வருதலுஞ் சில குன்றி வருதலும் உய்த்துணர்க.

வினை தெரிநிலை குறிப்பு என இருகூற்றதாம் என இவ்விருசூத்திரத்தானுங் கூறினார். இவற்றுள் தெரிநிலையின்பாற்படுஞ் செய்யான் என்றற்றொடக்கத்து எதிர்மறைக்கண்ணும் குறிப்பின்பாற்படும் இலன் என்றற்றொடக்கத்து எதிர்மறைக்கண்ணும் வினையில்லையாம். அங்ஙனமாகவும் இவற்றை வினையென்பதூஉம் இவை செய்பவன் முதலிய ஆறுந் தருமென்பதூஉம் என்னையெனின்:—இவற்றை வினையென்பது முயற்கோடு ஆகாயப்பூ என்றாற்போல இன்மையை உண்மைபோல வைத்துக் கூறுவ

தோர் இலக்கணை. இவை செய்பவன் முதலிய ஆறுந் தருமென் பது "சீத மின்மை பனியின்மை காட்டல்" போல வினையின்மை செய்பவன் முதலியவற்றின் இன்மைகளைக் காட்டி நிற்றலையாம். (உ)

வினைச்சொற்களின் பகுப்பு

௲உஉ. அவைதாம்,

முற்றும் பெயர்வினை எச்சமும் ஆகி
ஒன்றற் குரியவும் பொதுவும் ஆகும்.

எ - னின். மேல் தெரிநிலைகுறிப்பெனத் தொகுத்துணர்த்திய வினைச்சொற்களை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் இரண்டு சூத்திரத்தானுங் கூறிய தெரிநிலையாயுங் குறிப்பாயும் வரும் வினைச்சொற்கள் தாம் முற்றுவினைச் சொற்களும் பெயரெச்சவினைச் சொற்களும் வினையெச்சவினைச்சொற்களுமாகித் திணைபாலிடங்களின் ஒன்றற்குரியனவும் பொதுமையின் நிற்பனவுமாகும் எ-று.

திணைபாலிடங்களினென்பது இசையெச்சம். முக்காலங் களின் ஒன்றற்குரியவும் பொதுவுமாமாறு பதவியலுட் போந்தமை யின் அஃதொழித்துத் திணைபாலிடங்களினென்றும். உதாரணந் தத்தஞ் சிறப்புசூத்திரங்களான் உணர்க.

சிவஞானமுனிவர் விளக்கம்

இனி, 'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்பத னன் இங்ஙனந் திணைபாலிடம் பொழுது இவை நீண்டி ஒன்றற்குரியவும் பொதுவுமாய் நிற்பனவன்றிப் பிறவாற்றான் ஒன்றற்குரியவும் பொதுவுமாய் வருவனவுஞ் சிலவுளவெனக் கொள்க. அவையாவன :— பிரிவர், ஆடுவர் ; இவை தன்வினை யொன்றற்கேயுரியன· பிரிப்பர், ஆட்டுவர்; இவை பிறவினை யொன்றற்கேயுரியன. [1]"தேற்று வொழுக்க மொருவன்க ணுண்டாயின்," [2]"நட்பாட றேற்றுதவர்" எனவும்; அவனைத் தேற்றிக் கொடுத்தான் அவனைத் தேற்றிப் பிரித்தான். எனவும் ; இவை சொல்லொன்றே தன்வினையும் பிறவினையு மாயின. தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றி இவன் வெளுத்தான் இவைபோல்வனவுமது. உண்பான் உண்ணான் இவை விதிவினை மறைவினை. செய்யாய், செய்மீர், [3]"மக

1. நாலடியார், செ. எ௫. 2. திருக்குறள், செ. ௧௮எ.
3. திருக்குறள், செ. ௧௧௬.

னெனல் மக்கட்பதடியெனல்,'' அல்லும் பகலுமருசிக்க யாமந்தோறும் வல்லார்; வல்லார்—மாட்டாதார். வல்லார் திறைகொள்வர், வல்லார் திறைகொடுப்பர், அகல்விசும்பிலார் அருளான், வெகுளான் இவைசொல்லொன்றே விதிவினையும் மறைவினையுமாயின.

உண்ட சாத்தன், உண்ட சோறு இவை செய்வினை செயப்பாட்டு வினை. புலிகொன்றயானை, மீன் விழுங்கினவன், ஒன்னார் வணங்கினன், அவள் விரும்பினவன், இவன் அறிந்து வந்தான், தவரடிபுனைந்த தலைமையோன் இவை சொல் லொன்றே செய்வினையுஞ் செயப்பாட்டுவினையுமாயின. சாத்தான் நடந்தான் கால் நடந்தது இவை முதல்வினை சினை வினை. வனம் பொலிந்தது, படைபொருதிற்று, அவன் பருத்தான், அரக்கனுருக்கினன் இவை போல்வனவெல லாம் முதல்வினையுஞ் சினைவினையுமாயின. தேடியபொருள், தேடிய வந்தான், ஓடியபுரவி, ஓடிய விழுந்தான் எனவும்; பாங்கனொடு கூடிய தலைவன், தலைவியொடு கூடிய வந்தான் எனவும்; இவை சொல்லொன்றே ஈரெச்சமாயினவென வறிக. இவைபோல்வன பிறவும் அன்ன. (கூ)

---

## உ. வினைமுற்று

### வினைமுற்று இனையவென்பது

கூஉகூ. பொதுஇயல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர்
முதலறு பெயரல தேற்பில முற்றே.

எ - னின். மேற்கூறிய முற்றுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெரிநிலைமுற்றுங் குறிப்புமுற்றும் பெய ரெச்சமும் பெயரெச்சக்குறிப்பும் வினையெச்சமும் வினை யெச்சக்குறிப்புமாகிய அறுவகை வினைக்கும் பொதுவிலக் கணமாகிய செய்பவன் முதலிய ஆறினையுந் தோற்றுவித் துப் பொருட்பெயர் முதலிய அறுவகைப்பெயரையும் பய னிலையாக ஏற்பனவாகி அல்லதொன்றனையும் ஏலாதன முற்றுவினை வினைக்குறிப்புக்களாம் எ - று.

ஐம்பாலவாகிய வினைமுதலைத் தரும் விகுதிபுறப்புக்குறைந்த குறைச்சொல்லாகிய எச்சங்களைப் போலாது அவ்வுறுப்போடு

கூட நிறைந்து நிற்றலின் முற்றெனப்படுமென்பார் ஆறையுமென் றும், பெயரன்றி வினைச்சொன் முதலியவற்றுள் ஒன்றனையும் ஏலாதன முற்றெனவும் [1]பெயரன்றிப் பெயர்ப்பின் வேறொன்றனை யும் ஏலாதன முற்றெனவும் இருபொருள் தோன்றப் பெயரல தென்றுங் கூறினார்.

வ - று: செய்தானவன், நல்லனவன், குளிர்ந்தது நிலம், ஊர்ந்தது கார், குவிந்தது கை, பரந்தது பசப்பு, ஒழிந்தது பிறப்பு என வரும். ஏனைத் திணை பால் இடங் காலங்கள் தோறும் ஒட்டுக.

இவற்றுள் ஐம்பாலாகிய வினைமுதலைத் தரும் விகுதிபுறப்புக் குறையாது முற்றி நிற்றலும் பொருளாதி ஆறுபெயரையன்றி வினை முதலியவற்றைப் பயனிலையாக ஏலாமையும் பெயர்ப்பின் வேறொன் றையும் ஏலாமையுங் காண்க. "மற்றுச்சொன் னோக்கா மரபி னனைத்து—முற்றிநிற்பது முற்றியன் மொழியே." என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க. (௪)

## தெரிநிலைவினைமுற்றின் பாகுபாடு

௩௨௪. ஒருவன்முதல் ஐந்தையும் படர்க்கை இடத்தும்
ஒருமைப் பன்மையைத் தன்மை முன் னிலையினும்
முக்கா லத்தினும் முரண முறையே
மூவைந் திருமூன் றுறாய் முற்று
வினைப்பதம் ஒன்றே மூவோன் பாலும்.

எ - னின். மேற்கூறிய தெரிநிலை குறிப்பென்னும் இருவகை முற்றுள் தெரிநிலை முற்றென்றுமே இறப்பெதிர்வு நிகழ்வென்னுங் காலவிகற்பங்களைப் பெறுமென்பதூஉம் அவற்றன் இத்துணையா மென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என் னும் ஐம்பாலவாகிய வினைமுற்றுக்களைப் படர்க்கைக் கண் ணும் ஒருமை பன்மை என்னும் இருபாலவாகிய வினை முற்றுக்களைத் தன்மைக்கண்ணும் முன்னிலைக்கண்ணும் வைத்து முக்காலங்களானும் மாற, முறையே படர்க்கை வினைமுற்றுப் பதினைந்தும் தன்மைவினைமுற்று ஆறும்

---

1. இப்பொருளை மட்டுங் கூறுவர் மயிலைநாதர். 'முற்றி நிற்ற லான்முற்று' என்பர் அவர்.

முன்னிலைவினைமுற்று ஆறுமாகி முற்றுவினைச்சொல் லொன்றுமே இருபத்தேழாம் எ - று.

ஈண்டு ஒருவனென்பது பெயரையன்று உயர்திணை ஆண்பால் வினையையுணர்த்தி நின்றதோர் குறிப்புச்சொல்.

ஒருமைப் பன்மையென்புழி இடையே தோன்றிய பகரஞ் சந்தவின்பப்பொருட்டு விரித்தல் விகாரமாய் வந்தது.

ஒன்றே என்னும் ஏகாரம் முற்றுவினைப்பதம் முற்றுவினைக் குறிப்புப்பதம் என்னும் இரண்டனுள் முற்றுவினைப்பதம் ஒன் றுமே மூவொன்பானும் என்னும் பொருள்தந்து நிற்றலின் பிரிநிலை. இங்ஙனங் கூறவே இவற்குச் செல்வம் முன்னுண்டு, இப்பொழுதுண்டு, பின்னுண்டு என வினைக்குறிப்புப்பதம் மூக் காலமும் ஏற்குமேனும் காலங்காட்டும் இடைநிலை முதலிய வேண் டாது பொதுமையின் சிறப்பின்மையின் அதனை இவ்வாறு விரிக்கப்படா தென்பது பெற்றாம். (கூ)

## ஆண்பாற்படர்க்கை வினைமுற்று

**கூஉரு. அன்ஆன் இருமொழி ஆண்பாற் படர்க்கை.**

**எ-னின்.** மேல் கூறிப்போந்த இருவகை முற்றுள் திணை பால் இடங்களின் ஒன்றற்குரியன உணர்த்துதல் நுதலிற்று.

**(இ - ள்.)** அன் ஆன் என்னும் இருவிகுதியும் இறுதி யாகிய மொழிகள் உயர்திணை ஆண்பாற்படர்க்கை வினை முற்றும் வினைக்குறிப்புமாம் எ - று.

ஆண் பெண் என்னும் விகற்பம் அஃறிணைப்பெயர்க்கணன்றி அவ்வினைக்கண் இன்மையின் ஆண் என்றமையான் உயர்திணை என்பதூஉம், பால் என்றமையான் முற்று என்பதூஉம், மேலைச் சூத்திரத்து 'முற்றுவினைப்பத மொன்றே' என விதந்தாற்போல இதனுள் விதவாமையின் இருவகை முற்றிற்கும் பொதுவாகக் கூறினர் என்பதூஉம் பெற்றாம். மேல்வருஞ் சூத்திரங்களும் அன்ன.

வ - று: நடந்தனன், நடந்தான், நடவாநின்றனன், நடவா நின்றான், நடப்பன், நடப்பான், நம்பி என உயர்திணை ஆண்பாற் படர்க்கை இறந்தகாலவினைமுற்றும் நிகழ்கால வினைமுற்றும் எதிர்காலவினைமுற்றும் முறையே வந்தன. குழையினன், குழை யான், நம்பி என உயர்திணை ஆண்பாற்படர்க்கை வினைக்குறிப்பு முற்று வந்தன. (க)

### பெண்பாற்படர்க்கை வினைமுற்று

௩உசு. அள்ஆள் இறுமொழி பெண்பாற்படர்க்கை.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) அள் ஆள் என்னும் இருவிகுதியும் இறுதியாகிய மொழிகள் உயர்திணைப்பெண்பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம் எ - று.

வ - று: நடந்தனள், நடந்தாள், நடவாநின்றனள், நடவாநின்றாள், நடப்பள், நடப்பாள், குழையினள், குழையாள், நங்கை என வரும். (எ)

### பலர்பாற்படர்க்கை வினைமுற்று

௩உஎ. அர்ஆர் பவ்வூர் அகரமார் ஈற்ற
பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) அர் ஆர் ப மார் என்னும் நான்கு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் உயர்திணைப் பன்மைப்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். இவற்றுள் மார் ஈற்று வினைமுற்று பொதுவிதியாற் பெயரொடு முடிவதன்றி வினையுடனும் முடியும் எ - று.

'மாரெதிர்வும் பாந்தஞ் செலவொடு வரவும்' எனப் பதவியலுள் கூறினமையின் இவ்விருவிகுதியுங் குறிப்பு முற்றின்கண் வாராவெனவும், மார் வினையுடனும் முடியும் என்றமையின் இதற்கெய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தாரெனவும், வினையொடு முடிமே என்புழி இறந்ததுதழீஇய எச்சவும்மை யின்றெனக் கொள்ளினும் அமையக் கூறினமையின் வினையொடு முடிதல்போற் பெயரொடு முடிதல் பயின்று வருவதன்றெனவுங் கொள்க.

வ - று: நடந்தனர், நடந்தார், நடக்கின்றனர், நடக்கின்றார், நடப்பர், நடப்பார், குழையினர், குழையார் அவர் எனவும்; நடப்ப, எய்துப, செல்லுப, புல்லுப அவர் எனவும்;

[1]"பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்
பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே."

---

1. புறநா. ௩எ௫.

எனவும் வரும் பாடன்மாரென்பது [1]மாரீற்றெதிர்மறை வினைமுற்றாதலின் எதிர்காலவினையொன்றனையும் மறுத்துப் பாடுவாரல்லரென்னும் பொருட்டாய் நின்று எமரென்னும் பெயர் கொண்டது. இனி வினையொடு முடியுமாறு "ஆர்த்தார் கொண்மார் வந்தார்," "விழுக்கோட் பலவின் பழூஉப்பயன் கொண்மார், குறவ ரூன்றிய குரம்பை புதைஇ," எனவரும். இதனை வினைமுற்று வினையெச்சமாயிற்றென்றால் என்னையெனின்:— வினைமுற்றின்வழி அதற்கியைந்த பெயர்ப்பயனிலை வாராது இயையாத வினை வந்தேல் அதற்கியைய வினைமுற்று வினையெச்சமாயிற்றெனப்படும்; இம்மாரீற்று வினைமுற்றிற்குப் பெயர்போல வினையும் இயைந்து வருதலின் முற்றெச்சமாயினதன்று முற்றேயாமென்க. பின்வருஞ் 'செய்கென் கிளவியுஞ் செய்குமென் பன்மையும்' என்னும் முற்றுக்களும் அன்ன.

"காலமொடு கருத வரினு மாரை
மேலைக் கிளவியொடு வேறுபா டின்றே."

என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. [2]

## ஒன்றன்பாற்படர்க்கை வினைமுற்று

**கூஉ௪. துறுடுக் குற்றிய லுகர ஈற்ற**
**ஒன்றன் படர்க்கை டுக் குறிப்பின் ஆகும்**

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இம்மூன்று குற்றியலுகரவீற்று விகுதிகளையும் இறுதியாகவுடைய மொழிகள அஃறிணையொருமைப்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். இவற்றுள் டுவ்விகுதி குறிப்பின்கணன்றித் தெரிநிலைக்கண் வாராது எ - று.

றுவ்விகுதி முக்கால வினைக்கண்ணும் பயின்று வாராமையானும், துவ்விகுதி தன்முன்னின்ற எழுத்து நோக்கி றுவ்விகுதியாய்த் திரிந்ததெனினும் அமையுமாதலானும், டுவ்விகுதி குறிப்பொன்றற்கே வருதலானும், இதுவுந் துவ்விகுதி திரிந்ததெனினும் அமையுமாதலானுந் துவ்விகுதியின்பிற் கூறப்பட்டன.

---

1. இதனை, ஆரீற்று முற்றுச்சொல்லின் எதிர்மறையாய் ஒருமொழிப் புணர்ச்சியின் மகரம்பெற்று நின்றதென்பர், சேனாவரையர்; தொல். வினை. சூ. ௧0.

2. அகநா. ௧உ.

வ - று: நடந்தது, நடக்கின்றது, நடப்பது, வந்தன்று, கூயிற்று எனவும்; அணித்து, சேய்த்து, அற்று, இற்று, எற்று எனவும்; பொருட்டு, ஆதிரைநாட்டு, குண்டுகட்டு, அது எனவும் வரும். வந்தன்றென்புழி அன் என்பது சாரியை.

சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்புக்கள் 'பொருண் முதலாறினுந் தோற்றி' என்றவற்றுள் எப்பொருளவெனின்:— பொருளாதியாறனுள் யாதானுமொன்றனைச் சுட்டியும் வினவியும் வருதலின் அவ்வப்பொருளவாமென்க.

குற்றியலுகரவீற்ற என்றமையான் எற்று என்றாற்போல எது யாது என்பனவுங் காரணப்பெயராமன்றி வினைக்குறிப்பு மாம் என்பதூஉம், அங்ஙனமாகவே 'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே.' என்பதனான் அது இது என்றற் றொடக்கத்து முற்றுகரவீற்றவும் வினைக்குறிப்பாம் என்பதூஉம் பெற்றாம். (க)

பலவின்பாற்படர்க்கை வினைமுற்று

ருஉக. அஆ ஈற்ற பலவின் படர்க்கை
ஆவே எதிர்மறைக் கண்ண தாகும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) இவ்விருவிகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் அஃறிணைப்பன்மைப்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். இவற்றுள் ஆகாரம் எதிர்மறை வினைக் கண்ணதாமன்றி உடன்பாட்டுவினைக்கண் வாராது எ - று.

ஆவேயெதிர்மறைக்கண்ணதாகும் என்றமையான், ஏனை விகுதிகள் உடன்பாட்டினும் எதிர்மறையினும் வருமென்பது பெற்றும்.

வ - று: நடந்தன, நடந்த, நடவாநின்றன, நடவாநின்ற, நடப்பன, நடப்ப, கரியன, கரிய அவை எனவும்; நடந்தில, நடவா நின்றில, நடவா அவை எனவும் வரும். [1]இல்லன, இல்ல என்னும் எதிர்மறைவினைக்குறிப்பு முற்றின்கண் பகுதியே மறைப்பொருள்

1. இனி உரையிற்கோடல் என்னும் உத்தியான் இம்மணி நல்ல என்னும் உடம்பாட்டுக்குறிப்பு வினைக்கு எதிர்மறையாக இம்மணிபொல்லா (எனவும்) தீரத்தீரத்தீர் பொல்லாவே (எனவும்):—இந்த எதிர்மறை ஆகாரவிகுதி குறிப்பின்கண் வருதலுங் கொள்க என்பர், இராமாநுச கவிராயர்.

தந்து நிற்றலின் இதற்கெதிர்மறையாகாரம் வேண்டாமையின், எற்புழிக்கோடலான் இம்மறைவிகுதி தெரிநிலைக்கே கொள்க. இங்ஙனங் காட்டிய அன் பெறு அகரவீற்றுப் பலவறிசொற்களுள், நடப்பவென்பதன் இறுதி நோக்கி உயர்திணைப்பன்மைப்படர்க்கைக்கும் அஃறிணைப்பன்மைப்படர்க்கைக்கும் பொதுவினை என்று கொள்ளற்க; இதன்கண் பகரம் எதிர்காலவினை இடைநிலையாதலின், இத் தொடக்கத்தனவெல்லாம் பலபொருளொரு சொல்லாமென்க. (சo)

## இருதிணைப் பொதுவினை

௩௩௦. தன்மை முன்னிலை வியங்கோள் வேறில்லை
உண்டு ரெச்சம் இருதிணைப் பொதுவினை.

எ - னின். திணைபா லிடங்கட்குப் பொதுவினை உணர்த்துவான்றொடங்கி, அவற்றுள் இருதிணைக்கும் பொதுவினை இவை யென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தன்மைவினை வினைக்குறிப்புமுற்றும் முன்னிலைவினை வினைக்குறிப்புமுற்றும் வியங்கோள் வினைமுற்றும் வேறு இல்லை உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்பு முற்றும் பெயரெச்சவினை வினைக்குறிப்பும் வினையெச்சவினை வினைக்குறிப்பும் இருதிணைக்கும் பொதுவினையாம் எ - று.

தன்மை முன்னிலை என்றமையான் அவை முற்றென்பது பெற்றாம்.

எச்சம் எனப் பொதுப்படக் கூறினாரேனும், முற்றெச்சங்கள் முற்றோடு ஒக்குமாதலின் அவை யொழியக் கொள்க.

செய்யும் என்னுமுற்றும் இருதிணைப் பொதுவினையன்றோ அதனைக் கூறாதொழிந்ததென்னையெனின் :—

முற்றெச்சமாயினாற்போலச் செய்யும் என்னும் பெயரெச்சஞ் செய்யும் என்னும் முற்றானமையின் ஈரெச்சமிருதிணைப் பொதுவினை என்றதுணையானே அம்முற்றும் இருதிணைப்பொதுவினை என்பது தாமே போதருமென்க.

செய்யும் என்னும் எச்சம் முற்றுமாறும் அம்முற்றிற்கு ஈண்டுப் போந்த இருதிணைப் பொதுவொழிய அஃது ஐம்பான் மூவிடங்களிற் பொதுமையின் நிற்குமாறும் மேற்கூறுப. (சக)

### தன்மையொருமை வினைமுற்று

௩௩௧. குடுதுறு என்னுங் குன்றிய லுகரமோடு
அல்அன் என்ஏன் ஆகும் ஈற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.

எ - னின். நிறுத்தமுறையானே தன்மையொருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்.) இவ்வெட்டு விகுதிகளையும் இறுதியாக வுடைய மொழிகள் இருதிணைக்கண்ணவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் முக்கூற்றொருமைத் தன்மைவினை முற்றுங் குறிப்புமுற்றுமாம் எ - று.

குவ்விகுதியை உடன்கூறினமையின் அதன் பின்னின்ற மூன்றுங் காலங்காட்டும் விகுதிகள் என்பதூஉம், ஒருமை என்றமையின் இவை திணைப்பொதுவன்றிப் பாற்பொதுவாகாவென்பதூஉம் பெற்றாம். ஒருமை பன்மை என மேல் விதப்பனவும் அன்ன.

வ - று: உண்கு, கொண்டு, வந்து, வருது, சென்று, சேறு, [1]உண்பல், உண்டனன், உண்ணாநின்றனன், உண்பன், உண்டனென், உண்ணாநின்றனென், உண்குவென், உண்டேன், உண்ணாநின்றேன், உண்பேன் எனவும்; தாரினென், தாரினேன், யான் எனவும் வரும். காட்டாதொழிந்தன வந்துழிக் காண்க.

தன்மைக்கண்ணும் அன் விகுதி கொள்ளாதொழியின், [2]"எழுத்தசைசீர்—பந்தமடிதொடை பாவினங்கூறுவன்" என்றற் றொடக்கத்தன அமையாவென்க. (௩௨)

### தன்மைப்பன்மை வினைமுற்று

௩௩௨. அம்ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம்ஏம் ஓம்இவை படர்க்கை யாரையும்
உம்ஊர் கடதற இருபா லாரையும்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை.

---

1. உண்ணாநிற்பல் எனச் சிறுபான்மை நிகழ்காலத்தும் வரும் என்பர், இராமாநுச கவிராயர்.

2. யா. கா. கடவுள்.

எ - னின். தன்மைப்பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தந்நிலையில் நிற்பதன்றி அம் ஆம் என்னும் இவ்விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் முன்னிலை யாரையும், எம் ஏம் ஓம் என்னும் இம்மூன்று விகுதியினை யும் இறுதியாகவுடைய மொழிகள் படர்க்கையாரையும், கும் டும் தும் றும் என்னும் இந்நான்கு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் முன்னிலை படர்க்கையென் னும் ஈரிடத்தாரையும் தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம் எ - று.

தம்நிலையில் நிற்பதன்றி யென்னும் இறந்தது தழீஇய எச்ச வும்மைகள் எண்ணும்மைகளாயும் இருபாலாரையும என்புழி இவற்றோடு முற்றும்மையாயும் நின்றன.

வ - று : உண்டனம், உண்ணாநின்றனம், உண்பம், உண்டாம், உண்ணாநின்றாம், உண்பாம், தாரினம், தாரினும் யாம் எனவும்; யானும் நீயும் எனவும்; உண்டனெம், உண்ணாநின்றனெம், உண்பெம், உண்டேம், உண்ணாநின்றேம், உண்பேம், உண்டோம், உண்ணாநின்றோம், உண்போம், தாரினெம், தாரேம், தாரினோம் யாம் எனவும்; யானும் அவனும் எனவும்; உண்கும், உண்டும், வந்தும், வருதும், சென்றும், சேறும் யாம் எனவும்; யானும், நீயும் அவனும் எனவும்; தனித்தன்மைப்பன்மையும் உளப்பாட் டுத் தன்மைப்பன்மையும் முறையே வந்தன.

இன்னும் இவ்வும்மைகளை ஐயஉம்மைகளாக்கி அம் ஆம் என்பன முன்னிலையாரையேனும் படர்க்கையாரையேனுந் தன் னொடுபடுக்குமெனவும், ஆக்க உம்மையாக்கி அம் ஆம் என்பன முன்னிலையாரையும் படர்க்கையாரையும் ஒருங்கு தன்னொடு படுக்குமெனவும் பொருளுரைத்து, உண்டனம் யானும் அவனும் எனவும்; யானும் நீயும் அவனும் எனவும்; அருகி வருதல் கண்டு கொள்க.

வினைஎட்டு விகுதியும் அன்ன.

இவற்றை [1]'ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே' என்னும் இடவழுவமைதியாகக் கோடலும் ஒன்று.

தன்மையொருமைக்கண் அன் விகுதியும் பன்மைக்கண் ஓம் விகுதியும் புதியனபுகுதல்.        (௩௩)

---

1. நன்னூல்: ௩௮0.

## வினையுடனும் முடியுந் தன்மைவினைமுற்றுக்கள்

௬௬௬. செய்கேன் ஒருமையும் செய்தும்என் பன்மையும்
வினையோடு முடியினும் விளம்பிய முற்றே

எ-னின். எய்தியதன்மேற் சிறப்புவிதியும் எய்தியது இகந்துபடாமற் காத்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

வினையோடு முடியினும் என்றமையாற் பெயரோடு முடியும் என்னும் விதி தாமே போதருமாதலின் எய்தியதன்மேற் சிறப்பு விதி என்றும்.

(இ-ள்.) செய்கென்னுந் தன்மையொருமைமுற்றும் செய்குமென்னுந் தன்மைப்பன்மை முற்றும் பெயருடனே யன்றி வினையுடனேயும் முடியும்; அங்ஙனம் முடியினும் மேற்கூறிய முற்றேயாம் எ-று.

எச்சங்களைப் போலாது வினைமுதலைத் தரும் விகுதியுறப் பொருந்திய முற்றிநிற்றலின் முற்றெனப்பட்டதன்றிப் பயனிலை கொண்டு முற்றலின் முற்றெனப்பட்டதன்றென்பார் பெயரே யன்றி வினையொடு முடியினும் விளம்பிய முற்றே என்றார்

வ-று: உண்குவந்தேன், உண்கும் வந்தேம் என வரும்.

இங்ஙனமாயின் உண்பேன் வந்தேன், உண்பேம் வந்தேம் என இவ்வொருமை பன்மையும் வினையோடு முடியுமென்றால் என்னையெனின்:— [1]"எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந் தோர்—செப்பின ரப்படிச் செப்புதல் மரபே' என்பவாகலிற் செய்கெனொருமையுஞ் செய்குமென் பன்மையும் பெயரொடும் வினையொடும முடிதல் மரபாயினாற்போல, அவை பெயருடனன்றி வினையொடு முடிதன் மரபன்மையின் அஃது இயையாதென்க. ()

## உளப்பாட்டுப் பன்மை முன்னிலை

௬௬௪. முன்னிலை கூடிய படர்க்கையு முன்னிலை.

எ-னின். உளப்பாட்டுப்பன்மை முன்னிலைக்கண்ணும் உள தென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மையானாற்போல முன்னிலையோடுகூடிய படர்க்கையும் முன்னிலையாம் எ-று.

1. நன்னூல், ௩௮௮.

விகுதிகளை விதவாது கூறினமையின் முன்னிலைப்பன்மை விகுதிகளெல்லாம் படர்க்கையை உளப்படுத்துமென்பதூஉம் படர்க்கை என்றமையால் தன்மையை உளப்படுத்தாவென்பதூஉம் பெற்றாம்.

வ - று: உண்டனிர், உண்டீர், உண்மின், குழையினிர், குழையீர் நீயும் அவனும் எனவும்; 'ஒண்டுவீ நாறாய்நின் சேவலு நீயுமாய்—வண்டூதும் பூங்கானல் வைகலுஞ் சேறிரால்.' எனவும் வரும்.

இச்சூத்திரம் முன்னிலைப் பன்மைமுற்றுக் கூறியவழிக் கூறாது ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல் என்னும் உத்தியான் ஈண்டுக் கூறப்பட்டது. (சஉ)

முன்னிலை யொருமை வினைமுற்று

ககரு. ஐஆய் இகர ஈற்ற மூன்றும்
ஏவலின் வருஉம் எல்லா ஈற்றவும்
முப்பால் ஒருமை முன்னிலை மொழியே.

எ - னின். முன்னிலையொருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐ ஆய் இ என்னும் மூன்றீற்று மொழிகளும் விகுதி குன்றாதுங் குன்றியும் நிற்பனவாகிய ஏவற்கண் வரும் இருபத்துமூன்றீற்று மொழிகளும் ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் மூன்று கூற்றவாகிய முன்னிலை ஒருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம் எ - று.

இகரவீற்று மொழிகட்கு இகரம் எதிர்காலங் காட்டுவதன்றி இடைநிலையாக நின்றுங் காலங் காட்டும் என்பது தோன்ற ஐ ஆய் என்னும் விகுதிகளோடு இகரவிகுதியை உடன் கூறினார்.

ஏவல் முற்றுத் தெரிநிலையொன்றற்கேயுரிமையின் உம்மை கொடுத்து விதந்தோதினர்.

வ - று: உண்டனை, உண்ணாநின்றனை, உண்பை, உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய், உண்டி, உண்ணாநின்றி, சேறி, நடவாய், வாராய், கேளாய், அஃகாய், நட, வா, கேள், அஃகு எனவும்; வில்லினை, வில்லாய், வில்லி, நீ எனவும் வரும். இகரஈற்று மொழிகள் எதிர்கால இடைநிலையேற்குமேல் காண்க. ஏவல்

எனப் பொதுப்படக் கூறினமையின் செய்வி, செய்விப்பி என்னும் ஏவல்மேல் ஏவல்களும் செய்யல், செய்யேல் என்றற்றொடக்கத்து எதிர்மறையேவல்களும் இருபத்துமூன்றிற்றுள் அடங்கிக் கிடந்தமை காண்க. பால் காட்டி நிற்றலின் ஏவலும் முற்றேயாமென்க. (கசு)

௩௩௬. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.

எ - னின். ஏவல்முற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முன்னிலையேவல் முற்றெனமேற்கூறியவற்றிற்கு முன்னே ஈகாரமும் ஏகாரமும் ஆண்டு வந்து நிற்றற்குரிய மரபினையுடைய மெய் யாதானும் ஒன்றை ஊர்ந்து வரும் எ - று.

ஈகார ஏகாரங்களை 'அன் ஆன் அள் ஆள்' என விகுதி கூறியவழி எடுத்தோதாமையானும், மேலைசூத்திரத்து ஐ ஆய் இகரங்களோடு ஒருங்கோதாமையானும் இவை விகுதியுருபல்ல என்பதூஉம், ஏவற்கண் வரும் எழுத்துப்பேறு என்பதூஉம், அந்நிலை மரபின் மெய் யென விதந்தமையின் அஃது அம்மொழியிறுதி மெய்யன்று என்பதூஉம் பெற்றாம்.

வ - று: [1]'சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே' எனவும்; [2]'அட்டி லோலை தொட்டனை நின்மே' எனவுட வரும்

இவ்வெழுத்துப்பேறு 'நட வா மடி' என்னுஞ் சூத்திரத்தின் பிற்கூறாது ஈண்டுக் கூறினார், இவ்வாறு வரும் ஏவல்கள் பகுதி மாத்திரையன்றி நிற்றலின் இவை முன்னிலையொருமை விகுதி உருபேற்று வினைமுற்றோ ஏவல்வினைமுற்றோ என்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தற்கு.

இவற்றிற்கு விகுதியுருபின் பொருளின்மையின் முன்னிலை அசையாம் என்க. (கஎ)

முன்னிலைப் பன்மைவினைமுற்று

௩௩௭. இர்ஈர் ஈற்ற இரண்டும் இருதிணைப்
பன்மை முன்னிலை மின்னவற் றேவல்.

1. அகநா: சசு. 2. நற்றிணை, ௩௦௦.

எ - னின். முன்னிலைப்பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) இர் ஈர் என்னும் இருவிகுதியினையும் இறுதி யாகவுடைய மொழிகள் இருதிணைப்பன்மை முன்னிலை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். மின் என்னும் விகுதியை இறுதியாகவுடைய மொழிகள் இருதிணைப்பன்மை முன்னிலை ஏவல் முற்றும் எ - று.

வ - று: உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்குவிர், உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர், உண்மின் எனவும், குழையினிர், குழையீர், நீர் எனவும் வரும்

மின்னவற்றேவல் என்றமையான், உண்ணும், தின்னும் நீர் என உம் ஈற்றவாய் வரும் பன்மையேவல் புதியன என்பதூஉம், அவை 'புதியன புகுதலும் வழுவல' என்பதனான் அமையும் என்ப தூஉம் பெற்றாம். (கஅ)

### வியங்கோள் வினைமுற்று

நூ.ந அ. கயவோடு ரவ்வோற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் என்ப.

எ - னின். வியங்கோள்முற்று உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) க ய என்னும் இரண்டுயிர் மெய்யினையும் ரகரவொற்றினையும் இறுதியாகவுடையன வியங்கோள் முற்றும்; அவை மூவிடத்தினும் ஐம்பாலினுஞ் செல்லும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

ரவ்வொற்று என்றமையான் முன்னைய இரண்டும் உயிர்மெய் என்பதூஉம், ஓடு என்றமையான் ரகரவொற்றுக் ககர யகர உயிர் மெய்கள்போல் தனித்தியலாது யகரத்தோடு வரப்பெறும் என்ப தூஉம், என்ப என்றமையான் இம்மூன்றீற்றவுந் தொன்று தொடு நெறிய என்பதூஉம் பெற்றாம்.

வ - று: வாழ்க, வாழிய, வாழியர், நிலீயர், யான், யாம், நீ, நீர், அவன், அவள், அவர், அது, அவை எனவும்; [1] 'பெறுக தில்லம்ம யானே'; [2] 'வெல்க வாழிநின் வென்றி வார்கழல்'; 'செல்க நீயன சிறக்கநின் புகழே'; [3] 'மன்னிய பெரும நீ நிலமிசை யானே.' எனவும்; வாழ்த்துதற்பொருண்மைக்கண் வந்தன.

---

1. குறுந்: கஉ 2. சூளா. சீய: ஞ. 3. புறநா: கூ.

நடக்க, வருக, உண்க, செல்க என உயர்ந்தோன் இழிந்தோனை இன்னது செய்கவென விதித்தற்பொருண்மைக்கண் வந்தன.

[1]'போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்'; [2]'எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க.' எனவும்; 'கடாவுக பாகநின் கால்வ னெடுந்தேர்.' எனவும்; வேண்டிக் கோடற் பொருண்மைக்கண் வந்தன

இங்ஙனங் கூறினர் 'வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே' என அல்லீற்று வியங்கோளும் உடன்பட்டுப் புணர்த்தமையான், எடுத்தோதாப் பிறவீற்றவாய் இருதிணை ஐம்பால் மூவிடங்களினும் வாழ்த்து முதலிய எவற்பொருளவாய்ச் சென்றனவுளவேல, அவை 'புதியன புகுதலும் வழுவல' என்னும் வழுவமைதியாய் வந்த வியங்கோள் என்பதூஉம் பெற்றாம்.

> [3]'பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
> மக்கட் பதடி யெனல்.'

என்புழிப் பதடியெனல் என்பது வியங்கோள்; மகனெனல் என்பது எதிர்மறை ஒருமையேவல். இவ்வாறு பிறவீற்றவாய் வருமாயின், அவை வியங்கோளாதல் ஆராய்ந்துகொள்க.

ஏவல், வியங்கோள் என்பன ஒருபொருட்கிளவியாயினும், இருதிணை ஐம்பால் மூவிடங்களினுஞ் செல்லும் ஏவலை வியங்கோள் என்பது தொன்னெறிமரபாம் என்க. (௧௧)

## வேறு, இல்லை, உண்டு

**௩௩௧. வேறில்லை உண்டைம் பால்மூ விடத்தன.**

**எ-னின். இவ்வினைக்குறிப்புமுற்று மூன்றும் பாலிடங்கட்குப் பொதுவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ-ள்.) வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்புமுற்றும், ஐம்பாற்கும் மூவிடத்திற்கும் உரியனவாம் எ-று.

உண்டு என்பது அஃறிணை ஒருமைக்கேயன்றிப் பொதுவினையாதல் புதியன புகுதலாமென்பார் பிற்கூறினர்.

---

1. திருவாசகம், திருவெம்பாவை, உ0.
2. " " ௧௧.
3. திருக்குறள், ௧௯௬.

வ - று: வேறு அவன், இல்லை அவன், உண்டு அவன், அவள், அவர், அது, அவை, யான், யாம், நீ, நீர் எனவும்;

[1] 'விளிந்தாரின் வேறல்லர் மன்ற;'

[2] 'யாரு மில்லைத் தானே கள்வன்
றானது பொய்ப்பின் யானெவன் செய்கோ:
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
வொழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே;'

[3] 'பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்
கொண்ட கொழுநர் உறுகுறை தாங்குறூஉம்
பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்;'

'நாவுண்டு நீயுண்டு நாமந் தரித்தோதப்
பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ—பூவுண்டு
வண்டுறங்குஞ் சோலை மதிலரங்கத் தேயுலகை
யுண்டுறங்கு வானொருவ னுண்டு.'

எனவும் வரும்.

[4] 'பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.'

என்பது செய்யுளாதலின், இல்லை என்பது இல் எனக் கடைக் குறைந்து நின்றது.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனி மொழிந்தபொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் என்பதனுல், வேண்டும், தகும், படும் என்னுஞ் சொற்களும் ஐம்பால் மூவிடத்தனவாமெனவுங் கொள்க.

வ - று: [5] ஓதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை—யாஅது மென்னு மவர்;' யான் போகல் வேண்டும்; நீ யுரைத்தல் வேண்டும்; [6] 'இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு—

1. திருக்குறள், ௧௪௩.
2. குறுந்தொகை, ௨௫
3. சிலப். ௧௧: ௫௧௩.
4. திருக்குறள், ௪௪.
5. திருக்குறள், ௬௫௩.
6. தொல். சொல்: ௩௩.

வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்;' 'இனைத்தென் றறிபொரு ளுலகினி லாப்பொருள்—வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்;' [1]'இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்—கின்னென் சாரியை யின்மை வேண்டும்;' 'வேறு வினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும்—வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்;' [2]'நலம்வேண்டி னாணுடைமை வேண்டும்.' எனவும்; இவராலிக் காரியஞ் செய்யத்தகும்: இவ்வூழருந்தத்தகும்; இச் சோறுண்ணத் தகும்; இந்நீர் குடிக்கத்தகும் எனவும்; [3]'முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா—வஞ்சரை யஞ்சப் படும்;' [4]'இளையரின முறைய ரென்றிகழார் நின்ற—வொளியோ டொழுகப் படும்;' [5]'கற்றுணர்ந்தோரைத்—தலைநிலத்து வைக்கப் படும்;' [6]'கீழ் களைச்-செய்தொழிலாற் காணப் படும்' எனவும் வரும்.

இம்மூன்றும், ஒருபொருட் கிளவியாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப் பொருள்பட்டே நிற்குமென்க.

இங்ஙனம் வருஞ் செய்யுட்கட்கெல்லாம், நச்சினார்க்கினியர், சேனாவரையர், பரிமேலழகர், உரையாசிரியர் முதலாயினார், முற்றாயும் எச்சமாயும் பொருளுரைக்கின் வழுவாமென்று கருதி, வியங்கோட்பொருட்டு என்றும், விதிப்பொருட்டு என்றும், தகுதிப்பொருட்டு என்றும், வேண்டுவ என்றும், தமக்கு வேண்டியவாறே பொருளெழுதிச், சொற்குணம் வாளாபோயினர். அது நிற்க. (௨0)

## ௩. பெயரெச்சம்

### பெயரெச்சம் இனையவென்பது

௩௪0. செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி அறுபொருட் பெயரும
எஞ்ச நிற்பது பெயர்எச் சம்மே.

1. தொல். எழுத்து: ௧௩௧.
2. திருக்குறள், ௯௬0.
3. திருக்குறள், ௮௨௪.
4. ,, ௬௯௮.
5. நாலடியார், ௧௩௩.
6. நாலடியார், ௩௪௭.

எ - னின். 'ஈரெச்சம்' என்றவற்றுள் பெயரெச்சமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் மூவகைப்பட்ட சொல்லின்கண், முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்றுகாலமுஞ் செயலுந் தோன்றி, வினைமுற்றுதற்கு வேண்டும் பாலொன்றுந் தோன்றாது, அப் பாலுடனே செய்பவன் கருவி நிலஞ் செயல் காலஞ் செய்பொருள் என்னும் அறுவகைப்பொருட் பெயரு மொழிய நிற்பன, பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களாம் எ - று.

பாட்டு என்னும் பலபொருளொருசொல் ஈண்டுச் சொல்லை உணர்த்தி நின்றது.

இவற்றுள் செய்யும் என்னும் ஒன்றும் இறுதிநிலை காலங் காட்டியது.

இவை வெளிப்படையின் உணர்த்துவன காலமுஞ் செயலும் என்பார் பாட்டு என்றும், பெயரெச்சம் என்றது வினை முற்றாத குறைச்சொல்லாய்த் திணைபாலிடங்கட்குப் பொதுவாகிப் பெயரெஞ்ச நின்றனவற்றை யென்பார் பாலொடு என்றுங் கூறினார்.

நிற்பது என்பது தொகுதியொருமை.

ஏற்புழிக் கோடலால், தோன்றி என்பதன்காறுந் தெரிநிலை உடன்பாட்டிற்கும், ஏனைய தெரிநிலையுங் குறிப்புமாகிய உடன்பாடு எதிர்மறை இரண்டற்குங் கொள்க.

பதப்பொருளொழிந்த உரை வினையெச்சத்திற்குங் கொள்க.

வ - று: உண்ட, உண்ணாநின்ற, உண்ணும் சாத்தன், கலம், இடம், ஊண், நாள், சோறு எனவும்; "வேலாள் முகத்த களிறு;"[1] 'கூர்விலைய வேல்;' உள்ள பொருள் எனவும்; உண்ணாத சோறு எனவும்; இல்லாத பொருள் எனவும் வரும்.

செய்வதாதி அறுபொருளுங் காரணமாதலின், இவ்வெச்சங்கள் காரியப்பொருட்டாய் நின்றன. வனைந்தகுடம் என்புழிக் குடங் காரியமாயும் நிமித்தமாயும் நிற்றலின், இவ்வெச்சங் காரணப்பொருட்டாயுங் காரியப்பொருட்டாயும் நின்றது. பிறவும் அன்ன.

---

1. திருக்குறள், ருOO.

அறுபொருட்பெயரும் என்னும் உம்மையை 'ஆறுந்தருவது வினையே' என்னும் உம்மைபோல வைத்து அறுபொருட்பெயரிற் சில குறைந்தும் [1]இன்னதற்கிதுபயனென்னும் இருபொருட்பெயரும் பிறபெயருங் கூடியும் எஞ்ச நிற்பதெனவும் பொருளுரைத்துக் கொள்க. அவை வருமாறு:—ஆடினகொடி, துஞ்சினகொடி இவை குறைந்தெஞ்ச நின்றன. களை கட்டபயிர், களை கட்ட கூலி இவை இன்னதற்கெனவும் இது பயனெனவும் இருபெயருமெஞ்ச வந்தன. உண்ட விளைப்பு எனவும்; [2]"குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி" எனவும்; குடிபோனவூர் எனவும்; பொன் பெரிய நம்பி எனவும்; பிறபெயர்கள் எஞ்ச நின்றன. பிறவும் அன்ன.

உண்ட இளைப்பு என்பது உண்ட காரணத்தான் வருங்காரியமாகிய இளைப்பாதலிற் செயப்படுபொருள் கொண்டதெனின் அமையாதோவெனின்:—சாத்தனுண்ட சோறு என்புழிச் சோற்றையுண்ட சாத்தன் எனச் சோறு என்பது இரண்டாமுருபேற்றாற்போல, இளைப்பு என்பது அவ்வுருபேலாமையின் அது செயப்படுபொருளாகாதென்க. இவ்வெச்சம் காரணப்பொருட்டாயே நின்றது. எனவே இப் பெயரெச்சங்கள் காரணப்பொருட்டாயுங் காரியப்பொருட்டாயும் இவ்விருதிறத்தவாயும் வருதல் காண்க. இப்பெயரெச்சம் அரசன் செய்த தேர் எனத் தலைமை பற்றியும் தச்சன் செய்த தேர் என அஃறின்மை பற்றியும் வரும்.

இனி 'காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை' எனக் கூறுதலின் வினைத்தொகையினைப் பெயரெசச வினையுள் அடக்கி இதுவே விதியாகக் கொள்க.

வ - று: அடுகளிறு கோடு களம் போர் நாள் கந்து என வரும்.

> "காலமும் வினையுந் தோன்றிப்பா ரேன்றுது
> பெயர்கொள் ளும்மது பெயரெச் சம்மே."

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க. (உக)

---

1. "இன்னதற்கிது பயனாக வென்னும்" தொல். சொல் வேற்றுமை மயங்கு: உ௲.

2. திருமுருகு. கககூ. இவ்வடிவுக்கு 'ஆழ்ந்த சுனையிற் பூத்த பூவாற் செய்த வண்டு வீழ்கின்ற கண்ணி' என உரை கூறி, இஃது ஒற்றுமை நயம் பற்றிச் செயப்படுபொருள்மேல் நின்றது என்று, இலக்கணக் குறிப்பெழுதுவர் நச்சினார்க்கினியர்.

செய்யுமென் எச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

௩௪௪. செய்யும்என் எச்சஈற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம்உந் தாகலும் முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே.

எ - னின். செய்யும் என் எச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தின் இறுதி உயிர்மெய் கெடுதலும், செய்யுளகத்து அதனிறுதி உம்மை உந்து எனத் திரிதலும், அது முற்றாயின் அதனிறுதி உயிரேனும் உயிர்மெய்யேனுங் கெடுதலும் உளவாம் எ - று.

செய்யுளுள் உம் உந்தாம் எனவே ஏனைய வழக்குச் செய்யுள் ஈரிடத்துமாம் என்பதூஉம், முற்றேல் எனவே செய்யும் என் எச்ச முற்றுமாம் என்பதூஉம், இறந்தது தழீஇயெண்ணி நின்ற இழிவு சிறப்பும்மைகளான் இவை ஒரு தலையல்ல என்பதூஉம் பெற்றாம்

முற்றுவிகுதியின்றி எச்சவிகுதியே முற்றுவிகுதிப்பொருளாகிய பால் காட்டி ஒரோவழி நிற்றலின் எச்சம் முற்றுமெனப் பட்டது.

வ - று: ஆம்பொருள் போம்பொருள் எனவும்; [1]"ஆம் பொருள்களாகுமவை யார்க்குமழிப் புண்ணே," 'போம்புழை,' "[2]வாம்புரவிவழுதி" எனச் செய்யும் என் எச்சவீற்றுயிர்மெய் கெட்டன. இவை மகரவொற்று நிற்றலின் வினைத்தொகையாகா வென்க.

[3]"செல்வரிய யிருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயின்முனையிற்
றெண்கடற்றிரை மிசைப்பாயுந்து,"
[4]"நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து."

இவை உம் உந்தாயின. அஃகாம் இவைபோம் எனவும்; "சார னாடவென் னோழியுங் கலுழ்மே" [5]"அம்பலூரு மவனொடு மொழிமே" எனவும்; இவை முற்றாய் உயிரும் உயிர்மெய்யுங்

1. சீவக. அசஅ. 2. யா. வி: மேற்கோள்.
3. புறநா. உச. 4. புறநா. உகஙு. 5. குறுந். ருக.

கெட்டன. செய்யும் என்னும் முற்றென்றேனுஞ் செய்யும் என்னும் ஏவல் முற்றென்றேனும் விதவாது பொதுமையின் முற்றேல் என்றமையின், [1]"மாமறை மாக்கள் வருகுவங் கேண்மோ," [2]"முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ," எனக் கேளும் உரையும் என்னும் ஏவல் முற்றும் இவ்வாறு உயிரும் உயிர்மெய்யுங் கெட்டுவருதல் கொள்க.

இவை இங்ஙனமாதலிற் 'சொற்சூறு மிற்றிதன் பெற்றி' என்னுஞ் சூத்திரத்தானே ஆடுவாமோ என்னுந் தன்மைப்பன்மை முற்று [3]"பொன்னூச லாடாமோ' என எதிர்கால இடைநிலை கெட்டு வருதலும் பிறவுங் கொள்க. (உஉ)

## ௩. வினையெச்சம்

### வினையெச்சம் இனையவென்பது

கூசஉ. தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையேச் சம்மே.

எ - னின். வினையெச்சமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பின்னர்ச் செய்து செய்பு முதலியவாய் விதந்து கூறும் வாய்பாடுகளின்கண், தொழிலும் இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலங்களும் முறையே தோன்றி, வினைமுற்றுதற்குவேண்டும் பாலொன்றுந் தோன்றாது, அப் பாலுடனே வினையொழிய நிற்பன வினையெச்ச வினை வினைக்குறிப்புக்களாம் எ - று.

வினையெனப் பொதுப்படக் கூறினமையின், வினை வினைக் குறிப்பின் விகற்பங்களும் அவ்வினையாலணையும் பெயருந் தொழிற் பெயருங்கொள்க.

வ - று: அறமன்றி, அறமல்லாமல், அருளின்றி: செய்தான் செய்யான் செய்த செய்து செய்தவன் செய்தல் இலன் இல்லாத இல்லாது இன்மை இல்லாமை என வரும். செய்தான் என்னுந் தெரிநிலை வினைக்கண் செய்தல் என்னுந் தெரிநிலைத் தொழிற் பெயர்போல இலன் என்னுங் குறிப்பு வினைக்கண் இன்மை இல்

---

1. மணி. கங : கங.    2. மணி. கஉ : ருக.
3. திருவாசகம், திருப்பொன்னூசல், க.

லாமை என்பன குறிப்புத் தொழிற்பெயராய் நிற்றலின், அறமன்றி யின்மை அறமன்றியில்லாமை [1]"நீயலாற் பிறிது மற்றின்மை' என முடிந்து நின்றன. பிறவும் அன்ன. தெரிநிலை வினையெச்சங் கட்கு உதாரணம் வருஞ் சூத்திரங்களான் உணர்க.

"காலமும் வினையுந் தோன்றிப்பா லொன்றுது
வினைகொள் ளுமது வினையெச் சம்மே."

என்பது அகத்தியம். (௨௩)

## வினையெச்ச வாய்பாடுகள்

௩௪௩. செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினைஎச் சம்பிற
ஐந்தொன் றுறுமுக் காலமும் முறைதரும்.

எ - னின். மேல் 'தொழிலும் காலமும் தோன்றி' என்ற வினையெச்ச வாய்பாடுகள் இவையென வதந்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்து என்பது முதலிய ஒன்பது வாய் பாட்டான் வருவனவும், வான் பான் பாக்கு என்னும் மூன்று விகுதியவாய் வருவனவும், இவைபோல்வன பிறவும், வினையெச்ச வினைகளாம். இவற்றுள், முன்னைய ஐந்தும் இறந்தகாலமும், செய என்பதொன்று நிகழ்கால மும், ஒழிந்த ஆறும் எதிர்காலமுங் காட்டுவனவாம் எ-று.

இவற்றுள் செய்து என்பது இடைநிலையானும், ஏனைய இறுதி நிலையானுங் காலம் காட்டின.

வான் பான் பாக்கு என்பன, அவ்வவ்வெச்ச விகுதியவாகிய மொழிகளை உணர்த்தி நின்ற குறிப்புச்சொல்.

இன என்றமையால் [2]'அற்றா லளவறிந் துண்க;' [3]'ஒலித் தக்கா லென்னு முவரி;' 'காண்டலு மிதுவே சொல்லும்' எனச் செயின் என்னும் வாய்பாடுபோல் எதிர்காலங் காட்டுவனவும் [4]"கூறுமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி,' [5]'கூறுமை

1. திருவாசகம், கோயிற்றிருப்பதிகம், எ.
2. திருக்குறள், ௯௪௩.
3. திருக்குறள், எ௬௩.
4. கலி : கடவுள்
5. " எ௦௧.

நோக்குக் குறிப்பறிவான், [1]'ஈத லியையாக் கடை' என எதிர் மறை விகற்பங்களாய் வருவனவும், இத்தொடக்கத்துக் குறைச் சொல்லால் வினையெஞ்ச நிற்பன வெல்லாமுங்கொள்க.

ஒலித்தக்கால் என்புழிக் ககரவொற்று இடையே மிக்க மையிற் கால் என்பது பெயரெச்சங்கொண்ட பெயரன்று வினை யெச்சவிகுதியென்பது பொருந்தும்.

'ஈத லியையாக் கடை' என்புழிக் [2]கடை என்பது எதிர் மறைப் பெயரெச்சங் கொண்ட இடப்பெயரென்றால் என்னை யெனின்:—அதனகத்து இடப்பொருளின்றி ஈதலியையாதாயின் என்னும் பொருள் தந்து நிற்றலின், வினையெச்ச விகுதியேயா மென்க. பிறவும் அன்ன.

பிற என்றமையானே, செய்து என்னும் வாய்பாட்டெச்சங் களும் இடைநிலையின்றி ஆடிக்கொண்டான் தழீஇக்கொண்டான் என இறுதிநிலை தன்னியல்பினின்றும் விகாரமாயும் புக்குநின்றான் என முதனிலை விகாரமாயுங் காலங்காட்டுவனவுளவெனவும், செய என்னும் வாய்பாட்டெச்சம் எதிர்காலத்திற்கும் உரித்தென வும், இவ்வெச்சங்கட்கு விதந்து கூறாதனவெல்லாம் அமைத்துக் கொள்க. (உச)

## வினையெச்சங்களுக்கு முடிபு வேறுபாடு

௩௪௪. அவற்றுள்,

முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்
வினைமுதல் கோள்ளும் பிறவும்ஏற் கும்பிற.

எ - னின். இவ்வெச்சங்கட்காவதோர் விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேலைச்சூத்திரத்து முதற்கண்கூறிய செய்து செய்பு செய்யா செய்யூ என்னும் நான்கும் இறுதிக்கண் கூறிய வான் பான் பாக்கு என்னும் மூன்றும் வினைமுதலைக் கொண்டு முடியும்; இடைநின்ற செய்தென செய செயின் செய்திய செய்யியர் என்னும் ஐந்தும் 'இன' என்றதனான் வருவனவும் வினையெச்சக்குறிப்புக்களும் வினைமுதலையும் அஃதல்லாத பிறவற்றையுங் கொண்டு முடியும் எ - று.

1. திருக்குறள், உ௩௦.
2. கால், கடை என்பன காலம் பற்றிய இடப்பொருளுருபு என்பர் மயிலைநாதர்.

இடையின் ஐந்துமென்னாது பிறவென்றார் 'இன' என்றதனான் வருவனவும் வினையெச்சக் குறிப்புக்களுந் தழீஇக்கோடற்கென்க.

வ-று: நடந்து வந்தான் [1]'வாளொடு கனையிருள் வந்து தோன்றினான்,' [2]'எண்ணித் துணிக கருமம்,' [3]'பரீஇயுயிர் செகுக்கும்,' [4]'ஐவரொடு சினைஇ நிலந்தலைக் கொண்ட' எனவும்; [5]'புலராப் பசிலை யிடையிடுபு தொடுத்த,' [6]'தெரிபு தெரிபு குத்தின வேறு' எனவும்; [7]'கல்லாக் கழிப்பர் தலையாயர்,' [8]'நிலங் கிளையா நாணி நின்றோணிலை' எனவும்; [9]'படுமகன் கிடக்கை காணூஉ—வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே,' [10]'நிலம் புடையூ வெழுதரு வலம்படு குஞ்சரம்' எனவும்; [11]'கொல்வான் கொடித்தானை கொண்டெழுந்தான்' எனவும்; [12]'அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்' எனவும்; 'புணர்தரு செல்வந் தருபாக்குச் சென்றான்' எனவும்; முதலில் நான்கும் ஈற்றின் மூன்றும் வினைமுதல் கொண்டன.

[13]'காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக் கடுங்கண் யானைக் கோடுகொடுத் துண்ணும்' எனவும்; 'கோவாவாரம் வீழ்ந் தெனக் குளிர்கொண்டு பேஎநாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை' எனவும்: உண்ணவந்தான் [14]'கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்' எனவும்; 'மழைபெய்ய நெல் விளைந்தது,' [15]'மோப்பக் குழையுமனிச்ச முகந்திரிந்து—நோக்கக் குழையும் விருந்து' எனவும்; [16]'தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டிற், கௌவை யெடுக்குமிவ் வூர்' எனவும்; [17]'காணியவா நீவாழி தோழி' எனவும்; [18]'மாணிழை யரிவை காணிய வொருநாட் பூணகமாக நின் புனைவினை நெடுந்தேர்' எனவும்; [19]'பசலை யுணீஇயர் வேண்டும்' எனவும்; [20]'கொற்கைச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்

1. சீவக. ௩௨௦.
2. திருக்குறள், ௪௯௭.
3. நாலடி : ௨௨௦.
4. புறநா. ௨.
5. புறநா. ௩௩.
6. கலி. ௧௦௨
7. நாலடி : ௩௬௬.
8. அகநா : ௧௬.
9. புறநா. ௨௭௮.
10. பதிற். 'இலங்குதொடி'
11. பு. வெ. ௯௬.
12. நான்மணி. ௨௮.
13. குறுந். ௧௦௦
14. புறநா. ௭௦.
15. திருக்குறள், ௯௦.
16. திருக்குறள், ௧௧௫௦.
17. கலி : ௪௨.
18. பதிற். ௮௧.
19. குறுந். ௨௭.
20. நற். ௧௦.

பழையன்வேல் வாய்த்தன்ன' எனவும்; இடையினைத்தும் வினை முதலும் பிறவுங்கொண்டன.

உண்டாலுவக்கும் உண்டாற் பசிதீரும் [1]'விண்ணின்று பொய்ப்பின், [2]'விருந்தின்றி யுண்ட பகல்' என 'இன' என்றத னுன் வருவனவும் வினையெச்சக் குறிப்பும் வினைமுதலும் பிறவு மேற்றல் காண்க. நடந்து வந்தவன் வருதல், இடையிடுபு தொடுத் தவன் தொடுத்தல் எனவும்; கார்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித் தெனக் கடுங்கண் யானைக் கோடுகொடுத் துண்டவன் உண்டல், கோவாவாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு பேஎ நாறுவது நாறல், உண்ணவந்தவன் வருதல், மழைபெய்ய செல் விளைவது விளைதல் என வினையாலணையும் பெயருந் தொழிற்பெயரும் வருவித்து வினைமுதலும் வினைமுதலோடு பிறவுமேற்றல் காண்க. பிறவும் அன்ன.

[3]இச்சூத்திரத்துள் வினைமுதல் கொள்ளும் பிறவுமேற்கு மென்பதற்கு வினைமுதல் வினைகொள்ளும் பிறவினைகொள்ளும் எனப் பொருளுரைத்தால் என்னையெனின்:—அது பொருளாயின் வினைமுதல் வினைகொளும் பிறவினை கொள்ளுமெனக் கூறினும் யாப்பமையுமாதலின் அங்ஙனங் கூறல் வேண்டும். அவ்வாறு கூறாமையானும்; வினைகொண்டு முடியுமென இதற்குக் கூறினு ரெனின் முன்னர்க் கூறிய பெயரெச்சத்திற்கும் பெயர்கொண்டு முடியுமெனக் கூறல்வேண்டும், அவ்வாறு கூறாமையானும்; பொதுவியலுள் 'பெயர் வினையும்மை' என்னுஞ் சூத்திரத்தானே முற்றாது குறைந்து நின்ற இப்பெயரெச்ச வினையெச்சங்கள் முதலியவாக இவ்வதிகாரத்துள் விதந்தும் விதவாதும் பரந்து கிடந்த எச்சங்களையெல்லாம் எடுத்து ஒன்பதும் ஒன்றும் எனத் தொகை தந்து தத்தம் எச்சங்கொள்ளுமெனக் கூறுதலானும், இங்ஙனம் வினைமுதற் பொருண்மையினையும் அஃதொழிந்த பிறபொருண்மையினையுங் கொள்ளுமெனக் கூறலே நூலாசிரியர் கருத்தென்க. அங்ஙனமாயின், இவ்விருவகை யெச்சங்களும் பெயரினையும் வினையினையுங்கொண்டு முடிந்து நிற்க உதாரணங் காட்டியது என்னையெனின்:—பெயரெச்சம் பெயரெஞ்ச நிற்ற லும் வினையெச்சம் வினையெஞ்ச நிற்றலும் வினைமுதல் கோடலும் பிற கோடலுந் தோன்றுதற் பொருட்டன்றிப் பெயரினையும் வினையினையுங் கொண்டுமுடிதல் தோன்றுதற் பொருட்டன் றென்க.

---

1. திருக்குறள், ௧௩. 2. திரி. ௪௪.

3. இங்கே மறுக்கப்படுபவர்கள் மயிலைநாதரும், இலக்கண விளக்க உரையாசிரியரும்.

இவ்வினையெச்சங்கள், நடந்து வந்தான், மழை பெய்ய நெல் விளைந்தது எனக் காரணப்பொருட்டாயும், நெல் விளைய மழை பெய்தது எனக் காரியப்பொருட்டாயும், உண்ண வந்தான் எனக் காரண காரியம் என்னும் இருபொருட்டாயும், [1]"வண்கமல முகங் காட்டச் கருநெய்தல் கண்காட்டும்' எனக் காரண காரியம் இரண்டுமின்றியும், உழுது பயன் கொண்டான் வேந்தன் எனத் தலைமைபற்றியும், உழுது பயன் கொண்டான் வறியன் என அஃதின்மை பற்றியும், வருதல் காண்க. (௨௫)

வினை முதல் கொள்ளுமென்றவற்றிற்கு ஒரு புறனடை

௩௪௫. சினைவினை சினையொடு முதலொடும் செறியும்.

எ - னின். மேல் 'வினைமுதல் கோள்ளும்' என்றவற்றிற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) 'முதலி னன்கு மீற்றின் மூன்றும்' என்ற வினையெச்சங்கள் சினைவினையாயின் அவை 'வினைமுதல் கொள்ளும்' என்ற விதியானே சினையொடு முடிதலேயன்றி முதலுடனும் முடியும், அங்ஙனம் முடியுமாயினும், சினையொடு முதற்கு ஒற்றுமையுண்மையின் வினைமுதல் கொண்டதேயாம் எ - று.

வ - று: காலிற்று வீழ்ந்தான், காலிறுபு வீழ்ந்தான், காலிறு வீழ்ந்தான், காலிறூஉ வீழ்ந்தான் எனவும்; கண் வருவான் கதிரவற்றொழுதார், கண்டழைப்பான் கதிரவற்றொழுதார், கண் வருபாக்குக் கதிரவற்றொழுதார் எனவும்; மாடு காலிற்று வீழ்ந்தது எனவும் வரும். பிறவும் அன்ன.

காலிற்று வீழ்ந்தான் என்புழி வீழ்தற்கு வினைமுதல் முதற் பொருளாம். அஃதன்றிச் சினைப்பொருளாயிற் கண்விழித்துப் பார்த்தான், செல்வமிக்குயர்ந்தான், கண் பெரியன், நாடு பெரியன், செல்வம் பெரியன் என்றாற்போல 'உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்' என்னுஞ் சூத்திரத்தான் அமைவதா மென்க. பிறவும் அன்ன. (௨௬)

௩௪௬. சொல்திரி யினும்பொருள் திரியா வினைக்குறை.

எ - னின். இதுவும் அது.

---

1. திருஞானசம், தேவாரப் பதிகம், ௧௨௧ : ௧.

(இ - ள்.) 'முதலினைன்கு மீற்றின் மூன்றும் வினை முதல் கொள்ளும்' என்ற வினையெச்ச வாய்பாடுகளாகப் பிறவினையெச்ச வாய்பாடுகள் திரியினும், அவற்றின் பொருள் திரியா எ - று.

வ - று: ஞாயிறுபட்டு வந்தான், கோழி கூவிப் பொழுது புலர்ந்தது, [1]"உரற்கா லியானை யொடித்துண் டெஞ்சிய, யாஅவரி நிழற்றுஞ்சும்.'

[2]"செங்கா யேற்றைக் கேழ ருக்கி
இரியற் பிணவ றீண்டலிற் பரீஇச
செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின்."

எனவும்; யான் கொள்வான் பொன்கொடுத்தார் எனவும் வரும். பிறவும் அன்ன. இவை, செயவெனெச்சஞ் செய்து செய்வான் எனத் திரிந்து நின்றும், அச்செயவெனெச்ச முடிபேற்று நின்றன. எனவே, ஞாயிறுபட்டு வந்தான் என்பதற்கு ஞாயிறுபட வந்தான் எனப் பொருளுரைக்க வேண்டுமென்பதாயிற்று. பிறவும் அன்ன.

வினைக்குறை எனப் பொதுப்படக் கூறினமையான், வினை யெச்சங்களுள் ஒன்று ஒன்றாய்த் திரிந்து வருவன பிறவுமுள வேல், அவையுங் கொள்க. (உஎ)

---

## ரு. ஒழிபு

### வினைக்குறிப்பு

**௩௪எ. ஆக்க வினைக்குறிப் பாக்கம்இன் றியலா.**

**எ - னின். வினைக்குறிப்பிற்கு ஆவதோரு விதிஉணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) ஆக்கத்தால் வரும் வினைக்குறிப்புச் சொற் கள் ஆக்கச்சொல்லின்றி வாரா எ - று.

வேற்றுமைப் புணர்ச்சிக்கு வேற்றுமையுருபுகள் விரிந்துந் தொக்கும் அதன் உடைமையாய் நின்றாற்போல, ஆக்கவினைக்

---

1. குறுந்தொகை: உ௩உ.
2. அகநானூறு: உக.

குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்துந் தொக்கும் அதன் உடைமை யாய் நிற்றலின், ஆக்கமின்று இயலாவென்றார்

வ - று : சாத்தனல்லனாயினான், சாத்தனல்லன், கல்வியாற் பெரியனாயினான், கல்வியாற் பெரியன், கற்று வல்லராயினார், கற்று வல்லர், [1]"குருதி படிந்துண்ட காகமுரு விழந்து குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்ண.' என ஆக்கச்சொல் விரிந்துந் தொக்கும் வந்தன.

எனவே நல்லன் என்பது இயற்கைவினைக்குறிப்பாயின் விரிதல் தொகல் என்னும் இரண்டனுள் ஒருவாற்றானும் ஆக்கம் வேண்டாது சாத்தன் நல்லனென்றே வருமென்பதாயிற்று. இங்ஙனமாகவே, வினைக்குறிப்பு ஆக்கவினைக்குறிப்பென்றும் இயற்கைவினைக்குறிப்பென்றும் இருவகைப்படுமெனவும் அவை இவ்வாறு நடக்குமெனவுங் கூறினாராயிற்று. வினையாயினும் ஆக்கத்தை நோக்கி இயற்கையெனப்பட்டது.

இச்சூத்திரத்திற்கு வினையெச்சங் கொண்டுமுடியும் ஆக்க வினைக்குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்தே வருமென்றுந் தொக்கு வருவன செய்யுள்விகாரமென்றும் பொருள் [2]கூறுவாருமுளர் வினையெச்சங்கொண்டு முடியும் ஆக்கவினைக் குறிப்பென விதவா மையானும், ஆக்கவினைக்குறிப்பென்ற துணையானே வினை யெச்சங் கொண்டுமுடியும் வினைக்குறிப்பென்பது தாமே போதரு மெனிற் கல்வியாற்பெரியன் எனப் பிறவழியும் ஆக்கவினைக் குறிப்பு வருதலானும், அஃது யாண்டு வரினும் ஆக்கச்சொல் விரிந்தேனுந் தொக்கேனும் வேண்டியே நிற்றலானும், இவர் கற்று வல்லர் என வழக்கின்கண்ணும் ஆக்கச்சொல் தொக்கு வருதலானும், 'காரண முதலா வாக்கம் பெற்றும்' என்னுஞ் சூத்திரம் மாறுகொளக் கூறலாய் முடியுமாதலானும், அது பொருந்தாதென்க. (௨௮)

செய்யுமென் முற்று

**௩௪௮. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்**
**செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே.**

**எ - ன். செய்யும் என்னேச்சந் திணைபாலிடங்கட்குப் பொதுவாமென விதித்தலின் அவ்வேச்சத்தானாகிய செய்யும்**

---

1. களவழி நாற்பது, ௫.

2 கூறுபவர் மயிலைநாதர், தொல்காப்பிய உரையாசிரியர் கள் பெரும்பாலும் இக்கொள்கையினரே; "வினையெஞ்சு கிள விக்கு" (தொல். எச்ச. ௩௬) என்னும் சூத்திர உரைகளைப் பார்க்க.

என்னும் முற்றும் அவ்வாறு பொதுவாமெனப் போந்தவற்றுட் சிலபாலிடங்களிற் செல்லாது இம்முற்றேன விலக்குதலின் எய்திய தோருமருங்கு மறுத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயர்திணைப் பன்மைப் படர்க்கையினும் முன்னிலையினுந் தன்மையினுஞ் செல்லாது செய்யும் என்னும் எச்சத்தானுகுஞ் செய்யும் என்னும் முற்று எ - று.

'பல்லோ ரொழிந்த படர்க்கைக் குரித்துச், செய்யு மென்னத் தெரித்திடு முற்றே' எனச் சூத்திரஞ் செய்யாது எய்தியதொரு மருங்கு மறுத்தல் தோன்றப் பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையிற் செல்லாது என்றும், ஏனை முற்றுக்கள்போல் தன்னியல்பில் நில்லாது எச்சத்தானுயது இம்முற்றென்பது தோன்ற ஆகுஞ் செய்யுமென்முற்று என்றுங் கூறினர்.

இப் பாலிடங்களை விலக்கவே ஒழிந்த படர்க்கை ஈற்பாலினுஞ் செல்லுமென்பது பெற்றும்.

வ - று: அவன் உண்ணும் அவள் உண்ணும் அது உண்ணும் அவை உண்ணும் என வரும். (௨௧)

௩௪௧. யார்என் வினுவினைக் குறிப்புயர் முப்பால்.

எ - னின். திணைப்பொதுவன்றிப் பாற்பொதுவினையா மாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினுப்பொருண்மையைத் தரும் யார் என்னும் வினைக்குறிப்புமுற்று உயர்திணைமுப்பாற்கும் பொது வினையாம் எ - று.

திணைப்பொதுமைக்கண் கூறிய பொதுவினை என்பதனை ஈண்டும் வருஞ் சூத்திரத்துந் தந்துரைத்துக்கொள்க.

வ - று: அவன் யார் அவள் யார் அவர் யார் என வரும்.

'ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்தெங்
கோதைகூட் டுண்ணிய தான்யார்மன்—போதெல்லாந்
தாதோடு தாழுந்தார்க் கச்சி வளநாடன்
றாதோடு வாராத வண்டு.'

என அஃறிணைக்கண் வருதலும், [1]'நானேரென் னுள்ளமார்' என யாரென்பது ஆரெனமரீஇவருதலும் புதியன புகுதலாமென்க. ()

௩௫0. எவன்என் வினவினைக் குறிப்பிழி இருபால்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) வினப்பொருண்மையைத் தரும் எவன் என்னும் வினைக்குறிப்புமுற்று அஃறிணையிருபாற்கும் பொதுவினையாம் எ - று.

வ - று: அஃது எவன் அவை எவன் என வரும்.

இஃது என் எனவும் என்னை எனவும் மரீஇ வருதல் புதியன புகுதலாம்.

உயர்முப்பால் என்றும் இழியிருபால் என்றும் விதந்தமையின், யார் என்றும், எவன் என்றும் ஈண்டுப்போந்த சொற்கள், பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய யாவர் என்னுஞ் சொல் யார் ஆர் என மரீஇய உயர்திணைப்பன்மைச் சொல்லும் இவ்வாறு பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய எவன் என்னும் உயர்திணையாண்பாற் சொல்லும் அல்லவென்பது பெற்றாம். (௩௧)

இருவகைமுற்றிற்கும் ஒரு புறனடை

௩௫௧. வினைமுற் றேவினை எச்சம் ஆகலும்
குறிப்புமுற் றீரெச்ச மாகலும் உளவே.

எ - னின். இருவகை முற்றிற்கும் ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினைமுற்றே வினையெச்சமாகி வருதலும் வினைக்குறிப்புமுற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம் எ - று.

ஏகாரத்தைப் பின்னுங் கூட்டுக.

குறைச்சொல்லாகாது பால் காட்டி நிற்றலின் முற்றே என்றும், வினையெச்சப்பயனிலையினையும் பெயரெச்சப்பயனிலையினையும் அவாவி நிற்றலின் எச்சம் என்றும், இவை சிறுபான்மைய வாகலின் ஆகலும் என்றும் கூறினர்.

---

1. திருவாசகம், திருக்கோத்தும்பி, உ.

வ - று : [1]'காணுன் கழிந்த வைகலுமுண்டென் ஞெருநாள்' [2]'மோயின ளுயிர்த்த காலே,' [3]'முகந்தனர் கொடுப்ப' [4]'விளிப்பது பயிலுங் குறும்பர் துந்துபியொடு,' [5]'எருவை நுண்டாது குடைவன வாடி,' [6]'பெயர்த்தனென் முயங்க யான்,' 'மக்களுளிரட்டையாய் மாறினம் பிறந்தியாம்' எனவும்; [7]'சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப,' [8]'கருங்கோட் டின்னியம் இயக்கினர் கழிமின்' எனவும் மூவிடத்தைம்பாலினும் வினைமுற்று வினையெச்சமாயின.

[9]'வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண்டு,' [10]'அளிநிலைபெறாஅ தமரிய முகத்தள் விளிநிலை கொள்ளாள்,' [11]'உசிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து,' [12]'விழுமிது கழிவ தாயினும்,' [13]'நிலமிசைப் புரளுங் கையவெய் துயிர்த்து' எனவும்; [14]'துணையினெஞ்சினேன் றுயருழந் தினையேன்,' [15]'நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சி' எனவும்; [16]'நீர்வார்கண்ணை நீயிவணொழிய,' [17]'வெள்வேல் வலத்தினிர் பொருடரல் வேட்கையி னுள்ளினிர்' எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைக்குறிப்பு முற்று வினையெச்சக்குறிப்பாயின.

[18]'வெந்திறலின் விறல் வழுதியொடு' 'அஞ்சாயல ளாயிழை முன்,' [19]'கடற்றுனையர் கழல்வேந்தரை' [20]'பெருவரை மிசையது நெடுவெள் ளருவி,' [21]'புன்று ளோமைய சுரனிறந் தோரே' எனவும்; 'பெருவேட்கையேனெற்பிரிந்து' 'கண்புரை காதலே மெம்முள்ளான்,' எனவும்; 'உலங்கொடோ ளினையொரு கின்னல்,' 'வினை வேட்கையிர் வீரர் வம்மின்' எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைக்குறிப்புமுற்றுப் பெயரெச்சக்குறிப்பாயின. இவற்றுள் வரும் பெயர்க்கண் முற்றுப்பயனிலையாகாது பெயரெச்சப்பயனிலையாமாறு காண்க.

இனி வினைமுற்றுக்கள் சொல்திரியினும் பொருள்திரியா வினையெச்சமாய் வருமாறு:

[22]'விண்ணிற் றூவிட்டான் வந்து வீழ்ந்தன,'

---

1. கலி. ௩௭. 2. அகநா. ௫. 3. புறநா. ௩௩.
4. மலைபடு. ௭. 5. குறுந். ௪௬. 6. குறுந். ௮௪.
7. பழைய செய்யுள். 8. பெரும்பாண். ௩௯௨.
9. அகநா. ௪௮. 10. அகநா. ௫. 11. முருகு. ௧௮௫
12. குறுந். உ௫௩. 13. புறநா. ௪௪.
14. இ வி. மேற்கோள் 15. புறநா. ௧0௩.
16. குறுந். ௨௨. 17. கலி. ௪. 18. இ. வி. மேற்.
19. இ. வி மேற். 20. குறுந். ௭௮. 21. குறுந். ௨௬0.
22. சீவகசிந்தாமணி, ௮௯௪.

[1] 'பாயு மாரிபோற் பகழி சிந்தினு
ராயர் மத்தெறி தயிரி னுயிஞர்,'

[2] 'கானவ ரிரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடு
மானிரை பெயர்ந்த தாய ரார்த்தன ரணிந்த திண்டோ
டாஞென்று முடங்கிற் றொன்று நிமிர்ந்தது சரம்பெய் மாரி
போனின்ற தென்ப மற்றப் பொருவருஞ் சிலையி னூற்கே,'

[3] 'செய்யோன் செழும்பொற் சரஞ்சென்றது சென்ற தாவி.'

என வரும். பிறவும் அன்ன.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இனி எண்ணின்கணின்ற எதிரது தழீஇய எச்சவும்மையானே, உண்டான் சாத்தன் ஊர்க்குப் போனான் என்புழி உண்ட சாத்தன் ஊர்க்குப் போனான் எனப் பொருள்படுதலின் வினைமுற்று பெயரெச்சமாதலும் உளவெனவும், வெறுத்த ஞானி வீட்டை யடைந்தான், சாத்தனுழுது வந்தான் என்புழி வெறுத்தான் ஞானி, சாத்தனுழுதான் எனப் பொருள்பட்டு ஈரெச்சமுற்றாதல் உளவெனவும், [4]'பெறுவது கொள்வாருங் கள்வரு நேர்' என்புழி நேர் நேர்வர் என முதனிலைத் தனி வினையும் வினைமுற்றாதல் உளவெனவும், 'வரிப்புனை பந்து,' 'அறுவேறு வகையின்,' [5]'செய்தக்க வல்ல செயக்கெடும்,' [6]'மண்மாண் புனைபாவை யற்று' என்புழி[7] வரிந்து அற்று செய்ய மாட்சிமைப்பட என்று பொருள்பட்டு முதனிலைத் தனிவினைகள் வினையெச்சமாதல் உளவெனவுங் கொள்க. ()

**வினையியல் முற்றிற்று.**

---

1. சீவகசிந்தாமணி, ௪௨௧.
2. ,, ௪௫௨.
3. ,, ௨௩௨௨.
4. திருக்குறள், ௮௧௩.
5. ,, ௪௬௬.
6. ,, ௪௦௭.
7. சாவ என் எச்சத்திறுதி குன்றுமெனத் தொல்காப்பியர் முதலாயினோர் எடுத்தோதிய உபலக்கணத்தான் செய்தக்க, மண்மாண் புனைபாவையற்று என வருவனவும் அதுவென்றும்; நுண்மாணுழைபுலம், வரிப்புனை பந்து என வருஞ் செய்து என் எச்சத்திறும் வினைத்தொகைகளாய்க் குன்றிய பெயரெச்சத்திறும் இவ்வாறேகொள்க என்றும்; இவை விவட்சாதீனம் என்றும் கூறுவர் பிரயோக விவேகநூலார் - திங்ஙுப்படலம் சூத். ௧௨.

# ௩. பொதுவியல்

பாற்பொதுமை நீங்குநெறி

௩௫௨. இருதிணை ஆண்பெணுள் ஒன்றனை ஒழிக்கும்
பெயரும் வினையும் குறிப்பி னானே.

எ - னின் முன் வந்த பெயர்க்கும் வினைக்கும், பின் வரும் இடைக்கும், உரிக்கும், பொதுவிலக்கணங்களைச் சிங்க நோக்காக இவ்வியலால் உணர்த்துவான் இடை நிறீஇக் கூறலின், இது பெயர்க்கும் வினைக்கும் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயர்திணை ஆண்பால் பெண்பால் என்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும், அஃறிணை ஆண்பால் பெண்பால் என்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும், அவ்விருபாலுள் ஒருபாலை ஒழிக்குங் குறிப்பினான் எ - று.

வ - று: ஆயிரமக்கள் தாவடி போயினார் என்புழி, மக்கள் என்னும் உயர்திணையிருபாற்கும் பொதுப்பெயரும் போயினார் என்னும் உயர்திணையிருபாற்கும் பொதுவினையுந் தாவடி என்னுங் குறிப்பினால் பெண்பாலை ஒழித்தன. பெருந்தேவி பொறை புயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுளர் என்புழி, மக்கள் என்னும் பொதுப்பெயரும் உளர் என்னும் பொதுவினைக்குறிப்பும் பொறை புயிர்த்தல் என்னுங் குறிப்பினான் உயர்திணை ஆண்பாலை ஒழித்தன. இப்பெற்றங்கள் உழவொழிந்தன என்புழிப், பெற்றங்கள் என்னும் அஃறிணை ஆண் பெண் இருபாற்கும் பொதுப்பெயரும் ஒழிந்தன என்னும் அஃறிணை ஆண் பெண் இருபாற்கும் பொது வினையும் உழவு என்னுங் குறிப்பினாற் பெண்பாலை ஒழித்தன. இப்பெற்றங்கள் பால் சொரிந்தன என்புழிப், பெற்றங்கள் என்னும் பொதுப்பெயருஞ் சொரிந்தன என்னும் பொதுவினையும் பால் என்னுங் குறிப்பினான் ஆண்பாலை ஒழித்தன. பிறவும் அன்ன. (க)

பெயர் வினையிடத்து ஈற்றயல் திரிதல்

௩௫௩. பெயர்வினை இடத்து ன ள ர ய ஈற்றயல்
ஆ ஓ ஆகலும் செய்யுளுள் உரித்தே.

எ - னின். பெயர்க்கும் வினைக்குஞ் செய்யுட்கண் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் னகார ளகார ரகார யகார ஈற்றயல்நின்ற விகுதிமுதல் ஆகாரம் ஓகாரமாதலுஞ் செய்யுளிடத்து உரித்தாம் எ - று.

வ - று:

[1]"வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலன சிலம்பே நல்லோர்
யார்கொ லளியர் தாமே."

[2]"பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்." எனவும்; [3]"படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்," [4]"நல்லோண் மன்ற நகூப்பெயர்ந் தோளே," [5]"சென்றோ ரன்பிலர் தோழி," [6]"வந்தோய் மன்ற தெண்கடற் சேர்ப்ப," எனவும்; பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் வந்தது.

வினையாலணையும் பெயர்க்கணன்றி வினைக்கண்ணும் ஒரோவழி ஆ ஓ ஆதலின், அதனையும் உடன்கூறினர்.

உம்மையை எதிர்மறை உம்மையாக்கி வில்லோன் வில்லான் என ஒன்றே ஆதலும் ஆகாமையும் இன்னும் அவ்வும்மையானே செக்கான் வண்ணான் என மற்றொன்று ஆகாமையும் அதனை ஆக்க வும்மையாக்கி [7]"பழமுதிர் சோலை மலைகிழ வோனே.' என ஆகாரமேயன்றி அகரமும் ஓகாரமாதலுங் கொள்க. (உ)

உருபும் வினையிறும் எதிர்மறையினுந் திரியாமை

௩௫௪. உருபும் வினையும் எதிர்மறுத் துரைப்பினுந்
திரியா தத்தமீற் றுருபின் என்ப.

எ - னின். வேற்றுமை உருபுகட்கும் வினைச்சொற்கட்கும் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எட்டுவேற்றுமை உருபுகளும் மூவகை வினைச்சொற்களும், எதிர்மறுத்துச் சொல்லுமிடத்தும்,

1. குறுந். எ. 2. புறநா. உ. 3. புறநா. ககச.
4. அகநா. உசகூ. 5. அகநா. ௩௩க.
6. அகநா. அ0. 7. திருமுருகு. ௩கஎ.

தத்தம் ஈற்றினின்றும் அவ்வவ்வுருபினின்றும் வேறுபடா என்று சொல்லுவர் புலவர் எ - று.

இன்னுருபை ஈற்றென்பதன் கண்ணுங் கூட்டி எதிர்நிரல் நிறையாகப் பொருள் கொள்க.

உருபின்கண் எதிர்மறுத்தல் அவற்றின் பயனிலைகளை எனக.

வ - று: சாத்தன் வாரான், குடத்தை வனையான், வாளா லெறியான், புல்லர்க்கு நல்கான், நிலையினிழியான், பொருளின தின்மை, தீயர்கட்சாரான், சாத்தா சாயல் எனவும்; நடவான், நடவாத, நடவாது எனவும் வரும்.

'சொற்றொறு மிற்றிதன்பெற்றி' என்னுஞ் சூத்திரத்தானே உண்மைக்கு மறையாகிய இன்மையென்னும் பெயர்க்கண்ணும் ஈறு திரியாமை காண்க.

நடத்தல், நடவாமை என்றற்றொடக்கத்தன ஈறு திரிந்தன வன்றோவெனின் :—அவை தொழிற்பெயராதலின் திரிந்தன வென்க. ஓடாக்குதிரை [1]ஆறுவறிவு என்றற் றொடக்கத்தன, ஓடாத ஆறுத என்பனவற்றைக குறைத்து வழங்கினவன்றி, ஈறு வேறுபட்டனவல்ல வென்க.

ஒரு வினை நிகழ்வழி அவ்வினைக்குக் கருத்தாவுஞ் செயப்படு பொருளும் முதலியவாகப் பெயர்ப்பொருளை வேற்றுமை செய்து நின்ற உருபுகள் அவ்வினை நிகழாவழியும் அவ்வாறு நிற்றலானும், வினைவிகுதிகளும் அவ்வினை நிகழ்வழி முற்றின்கண் கருத்தாவை யும் எச்சங்களிற் பெயரொழிலையும் வினையொழிலையுந் தந்து நின்றாற்போல வினை நிகழாவழியும் நிற்றலானும், இங்ஙனங் கூறப்பட்டதென்க. (௨)

உருபும் வினையும் அடுக்கி முடிதல்

௩௫௫. உருபுபல அடுக்கினும் வினைவே றடுக்கினும்
ஒருதம் எச்சம் ஈறுற முடியும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) வேற்றுமையுருபுகள் விரிந்துந் தொக்குந் தம்முள் விரவிப் பல அடுக்கிவரினும், வெவ்வேறு பல

---

1. "ஆறு வறிவி னவர்கட் கென் னுங்கொலென் னுதரவே."
யா. கா. அவை.

அடுக்கி வரினும், மூவகை வினைச்சொற்களும் தம்முள் விரவி அடுக்குந் தன்மையவன்றி வெவ்வேறு பல அடுக்கி வரினும், தத்தம் எச்சம் இறுதியில் ஒன்று வர அதனோடு அனைத்தும் முடிவனவாம் எ - று.

பல என்பதனை வேறு என்பதனோடுங் கூட்டுக.

இவ்விருவகையடுக்கும் படைபடை என்றாற்போல அடுக்கிய வல்லவென்பார் பலவடுக்கினுமென்றார்.

வினை வேறுபல வடுக்கினுமென விதந்தாற்போல உருபிற்கு விதவாமையின் அவை விரவியும் வெவ்வேறு பலவடுக்கும் என்பது பெற்றாம்.

வ - று: சாத்தன் யானையது கோட்டை நுனிக்கட் பொருட்கு வாளாற் குறைத்தான் என்பன உருபுகள் விரவிப் பல வடுக்கிக் குறைத்தான் என்னும் ஒருவினை கொண்டன. இவற்றுள் ஆறனுருபு அடுக்கன்று, வினை அதற்கு எச்சமன்றாதலானுங் கோடு என்னும் பெயர்கொண்டமையானுமென்க. சாத்தன் என்னும் பெயர்வேற்றுமை குறைத்தற்கு வினைமுதலைக் காட்ட வந்தது; அன்றி அடுக்கென்று கோடலுமொன்று. சாத்தனையுங் கொற்றனையுந் தேவனையும் பூதனையும் வாழ்த்தினான் எனவும்; சாத்தனுக்குங் கொற்றனுக்குந் தேவனுக்கும் பூதனுக்குந் தந்தை எனவும்; இரண்டாமுருபும் நான்காமுருபும் வேறு பலவடுக்கி வாழ்த்தினான் என்னும் ஒருவினையுந் தந்தை என்னும் ஒரு பெயரும் முறையே கொண்டன. வாள் கைக்கொண்டான் அருளறமுடையான் எனவும்; உருபு தொக்கு அவ்வாறு வந்தன. உண்டான் தின்றான் ஓடினான் பாடினான் சாத்தன்.

'வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்
பொருதி புலம்புதி நீயுங்—கருதுங்காற்
பண்டினையை யல்லையாற் பாழித்தோட் கோதையைக்
கண்டனையோ வாழி கடல்.'

எனவும், 'இளையண் மெல்லியண் மடந்தை' 'அரிய சேய பெருங் கான் யாறே' எனவும் வினைமுற்றுங் குறிப்புமுற்றும் பெயரெச்சங்களோடு விரவாது வேறுபல அடுக்கிச் சாத்தன், நீ, மடந்தை, யாறு என்னும் ஒரு பெயர் முறையே கொண்டன. கற்ற கேட்ட பெரியோர் எனவும்; சிறிய பெரிய நிகர்மலர்க்கோதை எனவும்; பெயரெச்சவினையுங் குறிப்பும் வினைவினைக்குறிப்பும் முற்றோடு விரவாது வேறுபல வடுக்கிப் பெரியோர், மலர்க்கோதை என்னும்

ஒருபெயர் முறையே கொண்டன. கற்றுக் கேட்டறிந்தார் எனவும்; விருப்பின்றி வெறுப்பின்றி யிருந்தார் எனவும்; வினையெச்ச வினையுங் குறிப்பும் வினையொடு முடியுமென விதந்த வினைமுற்றுக்களோடு விரவாது வேறுபல அடுக்கி அறிந்தார் இருந்தார் என்னும் ஒருவினை முறையே கொண்டன. பிறவும் அன்ன

"[1]சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே."

என்னும் வினையெச்சங்கள் கருவிருந் தீன்றென்பதன்றிக் கருவிருந்து தலைநிறுவியென முடியாதாகலான் அவற்றுள் ஒன்றற்கொன்று முடிபாய்த் தொடர்தலானும்,

"[2]நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குந ரல்லர் நெறிகொள."

என்னும் வினையெச்சக் குறிப்புக்கள் ஆங்காங்கு முடிதலானும் இவை [3]அடுக்காகாவென்க. (௬)

## இடைப் பிறவரல்

௩௫௬. உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்
பெயர்வினை இடைப்பிற வரலுமாம் ஏற்பன.

என் - னின். இதுவும் அது.

(இ - ள்.) வேற்றுமையுருபுகளும் முற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் கொண்டு முடியும் பெயர்க்கும் வினைக்கும் இடையே பிறசொற்கள் வருதலுமாம் ஆண்டைக்குப் பொருந்துவன எ - று.

பிற எனப் பன்மை கூறினாரேனும் 'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்பதனான் ஒருசொல் வருதலும் கொள்க.

உம்மை, உருபுமுற்றீரெச்சங்களும் அவை கொள்ளும் பெயர் வினையும் மாத்திரையாய் நிற்றலேயன்றி என இறந்தது தழீஇ நின்றது.

1. சீவகசிந்தாமணி, ௫௩. 2. புறம். ௧௨௪.
3. இவற்றை மயிலைநாதர் அடுக்கென்பர்.

வ - று: சாத்தன் வயிறுர உண்டான்; அறத்தை அழகு பெருகச் செய்தான; வாளான் மருவாரை மாய வெட்டினன்; [இதனுள் மாய என்ப தொன்றமே இடை வந்தது, [1]மருவாரை யென்பது அற்றன்று, இவ்விரண்டனுருபும் வாளால் என்னும் மூன்றனுருபும் அடுக்காய் நிற்றலின்.] தேவர்க்குச் செல்வம் வேண்டிச் சிறப்பெடுத்தான், மலையினின்று உருண்டு வீழ்ந்தான், சாத்தனது இத்தடக்கை யானை. ஊர்க்கண் உயர் [illegible] மாடம், சாத்தா விரைந்தோடி வா எனவும்; வந்தானவ்வூர்க்குப் போன சாத்தன், வந்தவவ்வூர்ச்சாத்தன், வந்து சாத்தன் இற்றை நான் அவனூர்க்குப் போயினன் எனவும், வரும். குறிப்புவினை [illegible]

'கருதலர்ச சிறிய கடுங்கொல் யானை' என்புழிச், சிறிய என்னும் பெயரெச்சத்திற்கும் அது கொண்ட யானை என்னும் பெயர்க்கும் இடையே கொல் என்னும் வினைத்தொகைச்சொல் இடைப் பிறவரலாய் வந்ததன்று, வினைத்தொகை காலங் கரந்த பெயரெச்சமாதலாற் பெயரெச்ச வினை இரண்டடுக்கி யானை என்னும் ஒருபெயர் கொண்டனவாமென்க. இவ்வாறே அடுக்காய் வந்தனவும், இடைப்பிற வந்தனவும், உய்த்துணர்ந்து கொள்க.

இனி எற்பன என்றமையான் 'வல்ல மெறிந்த நல் விளங் [2]கோசர் தந்தை—மல்லல் யானைப் பெருவழுதி' என்புழி, வல்ல மெறிதல் பெருவழுதிமேற்றேயெனின், நல்விளங்கோசர் தந்தை யென்பதனை இடை நிறுவின் எலாதாம், வல்லமெறிதல் நல்விளங் கோசர் மேற்றாகப் பொருள்படுமாதலினென்க. (௫)

## முடிக்குஞ் சொல் நிற்குமிடம்

௩௫௭. எச்சப் பெயர்வினை எய்தும் ஈற்றினும்.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) உருபுகளும் முற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் கொண்டு முடியும் எச்சமாகிய பெயரும் வினையும் அவற்றிற்கு ஈற்றினும் வரும் எ - று.

---

1 இங்ஙனங் கூறியது மயிலைநாதர் உரைநோக்கி; பிரயோக விவேக நூலுடையாரும் இதனை இடைப்பிறவரல் என்பர்; ௧௧-ஆம் கவித்துறை உரை. இ. வி. உரைகாரரும் இவ்வாறே காட்டியுள்ளார்; ௬ ௩௨௧. உரை.

2. கோசர்: ஒருவகை வீரர்; "இளம்பல் கோசர் விளங்கு படை கன்மார்." (புறநா. ௧௬௯.)

ஈற்றினும் என்னும் உம்மையான் முதலினும் வருதல் கொள்க.

வ - று: சாத்தன் வந்தான், மரத்தைக்குறைத்தான், சாத்தனுல் வந்தான், சாத்தற்குக் கொடுத்தான், சாத்தனின் நீங்கினன், சாத்தனது ஆடை, சாத்தன்கட்சென்ருன், சாத்தா வா எனவும்; வந்தான் சாத்தான், வந்த சாத்தன், வந்து போயினன் எனவும்; இறுதிக்கண் வந்தன வந்தான் சாத்தன், குறைத்தான் மரத்தை, வந்தான் சாத்தனுல், கொடுத்தான் சாத்தற்கு, நீங்கினன் சாத்தனின், சென்ருன் சாத்தன்கண், வா சாத்தா எனவும்; சாத்தன் வந்தான், போயினன் வந்து எனவும் முதற்கண் வந்தன.

எய்துமீற்றின் என்ருற்போல முதற்கண் வருதலை எடுத்தோதாது உம்மையாற் றழீஇக் கொண்டார், ஆறனுருபின் எச்சமும் எழனுருபின் எச்சப்பெயரும் பெயரெச்சத்தின் எச்சமும் முதற்கண் வாரா என்பதூஉம், ஏனைய வரினும் இறுதிக்கண் வருதல்போற் சிறப்பினவல்ல என்பதூஉந் தோன்றுதற்கென்க.

எழுவாயுருபு வினைமுற்றுப் பயனிலையை இறுதிக்கண் கொண்டதூஉம், வினைமுற்றுப் பெயர்ப்பயனிலையை முதற்கண் கொண்டதூஉம், சாத்தன் வந்தான் என வரும். தம்முள் வேற்றுமை யாதோவெனின்:—கேட்போர்க்குச் சாத்தன் இது செய்தான் என வினையை உணர்த்துவதூஉம், இது செய்தான் சாத்தன் என வினைமுதலை உணர்த்துவதூஉம் ஆமென்க. வந்தான் சாத்தன் என வருவனவும் அன்ன. (௪)

## ஒருமொழி வேறென்றை யமைத்தல்

கூருஅ. ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குறித்தே.

எ - னின் நால்வகைச் சொற்கும் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று

மொழியெனப் பொதுப்படக்கூறினமையின், [1]நால்வகைச் சொற்கும் என்பது பெற்றும்.

(இ - ள்.) பெயர் வினை இடை உரி என்னும் நால்வகைச்சொற்களுள், ஒவ்வொன்று எஞ்சி நின்ற தன் தன் [illegible]னைக் கொள்ளுதற்கு உரித்தாம் எ - று.

1. பெயர்ச்சொல் வினைச்சொற்களை மட்டும் கொள்வர், மயிலைநாதர்.

வ - று: சோற்றை நனியுண்டான் என்றவழிக் கறியை நனிதின்றான் என்றற்றொடக்கத்தனவும், பாக்கை நனிதின்றான் என்றவழி வெற்றிலையை நனிதின்றான் சுண்ணம்பை நனிதின்றான் என்பனவும்; நஞ்சுண்டான் சாவான் என்றவழி நஞ்சுண்டாள் சாவாள், நஞ்சுண்டது சாம் என்பனவும்; பார்ப்பான் கள்ளுண்ணான் என்றவழிப் பார்ப்பனி கள்ளுண்ணாள் என்பனவுங் கூறுமேதை அமைந்து கிடத்தலின், இனங்களாய் எஞ்சி நின்றன. இவற்றுள், சோற்றை என்னும் பெயர்ச்சொல்லும் உருபிடைச் சொல்லும் கறியை என்னும் பெயர்ச்சொல்லையும் உருபிடைச் சொல்லையும், நனியுண்டான் என்னும் உரிச்சொல்லும் வினைச் சொல்லும் நனிதின்றான் என்னும் உரிச்சொல்லையும் வினைச் சொல்லையுங் கொள்ளுதற்கு, உரியவாய் நிற்றல் காண்க. பிறவும் அன்ன. (எ)

திணைபாலிடப் பொதுமை நீங்குநெறி

௩௫௧. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்
மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே.

எ - னின். பெயர் வினைகட்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) திணை பால் இடம் காலங்கட்குப் பொதுவாகிய பெயர் வினைகளினுடைய பொதுத்தன்மையினை நீக்கி, ஒன்றற்குரிமை செய்யும் மேல்வருஞ் சிறப்புப்பெயர் வினைகள் தாமே எ - று.

ஒன்றற்கு இருமருங்கினையும் மேல் என்பவாகலிற் சிறப்புப் பெயர் வினை யாண்டு வரினுங் கொள்க.

தாமே என்னும் பிரிநிலை ஏகாரம், குறிப்பானை உற றுணர்ந்து இடர்ப்படவேண்டாவென்னும் பொருடந்து நின்றது.

வ - று: சாத்தன இவன், சாத்தன் இது எனவும்; சாத்தன் வந்தான், சாத்தன் வந்தது எனவும்; பெயர்த்திணைப் பொதுமையினைச சிறப்புப்பெயரும் வினையும் வந்து நீக்கின. ஒருவர் என்னையர், ஒருவரென்றாயர் எனவும்; மரம் வளர்ந்தது, மரம் வளர்ந்தன எனவும்; பெயர்ப்பாற் பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. அவரெல்லாம் இருந்தார், யாமெல்லாம் வருவம், நீவிரெல்லாம் போமின் எனப் பெயரிடப் பொதுமையினைச் சிறப்புப்பெயரும், வினையும் வந்து நீக்கின. வாழ்க அவன், அவள், அவர், அது, அவை, யான், யாம் நீ, நீர் எனவும்; உண்டு வந்தான், வந்தாள், வந்தார், வந்தது, வந்தன,

வந்தேம், வந்தேம், வந்தாய், வந்தீர், வருகின்றான், வருவான் எனவும்: வினைத்திணைப்பால் இடக்காலப் பொதுமையினைச் சிறப்புப்பெயரும் வினையும் வந்து நீக்கின. பிறவும் அன்ன. உண்டு என்பது, இறந்தகால வினையெச்சமாயினும், முக்கால வினைகளையுங் கொண்டு முடிதற்குரிய பொதுமையினை உடைத்தாதலின் அதனை மேல்வருஞ் சிறப்புவினை நீக்கின. (அ)

## எச்சங்களின் முடிபு

௩௬௦. பெயர்வினை உம்மைசொற் பிரிப்பென ஒழியிசை
எதிர்மறை இசையெனுஞ் சொல்லொழிபொன்பதும்
குறிப்புந் தத்தம் எச்சங் கொள்ளும்.

எ - னின். நால்வகைச்சொற்கும் ஆவதோர் இலக்கணம் உணர்த்தும் வழிச் சிலவற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுஞ் சிலவற்றிற்கு எய்தாத தெய்துவித்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயரெச்சமும், வினையெச்சமும், உம்மையெச்சமும், சொல்லெச்சமும், பிரிநிலையெச்சமும், எனவெச்சமும், ஒழியிசையெச்சமும், எதிர்மறையெச்சமும், இசையெச்சமுமாகிய சொல்லெச்சம் ஒன்பதும், குறிப்பெச்சம் ஒன்றும், தத்தம் எச்சங்களைக் கொள்ளும் எ- று.

சொல்லொழிபு என்பதனை முற்கூறிய ஒன்பதனோடும், அதனுள் ஒழிபு என்பதனைப் பிற்கூறிய குறிப்பினோடுங் கூட்டுக. குறிப்புச் சொல்லொழிபு எனக் கூட்டியுரைத்தால் என்னை யெனின்:—அது பின்னர்க் கூறுதும். எனவே, எச்சங்கள் சொல்லெச்சம் குறிப்பெச்சம் என இருவகையவென்பதூஉம், சொல்லெச்சம் ஒன்பது எனத் தொகை கூறினார் வகையுள் ஒன்றனையுஞ் சொல்லெச்சம் என்றமையான், அவ்வகையுள் ஒன்றாகிய சொல்லெச்சம் என்பது சொல் விகற்பங்களின்றிச் சொல் என்னுஞ் சொல் எஞ்சி நிற்பதென்பதூஉம், பெற்றாம்.

> "சொல்லெ னெச்ச முன்னும் பின்னுஞ்
> சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே."[1]

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரென்க. இவ்வாசிரிய வசனத்திற்கு இப்பொருளன்றி வேறு பொருள் [2]கூறுவாருமுளர். அது கிடக்க.

---

1. தொல்காப்பியம், சொல், எச்சவியல்: ௬௫.
2. கூறுவார், சேனாவரையரும், நச்சினார்க்கினியரும்.

வ - று: செய்த சாத்தன், செய்கின்ற சாத்தன், செய்யும் சாத்தன் எனவும்; நல்ல சாத்தன் எனவும்; பெயரெச்சங்கள் தம்மெச்சமாகிய செய்பவனது பெயர்கொண்டன. வினைக் கருவி முதல் ஐந்தோடும் ஒட்டுக. வினைத்தொகைகளும் பெயரெச்சமாய் அடங்குதலின், அவையும் முற்றெச்சங்களும் அன்ன. செய்து வந்தான், செய்து நல்லனாயினான், செய்து நல்லன், செய்து வருதல் எனவும்; [1]"விருந்தின்றியுண்ட பகல்" எனவும்; வினையெச்சங்கள் தம் எச்சமாகிய வினை வினைக்குறிப்புத் தொழிற் பெயருங் கொண்டன. காட்டாதொழிந்த வினையெச்சங்களும் முற்றெச்சங்களும் அன்ன.

இவ்வெச்சத்திற்கு முடிபாகிய வினைக்குறிப்பு ஆக்கமொடு வருதலும் அது தொக வருதலும் 'ஆக்க வினைக்குறிப்பு' என்னுஞ் சூத்திரத்துள் அமைந்து கிடந்தன.

சாத்தனும் வந்தான் என்னும் உம்மையெச்சம் முன்னர்க் கொற்றன் வந்தான் எனத் தன்னெச்சம் கொண்டது.

> [2]'மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
> கடியென்றார் கற்றறிந் தார்.'
>
> [3]'இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
> வசையன்று'

என்பன சொல்லெச்சம். கடியென்று சொன்னார் இல்லென்று சொல்லுதல் எனச் சொல் என்னுந் தம் எச்சங் கொண்டன. இவை பெயரெச்சம் வினையெச்சமென்றாற்போலச் சொல் என்னும் எச்சத்தையுடைய இடைச்சொல்லைச் சொல்லெச்சம் என்றவின் ஆகுபெயர். மேல் வரும் எனவென் எச்சம் ஒழிந்தனவும் அன்ன.

சாத்தனே கொண்டான், சாத்தனோ கொண்டான் என்பன பிரிநிலையெச்சம். இவை பிறர் கொண்டிலரெனத் தம் எச்சங் கொண்டன. கோடற்றொழிலாற் சாத்தனினின்றும் பிரிக்கப் பட்டார் பிறராதலிற் பிரிநிலையென்க.

கடல் ஒல்லென ஒலித்தது; நரம்பு விண்ணென விசைத்தது; தலை இடியென இடித்தது என்பன எனவெச்சம். இவை தம் எச்சமாகிய வினை கொண்டன. மிகவும் ஒலித்தது மிகவும் இசைத்தது மிகவும் இடித்தது என்பன இவற்றிற்குப் பொருளாதலின், இவ்வெனவெச்சம் மிகுதிப்பொருள் தருவதோர் இடைச்சொல்லாமென்க.

---

1. திரிகடுகம், ௬௪. 2. நாலடியார், ௫௬.
3. நாலடியார், ௧௧௧.

"[1] தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.'

என்பதனுள் எனவென்பது, பெய்யெனச் சொல்ல என வினைப் பொருட்டருதலின், இடைச்சொல்லடியாகப் பிறந்த செய வென் னெச்சமாய் முன்னர்ப் போந்த வினையெச்சத்துள் அடங்குமென்க.

கூரியதோர் வாண்மன், "[2] வருகதில்லம்ம, கொளவோ கொண்டான் என்பன ஒழியிசையெச்சம். இவை முறையே கோடிற்று, வந்தால் இன்னது செய்வல், கொண்டுய்யப்போயின னல்லன் எனத் தம் எசசங்கொண்டன.

வாராமுரியன், யானோ செய்தேன் என்பன எதிர்மறை யெச்சம். இவை முறையானே வாராமைக்கு முரியன், யான் செய்திலன் எனத் தம் எச்சங்கொண்டன.

இதுகாறும் வினையியலின் ஒழிபாகிய பெயரெச்ச வினை யெச்ச முடிபும் இடையியலின் ஒழிபாகிய ஏனை அறுவகை எச்ச முடிபும் எடுத்து விதந்தார். இவ்வாறு எடுத்து விதத்தற்கு வரை யறைப்படாது வருஞ் சொல்லெச்சங்களையெல்லாந் தொகுத்து இசையெச்சமென இறுதிக்கண் கூறினர். இசை என்பது சொல். இசையெச்சமெனப் பொதுப்படக் கூறினமையின் இவ்வெச்சமும் இதுகொள்வதும் பெயர் வினை இடை உரி என்னும் நால்வகைச் சொல்லுள் ஒன்றும் பலவுந் தனித்துந் தொடர்ந்தும் வருமென் பது பெற்றும். அவற்றுட் சிலவிசையெச்சங்கள் வருமாறு:

"[3] இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று'

என்புழிப் பிற உயிர்க்கு இன்னா செயின் அவை பிழையாது தமக்கு வருதல் கருதித் தம்மாட்டு அன்பும், பிற உயிர்கண்மாட்டு அருளும், இன்னா செய்தலான் மேன்மேல் வளரும் பிறப் பிறப்பின் அச்சமும், நம்மால் இன்னாசெய்யப்பட்டாரை நாமடைந்து இரத்தல் கூடினுங் கூடும், அதனால் யார்மாட்டும் இன்னாசெயக்கடவமல்லமென்னும் வருங்கால உணர்ச்சியும் இலராய் ஒருவர் தன்னால் ஆற்றல்கூடாத இன்னாதனவற்றைத் தன்கண் செய்தாராயினும், அவர் தமக்கு வேண்டுவதொரு குறை முடித்தல் கருதி நாணாது தன்னை அடைந்தாராயின், அவர் செய்த இன்னாமை கருதி அவரை வெகுளாது அவற்றை மறந்து அவர் வேண்டுங் குறைமுடித்து முன்செய்த இன்னாமையால்

1. திருக்குறள். ௫௫. 2. அகநா. உஎக.
3. " , ௩0அ.

அவர் கூடியொழுகுதல் தவிர்தற்குக் காரணமாகிய மெய்ப்பாடு முதலியன தன்கண் குறிப்பின் நிகழ, அவர்க்கு இனியனாகி யிருத்தல், தன் சால்புக்கு நன்று என நால்வகைச்சொற்களுள் வேண்டுவனவெல்லாந் தந்து அகலங் கூறவேண்டி நிற்பன இசை யெச்சமாம் என்க. பிறவும் அன்ன.

இனிக் குறிப்பெச்சங்களாவன, ஒன்றொழி பொதுச்சொல் முதலிய குறிப்புச்சொற்களாம். குறிப்பான் உணரப்படுவன முறையே எஞ்சி நிற்றலின், அவை அவ்வெச்சங்கொள்ளுமாறு— பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுள் என்புழி மக்கள் என்னும் பொதுப்பெயர் பெண்மக்கள் எனப் பெண் என்னுஞ் சிறப்புப்பெயர் கொண்டது. 'குறுத்தாட் பூதம்' என்புழித் தகரவல்லொற்று அதற்கினமாகிய மெல்லொற்றையும் 'மரையிதழ் புரையும்' என்புழி மரை என்பது தா என்னும் முத லெழுத்தையுங் கொண்டன. வாய்பூசி வருதும் என்பது எச்சில் கழித்து வருதுமென்பது கொண்டது. புளிதின்றான் என்பது பழமாகிய புளி எனப் பழம் என்பது கொண்டது. பொற்றொடி என்பது பொற்றொடியையுடையாள் என இரண்டாமுருபும் அதன் பயனிலையுங் கொண்டது. நல்லனிவன் என்பது பெயர்ப் பொருள் கொள்ளாது வினைக்குறிப்புப் பொருளோடு நல்லனாயி னன் இவன் என ஆக்கங்கொண்டது. [1]'அறத்தா றிதுவென வென்னைக்கிழிப்பு' என்பது,

> "அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
> பொறுத்தானோ டூர்ந்தா னிடை'

என்பது கொண்டது. 'அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ' என்பது தருமன் வீமன் அருச்சுனன் நகுலன் சகாதேவன் என்பன கொண்டது.

> [2]"பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
> சால மிகுத்துப் பெயின்'

என்பதூஉம் உண்ணுகின்றான் கற்கறித்துழி, அட்டோன் முக நோக்கி நன்கட்டாய் என்பதூஉம், மெலியராயினும் பலர் தொகின் வலியரையும் வெல்வர் என்பதனையும், நன்கட்டாயல்லை என்பதனையும் முறையே கொண்டன. பிறவும் அன்ன.

இவை ஒன்றொழிபொதுச்சொல் முதலிய குறிப்பெச்சங்கள் தம் எச்சங் கொண்டன. இதனைக் குறிப்புச்சொல்லெச்சம்

1. யாப்பருங்கலக் காரிகை, உறுப்பியல், கு௬.
2. திருக்குறள், ௩௭. 3. திருக்குறள், ௪௭௫.

என்னாது குறிப்பெச்சம் என்றார், சொல்லையன்றிப் பொருள் மாத்திரையும் எழுத்தும் எஞ்ச வருவனவும் உளவாதலின் என்க.

இப் பத்தெச்சங்கட்கும் வேறு பொருள் [1]கூறுவாருமுளர். அவையெல்லாம் இசையெச்சமாயுங் குறிப்பெச்சமாயும் அடங்கு மாதலானும் பெயரெச்ச வினையெச்ச முதலியவற்றிற்கு ஆங்காங்கு முடிபு கூறாராயினர் ஈண்டு எச்சங்களையெல்லாந் தொகுத்துக் கூறும்வழி முடிபு கூறாராயிற் குன்றக்கூறல் என்னுங் குற்றமா மாதலானும் அது பொருந்தா தென்க. (௬)

## ௬. தொகைநிலைத் தொடர்மொழி

தொகைநிலைத் தொடர்மொழி இனையவென்பது

௩௬௧. பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றின் உருபிடை
ஒழிய இரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோல் நடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொல்.

எ - னின். பெயர்க்கும் வினைக்கும் ஆவதோரு விதி உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர்ச்சொல்லோடு பெயர்ச்சொல்லும் பெயர்ச்சொல்லோடு வினைச்சொல்லும் 'வேற்றுமை வினை பண்பு' எனப் பின்னர் வகுத்துக் கூறும் அறுவகைப் பொருட்புணர்ச்சிக்கண் அவற்றின் உருபுகள் இடையே தொக்கு நிற்ப இரண்டு முதலிய பல சொற்கள் தொடர்ந்து ஒருமொழிபோல் நடப்பன யாவை, அவை தொகை நிலைத் தொடர்ச்சொற்களாம் எ - று.

தொகை என்னும் பலபொருளொருசொல் ஈண்டு உருபு மறைதலை உணர்த்தி நின்றது,

---

1. அவிநய உரையாசிரியராகிய இராசபவித்திரப் பல்லவ தரையர் என்பார், இதற்கு வேறுபொருள் கூறுவதை மயிலை நாதர் உரையால் அறியலாகும். தொல்காப்பிய உரையாசிரியர்கள் ஈண்டுள்ளனவற்றுட் சில உதாரணங்களை வேறாகக் காட்டி புள்ளார்கள்.

[1]" ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா இறுதி யான "

என்பவாகலின்.

வினையொடு வினை தொகைநிலைத் தொடராகாமையின் அதனை ஒழித்தும் நிலத்தைக் கடந்தான் நிலங்கடந்தான் என உருபிடை விரியிற் பிளவுபட்டுந் தொக்கதேற் பிளவுபடாதுந் தொடருமா தலின் ஒருமொழிபோலென்றுங் கூறினார்.

ஒருமொழிபோல் நடத்தலாவது கொல்யானை வந்தது, நிலங் கடந்தான் சாத்தன் என இரண்டு முதலிய பலசொல் தொடர்ந்து ஒருபெயராயும் வினையாயும் நின்று தம்முடிபேற்றலெனப் [2]பொருள் கூறின் :—அவ்வாறு தொகாநிலைத்தொடரும் கொன்ற யானை வந்தது, நிலத்தைக் கடந்தான் சாத்தன் என நடக்குமாதலின், அது பொருந்தாதென்க. (௩௦)

தொகைநிலைத்தொடர்ப் பாகுபாடு

௩௬௨. வேற்றுமை வினைபண் புவமை உம்மை
அன்மொழி எனஅத் தொகை ஆறாகும்.

எ - னின். மேல் 'வேற்றுமை முதலிய' என்றார், அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் உவமைத்தொகையும் உம்மைத்தொகையும் அன்மொழித்தொகையுமென மேற்கூறிய தொகைநிலைத் தொடர்ச்சொல் அறுவகைப்படும் எ - று.

வேற்றுமைத்தொகை

௩௬௩. இரண்டு முதலா இடையா றுருபும்
வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகையே.

எ - னின். நிறுத்த முறையானே வேற்றுமைத்தொகையா மாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுவாய்க்கும் விளிக்கும் இடையே நின்ற இரண்டாவது முதலிய ஆறு வேற்றுமையுருபுந் தொக்க தொடர்ச்சொற்கள் வேற்றுமைத்தொகைகளாம் எ - று.

---

1. தொல். வேற்றுமை மயங்கியல், ௨௨.
2. இங்ஙனம் பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

வேற்றுமைப்பொருள் புணர்ச்சிக்கண் பெயரோடு பெயரும் வினையுங் கூடிய கூட்டத்தை வேற்றுமைத்தொகை என்றதன் றென்பார் ஆறுருபும் வெளிப்படலில்லதென்றார். வினைத்தொகைகளும் அன்ன.

வ - று : நிலங்கடந்தான் தலைவணங்கினான் சாத்தன்மகன் ஊர் நீங்கினான் சாத்தன்கை [1]குன்றக்கூகை யானைக்கோட்டு நுனிகுறைத்தான் என ஆறுருபும் இடையே தொக்கவாறு காண்க.

[2]இடையே தொக்கதனைத் தொகைநிலைத்தொடர் என்றமையானே, கடந்தானிலம், இருந்தான் குன்றத்து என இறுதிக்கண் தொக்குப் பிளவுபட்டு நின்றன தொகைநிலைத் தொடராகாவோ எனின் :—நிலங்கடந்தான் குன்றத்திருந்தான் என்பனவற்றை ஒரோவழி மாறிக் கூறுதலிற் பிளவுபட்டு நின்றனவன்றி அவையும் இடைக்கண்தொக்க தொகைநிலைத் தொடரேயாமென்க.

இனி, ஆறுருபுமென்னும் முற்றும்மையை எச்சவும்மையாக்கிப் பொற்குடம் என ஒரோவழி உருபும் பொருளும் உடன்தொக்க தூஉம் வேற்றுமைத்தொகையெனக் கொள்க. அது விரியுழிப் பொன்னாற்செய்த குடம் என விரியும். பிறவும் அன்ன. (கஉ)

## வினைத்தொகை

௩௬௪. காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

எ-னின். வினைத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) காலம்பற்றிப் புடைபெயர் வினையுருபாகிய தம் இறுதிகள் தொக்கு நிற்பச் செய்வதாதி அறுபொருட் பெயராகிய தம்மெச்சங்கொண்ட பெயரெச்சங்கள் வினைத் தொகைகளாம் எ - று.

காலம் என்றது ஆகுபெயர். முதனிலை வினையுருபு தொகாது நிற்பப் புடைபெயர்ச்சி வினையுருபு தொக்கனவற்றை வினைத் தொகை எனப்படுமென்பார் காலங் கரந்த என ஆகுபெயராற் கூறினார். புடைபெயர்சசி வினைகளை முதனிலையொழிந்த இறுதிகள் காட்டி நிற்றலின் அவ்வினைகட்கு அவை உருபாயின.

---

1 குறுந். கருந.

2. இடையே தொக்கனவற்றை வேற்றுமைத் தொகையென்றும் ஈற்றில் தொக்கனவற்றை செய்யுள் விகாரவகையால் தொகுக்கப்பட்டன வென்றும் கூறுவர், மயிலைநாதர்.

வ - று: கொருநல் அடுகளிறு இன்று அடுகளிறு நாளை அடு களிறு வேல் களம் தொழில் பொழுது கந்து என வரும். இவை விரியுழி நெருநல் அட்டகளிறு இன்று அடாநின்ற களிறு நாளை அடுங்களிறு என விரியும். இவை முறையே இறந்தகால வினைத் தொகை நிகழ்கால வினைத்தொகை எதிர்கால வினைத்தொகை எனப்படும். இஃது ஒவ்வொரு காலத்தையே பற்றுது முக்கால மும்பற்றி நெருநலும் அட்டகளிறு இன்றும் அடாநின்ற களிறு நாளையும் அடுங்களிறு என விரிய வரின், முக்காலவினைத்தொகை எனப்படும். இங்ஙனங் காலவிகற்பம் பற்றிப் புடைபெயர் வினை கருதாது அரிவாள் ஆவுரிஞ்சுதறி என்றாற்போல அடுகளிறு என்பது இத்தொழிற்குரியது இஃதென்னும் பொருள்பட வருமா யின், வினைத்தொகைக் குறிப்பு எனப்படுமென்க. இவ்வாறே ஏனை வினைத்தொகைகளை யெல்லாம் உய்த்துணர்ந்து கொள்க. இதற்கு வருமொழி பெயராகலின் இத்தொகை நிலையாயே தொடரும் இரண்டிறந்த மொழிகள் இலவென்க.

அட்டது களிறு, அடாநின்றது களிறு, அடுவது களிறு என முற்றுக்கள் இறுதி தொகுதலின் அடுகளிறென வினைத்தொகை யாயிற்றெனின்:—அடுகளிறு இது அடுகளிறு வந்தது எனப் பின் னும் ஒருபெயர் வினைகளையேற்றலின் அவையன்றெனவும், அடு என்னும் முதனிலை வினையாகிய காரணத்தின்கண் முக்கால வினை யாகிய காரியங்கள் தொக்குநிற்றலின் அடுகளிறென வினைத்தொகை யாயிற்றெனிற் காரணத்தின்கண் காரியந் தொக்கு நிற்றற்குக் களி றென்னும் முடிக்குஞ்சொல் வேண்டாமையின் அஃது ஒருமொழி யிலக்கணமன்றி இங்ஙனம் அதிகரித்த தொடர்மொழி இலக்கண மன்மையின் அஃதன்றெனவும், விலக்கிப், பெயரெச்சத்து இறுதி தொக்கது [1]வினைத்தொகையென்றார். (௬௩)

### பண்புத்தொகை

௩௬௫. பண்பை விளக்கு மொழிதொக் கனவும்
ஒருபொருட் கிருபெயர் வந்தவும் குணத்தொகை.

எ-னின். பண்புத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குணப்பெயரோடு குணிப்பெயர் புணருங் கால் அக் குணியோடு குணத்துக்குண்டாகிய ஒற்றுமை

1. ஆசிரியர் தொல்காப்பியர், “வினையின்றொகுதி காலத் தியலும்” எனக் கூறுகின்றுழிப் “பெயரெச்சத்தீறுதொக்கு மூன்று காலத்தும் நிகழ்வது என்பர்” எனக் கூறுவர், இராமாநுச கவிராயர்.

நயத்தை விளக்குதற்கு ஆண்டு வரும் ஆகிய என்னும் மொழியாகிய பண்புருபு தொக்கு நிற்பனவும் அப்பண்புருபு தொக்குநிற்பப் பொதுப்பெயருஞ் சிறப்புப்பெயருமாய் ஒருபொருட்கு இருபெயர் வந்தனவுமாகிய இவ்விரண்டும் பண்புத்தொகைகளாம் எ - று.

குணத்தொகை என்றமையான் ஒருபொருட்கு இருபெயர் வந்தனவற்றின்கண்ணும் பண்புருபு தொகுமென்பது பெற்றாம்.

வ - று: செந்தாமரை கருங்குவளை வட்டக்கல் சதுரப்பலகை ஒருபொருள் இருபொருள் தீங்கனி துவர்க்காய் எனவும்; ஆயன் சாத்தன் வேழக்கரும்பு அகரமுதல சகரக்கிளவி எனவும்; செந்நிறக் குவளை கரும்புருவச்சிலை எனவும் வரும் இவை விரியுழிச் செம்மையாகிய தாமரை ஆயனாகிய சாத்தன் செம்மையாகிய நிறமாகிய குவளை என விரியும். இவ்வாகிய என்னும் உருபின்கண் ஆக்கவினையின்மையின் இலக்கணையால் செய்த என்னும் வாய்பாட்டின்பாற்படுவதோர் வினையிடைச்சொல். ஆயன் என்னும் பொதுப்பெயர் சாத்தன் என்னுஞ் சிறப்புப் பெயரை விசேடித்தும் வேழம் என்னுஞ் சிறப்புப்பெயர் கரும்பு என்னும் பொதுப்பெயரை விசேடித்தும் வந்தன. பிறவும் அன்ன.

முற்றெச்சமாகிய காலத்து முற்றுப்பொருளை ஒழித்து எச்சப் பொருளை உணர்த்தி நின்றாற்போல, ஆயன் வேழம் என்றற் றொடக்கத்து நிலைமொழிகள் பண்பிச்சொல்லாயினும் அப்பண்பிகளை ஒழித்துப் பொதுப்பண்பினையுஞ் சிறப்புப்பண்பினையும் உணர்த்தி வருமொழிக்கு அடையாய் நிற்றலின் அவையும் பண்புத் தொகையாயின.

ஆகிய என்பதன்று பண்பை விளக்குமொழி என்பது; [1]மை விகுதியென்றால் என்னையெனின்:—ஒரு மொழிக்கு உறுப்பாகிய விகுதியை மொழி என்றல் கூடாமையானும் வட்டம் சதுரம் முதலிய பண்பிற்கு அவ் விகுதியின்மையானும் வட்டக்கல் என்புழி மகரவீறு கெட்டுப் புணர்ந்தாற்போல மையீறு கெட்டுப் புணர்ந்ததென்பது 'ஈறுபோதல்' என்னுஞ் சூத்திரத்தாற் பெறுதலானும் அஃதன்றென்க.

செய்யதாமரை என்னும் [2]எச்சவிறுதி தொக்கது இத்தொகை என்பாரும், [3]செய்யது தாமரை என்னும் முற்றிறுதி தொக்கது

1. பண்புக்குத் தொக்குநின்றது கருமையென்ற ஐகாரம் என்பர் மயிலைநாதர்.

2. எச்சவிறுதி தொக்கதென்பவர் மயிலைநாதர்.

3. 'கரியது என்னும் பண்புப்பெயர் ஒருகூறு நிற்ப ஒரு கூறு தொக்கமையிற் பண்புத்தொகையாயிற்று.' (தொல். எச்ச.

[1]" ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா விறுதி யான "

என்பவாகலின்.

வினையொடு வினை தொகைநிலைத் தொடராகாமையின் அதனை ஒழித்தும் நிலத்தைக் கடந்தான் நிலங்கடந்தான் என உருபிடை விரியிற் பிளவுபட்டுந் தொக்கதேற் பிளவுபடாதுந் தொடருமா தலின் ஒருமொழிபோலென்றுங் கூறினார்.

ஒருமொழிபோல் நடத்தலாவது கொல்யானை வந்தது, நிலங் கடந்தான் சாத்தன் என இரண்டு முதலிய பலசொல் தொடர்ந்து ஒருபெயராயும் வினையாயும் நின்று தம்முடிபேற்றலெனப் [2]பொருள் கூறின் :—அவ்வாறு தொகாநிலைத்தொடரும் கொன்ற யானை வந்தது, நிலத்தைக் கடந்தான் சாத்தன் என நடக்குமாதலின், அது பொருந்தாதென்க. (௧0)

தொகைநிலைத்தொடர்ப் பாகுபாடு

ந௬௨. வேற்றுமை வினைபண் புவமை உம்மை
அன்மொழி எனஅத் தொகை ஆறாகும்.

எ - னின். மேல் 'வேற்றுமை முதலிய' என்றார், அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் உவமைத்தொகையும் உம்மைத் தொகையும் அன்மொழித்தொகையுமென மேற்கூறிய தொகைநிலைத் தொடர்ச்சொல் அறுவகைப்படும் எ - று.

வேற்றுமைத்தொகை

ந௬௩. இரண்டு முதலா இடையா றுருபும்
வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகையே.

எ - னின். நிறுத்த முறையானே வேற்றுமைத்தொகையா மாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுவாய்க்கும் விளிக்கும் இடையே நின்ற இரண்டாவது முதலிய ஆறு வேற்றுமையுருபுந் தொக்க தொடர்ச்சொற்கள் வேற்றுமைத்தொகைகளாம் எ - று.

---

1. தொல். வேற்றுமை மயங்கியல், ௨௨.
2. இங்ஙனம் பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

இவை இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளும் உடன் றொக்க தொகையன்றே உவமைத்தொகையென்றது என்னை யெனின்:—செயப்படுபொருள் கருதிக் கூறியவழி இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளும் உடன்றொக்க தொகையாகவும், உவமைப் பொருள் கருதிக் கூறியவழி அதனையே உவமத்தொகை யாகவுங் கொள்ளப்படுமென்க. (௧௫)

உவமவுருபுகள்

௩௬௭ போலப் புரைய ஒப்ப உறழ
மானக் கடுப்ப இயைய ஏய்ப்ப
நேர நிகர அன்ன இன்ன
என்பவும் பிறவும் உவமத் துருபே.

**எ-னின். உவமவுருபு இயற்சோல் மாத்திரையாய் நில்லாது திரிசோல்லாற் பலவாதலின் அவை இவை என உணர்த்துதல் நுதலிற்று.**

(இ-ள்.) போலவென்பது முதலிய செயவெனெச் சம் பத்தும் அன்ன இன்ன என்னும் பெயரெச்சக் குறிப் பிரண்டும் இவைபோல்வன பிறவும் உவமவுருபுகளாம் எ-று.

இன்ன என்பது அருகியன்றி வாராமையிற் பிற்கூறினர்.

பிற என்றமையானே போலப் புரைய என்றற்றொடக்கத்து வினையடியாகப் பிறத்தற்குரிய ஏனை வினையெச்ச விகற்பங்களும் பெயரெச்சவிகற்பங்களும் பொருவ ஏற்ப அனைய என்றற்றொடக் கத்தனவுங் கொள்க.

வ-று: குருவிபோலக் கூப்பிட்டான், குருவி புரையக் கூப்பிட்டான், புலியன்ன கொற்றன் எனப் பெயரொடு வினை புணருங்கால் வினையெச்ச உருபுகளனைத்தினையும், பெயரோடு பெயர் புணருங்காற் பெயரெச்ச உருபுகளனைத்தினையும் விரித் துக்கொள்க.

பெயரோடு பெயர் புணரினும் புலியைப்போலப் பாயுஞ் சாத் தன், மழையைப்போலக் கொடுக்குங் கை, துடியைப்போலச் சுருங் கிய இடை, பொன்னைப்போல விளங்கிய சுணங்கு என, வினை யெச்ச உருபு விரிந்தல்லது நால்வகை உவமையும் விளங்காமை யின் அவ்வுருபை முன்னர் எடுத்து விதந்தாரென்க. (௧௬)

## உம்மைத்தொகை

௩௬௮. எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனுநான் களவையுள் உம்இல தத்தொகை.

எ - னின். உம்மைத்தோகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எண்ணலளவை எடுத்தலளவை முகத்தலளவை நீட்டலளவை என்னும் நால்வகையளவைகளாற் பொருள்களை அளக்குங்கால் தொடரும் அவ்வளவைப் பெயர்களுள் உம்மையாகிய உருபு தொக்கு நிற்பன உம்மைத்தொகைகளாம் எ - று.

எண்ணலளவையான் அளத்தலேயன்றி அவ்வளவையை எடுத்தல் முதலிய கருவியின்பாற் படுத்தளத்தலின் [1] அளவை நான்கென்றுஉன்றி எண்ணலளவையே அளவையாதலின் அதனை முற்கூறினார்.

வ - று: கபிலபரணர் இராப்பகல் [2] புலிவிற்கெண்டை அறுபத்துமூவர் ஆயிரத்தைஞ்ஞூற்றைம்பத்தொன்றே காலே யரைக்காலரை மாகாணி [3] முந்திரி எனவும்; [4] கழஞ்சேகால்

1. இனி ஆசிரியர் தொல்காப்பியர் 'இருபெயர் பலபெயர்' என்னுஞ் சூத்திரத்தில் அறுவகையாக உம்மைத் தொகையைக் கூறி இருப்ப இந் நூலாசிரியர் "நான்களவையுள் உம் இலதத் தொகை" என்றல் மாறுகொளக் கூறலன்றோவெனின், அவர் எண்ணலளவையை இருபெயர், பலபெயர், எண்ணியற் பெயர், எண்ணின் பெயர் என நான்காக வகுத்தும், முகத்தலளவை நீட்டலளவை என்னும் இரண்டனையும் அளவின்பெயர் எனத் தொகுத்தும் கூறலால் அன்றென்க" என்பர், இராமாநுச கவிராயர்.

2. புலிவிற்கெண்டை: இது தமிழ்நாட்டு முடிமன்னர்களாகிய சோழ, சேர பாண்டியர்களின் கொடிகளைக் குறிக்குந் தொடர்.

3. முந்திரி: ஒரு சிற்றெண்; ஒன்றில் முந்நூற்றிருபதாகிய ஒரு பங்கு; இது முந்திரிகை யெனவும் வழங்கப்படும்; 'முந்திரி மேற்காணி மிகுவதேல்' (நாலடி: ௩௪௬.)

4. கழஞ்சு: உ0 மஞ்சாடி கொண்ட நிறுத்தலளவை

கழஞ்சரையே [1]யரைமாவரைக்காணிமுந்திரி எனவும்; நாழி யாழாக்கு கலனே முக்குறுணி நாழியாழாக்கே முச்[2]செவிடு எனவும்; சாணரை சாணரையே யரைக்கால் எனவும் வரும். இவை விரியுழிக் கபிலனும் பரணனும் இராவும் பகலும் புலியும் வில்லுங் கெண்டையும் அறுபதின்மரும் மூவரும் என விரியும். பிறவும் அன்ன.

இவற்றுள் அறுபதென்பது எண்ணலளவையாய்த் தொடராது எண்ணுறழ்ச்சியாய்த் தொடர்ந்தமையின் உம்மைத் தொகையன்று பண்புத்தொகையாமென்க. கபில பரணர் என்பது எண்ணுப்பெயராகியது என்னையெனின்:—கபில பரணரிருவரும் வந்தார் எனத் தொகைபெறுதலினென்க. இவை போல்வன பிறவும் அன்ன. கபிலபரணர்ப் பரவினன் என வரும்வழிக் கபிலனையும் பரணனையும் பரவினன் என வேற்றுமை புருபும் உடன் விரியுமாலோவெனின்:—பரவினன் என்னும் வருமொழி நோக்கி வேற்றுமைத்தொகையாகவுங் கபில பரணர் என்னும் நிலைமொழியிரண்டனையும் நோக்கி உம்மைத்தொகையாகவுங் கொள்ளப்படுமென்க.

இவ்வும்மை இடையினும் இறுதியினும் ஒருங்கு தொகுமென்பார் அதிகரித்த முறையானே இடைக்கண் தொகும் வேற்றுமைத்தொகை முதலிய நான்கிற்கும் இடையே தொகுமென்ற பொதுவிதி மாற்றி இறுதிக்கண் தொகுமெனக் கூறும் அன்மொழித்தொகைக்கும் இடையே இத்தொகையை வைத்தாரென்க. எண்ணிடைச்சொற்கள் உம்மையேயன்றிப் பிறவுமுளவேனும் அஃது இயற்சொல்லாதலின் உம்மைத்தொகை எனப்பட்டது. (௧௭)

## அன்மொழித்தொகை

**௩௬௯. ஐந்தொகை மொழிமேற் பிறதொகல் அன்மொழி.**

**எ - னின். அன்மொழித்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) வேற்றுமைத்தொகை முதலிய ஐவகைத் தொகைநிலைத் தொடர்மொழிகட்கும் புறத்து அவை யல்லாத பிற மொழிகளாகிய உருபுகள் தொகுதல் அன்மொழித்தொகையாம் எ - று.

---

1. அரைமாவென்றது ஒன்றில் நாற்பதாகிய ஒரு பங்கு. அரைக்காணி - ஒன்றில் நூற்றறுபதாகிய ஒருபங்கு; இரண்டு முந்திரி.

2. செவிடு - ஆழாக்கில் ஐந்தில் ஒருபங்கு.

மேலென்றமையான் 'அவற்றின் உருபிடையொழிய' என்ற பொதுவிதியை விலக்கினொரன்பது பெற்றாம்.

வ - று : பூங்குழல் பொற்றொடி கவியிலக்கணம் பொற்றாலி கிள்ளிகுடி கீழ்வயிற்றுக்கழலை எனவும்: தாழ்குழல் கருங்குழல் துடியிடை தகரஞாழல் எனவும்; தகரஞாழன் மூலை எனவும் வரும். இவை விரியுழிப் பூவையுடைய குழலினையுடையாள், பொன்னலாகிய தொடியினையுடையாள், கவிக்கு இலக்கணஞ் சொன்ன நூல், பொன்னினாகிய தாலியினையுடையாள், கிள்ளியது குடியிருக்குமூர், கீழ்வயிற்றின்கண் எழுந்த கழலைபோல்வான், எனவும்; தாழ்ந்த குழலினையுடையாள, கருமையாகிய குழலினையுடையாள். துடியன்ன இடையினையுடையாள். தகரமுஞாழலும் விராய்ச் சமைந்த சாந்து எனவும்; தகரமும் ஞாழலும் விராய்ச் சமைந்த சாந்தையணிந்த மூலையினையுடையாள், எனவும் விரியும்.

இனி இரண்டிறந்த மொழிகளின் அறுவகைத்தொகையும், விரவித் தொகுமாறு:—'திகழ்செவ்வான் மதித் திருமுகப் பூங்குழல்' என வரும். இவை விரியுழித் திகழ்ந்த செம்மையாகிய வானத்தின்கண் மதிபோலுந் திருமுகத்தினையும் பூவையுடைய குழலினையும் உடையாள் என விரியும். (௧௬)

## தொகைநிலைத் தொடர்மொழிகளிற் பொருள்சிறக்கும் இடங்கள்

௩௭௦. முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனுநான் கிடத்துஞ் சிறக்குந் தொகைப்பொருள்.

எ - னின். தொகைநிலைத் தொடர்ச்சொற்கள் ஒன்றுபடத் தொடர்ந்தனவேனும் அப்பொருளும் ஒன்றுபடத் தொடராது பிளவுபட்டு ஓரிடத்துச் சிறந்தும் ஓரிடத்துச் சிறவாதும் நிற்கு மென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தொகைநிலைத் தொடர்மொழிகளின் முன் மொழிக்கண்ணேனும் பின்மொழிக்கண்ணேனும் அனைத்து மொழிக்கண்ணுமேனும் அனைத்துமொழிக்கும் புறமொழிக் கண்ணேனுஞ் சிறந்து நிற்குந் தொகைநிலைத் தொடர்ப் பொருள் எ - று.

இவ்விடங்களிற் சிறக்குமெனவே ஏனையிடங்களிற் சிறவாது நிற்குமென்பது பெற்றாம்.

தன்னியல்பு மறவாமற் பன்மொழியென்றார்.

வ - று : குடம் ...... ......... குழுசவணைதான மேவகைப்பூ சண்பகப்பூ முண்மரம் முள்ளின்மரம் விரிபூ குவிபூ செந்தாமரை

வெண்டாமரை வேற்கண் கயற்கண் என்பனவற்றுள் நுட முதலிய முன்மொழிகள் இனம் விலக்கி நிற்றலின் அம் முன் மொழிக்கண் பொருள் சிறந்தும் வனைந்தான் முதலிய பின் மொழிக்கண் சிறப்பின்றியும் நின்றன. நிலமுழுதான் சுண்ணிமை நீர்க்குவளை [1]முட்டாட்டாமரை சுடுதீ [2]செஞ்ஞாயிறு தாய்தலை யன்பன் என்பனவற்றுள் நிலமுதலிய முன் மொழிகள் இனமும் இனத்தை விலக்குதலுமின்றி வாரா நின்றமையின் அம்முன் மொழிக்கண் பொருள் சிறப்பின்றியும் உழுதான் முதலிய பின் மொழிக்கண் பொருள் சிறந்தும் நின்றன. உழுதான் என்றது துணையானே நிலத்தை என்பது தாமே போதருமாதலிற் பின் மொழிக்கண் பொருள் சிறந்தனவாயின. ஏனையவும் அன்ன. கபிலபரணர் புலிவிற்கெண்டை என்றற்றொடக்கத்து உம்மைத் தொகைகள் அனைத்துமொழிக்கண்ணும் பொருள் சிறந்தன. பூங்குழல் தாழ்குழல் என்றற்றொடக்கத்து அன்மொழித்தொகை கள் அனைத்து மொழிக்கண்ணும் பொருள் சிறப்பின்றி அனைத்து மொழிக்கும் புறமொழிக்கண் பொருள் சிறந்து நின்றன.

தொகைநிலைத்தொடர்கள் உருபு தொகுதலிற் சொல்லாற் பிளவுபடாதும் பொருளாற் பிளவுபட்டும் இவ்வாறு வருமெனவே தொகாநிலைத் தொடர்கள் உருபு தொகாமையின் இவ்விரு திறத் தானும் பிளவுபட்டுப் புறமொழியொழிந்த மூன்றிடத்தும் இவ்வாறு பொருள் சிறந்து நிற்குமென்பது தாமே போதரு மென்க. அவையும் இவ்வாறே காண்க. அங்ஙனமாயின் தொகை நிலை தொகாநிலை இரண்டற்கும் இறுதிக்கண் இவ்விலக்கணங் கூறாது ஈண்டுக் கூறியது என்னையெனின்? புறமொழிக்கண் பொருள் சிறத்தல் தொகாநிலைத் தொடர்க்கு இன்மையினென்க.

இனி, முன்மொழி பின்மொழிகளுள் பொருள் சிறந்தன வற்றிற்கு ஒருவர்க்கொருவர் மலைந்து [3]பொருள் கூறுவாருமுளர். அம்மலைவு அவர் காட்டும் உதாரணங்களுள் காண்க. (௧௬)

இடத்தொகை பெயர்த்தொகைகட்கு வேறுபாடறிகுறி

௩௭௧. வல்லோற்று வரினே இடத்தோகை ஆகும்
மெல்லோற்று வரினே பேயர்த்தோகை ஆகும்.

எ - னின். இடத்தின்கண் தோக்க தோகையோ பேயரின் கண் தோக்க தோகையோவென்று ஐயுறற்பாலனவற்றுள் சில வற்றைத் துணிதற்கு ஆவதோர் குறி உணர்த்துதல் நுதலிற்று.

---

1. முருகு. ௭௩: முள் + தாள் + தாமரை.
2. புறநா. ௩0
3. பொருள் கூறுபவர் அவிநய உரையாசிரியரும் இளம் பூரணரும் என்பதை மயிலைநாதருரையால் அறியலாகும்.

(இ - ள்.) வல்லொற்று இடையே வந்துழி இடத்தின் கண்தொக்க தொகையாம்; மெல்லொற்று இடையே வந்துழிப் பெயரின்கண்தொக்க தொகையாம் எ - று.

மெல்லொற்று அருகிவருதலிற் பிற்கூறினார்.

வ - று: வடுகக்கண்ணன் வடுகங்கண்ணன் கன்னடக்கொற்றன் கன்னடங்கொற்றன் துளுவச்சாத்தான் துளுவஞ்சாத்தன் என வரும். பிறவும் அன்ன. இவை விரியுழி, வல்லொற்று வரின் வடுகநாட்டிற் பிறந்த கண்ணன் எனவும், மெல்லொற்று வரின் வடுகனாகிய கண்ணன் எனவும் விரியும். வடுகன் என்பது தந்தை பெயராய் மெல்லொற்று வரின் வடுகற்கு மகனாகிய கண்ணன் என விரியும் ஏனையவும் அன்ன.

வல்லொற்று வரின் மெல்லொற்று வரின் என்றமையான் 'இயல்பினும் விதியினு நின்றவுயிர்' ஈற்று மொழிமுன் வல்லின முதல்மொழி வந்து இடத்தொகையும் பெயர்த்தொகையுமாய் ஐயுற நிற்பின் இக்குறியால் துணியப்படுமென்பதூஉம், வடுகநாதன் வடுக வணிகன் வடுக வரசன் என வரிற் சொல்லுவான் குறிப்பானன்றி இவ்வாறு துணியப்படாவென்பதூஉந் தாமே போதருமென்க. (உ0)

உம்மைத்தொகைக்குப் புறனடை

௩௭௨. உயர்திணை உம்மைத் தொகைபலர் ஈறே.

எ-னின். உம்மைத்தொகைக்கு ஆவதோரு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயர்திணை ஒருமைப்பாலின்கண் வரும் உம்மைத்தொகைகள் ரவ்வீறுங் கள்ளீறுமாகிய பல ரீற்றனவேயாம் எ - று.

பலரீறே என்றமையான் ஒருமைப்பாலென்பது பெற்றாம்.

வ - று: கபிலபரணர் [1] கல்லாடமாமூலர் சேரசோழ பாண்டியர் தேவன்றேவிகள் பார்ப்பான்பார்ப்பனிகள் வில்லி வாளிகள் என வரும்.

இவ்வொருமைகள் இத்துணையரென்னும் பொருள்பட நிற்றலிற் பலரீற்றவாயின.

1. கல்லாடரும் மாமூலரும்; இவர்கள் சங்கப்புலவர்கள்.

னகரவீறு இடையே கெடுதல் 'சில விகாரமா முயர்திணை' என்பதனானும் இறுதிக்கண் கெடுதல் இதனுள் பலர்சேற என்பதனானுங் கொள்க.

பலர்சேற என்னுந் தேற்றத்தான் அஃறிணையொருமை யும்மைத்தொகைகளும் பொதுவொருமை உம்மைத் தொகைகளும் தத்தம் பன்மையீற்றனவேயாமென்னும் நியதியவல்ல என்றாயிற்று. அவை வருமாறு: உண்மையின்மைகள் உண்மையின்மை; நன்மைதீமைகள் நன்மைதீமை; இராப்பகல்கள் இராப்பகல்; நிலநீர்தீக்காற்றுகாயங்கள் நிலநீர்தீக்காற்றுகாயம் எனவும்; தந்தைதாயர் தந்தைதாய்கள்; தந்தைதாய்; சாத்தன்சாத்தியர் சாத்தன்சாத்திகள் சாத்தன்சாத்தி எனவும்; பன்மையீற்றானும் இயல்பாய ஒருமையீற்றானும் வந்தன. இயல்பாகிய ஒருமையீற்றான் வந்தனவேல் உம்மைத்தொகையன்றிக் கபிலன் பரணன் இருவரும் வந்தார் என்றாற்போலச் செவ்வெண்ணும் பிறவெனின்:—பலமொழிகளையுந் திரட்டி ஒரு பிண்டமாகக் கூறியவழி உம்மைத்தொகையாகவும் பிளவுபடக் கூறியவழிச செவ்வெண்ணாகவுங் கொள்ளப்படுமென்க. (௨௧)

### தொகைநிலைத் தொடர்மொழிகள் பலபொருள் படுதல்

௩௭௩. தொக்குழி மயங்குந இரண்டு முதலேழ்
எல்லைப் பொருளில் மயங்கும் என்ப.

**எ - னின்.** தொகைநிலைத்தொடர்ச்சொற்கள் உருபு தொக்குநின்றமையிற் சில பொருளான் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமையுருபு முதலிய உருபுகள் தொக்கு நின்றவழிப் பொருள்களான் மயங்கும் இயல்பினவாகிய தொடர்ச்சொற்கள் இரண்டுமுதல் ஏழீறாகிய பொருள்களான் மயங்கும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

தொக்குழி எனவே தொகாவிடத்து மயங்கா என்பதூஉம், மயங்குவன மயங்கும் எனவே மயங்கும் இயல்பில்லன மயங்கா என்பதூஉம், பொருளெனப் பொதுப்படக் கூறினமையின் தொகைநிலைப்பொருளானுந் தொகாநிலைப்பொருளானுந் தொகைநிலைத்தொடர்ச்சொல் மயங்கும் என்பதூஉம் பெற்றாம்.

**வ - று:** தெய்வவணக்கம் தாழ்குழல் என்பன, தெய்வத்தை வணங்கும் வணக்கம் தெய்வத்துக்கு வணக்கம்; தாழ்ந்தகுழல்

தாழ்ந்த குழலினையுடையாள் என இருபொருளான் மயங்கிய ஒருதொடர்த்தொகைச்சொல். [1]"தற்சேர்ந்தார்," [2]"கடிப்பகை," என்பன, தன்னைச் சேர்ந்தார் தன்னொடு சேர்ந்தார் தன்கட் சேர்ந்தார்; கடிக்குப்பகை கடியினதுபகை கடியாகிய பகை என மூன்று பொருளான் மயங்கிய ஒருதொடர்த்தொகைச்சொல். சொல்லிலக்கணம் என்பது, சொல்லினது இலக்கணம் சொற்கு இலக்கணம் சொல்லின்கண் இலக்கணம் சொல் இலக்கணஞ் சொன்ன நூல் என நான்கு பொருளான் மயங்கிய ஒருதொடர்த் தொகைச்சொல். பொன்மணி என்பது, பொன்னாகிய மணி பொன்னாகிய மணி பொன்னின்கண் மணி பொன்னொடு சேர்ந்த மணி பொன்னும் மணியும் என ஐந்து பொருளான் மயங்கிய ஒருதொடர்த்தொகைச்சொல். மரவேலி என்பது, மரத்தைக் காக்கும் வேலி மரத்துக்கு வேலி மரத்தினது வேலி மரத்தின் புறத்துவேலி மரத்தானாகிய வேலி மரமாகிய வேலி என ஆறு பொருளான் மயங்கிய ஒரு தொடர்த்தொகைசசொல். சொற் பொருள் என்பது, சொல்லான் அறியப்படும் பொருள் சொல்லி னது பொருள் சொற்குப்பொருள் சொல்லின்கட்பொருள் சொல்லும் பொருளும் சொல்லாகிய பொருள் சொல்லானது பொருள் என ஏழு பொருளான் மயங்கிய ஒருதொடர்த்தொகைச் சொல். சொல்லானது பொருளென்றது தொகாநிலைப்பொரு ளாகிய எழுவாய். சொல்லான் அறியப்படும் பொருள் சொல்லின் அறியப்படும் பொருள் என மூன்றுவதனோடு ஐந்தாவதும் [3]விரிப் பாருமுளர். அவையிரண்டற்கும் எதுப்பொருளொன்றேயாதலின் அது வேற்றுப்பொருளான் மயங்கியதன்றென்க. 'வாளைமீனுள்ள றலைப்படல்' என்பது [4]"வாளைமீனை உள்ளறலைப்படல் வாளைமீன் உள்ளலைத் தலைப்படல் என இரண்டாவதும் எழுவாயுமாகிய இரு பொருளான் மயங்கிய பலதொடர்த்தொகைச்சொல். புலிகொல் யானை குரங்கெறி விளங்காய் என்பன புலியைக்கொன்ற யானை புலியானதுகொன்ற யானை புலியாற் கொல்லப்பட்ட யானை குரங்கை யெறிந்த விளங்காய் குரங்கானது எறிந்த விளங்காய் குரங்கால் எறியப்பட்ட விளங்காய் என இரண்டாவதும் எழுவா யும் மூன்றுவதுமாகிய மூன்று பொருளான் மயங்கிய பலதொடர்த் தொகைச்சொல். பிறவும் அன்ன.

இவ்வாறு செம்பொருள்கொள்ளாது வலிந்து பொருள் கொள்ளப்புகின் எழுல்லையென்னும் வரையறையின் நில்லாது பலவாமாதலின் அது தொன்னெறி அன்றென்பார் என்ப வென்றார்.

---

1. நாலடி. கங, களO. 2. மணி. எ : ௫அ, எரு.
3. விரிப்பவர் மயிலைநாதர். 4. திரிகடுகம், எ.

இனி [1]அலர்முல்லை என்னும் வினைத்தொகை முதலியன மயங்காதனவாம். அலரையுடைய முல்லை என மயங்குமாலோ வெனின் :—அலர் என்பது வினைத்தொகைக்கண் வினையாயும் வேற்றுமைத்தொகைக்கண் பெயராயுஞ் சொல் வேறுபட்டமையின் அது பொருளான் மயங்கியதன்றென்க. (௨௨)

## ௨. தொகைநிலைத் தொடர்மொழி

௩௭௪. முற்றீ ரெச்சம் எழுவாய் விளிப்பொருள்
ஆறுரு பிடையுரி அடுக்கிவை தொகாநிலை.

எ - னின். நால்வகைச்சொற்கும் ஆவதோர் விதி உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) முற்றும் பெயரெச்சமும் வினையெச்சமும் எழுவாயும் விளியுமாகிய ஐவகைப்பொருளின்கண் பெயர் வினைகள் புணரும் புணர்ச்சியும் வேற்றுமைப்பொரு ளின்கண் அவற்றின் உருபாகிய இரண்டாவது முதலிய ஆறும் இடையே விரிந்து நிற்பப் பெயர்வினைகள் புணரும் புணர்ச்சியும் ஏனை இடைச்சொற் புணர்ச்சியும் உரிச்சொற் புணர்ச்சியும் ஒரு சொல் அடுக்கி வரும் புணர்ச்சியுமாகிய ஒன்பதுந் தொகாநிலைத்தொடராம் எ - று.

தொகாநிலை என்றமையாற் காலங் கரவாத பெயரெச்சம் ஈண்டுக் கொள்க.

வ - று : உண்டான் சாத்தன், குழையன் கொற்றன், உண்ட சாத்தன், நல்ல சாத்தன், உண்டு வந்தான், உழுதன்றி யுண்ணான், சாத்தன் வந்தான், கொற்றா கொள், குடத்தை வனைந்தான், வாளாலெறிந்தான், இரப்போர்க்கீந்தான், மலையினிழிந்தான், சாத்தனது கை, மணியின்கணொளி, [2]'அதுகொ றோழி காம நோயே,'' [3]'நனிபே தையே நயனில் கூற்றம்,'' பாம்புபாம்பு என முறையே காண்க.

வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் விரிந்தவழி வேற்றுமைத்தொகாநிலையும் பெயரெச்சத்தொகாநிலையுமாம் என்

1. 'அலர் முல்லை' என்பதை மயங்கியதாக மயிலைநாதர் காட்டியுள்ளார்.

2. குறுந். ௫. 3. புறநா. ௨௨௭.

ருர் எனை நான்குதொகையும் விரிந்தவழித் தொகாநிலை ஒன்பதனுள் எவையாம் பிறவெனின்:—பண்புத்தொகையும் உவமைத் தொகையும் உம்மைத்தொகையும் விரிந்தவழி இடைச்சொற் புணர்ச்சியும், அன்மொழித்தொகை விரிந்தவழி வேற்றுமைத் தொகாநிலைமுதல் ஏற்பனவுமாம் என்க. (௨௩)

---

## ௩. வழாநிலை வழுவமைதி

### வழு விகற்பங்கள்

௩எ௫. திணையே பால்இடம் பொழுது வினாஇறை
மரபாம் ஏழும் மயங்கின்ஆம் வழுவே.

**எ - னின். வழுவறிந்தல்லது அவற்றைக் களைதல் கூடாமையின் அவை இவையென உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) திணை முதலாக மரபு ஈறாக வரும் ஏழுந் தத்தம் நெறி மயங்கின் வழுவாம் எ - று.

திணை முதலியவனைத்தும் மரபாமாயினும் இங்ஙனம் விதவாது ஒழிந்தனவற்றை மரபெனக் கொள்கவென்பார் அதனை இறுதிக்கண் கூறினர்.

வ - று: அவன் வந்தது என்பது திணைவழு. அவன் வந்தாள் என்பது பால்வழு. யான் வந்தான் என்பது இடவழு. நாளை வந்தான் என்பது காலவழு. கறக்கின்றவெருமை பாலோ சினையோ, ஒருவிரல் காட்டிச் சிறிதோ பெரிதோ என்பது வினாவழு. கடம்பூர்க்கு வழி யாதெனின் இடம்பூணி என் ஆவின் கன்றன்று, கருவூர்க்குவழியாதெனிற் பருநூல் பன்னிரு [1]தொடி என்பது [2]விடைவழு. யானை மேய்ப்பானை இடையன், ஆடு மேய்ப்பானைப் பாகன், யானைச்சாணி, எருமையிலத்தி என்பது மரபுவழு. இவ்வாறே இவ்வெழுவகை வழு விகற்பங்களெல்லாம் உணர்ந்துகொள்க. (௨௪)

---

1. தொடி - ஒருபலம். "தொடிவளை யொருபலப்பேர்" (சூடாமணி நிகண்டு, கக.) "தொடிப்புழுதி கஃசா வுணக்கின்" (குறள். ௧0௩எ.)

2. இறைவழு என்பது பாடம்.

## திணையோடு வினாவிடையும் பாலோடு வினாவிடையும் வழுவாமற் காத்தல்

௩௭௬. ஐயம் திணைபால் அவ்வப் பொதுவினும்
மெய்தெரி பொருள்மேல் அன்மையும் விளம்புப.

எ - னின். திணையோடு வினாவிடையும் பாலோடு வினாவிடையும் வழுவாது காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *திணை ஐயத்தினை அவற்றின் பொதுச்சொலானும் பால் ஐயத்தினை அவற்றின் பொதுச்சொலானுந் துணிந்த பொருள்மேல் அல்லாத தன்மையினை வைத்துங் கூறுவர் புலவர் எ - று.*

வ - று: *குற்றியோ மகனோவெனத் திணை ஐயந்தோன்றிய வழிக் குற்றியோ மகனோ அங்ஙனந் தோன்றாநின்றது தோன்றாநின்றான் எனச் சிறப்புச்சொலாற் கூறின் திணைவழுவும் வினாவழுவுமாம். அதையொழித்துக் [1]குற்றியோ மகனோ அங்ஙனந் தோன்றாநின்ற உரு எனப் பொதுச்சொலாற் கூறுக. உரு என்பது பொதுச்சொலாய் வழாநிலையாயது என்னையெனின், குற்றிக்கும் மகனுக்கும் உருப் பொதுப்பட நின்றமையினென்க. ஆண்மகனோ பெண்மகளோ என உயர்திணைப்பால ஐயந் தோன்றியவழி ஆண்மகனோ பெண்மகளோ அங்ஙனந் தோன்றாநின்றான் தோன்றாநின்றாள் எனச் சிறப்புச் சொலாற் கூறின் பால்வழுவும் வினாவழுவுமாம். அவையொழித்து [2]ஆண்மகனோ பெண்மகளோ அங்ஙனந் தோன்றாநின்றார் எனப் பொதுச்சொலாற் கூறுக. தோன்றாநின்றாரென்பது பொதுச்சொலாய் வழாநிலையாயது என்னையெனின், ஆண்பெண் இரண்டல்லது பலர்பாலென வேறொன்றின்றி அவ்விருபாற்கும் பொதுமையின் நிற்றலினென்க. ஒன்றோ பலவோ என அஃறிணைப்பால் ஐயந் தோன்றியவழி ஒன்றோ பலவோ இச்செய்புக்கது புக்கன எனச் சிறப்புச் சொலாற் கூறிற் பால்வழுவும் வினாவழுவுமாம். அவையொழித்து ஒன்றோ பலவோ இச்செய்புக்க பெற்றம் எனப் பொதுச் சொலாற் கூறுக.*

---

1. "உருவென மொழியினு மஃறிணைப் பிரிப்பினும், இருவீற்று முரித்தே சுட்டுங்காலை" (தொல். கிளவி. சூ. ௨௪) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

2. "பான்மயக் குற்ற வையக் கிளவி, தானறி பொருள்வயிற் பன்மை கூறல்" (தொல். கிளவி. சூ. ௨௩) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

இனி மெய் தெரிந்த பொருள் குற்றியெனின் மகனன்று எனவும்; மகனெனிற் குற்றியல்லன் எனவும்; ஆண்மகனெனிற் பெண்மகளல்லன் எனவும்; பெண்மகளெனின் ஆண்மகனல்லன் எனவும் கூறுக. [1]மகனன்று, குற்றியெனக் கூறிற் குற்றியோ மகனோ என வினவினார்க்கு மகனன்றெனின் அமையும்; குற்றியென மேல்வைத்துக் கூறல் வேண்டா கூறலாம். [2]மகனன்றென்பதனை மகனினன்றென ஐந்தாம்வேற்றுமைப் புணர்ச்சி என்பாருமுளர். அதுபோல் வரும் நீயல்லன் என்பதும அங்ஙனம் விரித்தல் கூடாமையின் அலவழிப் புணர்ச்சியுள் எடுத்து விதந்த பதினான்கின் புறத்ததாய் அடங்குமென்க. ஏனைமூன்று காட்டும் அன்ன.

மெய்தெரியாப் பொருள்மேல் அல்லாத தன்மையினை வைத்து [3]மகனல்லன் குற்றியெனிற் குற்றி என்னும் பயனிலைக்கு எழுவாய் தந்து மகனல்லன் அவ்வுருக் குற்றி எனக் கூறல் வேண்டும்; அங்ஙனங் கூறவே சொற்பல்குதல் என்னும் விடை வழுவாம். அவ்வழு வாராது 'மெய்தெரி பொருள்மே லன்மையும் விளம்புப' என்றார். (௨௫)

## திணைவழுவமைதி

### ௩௭௭. உயர்திணை தொடர்ந்த பொருள்முதல் ஆறும் அதனொடு சார்த்தின் அத்திணை முடிபின.

எ - ன். திணை வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. 'மகனன்றுகுற்றி' என உதாரணங்காட்டியவர் மயிலைநாதர். இ. வி. உரையாசிரியரும் இவ்வாறு காட்டியுள்ளார். (சூ. ௨௧௯); நச்சினார்க்கினியர் 'இவ்வுரு மகனன்று குற்றி' (தொல். கிளவி. சூ. ௨௫. உரை) என்று காட்டினார்.

2. மகனன்றென்பதை, ஐந்தாம் வேற்றுமை நீக்கப்பொருளாக விரிப்பர், இளம்பூரணரும் (தொல். கிளவி. சூ. ௨௫), மயிலைநாதரும்.

3. இளம்பூரணர் வேறொருவர் கூறுவதாக 'மகனல்லன் குற்றி' என உரைப்பர். சேனாவரையரும் இங்ஙனமே கூறிவிட்டுப் பின்னர், 'இவ்வுருபு குற்றியன்று, மகனென ஐயப்புலமாகிய பொதுப்பொருண் மேலானும், குற்றியல்லன், மகனெனத் துணிபொருண்மேலானும் அன்மைக்கிளவி அன்மை சுட்டிநிற்றல் பெரும்பான்மை யென்பதாம்' என்பர் இவ்வுரு, 'குற்றியன்று மகன்' என்பதைக் காட்டுவர்-இ. வி. உரையாசிரியர் (சூ. ௨௧௯.)

(இ - ள்.) உயர்திணையைத் தொடர்ந்த அஃறிணைப் பொருளாதிய ஆறும் உயர்திணையோடு சார்த்தி முடிப்பின் உயர்திணை முடிபினவாம் எ - று.

தொடர்தலாவது அஃறிணைப்பொருளாதி ஆறும் உயர்திணைக்குக் கிழமைப்பொருள்களாய் நிற்றல்.

சார்த்தலாவது உயர்திணை எழுவாயின் பயனிலையோடு அஃறிணை எழுவாயினையும் உடன்முடித்தல்.

உயர்திணை தொடர்ந்த பொருள்முதல் ஆறு என்றமையிற் பொருள் என்பது உயர்திணைப்பொருளன்று என்பதாம்.

வ - று : நம்பி பொன் பெரியன் நாடுபெரியன் வாளுள் பெரியன் மூக்குக்கூரியன் குடிமைநல்லன் நடைகடியன் என வரும்.

'சொற்முறு மிற்றிதன்பெற்றி' என்பதனுனே கிணறு நீருறிற்று மாடு கோடு கூரிது என அஃறிணையோடு சார்த்தின் அஃறிணை முடிபினவாதலுங் கொள்க. சார்த்தின் எனவே சார்த்தாவிடின் வழாநிலையாய்ப் பொன் பெரிது மூக்குக் கூரிது எனத் தம் முடிபு கொள்ளுமென்க. பொன் என்னும் அஃறிணை யெழுவாய், நம்பி என்னும் உயர்திணை எழுவாயினது பயனிலை யாகிய பெரியன் என்னும் உயர்திணை வினைக்குறிப்பைக் கொண்டு முடிதலின் வழுவாய், தொடர்புண்மை கருதிச் சார்த்தி முடித்த லின் அமைதியாயிற்றென்க. பொன்னினது பெருமையையுடை யன் என ஆறுமுருபு விரித்து வழாநிலையென்றால் என்னையெனின்:- வேற்றுமைப் புணர்ச்சிக்குரிய எழுத்துச சந்தியின்மையின் அது பொருந்தாதென்க. பிறவும் அன்ன. (௨௬)

திணைபால்மரபு வழுவமைதி

௩௭௪. திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினும் இழிபினும் ஒருமுடி பினவே.

எ - னின் திணை பால் மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) திணையும் பாலும் வேறுவினைப் பல பொருள்களும் விரவி நின்றவழி அவை பலவும் ஒரு முடி பினவாஞ் சிறப்பினானும் மிகுதியினானும் இழிபினானும் எ - று.

வ - று :

[1]"அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்குந்
திங்களுஞ் சான்றோரு மொப்பர்மன்—திங்கண்
மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின்."

எனவும்,

[2]"பழியஞ்சான் வாழும் பசுவு மழிவினாற்
கொண்ட வருந்தவம் விட்டானுங்—கொண்டிருந்
தில்லஞ்சி வாழும் எருது மிவர்மூவர்
செல்லுண்ட நெஞ்சிற்கோர் நோய்."

எனவும், இவை திணை விரவிச் சிறப்பினான் உயர்திணை முடிபேற்றன.

இழிந்தோரை எண்ணியபின் அதனுட் சிறப்பு என்னை யெனின் :—பசு விட்டான் எருது என்னும் மூன்றனுள் விட்டான் என்பது உயர்திணையாண் சிறப்பு. பசு எருது என்பன உயர்திணைப்பொருளவேனும் அஃறிணையாக உருவகப்படுத்தினமை யின் இங்ஙனம் அமைக்கப்பட்டன.

[3]"தன்பான் மனையா ளயலான்றலைக் கண்டு பின்னு
மின்பா லடியிற் கிவர்கின்றகைப் பேடி போலா
நன்பாற் பசுவே துறந்தார் பெண்டிர்பாலர் பார்ப்பா
ரென்பாரை யோம்பே னெனின்யா னவனாக வென்றான்."

எனவும்,

[4]"பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி யெனப்படுவார்."

எனவும், இவை திணைவிரவி மிகுதியினான் உயர்திணை முடி பேற்றன.

---

1. நாலடியார், கறுக.    2. திரிகடுகம், எக.
3. சிந்தாமணி, சசஙு.    4. ஆசாரக்கோவை, சுச.

'நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய
வசைபட வாழ்ந்தோர் பலர்கொல்புரையி
னற் பனுவ னுஅல் வேதத்
தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாகுதி பொங்கப்பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்விமுற்றி
யூப நட்ட வியன்களம்பலகொல்
யா பலகொல்லோ பெரும'

என இவை சிறப்பினான் அஃறிணை முடிபேற்றன.

[1]'எசசிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தேவர்
உச்சந் தலையோ டிவையென்ப யாவருந்
திட்பத்தாற் றீண்டாப் பொருள்'

என இவை மிகுதியினான் அஃறிணைமுடிபேற்றன.

[2]'வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்
குறுகா ரறிவுடை யார்'

எனவும்,

'மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா'

எனவும், இவை இழிபினான் அஃறிணைமுடிபேற்றன.

பன்மை யொருமுடிபின என்னாது ஒருமுடிபின என வாளா கூறினமையின்,

[3]'தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்'

எனத் திணைவிரவிச் சிறப்பினான் ஆண்பால் முடிபேற்றலும்,

[4]'தொல்லை நால்வகைத் தோழருந் துணைமணி நெடுந்தேர்
மல்லற் றம்பியு மாமனு மதுவிரி கமழ்தார்ச்
செல்வன் றாதையுஞ் செழுநக ரொடுவள நாடும்
வல்லை தொக்கது வளங்கெழு கோயிலு ளொருங்கே'

1. ஆசாரக்கோவை, ௫.
2. நேமி. சொல். ௧. உரை. மேற்கோள்.
3. யா. வி. மேற்கோள்.
4. சீவக. ௨௩௩0.

எனத் திணை விரவிச் சிறப்பினான் ஒருமை முடிபேற்றலுங் கொள்க.

[1]'நானுமென் சிந்தையு நாயகனுக் கெவ்விடத்தோந்
தானுந்தன் றையலுந் தாழ்சடையோ னாண்டிலனேல்'

என ஆண்பாலும் பெண்பாலும் விரவிச் சிறப்பினான் ஒரு முடி பேற்றன.

'சொற்றொறு மிற்றிதன் பெற்றி' என்பதனானே விரவாது எண்ணித் தோழனுந் தானும் வந்தான் தோழியுந் தானும் வந்தாள் என முடிதலுங்கொள்க. கறியுஞ்சோறும் உண்டான், மாலையும் முடியுங் கவித்தான், குஞ்சமுங் குடையுங் கவித்தான், சாந்தமு மாலையுந் தழுவினான் என வேறுவினைப் பல்பொருள் விரவிச் சிறப்பினான் ஒருமுடிபேற்றன. பிறவும் அன்ன.

இங்ஙனம் இறுதிக்கண் கூறிய மரபுவழுவமைதி 'வேறு வினைப் பல்பொருடழுவிய பொதுச்சொலும்' என்னுஞ் சூத்திரத் தோடு மாறுகொளக் கூறலாம் பிறவெனின்:—சிறப்பு முதலிய கருதாது ஒத்தநிலைமையின் எண்ணியவழி முடியுமரபு அங்ஙனங் கூறுதலின் அது மாறுகொளக் கூறலன்றென்க.

[2]'துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை'

என உயர்திணை யெண்ணி அஃறிணை முடிபினவாய வழு யாண்டு அமைக்கப்படுமெனின், குடி என்பதனைப் பாணன்முதல் நான் கோடுங் கூட்டி உரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க.

இனிப் பால் விரவி ஒருமுடிபு ஏற்பனவற்றிற்கு ஒருவன் கொல்லோ பலர் கொல்லோ இச்செய் புக்கார் என [3]உதாரணங் காட்டின், 'ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்' என்பதனான் வந்தனவன்றி ஈண்டைக்கு ஆகாமையானும் இங்ஙனங் காட்டிய இலக்கியங்கட்கு இலக்கணம் இன்மையானும் அது காட்டலன் றென்க. (௨௭)

---

1. திருவா. கோத்தும்பி, ௧௯.

2. புறநா. ௩௩௫.

3. உதாரணங் காட்டியவர் மயிலைநாதர்; இச்சூத்திரவுரையிற் காட்டப்பட்டுள்ள சிலவற்றை அவர் வேறாகக்கொள்வர்.

## திணைபால் வழுவமைதி

௩௭௧. உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே.

**எ-னின். திணைபால் வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) உவப்புமுதலிய ஐந்தினும் பாலுந் திணை யும் வழுவி வரினும் இயல்பாம் எ - று.

பாலை முற்கூறினார் அவ்வழுவமைதி பயின்று வருதலின். இழுக்கினும் என்னும் உம்மை உவப்பு முதலியவற்றின் இழுக்கியே வருமென்னும் நியதியவல்லவென்னும் பொருள் தருகின்றது.

வ - று: தன்புதல்வனை என்னம்மை வந்தாள் என்பது உவப்பின் ஆண்பால் பெண்பாலாயிற்று. ஒருவனை அவர் வந்தாரென்பது உயர்வின் ஒருமைப்பால் பலர்பாலாயிற்று. [1]'தாதாய் மூவேழுலகுக்குந் தாயே' என்பது சிறப்பின் ஆண்பால் பெண் பாலாயிற்று.

[2]'எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்'

என்பது செறலிற் பலர்பால் ஒருமைப் பாலாயிற்று. பெண்வழிச் செல்வானை நோக்கி இவன் பெண் என்பது இழிவின் ஆண்பால் பெண்பாலாயிற்று. ஓர் ஆவினை என் அம்மை வந்தாள் என்பது உவப்பின் அஃறிணை உயர்திணையாயிற்று.

[3]'செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோ ரின்னுரை
தந்தாரேற் றந்தாரென் னின்னுயிர்'

என்பது உயர்வின் அஃறிணை உயர்திணையாயிற்று.

[4]'தம்பொரு ளென்பதம் மக்கள்'

என்பது சிறப்பின் உயர்திணை அஃறிணையாயிற்று.

[5]'ஏவவுஞ் செய்கலான் தான்தேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்'

---

1. திருவாசகம், புணர்ச்சிப்பத்து, ௬.
2. திருக்குறள், ௧௪௪. 3. சீவக: ௧0௩௬.
4. ,, : ௬௩.
5. ,, : ௮௪௮; இதனை இழிப்பின்கண் அஃறிணையாயிற் றென்பர் மயிலைநாதர்.

என்பது செறலின் உயர்திணை அஃறிணையாயிற்று. நாம் அரன் உடைமை என்பது இழிப்பின் உயர்திணையஃறிணையாயிற்று. பிறவும் அன்ன.

'சொற்றொறு மிற்றிதன் பெற்றி' என்பதனுனே புதல்வனை அப்பன் வந்தான் என்றும் புதல்வியை அம்மை வந்தாள் என்றும வரும் மரபுவழுவமைதிகளுங் கொள்க. இவ்வழுவமைதி உருவக உவமைகளின் வழுவி அமைவனவொழியக் கொள்க. (௨௮)

## பாலிட வழுவமைதி

௩௮௦. ஒருமையின் பன்மையும் பன்மையின் ஒருமையும்
ஓரிடம் பிறஇடந் தழுவலும் உளவே.

**எ - னின். முற்கூறிய உவப்பு முதலிய காரணத்தானன்றி அமைந்த பால்வழுவமைப்பும் அவ்வாறு அமைந்த இடவழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) ஒருமைப்பாலின்கண் பன்மைச்சொல்லைத் தழுவிக் கூறுதலும், பன்மைப் பாலின்கண் ஒருமைச் சொல்லைத் தழுவிக் கூறுதலும் ஓரிடத்தின்கண் பிறவிடச் சொல்லைத் தழுவிக்கூறுதலும் உளவாம் எ - று.

**வ - று:** வெயிலெல்லா மறைத்தது மேகம், இக்குளத்து நீரெல்லாங் கொண்டுய்த்தான் இவன் எனவும்; இரண்டுகண்ணுஞ் சிவந்தது, [1]'இருநோக் கிவளுண்க ணுள்ளது' எனவும்; அஃறிணைக்கண் ஒருமையிற் பன்மையும பன்மையின் ஒருமையும் வந்தன. [2]'அஃதை தந்தை யண்ணல் யானை யடுபோர்ச் செழியர்' எனவும்;

'புலைய னெறிந்த பூசற் றண்ணுமை
யேவ விளையர் தாய்வயி று கரிப்ப'

எனவும்; உயர்திணையொருமையிற் பன்மையும் பன்மையினொருமையும் வந்தன. 'சாத்தன்றாயிவை செய்வலோ.'

[3]'கல்வியெ னென்னும் வல்லாண் சிறாஅன்
ஒள்வே னல்ல னதுவா யாகுதல்'

என்பது தன்மையின்கட் படர்க்கை வந்தது.

---

1. திருக்குறள், ௧௦௯௧. 2. அகநா. ௯௬.
3. புறநா. ௩௪௩.

[1]"திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செருக்க லாகு
நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ண லாகு
மொண்பொரு ளாவ தையா வுடன்பிறப் பாக்க லாகா
வெம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக் கரிய தென்றான்"

என்பது முன்னிலைக்கண் படர்க்கை வந்தது. நீயோ அவனோ யாரிது செய்தார், யானோ அவனோ யாரிது செய்தார், நீயோ யானோ யாரிது செய்தார், நீயோ அவனோ யானோ யாரிது செய்தார் என விரவி ஓரிடத்தின்கண் பிறவிடம் வருதலுங் கொள்க. பிறவும் அன்ன.

ஒருபாற்பொருளை மற்றொருபாற் சொல்லானும் ஓரிடப் பொருளை மற்றோரிடச் சொல்லானுங் கூறுதலின் வழுவாய் அவை சான்றோர்க்கு ஒப்ப முடிந்தமையின் அமைதியாயின.

[2]'ஒருவீ ரொருவீ ரொப்பினிர் கழியின்' யான் எம்மூர் புகுவன் என்பன ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதியெனின்:— ஒருவீ ரொருவீ ரொப்பினை கழிவை யெனின் வழாநிலையாக வேண்டும். அங்ஙனம் ஆகாமையின் 'ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்' என்னுஞ் சூத்திரத்துள் 'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்பதனான் அமைந்த வழாநிலையாம். யான் எம்மூர் புகுவன் என்புழித் தன் கிளையினைத் தன்னொடு படுத்து எம்மூர் என்றலின் வழாநிலையாம். இத்தொடக்கத்து வழாநிலைகளை இவ்வழுவமைதியாக [3]உதாரணங் கூறுவார் கூற்றையெல்லாம் உய்த்துணர்ந்து கொள்க. (௨௬)

## இடம் வழுவாமற் காத்தல்

௩௪௧. தரல்வரல் கோடைசேலல் சாரும் படர்க்கை
எழுவாய் இரண்டும் எஞ்சிய ஏற்கும்.

எ - னின். **இடம் வழுவற்கவேனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) இந்நால்வகைச் சொற்களையும் படர்க்கை சாரும் இவற்றுண் முதற்கண் நின்ற தரல் வரல் என்னும் இருவகைச் சொற்களையுந் தன்மை முன்னிலைகள் ஏற்கும் எ - று.

1. சிந்தாமணி, ௧௭௬0. 2. மலைபடு. ௨௪௮.
3. உதாரணங் கூறுபவர் மயிலைநாதர்.

தரல் வரல் கொடை செலல் என்பன அப்பகுதிகளை உணர்த்தி நின்றன.

வ - று: அவனுக்குத் தந்தான், அவன்பால் வந்தான், அவனுக்குக் கொடுத்தான், அவன்பாற் சென்றான் எனவும்; எனக்குத் தந்தான், என்பால் வந்தான் எனவும்; நினக்குத் தந்தான், நின்பால் வந்தான் எனவும் வரும். இப்பகுதியிற் பிறந்த ஏனை வினை விகற்பங்களோடுந் தொழிற்பெயரோடும் இவ்வாறே ஒட்டுக.

இவை படர்க்கை இவை தன்மைமுன்னிலை என்னாது சாரும் ஏற்கும் என்றமையான், [1]இடவிகுதிகள் போல் [2]இவை இடைப் பகுதிகளாகாது அவ்விடங்கட்கு இயைந்த மரபினவாம் என்பதூஉம், தரல் வரல் என்னும் இரண்டனையுந் தன்மை முன்னிலைக்குங் கூட்டினமையிற் படர்க்கைக்கே சிறந்தன கொடை செலல் என்னும் இரண்டும் என்பதூஉம், ஏனைத் தரலும் வரலும் அத்துணைச் சிறப்பினவல்ல என்பதூஉம், இந்நெறி மயங்கி [3]எனக்குக் கொடுத்தான், என்பாற் சென்றான், நினக்குக் கொடுத்தான், நின்பாற் சென்றான் எனவரின் முன்னர்க்கூறிய இடவழுவமைதியின் பாற்படும் என்பதூஉம் பெற்றாம். படர்க்கைக்குப் பின்னைய இரண்டுஞ் சிறந்தும் முன்னைய இரண்டும் அத்துணைச் சிறப்பின்றியும் வருதல் காட்டிய உதாரணங்களுள் காண்க. (௩௦)

**காலம்**

## ௩௮௨. இறப்பெதிர்வு நிகழ்வெனக் காலம் மூன்றே.

**எ - னின். முன்னர் வழுவுணர்த்துஞ் சூத்திரத்துள் முதற்கண் நின்ற திணைபால் இடங்களின் பெயரும் முறையுந் தொகையும் பெயரியலுள் போந்தமையின் அவற்றை ஒழித்து இறுதிக்கண் நின்ற காலமுதல் நான்கினையும் உணர்த்தனல்லது அவற்றின் வழுவும் வழாநிலையும் வழுவமைதியுந் தோன்றமையின் அவற்றுள் காலத்தின்பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.**

---

1. "ஈங்கு - இங்கு முதலியன தன்மை முன்னிலைகட்கும், ஆங்கு - அங்கு முதலியனவும், போதல் - புகுதல் முதலியனவும் படர்க்கைக்குரிய எனவும் கொள்க" என்பர், இராமாநுச கவிராயர்.

2. சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் இவற்றை முதனிலை தாமே இடஞ்சுட்டி நிற்பனவென்பர்; (தொல். கிளவி. சூ. உஅ உரை.)

3. இவை பராமுகமாகக் கருதியவிடத்து வருமென்பர், மயிலைநாதர்.

பிறிதோர் இலக்கணங் கூறியழகத்தான் முன்னர் விளங்கிக் கிடந்த கால விகற்பங்களை ஈண்டுத் தொகுத்து உணர்த்தினமை யின் இது முடிந்தது முடித்தல் என்னும் உத்திக்கு இனம்.

(இ - ள்.) முன்னர்க் கூறிய காலம் இறந்த காலமும் எதிர்காலமும் நிகழ்காலமும் என மூன்றாம் எ - று.

யாதொரு பொருளுந் தோன்றுமளவில் தோன்றி வளருமள வின் வளர்ந்து முதிருமளவின் முதிர்ந்து அழியுமளவின் அழியு மன்றி உயிர்கள் வேண்டியவாறு ஆகாமையின் அவற்றை அவ்வளவின் அவ்வாறு இயற்றுவது காலம் எனவும் அதனுல் இயலும் பொருள்களின் தொழில் இறந்ததும் எதிர்வதும் நிகழ் வதுமாதலின் அவ்வாறு இயற்றுங் காலமும் மூன்று கூற்றதாம் எனவும் உய்த்துணர்தலின், இங்ஙனம் உணராது [1]காலமின் றெனவும் நிகழ்காலம் ஒன்றுமே எனவும் இறந்தகாலம் எதிர் காலம் இரண்டுமே எனவுங் கூறுவார் கூற்றைவிலக்கிக் காலம் மூன்றே என்ருர். இதன் திறம் இன்னும் விரித்துரைப்பிற் பெருகும். நிகழ்காலம்போல வெள்ளிடைப் பொருளன்றி இறந்த காலம் எதிர்காலம் இரண்டும் மறைபொருளாய் நிற்றலின் இறப்பு நிகழ்வு என்னுது இறப்பெதிர்வு என்ருர். (௩௪)

கால வழுவமைதி

௩௫௩. முக்கா லத்தினும் ஒத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே.

எ - னின். காலவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தந்தொழில் இடையறாது முக்காலத் தினும் ஒருதன்மையவாய் இயலும்பொருள்களை நிகழ் காலத்தாற் கூறுவர் புலவர் எ - று.

வ - று: அவனியைத் தாங்கி அரசர் இருக்கின்ருர், நினக் குத் துணை யான் இருக்கின்றேன், எனக்குத்துணை நீ இருக்கின்

1. தொழிலாவது, பொருளினது புடைபெயர்ச்சியாகலின் அஃது ஒருகணம் நிற்பதல்லது இரண்டுகணம் நில்லாமையின் நிகழ்ச்சி யென்பதொன்று அதற்கு இல்லையாயினும் உண்டல் தின்றலெனப் பஃறொழிற்றொகுதியை ஒரு தொழிலாகக் கோட லின், உண்ணுநின்ருன், வாராநின்ருனென நிகழ்ச்சியும் உடைத் தாயிற்று; (தொல் வினை. சூ. ௩, உரை) என்றும் சேனவரையர் உரை நிகழ்காலமின்றென்பார் கொள்கைக்குரிய காரணத்தைப் புலப்படுத்துகின்றது.

ருய், தெய்வம் இருக்கிறது, நிலங் கிடக்கிறது; மலை நிற்கிறது, யாறு ஒழுகுகிறது என வரும்.

இதற்குச் செய்யும் என்னும் முற்றை [1]உதாரணம் காட்டுவாரும் உளர். அது பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையாக வரும் முக்காலத்தினும் ஒத்தியல் பொருட்கு இயையாமையானும் அவ்வழக்கின்மையானும் அது பொருந்தாதென்க. யாறு ஒழுகும் தீச்சுடும் என வழங்குமாலோ எனின், அது ஒழுகுந் தன்மையுடையது சுடுந்தன்மையையுடையது என்னும் பொருட்டாய் நிற்றலின், 'இயற்கைப்பொருளை யிற்றெனக் கிளத்தல்' என்னுஞ் சூத்திரத்தின்பாற் படுமென்க. யாறொழுகுவது தீச்சுடுவதென்பதும் அது.

(௩௨)

௩௮௪ விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும்
பிறழவும் பெறூஉமுக் காலமும் ஏற்புழி.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) விரைவு மிகுதி தெளிவு என்னும் மூன்று காரணத்தினானும் இக்காரணம் இன்றியும் முக்காலங்களும் ஒன்று ஒன்றாகக் கூறப்படும், ஏற்குமிடத்து எ - று.

காரணமின்றி என்பார் இயல்பினும் என்றும், பிறழ்தல் ஒருதலை அன்றென்பார் பிறழவும் என்றும், விரைவு முதலிய நானினுந் தனித்தனி முக்காலங்களும் முறையே பிறழா என்பார் ஏற்புழி என்றுங் கூறினார்.

வ - று: சோறு வேவாநிற்ப அஃதுண்டுபோதற் பொருட்டாக விருந்தோரொருவனைப் புறத்து நின்றாரொருவன் இருவரும் போகவேண்டுங் குறையுடைமையின் இன்னும் உண்டிலையோ என்றால் உண்டேனுண்டேன் என்னும், உண்ணா நின்றானும் உண்டேனுண்டேன் என்னும், இவை விரைவின் எதிர்காலமும் நிகழ்காலமும் இறந்தகாலமாயின.

அக்காட்டிற்புகிற் கூறைகோட்பட்டான். கள்வான் நினையிற் கையறுப்புண்டான். இது மிகுதியின் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. கூறைகோட்படுதலுங் கையறுப்புண்ணுதலுந் தவறி

1. உதாரணங் காட்டுபவர் மயிலைநாதர். "முந்நிலைக் காலமுந் தோன்றும்" (தொல். வினை. சூ: ௪௩.) என்பதன் உரையில் உரையாசிரியர்கள் எல்லோரும் இவ்வாறே காட்டியுள்ளார்கள்; இ. வி. உரையாசிரியர் கொள்கையும் இதுவே; சூ. ௩௦௩. உரை.

னுந் தவறுமாதலின் இது மிகுதியாயிற்று. அறஞ்செயிற்சுவர்க்கம் புக்கான், எறும்பு முட்டைகொண்டு திட்டையேறின் மழை பெய்தது. இது தெளிவின் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. உரையளவையானுங் காட்சியளவையானும் இவற்றிற்கு இவை காரணமாகத் தெளிந்தமையின் இது தெளிவாயிற்று.

யாம் பண்டு விளையாடுவது இக்கா, யாம் பண்டு விளையாடு திறது இக்கா. இது காரணமின்றி இயல்பினான் இறந்தகாலம் எதிர்காலமும் நிகழ்காலமுமாயிற்று பிறவும் அன்ன.

இவ்வுதாரணங்களுள் சிலவற்றை [1]மாறிக்காட்டுவாருமுளர். அவை பொருந்தாமை அப்பொருள்களான் உணர்க. உழுது வருக உண்டு வருக என்புழி உழுது உண்டு என்பனவற்றையும் இயல்பின் எதிர்காலம் இறந்தகாலமாய் மயங்கின [2]என்பாருமுளர். வருதலை நோக்குங்கால் அவை இறந்தகாலமேயாதலின் வழாநிலையாமென்க. (௩௩)

## அறுவகை வினா

௩௪௫. அறிவறி யாமை ஐயுறல் கோளல்கோடை
ஏவல் தரும்வினா ஆறும் இழுக்கார்.

எ - னின். வினாவின் பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறிவு முதலியன தருதலான் வரும் வினா ஆறனையுங் களையாது கொள்வர் புலவர் எ - று.

வ - று: ஆசிரியன் இச்சூத்திரத்திற்குப் பொருள் யாதென்பது அறிவினா. மாணாக்கன் அவ்வாறு கூறுவது அறியாவினா. குற்றியோ மகனோ என்பது [3]ஐயவினா. பொன் உளவோ மணி உளவோ என்பது கொளல் வினா. சாத்தற்கு ஆடையில்லையோ வென்பது கொடைவினா. சாத்தா உண்டாயோ என்பது ஏவல் வினா.

---

1. மாறிக்காட்டுவார் மயிலைநாதர்; தொல்காப்பிய வினையியலில், "மிக்கதன் மருங்கின்" என்னும் சூத்திரவுரையில் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்னும் மூவரும் இவ்வாறே காட்டியுள்ளார்கள்; இ. வி. உரையாசிரியர் கொள்கையும் இதுவே; சூ. ௩௦௪, உரை.

2. என்பவர் மயிலைநாதர்.

3. 'ஐயத்தால் வரும் வினா உண்மையுணர்தற்கும் கோடற்கும் வரும்' என்பர் மயிலைநாதர்.

இவற்றுள் அறிவும் அறியாமையும் இவ்விரண்டும் விரவிய ஐயமுமன்றி வினாவைத் தருவதொன்று இன்மையின் அவற்றை முற்கூறி ஏனையவும் அவற்றின்கண் அடங்குமேனுங் கொளல் தொடை ஏவல் என்னும் பொருள் விசேடத்தான் வேறு விதந்து பிற்கூறி மூன்றாகற்பாலனவற்றை ஆறாகக் கூறுதல் தொன்று தொடு நெறி என்பார் ஆறும் இழுக்காரென்றுங் கூறினார்.

[1]"அறியான் வினாவ லறிவொப்புக் காண்டல்
ஐய மறுத்த லவனறிவு தான்கோடன்
மெய்யவற்குக் காட்டலோ டைவகை வினாவே."

என்னும் ஒருசாராசிரியர் கூற்றினுள்ளும் பின்னைய இரண்டும் முன்னைய மூன்றனுள் அடங்கும் என்பது தோன்ற அவற்றை முற்கூறுதல் காண்க. (கூ௫)

## எண்வகை விடை

கூ௮கூ. சுட்டு மறைநேர் ஏவல் வினாதல்
உற்ற துரைத்தல் உறுவது கூறல்
இனமொழி எனும்எண் இறையுள் இறுதி
நிலவிய ஐந்தும்அப் பொருண்மையின் நேர்ப.

எ - னின். இறையின் பெயரும் முறையுந் தொகையும் வழு வமைதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விறை எட்டனுள், முன்னைய மூன்றுஞ் செவ்வனிறையாம்; பின்னைய ஐந்தும் இறைப்பொருள் பயத்தலின் இறையாகத் தழீஇக்கொள்வர் புலவர் எ - று.

எனவே இறையாவது செவ்வனிறையும் இறை பயப்பதும் என இருகூற்றதாம் என்க.

வ - று: வஞ்சிக்கு வழி யாது என்றவழி இதுவென்றும் 'மாவீழ் நொச்சி' என்பதற்குப் பொருள் யாது என்றவழி வண்டு வீழ்ந்து தேனுண்ணும் நொச்சிப்பூ என்றுங் கருதிக் கூறுந் தொடக்கத்தன எல்லாஞ் சுட்டு. சாத்தா இது செய்வாயோ என்றவழிச் செய்யேன் என்பது மறை. செய்வேன் என்பது நேர். நீ செய் என்பது ஏவல். செய்வேனோ என்பது வினாதல். இவ்வோகார இடைச்சொற்கு எதிர்மறை முதலிய பொருள் விலக்கி ஆற்றலான் வினாப்பொருளே கொள்க. உடம்பு நொந்தது

1. நேமி. சொல். ௯ : மேற்கோள்.

நோவாநின்றது என்பது உற்றதுரைத்தல். நோவாநின்றதென்பது நிகழ்காலமாயினும் நோவெழுந்த காலங் கருதி உற்றதுரைத்த லாயிற்று. உடம்பு நோமென்பது உறுவது கூறல். மற்றையது செய்வேன் என்பது இனமொழி. இறை பயப்பனவற்றுள் வினா வெதிர் வினாதல் ஒன்றும் நேர்தற் பொருளையும் ஏனைய நான்கும் மறைப்பொருளையும் பயத்தல் காண்க.

இறை பயப்பனவற்றை நிலவியவென விசேடித்தமையின் நிலவாதனவுஞ் சிலவுளவெனப் பொருளுரைத்துச் செய்கேனோ என எதிர்மறை ஓகாரமாயும், யானோ செய்வேன் எனச் சிறப்பு ஓகாரமாயும் நின்று செய்யேன் என்றும் இறைப்பொருள் பயந்து வருதலும் பிறவுங் 'கங்கையாடிப் போந்தேன் ஒரு கூறை யீக' என வினாவில்வழி இறைநிகழ்தலுங் கொள்க. (௩௫)

## வினா விடைகளின் முதல் சினை வழுவாமை

௩௩௭. வினாவினும் செப்பினும் விரவா சினைமுதல்.

எ - னின். வினாவுஞ் செப்பும் முதல்சினை ஒற்றுமை கருதி வழுவக் கூறின் அமையாவெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினாவுதற்கண்ணுஞ் செப்புதற்கண்ணுஞ் சினைமுதல்கள் ஒற்றுமை கருதி மயங்கக்கூறப்படா எ - று.

வ - று: கண் பிறழ்ந்ததோ கயல் பிறழ்ந்ததோ சாத்தனல் லனோ கொற்றனல்லனோ எனவும்; இவ்வாறு வினாவினார்க்குக் கண் பிறழ்ந்தது கயல் பிறழ்ந்தது சாத்தனல்லன் கொற்றனல்லன் எனவும் வரும். பிறவும் அன்ன.

எனவே கண் பிறழ்ந்ததோ எனச் சினையை வினவுவான் அதனை ஒழித்து அதனையுடையாளைக் கருதி இவள் பிறழ்ந்தாளோ கயல் பிறழ்ந்ததோ என வினவுதலும் இவள் பிறழ்ந்தாளெனச் செப்புதலும் இவ்வாறு முதலை வினவுவானுஞ் செப்புவானும் அதனை ஒழித்துச் சினையை வினவுதலுஞ் செப்புதலும் வழுவாம் என்பதாயிற்று. இங்ஙனமாயிற் குயிலோ கிளவி என வினவுவான் குயிலிசையைக் குயிலோ என்று வினவுதல் வழுவாம் பிற வெனின்:—அவ்வாறு கூறுவான் குயிலைக் கருதாது அதன் இசையையே கருதிக் கூறுதலானுங் குயிலிசையோ கிளவி என இசை என்னுஞ் சொல் எஞ்சி நிற்றலானும் இத்தொடக்கத்தன வழுவாகாவென்க. (௩௬)

## மரபு

௩௩௮. எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே.

எ - னின். மரபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) யாதொரு பொருளை யாதொரு சொல்லான் யாதொரு நெறியான் அறிவுடையோர் சொன்னார்களோ அப்பொருளை அச்சொல்லான் அந்நெறியாற் சொல்லுதல் மரபாம் எ - று.

எவ்வாறென்றது ஒரு பொருளைப் பலசொல்லானும் பல பொருளை ஒரு சொல்லானுங் கூறுதல் முதலியவற்றை என்க. அவற்றுள் சில வருமாறு: குதிரைக்குட்டி, யானைக்குட்டி எனவும்; யானைக்கன்று, பசுவின்கன்று, மான்கன்று எனவும் வரும். [1]பிறவும் அன்ன.

இஃவாறன்றிப் பசுவின்குட்டி குதிரைக்கன்று எனக்கூறின் வழுவாமாதலிற் சான்றோர் வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் பயின்றுவரும் மரபறிந்துகொள்க. (கூஎ)

மரபுவழா நிலை

கூஅகூ. வேறுவினைப் பல்பொருள் தழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்.

எ - னின். மரபு வழுவற்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெவ்வேறு வினைகட்குரிய பல பொருள்களையும் ஒருங்கு தழுவி நிற்கும் ஒரு பொதுச்சொல்லும் அவற்றின் சிறப்புச் சொற்களாய் எண்ணி நிற்கும் பல சொல்லும் ஒன்றற்குரிய சிறப்புவினை வேண்டாது எல்லாவற்றிற்கும் உரியதொரு பொதுவினை வேண்டுவனவாம் எ - று.

வ - று: அடிசில் என்பது உண்பன தின்பன நக்குவன பருகுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாகலான் அதனை அயின்றார் மிசைந்தாரென்க. அணி என்பது கவிப்பன கட்டுவன இடுவன தொடுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலின் அதனை அணிந்தார் தாங்கினாரென்க. இயம் என்பது கொட்டுவன ஊதுவனவற்றிற்கெல்லாம் பொதுச் சொல்லாதலின் அதனை இயம்பினார் படுத்தாரென்க. படை என்பது எய்வன வெட்டுவன குத்துவனவற்றிற்கெல்லாம் பொதுச் சொல்லாதலின் அதனை வழங்கினார் தொட்டார் என்க.

---

1. மயிலைநாதர் இச்சூத்திரவுரையில் மிக விரிவாக உதாரணம் காட்டியுள்ளார்.

இனி எண்ணியவழியுஞ் சிலநாட் சோறுஞ் சிலநாள் இடியுஞ் சிலநாட் பாலுஞ் சிலநாள் நீருஞ் சிலநாட் சருகும் அயின்றார் மிசைந்தாரென்க. கறியுஞ் சோறும் உண்டானென எண்ணி கறியொடு விராய சோற்றை உண்டானென்னும் பொருட்டாய்ச் சிறப்பின் ஒரு முடிபேற்பனவற்றிற்கும் இவற்றிற்கும் வேற்றுமை புணர்க. குழையும் நெடுநாணும் அணிந்தார், பறையுங் குழலும் இயம்பினார், வாளும் வேலும் வழங்கினார் என்க. பிறவும் அன்ன. (௩௯)

௩௯௦ வினைசார் பினமிடம் மேவி விளங்காப்
பலபொருள் ஒருசொற் பணிப்பர் சிறப்பெடுத்தே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) குறித்த பொருளை விளக்கும் வினையினை யுஞ் சார்பும் இனமும் இடமும் முதலிய பெயரினையும் பல பொருளொருசொல் பொருந்தி விளங்கிக் கிடந்ததேல் அதனை வாளா கூறி, அவ்வினை பெயர்களைப் பொருந்தா மையால் விளங்காது கிடந்ததனைச் சிறப்போடு கூட்டிக் கூறுவர் புலவர் எ - று.

பாகுவெறுவலை தின்றான் என்றாற் சுண்ணம்புங் கர்ப்பூர மும் உடன் தின்றானென்பது தழீஇக்கோடல்போற் சார்பு இனம் இடமெனச் சிறந்தன எடுத்தோதி ஏனைய பெயர்களையுந் தழீஇக் கோடலின் முதலியவென்றாம். அன்றி இனைத்தென்றறி பொரு ளெனக் கூறுதலும் ஒன்று.

மேவி என்னும் வினையெச்சம் விளங்கா என்பதன்கண் முத னிலையோடு முடிந்தது.

வ - று: மா என்பது மாமரத்திற்கும் வண்டிற்கும் ஒருசார் விலங்கிற்குந் திருவிற்கும் பொதுவான பலபொருளொருசொல். இப்பொருள்களுள் மாப்பூத்தது காய்த்தது என்ற துணையானே மரம் என்பது வினையான் விளங்கிற்று. 'மாவீழ்நொச்சி மணிக்குர லூழ்த்தது' என்ற துணையானே வண்டு என்பது சார்பால் விளங்கிற்று. சேனை யானை தேர் மாச் சதுரங்கம் என்ற துணை யானே குதிரை என்பது இனத்தான் விளங்கிற்று. 'சொற்பெறு மிற்றிதன் பெற்றி' என்பதனானே இதனுள் சேனை என்பது யானை முதலிய மூன்றறுப்பினையும் ஒழித்துக் காலான்மேற் சேறலும் இவ்விதியின்பாற்படுத்துக. "[1]மாமறுத்த மலர்மார்பு' என்ற துணையானே திரு என்பது இடத்தான் விளங்கிற்று. இவை

1. புறநா. எ.

வாளா கூறப்பட்டன. இனி மா எறிஞன் மா யாது என்றவழிக் குறித்த பொருள் விளங்காமையின் விளங்குதற்பொருட்டுப் பாய்மா எறிஞன், மாமரத்தின்கண் எறிஞன், பாய்மா யாது, மாமரம் யாது எனச் சிறப்போடு கூட்டிக் கூறுக. பிறவும் அன்ன. (௩௯)

௩௯௧. எழுத்தியல் திரியாப் பொருள்திரி புணர்மொழி
இசைத்திரி பால்தெளி வெய்தும் என்ப.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) எழுத்தினது இயல்பு வேறுபடாது பொருள் வேறுபட்டுச்சொல்லும் பொருளும் ஐயுறநிற்குந் தொடர்மொழிகள் அங்ஙனங் குறித்துக் கூறுஞ் சொற்களின் இறுதியும் முதலுந் தோன்ற இசையறுத்துக் கூறும் வேறுபாட்டால் துணியப்படும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

எனவே அவ்வாறு இசையறுத்துக் கூறுதல் மரபென்பதாயிற்று.

வ - று: [1]செம்பொன்பதின்றொடி, [2]நாகன்றேவன்போத்து, [3]தாமரைக்கணியார், [4]குன்றேறுமா, [5]குறும்பரம்பு, [6]ஆற்றுக்கரை, [7]செம்பருத்தி என்றற்றொடக்கத்தனவற்றை அவ்வாறு இசையறுத்து உச்சரித்துக் காண்க. (௪0)

மரபுவழாநிலையும் வழுவமைதியும்

௩௯௨. ஒருபொருள் மேற்பல பெயர்வரின் இறுதி
ஒருவினை கொடுப்ப தனியும் ஒரோவழி.

எ - னின். மரபு வழூவற்கவெனக் காத்தலும் அதன் வழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. செம்பொன்+பதின்றொடி; செம்பு+ஒன்பதின்றொடி.
2. நாகன்+தேவன்+போத்து; நாகு + அன்றே + வன் போதித்து.
3. தாமரை+கணியார்; தாம்+அரைக்கு+அணியார்.
4. குன்று+ஏறு+மா; குன்று+ஏறு+ஆமா.
5. குறுமை+பரம்பு; குறும்பர்+அம்பு.
6- ஆறு+கரை; ஆற்றுக்கு+அரை.
7. செம்மை+பருத்தி; செம்பு+அருத்தி; செம்பர்+உத்தி.

(இ - ள்.) ஒருபொருண்மேற் பல பெயர் வருமாயிற் பொருளொன்றே என்பது தோன்ற இறுதிக்கண் ஒருவினை கொடுத்துக் கூறுவர் ஒரு பொருளாதல் தவறுதவழிப் பெயர்தோறுங் கொடுத்துக் கூறுவர் புலவர் எ - று.

ஒருபொருட்கு ஒருமுடிபென்பார் ஒருவினை கொடுப்ப என்று ரன்றி ஒருபெயர் கொடுத்தலை ஒழித்தாரல்லரென்க.

வ - று : ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான் எனவும் ; [1]பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியிவன் எனவும்,

[2]'குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான்
கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங் காக்குங் கருங்கட்செவ்வாய்
மயிலைச் சிலம்பகண் டியான்போய் வருவன் வண் பூங்கொடிகள்
பயிலச் சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறையே.'

எனவும்,

[3]'பொருப்பர்க் கியாமொன்று மாட்டேம் புகலப் புகவெமக்காம்
விருப்பர்க் கியாவர்க்கு மேலர்க்கு மேல்வரு மூரெரித்த
நெருப்பர்க்கு நீடம் பலவருக் கன்பர் குலநிலத்துக்
கருப்பற்று விட்டெனக் கொய்தற்ற தின்றிக் கடிப்புனமே.'

எனவும், இவை இறுதிக்கண் ஒருவினையும் பெயருங் கொடுக்கப் பட்டன. இனிப் பெயர்தோறுங் கொடுக்குமாறு :

[4]"மின்றோய் வரைகொன்ற வேலோன் புகுதக
இன்றேன் கமழ்தா ரியக்கன் புகுதக
வென்றேன் புகுதக வேலோன் புகுதக
என்றே நகர மெதிர்கொண் டதுவே"

என வரும். பிறவும் அன்ன.

1. பாண்டியன்...பெருவழுதி : இவன் பல யாகங்களைச் செய்தவன் ; இவன் வரலாற்றைப் புறநானூற்றில் காணலாம்.
2. திருக்கோவையார், ௯0.
3. " ௧௪௯.
4. சீவக. ௨௧௨௨.

௩௯௩. திணைநிலம் சாதி குடியே உடைமை
குணம்தொழில் [1]கல்வி [2]சிறப்பாம் பெயரோ
டியற்பெயர் ஏற்றிடின் பின்வரல் சிறப்பே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) திணைமுதலாகக் கல்வி ஈறாக விதந்தன முதலியபற்றி வருஞ் சிறப்புப் பெயருடனே இயற்பெயரை ஒருபொருள் ஒருங்கு ஏற்குமாயின் அவ்வியற்பெயர் பின் வருதல் சிறந்த மரபாம் எ - று.

ஏற்றற்கு வினைமுதல் ஒருபொருள் என்பது மேலைச் சூத்திரத்தாற் பெற்றாம்.

சிறப்பே என்றமையான் முன்வரும் என்பதூஉம் அது வழுவமைதி என்பதூஉம் பெற்றாம்.

வ-று: குன்றவன் கொற்றன், அரிவாளனழகன், பார்ப்பான் பாராயணன், ஊர்கிழானேனன், பொன்னன் பொறையன், கரியன் கம்பன், நாடகி நம்பி, ஆசிரியனமிழ்தன் என வரும். இவை இயற்பெயர் பின் வந்தன. இனிக் கொற்றன் குன்றவன் அழகனரிவாளன் என முறையே இயற்பெயர் முன்னும் வருதல் காண்க. இன்னும் இயற்பெயர் முன்னும் வருங்கால் வெண்கொற்றப் படைத்தலைவன் வெள்ளைறக்காவிதி என இறுதி விகாரமாய் வருதலுங் காண்க. பிறவும் அன்ன. (௪௨)

௩௯௪. படர்க்கை மூப்பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை எனின்பெயர்க் கெங்கும்
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி.

எ - னின். இதுவும் அது

---

1. "கல்வி சிறப்பாம் பெயரோடு என்புழி கல்வி முதலிய சிறப்புப்பெயருடனே எனக்கொண்டு, முதலிய என்றது தவம், ஆள்வினை, உறுப்பு முதலியவும், பிறவும் தழுவுதற்கு எனப் பொருள் விரித்து, அவை வருமாறு: முனிவன் அகத்தியன், படைத்தலைவன் சாத்தன், முடவன் முருகன், குருடன் கொற்றன் எனக் காண்க" என்பர் இராமாநுச கவிராயர்.

2. சிறப்பென்பதனைத் தனியே ஒன்றாகக்கொண்டு "ஏனாதி ஏறன்" என உதாரணங் காட்டுவர் மயிலைநாதர்; சிறப்பு-மன்னர் முதலியவர்களாற் பெறும் வரிசை; (தொல். கிளவி. சூ. ௪௧) உரையைப் பார்க்க.

(இ - ள்.) படர்க்கை இடத்தவாகிய உயர்திணைப் பெயர் அஃறிணைப்பெயர் விரவுப்பெயர் என்னும் மூவகைப் பெயரோடு சுட்டுப்பெயர் சாரின் அச்சுட்டுப்பெயர் அம் மூவகைப் பெயர்க்கும் பின் வரும் அவ்வழி வினை நிகழ்வுறு மெனின், வினைநிகழ்ச்சியின்றேல் அப்பெயர்க்குப் பின்னும் முன்னும் வரும் இம்மரபு வழக்கின்கண்ணவாம்: செய்யுட்கண்ணேயெனின் நியதியின்றி வேண்டியவாறே வரப்பெறும் எ - று.

வ - று: நம்பி வந்தான் அவற்குச் சோறிடுக; எருது வந்தது அதற்குப் புல்லிடுக; சாத்தன் தெய்வம் அதற்குப் பலி யிடுக; சாத்தன் வந்தது அதற்குப் புல்லிடுக என வினை நிகழ் வழிச் சுட்டுப்பெயர் பின் வந்தன வந்தான் நம்பி அவற்குச் சோறிடுகஎனவும் முறையே ஒட்டுக. இவற்றுள் சாத்தன் தெய்வம் என்புழி வினையின்றிப் பெயர் வந்ததாலோவெனின்:— படர்க்கைமுப்பெயரும் தனித்து நில்லாது பெயர்வினைகளைக் கொண்டு முடிந்தும பெயர்வினைகட்குப் பயனிலையாயும் புடை பெயரும் புடைபெயர்ச்சியை வினையென்றும் அப்புடை பெயர்ச்சி யுள்வழிச் சுட்டுப்பெயர் வரிற் பின் வருமென்றுங் கூறினானன்றி இவ்வினையை வினையென்றானல்லனென்க.

மைந்தன் பிறந்தான் அதனால் தந்தை உவக்கும் என்புழி அதுவென்னுஞ் சுட்டு மைந்தனை அணைந்ததில்லையாலோ வெனின்:—அவன் தற்கிழமையாகிய பிறத்தலை அணைதலின் அவனை அணைந்ததேயாமென்க. அன்றிச் 'சொற்றொறு மிற்றிதன் பெற்றி' என்னுஞ் சூத்திரத்தான் அமைத்தலும் ஒன்று.

நம்பியவன் அவன் நம்பி எனப் பெயர்க்குப் பின்னும் முன் னுஞ் சுட்டுப்பெயர் வந்தன. ஏனைப் பெயர்களோடும் ஒட்டுக. பெயர்க்குப் பின்னும் முன்னுஞ் சுட்டுப்பெயர் வருதல் மரபா மன்றே இதனை வழுவற்கவெனக் காத்தல் எவ்வழு வாராமை கருதியெனின்:—சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனின் எனக் கூறினமையின் வினையில்வழிச் சுட்டுப்பெயர் படர்க்கை முப் பெயர்க்கும் பின்வருமோ முன்வருமோ இருமருங்கும் வருமோ வாராதொழியுமோ யாங்ஙனம் ஆங்கொல் என்னும் ஐயமறுத்தற் குக் கூறினானன்றி இது வழுவற்கவெனக் காத்தானல்லன். அக் கருத்துச் சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனில் என்றதற்கே கொள்க.

அதனை அவ்வாறு காத்தலெவ்வழு வாராமை கருதியெனின், நம்பி வந்தான் அவற்குச் சோறிடுக என்பான் அவற்குச் சோறிடுக

நம்பி வந்தான் என்றேனும் அவன் வந்தான் நம்பிக்குச் சோறிடுக என்றேனுஞ் சுட்டுப்பெயரை முன்வைத்துக் கூறின் அஃதொரு பொருள்மேல் இருபெயர் வந்ததாகாது நம்பிவேறு அவன் வேறாய் முடியும் அவ்வழு வாராமை கருதியென்க.

இனிச் செய்யுட்கு எற்புழி வருமாறு :

“ அவனணங்கு நோய்செய்தா ளாயிழாய் வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி—முகனமர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னைகொல்
பின்னை யதன்கண் விளைவு”

என வரும். செய்யுட்கண் பின்வருதல் வழுவற்கவெனக் காத்த லும் இப்பாட்டின்கண் முன்வருதல் வழுவமைதியுமாமென்க. பிறவும் அன்ன. (௪௩)

௩௯௫. அசைநிலை பொருள்நிலை இசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை அடுக்கும்.

எ - னின்.

(இ - ள்.) அசைநிலைக்கும் விரைவு வெகுளி உவகை அச்சம் அவலம் முதலிய பொருள்நிலைக்கும் இசை நிறைக்கும் ஒரு சொல் இரண்டு மூன்று நான்களவு முறையே அடுக்கும் எ - று.

எனவே, அசைநிலைக்கு இரண்டும் பொருள் நிலைக்கு இரண் டும் மூன்றும் இசைநிறைக்கு இரண்டும் மூன்றும் நான்கும் அடுக்குமென்பதாயிற்று.

வ - று: ஒக்கும ஒக்கும, அனற்ற அனற்ற எனபன அசை நிலை. உண்டேன் உண்டேன், போபோபோ என்பன விரைவு. எய்எய், எறிஎறிஎறி என்பன வெகுளி. வருக வருக, பொலிக பொலிக பொலிக என்பன உவகை. பாம்பு பாம்பு, தீத்தீத்தீ என்பன அச்சம். உய்யேன் உய்யேன், வாழேன் வாழேன் வாழேன் என்பன அவலம். இவை முதலியன பொருள்நிலை. ‘ஏஎயம்பன் மொழிந்தன ளாயே’, ‘நல்குமே நல்குமே நல்குமே காமகன்,’ [1]‘பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ’ என்பன

1. நேமி. சொல். ௰௪. உரை மேற்கோள்.

ஒரு சொல்லைப் பலகாற் கூறுதல் வழுவாயினும் இவ்விடத்தா மென்றல் வழுவமைதியும் இதற்கிவ்வெல்லை யிறவாதென்றல் வழுவற்கவெனக் காத்தலுமாமென்க. (௪௪)

## மரபு வழாநிலை

௩௬௬. [1]இரட்டைக் கிளவி இரட்டிற்பிரிந் திசையா.

எ - னின். மரபு வழுவற்கவெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) இரட்டைச் சொற்கள் அவ்விரட்டிப்பிற் பிரிந்து தனித்தொலியா எ - று.

எனவே, வலிந்து பிரித்துக் கூறிற் பொருள்படாதென்பதூஉம், இரட்டித்துக் கூறுதலே மரபென்பதூஉம் ஆயிற்று.

வ - று: [2]'சலசல மும்மதம் பொழிய' [3]'கலகல கூஉந்துணையல்லால்' [4]'குறுகுறு நடந்துஞ் சிறுகை நீட்டியும்' [5]'வற்றியவோலை கலகலக்கும்' 'துடிதுடித்துத் துள்ளிவரும்' எனவரும். துடிதுடித்து என்புழிப் பின்னையது பிரிந்திசைக்குமேனும் முன்னையது பிரிந்திசையாமையின் இரட்டைச் சொல்லேயாமென்க. ம் அன்ன. (௪௫)

௩௬௭. ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார்.

எ - னின். இதுவும் அது

(இ - ள்.) ஒருபொருள்மேற் பலபெயர் கூறுங்கால் அப்பொருளினின்றும் பிரிதலில்லாதனவற்றை நீக்காது கூறுவர் புலவர் எ - று.

எனவே பிரிவுள்ளனவற்றைக் கூறார் என்பதாயிற்று.

வ - று: ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான் என்பன, பிரிவிலவாய்ப் பலபெயரும் ஒருபொருள்மேற் சென்று கேட்போர்க்குக் கூறுவோன் கருதிய பொருள் விளக்கி நின்றன.

---

1 தொல். கிளவி. ௬. ௪௮.

2. சீவக. அ௨.

3. நாலடி. ௧௪0.

4. புறநா. ௧அஅ.

5. ,, ௨௫௬.

'வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந்
தையலாய் நீயின்று நல்கினை நல்காயேற்
கூடலார் கோவோடு நீயும் படுதியே
நாடறியக் கவ்வை யொருங்கு'

எனவும்,

'கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலு மேறும் வயக்களிறே—கைதொழுவல்
காலைக வண்ணனைக் கண்ணாரக் காணவெஞ்
சாலேகஞ் சார நட'

எனவும். சுட்டின் பொருளவாய் வரும் பெயரொடு தொக்க ஒரு பொருட் பலபெயர்களும் அன்ன.

பிரிவென்றதற்கு இவ்வாறு பொருள் கூறாது 'கொய்தளிர்த் தண்டலை' என்னும் பாட்டினுட் காலேகவண்ணஞ் சேந்தனுக்கும் பிறர்க்கும் உண்டாதலைப் பிரிவென்று கருதி இது வழு என்பாரு முளர். காலேகவண்ணம் பொதுவியல்பன்றிச் சேந்தனிற் பிரிந்த தன்றாதலானும், சேந்தனைக் களிற்றின்மேற் சேய்மைக்கண் வரக் கண்டாள் அவனைக் கண்ணாரக் காணவேண்டும் பெரு வேட்கை தந்தது அவனது காலேகவண்ணம் என்பாள் அவ்வாறு கூற வேண்டுமாதலானும், இது சான்றோர் இலக்கியமாதலானும் அது பொருளன்மை யுணர்க.

இனிப் பிரிவுளதாய் வழுவியது யாதோவெனின் :—'பகை யியல் பாயிலி படைக்கை மறவன்' என வரிற் பகையியல்பாய் இலியைப் படைக்கைமறவன் என்றல் கூடாமையிற் பிரிந்து வழுவாம் என்க. பிறவும் அன்ன. (௪௬)

### மரபு வழுவமைதி

**௩௯௮. ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா.**

**எ - னின். மரபுவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) ஒரு பொருளைக்குறித்து வரும் பல சொற்கள் அவ்வாறு வருதற்கு ஒரு காரணம் இன்றேனும் சிறந்து நிற்றலின் அவை வழுவென்று நீக்கப்படா எ - று.

சிறந்து நிற்றல் செவிக்குச் சொல்லின்பந் தோன்ற நிற்றல்.

சிறப்பினின் என்றமையாற் காரணமின்றி வந்தன என்பது பெற்றாம்.

வ - று: 'மீமிசை ஞாயிறு கடற்பாய்ந் தாங்கு,' [1]'புனிற்றிளங்கன்று', [2]'நாகிளங்கமுகு' [3]'அடுபசி யுழந்தநின் னிரும்பேரொக்கல்,' [4]'உயர்ந்தோங்கு பெருவரை,' [5]'குழிந்தாழ்ந்த கண்ணவாய்த்தோன்றி' என வரும். பிறவும் அன்ன.

இனிச் சிறப்பினின் என்றதற்கு அப்பொருளைச் சிறப்பித்தலின் எனப் [6]பொருள் கூறுவாருமுளர். அச்சொற்கு அப்பொருள் இயையாமையானும், அக்காரணத்தான் வந்தனவேல் ஈண்டு ஒருபொருள் பன்மொழியாய் வரும் பெயர்கள் ஒருபொருட் பலபெயருள் அடங்குமாதலானும், மீமிசை என்றால் மேலென்றே பொருளன்றி விசேடித்ததொரு சிறப்பின்மையானும், உண்டேல் அஃது இஃதென விதந்து கூறுவாராதலானும், அது பொருளன்றென்க.

(௪எ)

## மரபு வழுவாமற் காத்தல்

௩௬௬. இனைத்தென் றறிபொருள் உலகின் இலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பின் உம்மை வேண்டும்.

எ - னின் மரபு வழுவற்கவெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இத்துணைத்தென்று வரையறை உணரப்படும் பொருளும் எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும் அவற்றை வினைபபடுத்துக் கூறுங்கால், முற்றும்மை வேண்டி நிற்கும் எ - று.

பொருளென வேறு விதந்தமையின் உலகென்றது ஒழிந்த காலம் அனைத்தினையும் இடம் அனைத்தினையுமென்பதூஉம், இனைத்தென்று அறிபொருளென்றமையானும் உலகெனக் காலம் அனைத்தினையும் இடம் அனைத்தினையுங் கூறுதலானும் உம்மை என்றது முற்றும்மையை என்பதூஉம் பெற்றாம்.

வ - று: தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், உலக மூன்றினையும் ஒருங்குணர்ந்தான், நின்கண் வைத்த பொருள் நூற்றினையும் அவ்விருவருக்குங் கொடு, இறைவற்குக் கண்மூன்றும் முச்சுடர், இறைவற்கு உடை போர்வை இரண்டுந் தோல் என இனைத்தென் றறிபொருள் வினைப்படுத்துரைப்பின் உம்மை வேண்டி நின்றன. இவற்றுள் முச்சுடர் தோல் என்பன பெயராலோவெனின்,

1. பெரிய. திருவாரூர். ௨௨. 2. கம்ப. முதற்போர், ௨௫௬.
3. பொருந. ௬௧. 4. மலைபடு. ௪௧.
5. நாலடியார், ௪௬. 6- பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

ஈண்டு வினை என்றதூஉம் 'சுட்டுப்பெயர்பின் வரும் வினை யெனில்' என்றதுபோலும்.

பவளக்கோட்டு நீலயானை என்றுமில்லை, முயற்கோ டாகாயப்பூ என்றுமில்லை, மண்ணிற் படம் என்றுமில்லை, நூலிற் கடம் என்றுமில்லை, ஒளிமுன் இருள் என்றுமில்லை என உலகின் இல்லாத பொருள் வினைப்படுத்துரைப்பின் உம்மை வேண்டி நின்றன. எவ்விடத்தும் இல்லையெனவும் ஒட்டுக.

உம்மை வரும் என்னாது உம்மை வேண்டும் என்றமையான், அஃது இசையெச்சமாய் நிற்க அதனை வேண்டுவனவாய் 'வன்பறழ்க் குமரியிருதோ டோழர்பற்ற,' 'எருமைநாற்கா னீர்க் கீழ்வவே' எனவும்; மண்ணிற் படமில்லை, நூலிற் கடமில்லை, ஒளிமுன் இருளில்லை எனவும் வரும்.

இவ்வில்பொருளின்கண் காலப்பெயர் இடப்பெயர்களும் உடன் எஞ்சி நின்றன. இவ்வாறு வருதல் கருதாது செய்யுள் விகாரமாக உம்மை தொக்கதென்பாரும் உளர். உலகின் இல்லாப்பொருள் உள்பொருள்போற் காலத்தோடு பட்டதன் றென்பது தோன்ற என்றுமில்லை என்னாது காலத்தோடு பட்டது போல வைத்துப் பவளக்கோட்டு நீலயானை பண்டுமில்லை என எச்சவும்மை தந்து [1]உதாரணங் காட்டுவார். அது யானை குடத் தினுமில்லை குழிசியினுமில்லை என்றதுபோலும் என்க.

[2]இரட்டுற மொழிதலான், உலகின்கண் நிலையில்பொருள் வினைப்படுத்துரைப்பின் எச்சவும்மை வேண்டுமெனவும் பொரு ளுரைத்துக்கொள்க. அவை வருமாறு: செல்வமும் நில்லாது, செல்வமும் பொய் என வரும். செல்வம் நில்லாது செல்வம் பொய் என எச்சவும்மை கொடாது வாளாகூறின், இளமை யாக்கை முதலியன நிலைபெறுமெனவும் மெய்ப்பொருளெனவும் பொருள்படுமென்க. உம்மை வேண்டுமென்றதனால், செல்வம நில்லாது செல்வம் பொய் என உம்மை எஞ்சி நிற்றலுங் கொள்க.

### மரபு வழுவமைதி

௪00. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே.

எ னின். மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. உதாரணங்காட்டுபவர் மயிலைநாதர்.

2. இப்பகுதி, "மன்னைப் பொருளு மன்ன வியற்றே" (தொல். கிளவி. சூ. ௩௪) என்பதற்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையைப் பின்பற்றியதாகத் தோற்றுகிறது.

(இ - ள்.) செயப்படு பொருளைக் கருத்தாவைப்போல வைத்து அதன்மேல் வினைமுதல் வினையேற்றிக் கூறுதலும் வழக்கின்கண் உரித்தாம் எ - று.

வ - று: இம்மாடு யான் கொண்டது, இச்சோறு யான் கொடுத்தது, இவ்வெழுத்து யான் எழுதியது என வரும்.

உம்மையாற் கருமத்தைக் கருத்தாவாக இவ்வாறு கூறுதலே யன்றிக் கருவி நிலஞ் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையுமென்பது பெற்றாம். அவை வருமாறு: இவ்வெழுத்தாணி யான் எழுதியது, இவ்வீடு யான் இருந்தது, இத்தொழில் யான் செய்தது, இந்நாள் யான் பிறந்தது என வரும். இனி இல்லம் மெழுகிற்று எழுத்தாணி எழுதிற்று என [1]உதாரணங் காட்டுவாருமுளர். இல்லம் மெழுகிற்று என்பதோர் வழக்கின்மையானும், நடத்த நடந்த தேரினைப்போல ஒருவனெழுத எழுதியது எழுத்தாணியாதலின் அது தன் தொழிலேயன்றி ஒருவன் தொழிலன்றாதலானும், அவை காட்டாகா வென்க. (௪௧)

### மரபுவழுவாமற் காத்தலும் மரபுவழுமைதியும்

௪௦௧. பொருள்முதல் ஆறும் அடைசேர் மொழியினம்
உள்ளவும் இல்லவும் ஆம்இரு வழக்கினும்.

எ - னின். மரபு வழுவற்கவேனக் காத்தலும் மரபு வழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளாதி ஆறாகிய அடைகள் அடுத்து வருமொழிகள் இனமுள்ளனவேயாமன்றி இனமில்லனவுமாம் உலகவழக்கினுள்ளுஞ் செய்யுள் வழக்கினுள்ளும் எ - று.

உள்ளவுமென்னும் உயர்வு சிறப்பும்மையும் இல்லவுமென்னும்

வ - று: நெய்க்குடம், குளநெல், கார்த்திகை விளக்கு, பூமரம், செந்தாமரை, குறுங்கூலி எனவும்; உப்பளம், ஊர்மன்று, நாளரும்பு, இலைமரம், செம்போத்து, தோய்தயிர் எனவும்; வழக்கின்கண் இனமுள்ளனவும் இல்லனவும் வந்தன.

---

1. உதாரணங் காட்டுபவர் மயிலைநாதர். "செயப்படு பொருளை" (தொல். வினை. சூ. ௪௧.) என்னும் சூத்திர வுரையில் இளம்பூரணரும், சேனாவரையரும், நச்சினார்க்கினியரும், தெய்வச்சிலையாரும் இக்கொள்கையினரே என்று

[1]'பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்,' [2]'கான்யாற் றடைகரை,' 'முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது,' [3]'தூலமா மயிலெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா,' [4]'சிறு கோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்,' [5]'ஓடுபாம் பெனப் புடையகன்ற வல்குன்மேல்' எனவும்; [6]'பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே,' [7]'வடவேங்கடந் தென்குமரி,' [8]'வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன,' [9]'சிறகர்வண்டு செவ்வழி பாட,' [10]'செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும் வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்,' [11]'முழங்கு கடலோத மூழ்கிப் போக' எனவும் செய்யுட்கண் இனமுள்ளனவும் இல்லனவும் வந்தன.

இனமுள்ளனவற்றை வாளா கூறிற் குறித்த பொருள் தோன்றாமையின் அடை கொடுத்து விதந்து கூறுகவெனவும் இனமில்லனவற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதல் மிகையா மாயினும் அமைபுமெனவும் பொருள் போந்தமையின், முன்னையது வழுவறகவெனக் காத்தலும் பின்னையது வழுவமைப்புமா மென்க.

ஆசிரியர் தொல்காப்பியனார்,

[12]"இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே"

என்றமையிற் பொருள்முதலாறும் அடை யென்றும், இருவழக் கினுமென்றும், இவ்வமைதியும் பயின்று வருமென்பது தோன்ற உளவும் இல்லவுமாமென இனமுள்ளவற்றோடு ஒருங்கெண்ணி யுங் கூறினரென்க. (௫௦)

மரபு வழுவாமற் காத்தல்

௪0௨. அடைமொழி இனம்அல் லதுந்தரும் ஆண்டுறின்.

எ - னின். மரபு வழுவற்க வெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று; பொருந்துவன கொள்கவென்பார் ஆண்டுறின் என்ற மையான்

1. திருக்குறள், ௯௧௩. 2. இனியவை நாற்பது, ௫.
3. சீவகசிந்தாமணி, ௧௫௫௮. 4. குறுந். ௧௮.
5. ,, ௧00௭. 6. புறநா. ௨.
7. தொல், சிறப்புப்பாயிரம். 8. ,, ௩௨௧.
9. சீவக சிந்தாமணி, ௭௪. 10. ,, ௩௮.
11. தொல். செய். சூ. ௯௪. பேர். மேற்.
12. தொல். கிளவி. ௧௮.

(இ - ள்.) மேற்கூறிய அடைசேர் மொழி இனத்தைத் தருதலேயன்றி அதனோடு இனமல்லதும் தரும அவ்விடத்திற்குப் பொருந்துமாயின் எ - று.

வ - று: பாவஞ்செய்தான் நரகம் புகும் என்ற துணையானே, புண்ணியஞ் செய்தான் சுவர்க்கம் புகும் என இனத்தைத் தருதலேயன்றி, அவன் இது செய்யின் இது வருமென்னும அறிவிலி என்னும் இனமல்லதனையும் தந்தது. மேலைச்சேரிச் சேவல் அலைத்தது என்ற துணையானே, கீழைச்சேரிச் சேவல் அலைப்புண்டது என இனத்தைத் தருதலேயன்றி, அச்சேவலுடையார்க்கு வெற்றியாயிற்று என்னும் இனமல்லதனையுந் தந்தது.

இனி இரட்டுறமொழிதலான் இனமல்லதுந் தரும் என்பதற்கு இனத்தைத் தருதலையொழித்து இனமல்லதனையுந் தருமெனவும் பொருளுரைத்துக் கொள்க. அவை வருமாறு: சுமந்தான் வீழ்ந்தான் என்றாற் சுமவாதான் வீழ்ந்தானல்லன் என்னுங் கருத்துச் சொல்லுவார்க்கு இன்றாதலின் அவ்வினத்தை ஒழித்துச் சுமையும் வீழ்ந்தது என்னும் இனமல்லதனையுந் தந்தது. காலையெழுந்து கருமத்திற் செல்வான் கோழி கூவிற்று என்றால் ஏனைப் புட்கள் கூவுகில என்னுங் கருத்து அவற்கின்றாதலின் அவ்வினத்தை ஒழித்துப் பொழுது புலர்ந்தது என்னும் இனமல்லதனைத் தந்தது. பெய்முகிலனையான் என்றாற் கைம்மாறு கருதாத பெருங்கொடையாளன் என்னும் இனமல்லதனை இனமிலதாகிய அடைமொழி தந்தது. இவ்வடை கொடாது, முகிலனையான் என வாளா கூறினும் இக்கொடைப்பொருள் தருமாலோவெனின் :—அவ்வாறு கூறின் முகில்வண்ணன் எனவும் பொருள்படுமாதலின் அதனையொழித்துக் கொடைப்பொருட்கு உரிமைசெய்தது அவ்வடையேயாம் என்க. பிறவும் அன்ன. ஆண்டுறின் என்றமையான் இவ்வாறு பொருந்துவன கொள்க. (௩௧)

மரபு வழுவாமற்காத்தலும் மரபு வழுவமைதியும்

௪௦௩. அடைசினை முதல்முறை அடைதலும் ஈரடை
முதலோ டாதலும் வழக்கியல் ஈரடை
சினையோடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே.

எ - னின். மரபு வழுவற்கவேனக் காத்தலும் மரபு வழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற் கூறிய அடை முதல் அடுத்து வருங்கால் ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலும்

ஒன்றையொன்று விசேடித்து வருதலும் இரண்டடை முதலே விசேடித்து வருதலும் வழக்கு நடையாம்; இரண்டடை சினையை விசேடித்து வருதலும் இவ்வரம்பு இறந்து வருதலுஞ் செய்யுள் நடையாம் எ - று.

ஈரடை முதலோடாதலும் என்றமையான், முறை என்றது ஒன்றையொன்று விசேடித்து வருவதென்பதூஉம், அங்ஙனம் வரவே அடைபல சினைபல வாராது ஒவ்வொன்று வருமென்பதூஉம் பெற்றாம்.

வ - று: வேற்கை முருகன், நிலப்பூ நெரிஞ்சில், கார்த்திகைப் பூக்கொடி, பழக்குலைவாழை, செங்காலுரை, முழங்கு திரைக் கடல் எனவும்; மனைச்சிறுகிணறு, சிறுகருங்காக்கை எனவும்; வழக்கின்கண் வந்தன. [1]'சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த,' 'கருநெடுங் கண்டருங் காமநோயே' எனவும்; [2]பெருந்தோட் சிறு மருங்குற் பேரமர்க்கட் பேதை' எனவும்; செய்யுட்கண் வந்தன. பிறவும் அன்ன. இவற்றுள், அடை சினை முதன்முறை யடைதலொன்றும் வழுவற்கவெனக் காத்தலும், ஏனைய மூன்றும் அவ்வாறு நில்லாமையின் வழுவமைதியாம் என்க.

[3]'கவிசெந் தாழைக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலம் பொருவலும் வெருவா
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி'

என வருவன, கொம்புகூர்மாடு மடல்விரி தாழை என்றாற்போல வருதலின், 'உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்' என்னுஞ் சூத்திரத்துள் அஃறிணையோடு சார்த்தின் அஃறிணை முடிபினவாமென அமைத்ததன்பாற் படுமென்க. (௩௨)

மரபு வழுவமைதி

௪௦௪. [4]இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்.

எ - னின். மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

1. நேமி. சொல். ௧௪, உரை. மேற்கோள்.
2. இ - வி. ௩௧௪. மேற்கோள்.
3. புறநா. ௨௩௮.
4. தொல். கிளவி. ௧௧.

(இ - ள்.) இயற்கைப் பொருள் செயற்கைப்பொருளென இருவகைப்படும் பொருள்களுள் இயற்கைப் பொருளை இத்தன்மைத்தென்று கூறுக.

இயற்கை என்பது அவிகாரம். செயற்கை என்பது விகாரம்.

வ - று: மெய் உள்ளது, பொய் இல்லது, நிலம் வலிது, நீர் தண்ணிது, தீவெய்து, மயிர் கரியது, பயிர் பசியது என வரும்.

நிலம் நீர் முதலிய பூதங்கள், மாயையின் விகாரமென்பதை நோக்கிற் செயற்கைப் பொருளாயினும், பூதத்தின் விகாரங்களை நோக்கின் இயற்கைப் பொருளாமென்க.

இயற்கைப்பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின் இது வழுவமைதியாயிற்று. இது கருதாது இவ்வாறு கூறுதல் [1]மரபாமென்பாருமுளர். அது நிற்க.

வளியுளருந் தன்மைத்து உயிருணருந் தன்மைத்து என்னாது வளியுளரும் உயிருணரும் எனவும்; [2]உதாரணங்காட்டுவர். வளியின் கண்ணும் உயிரின்கண்ணும் உளர்தலும் உணர்தலுமாகிய செயல் நிகழ்ந்த துணையானே அவற்றிற்கு அவை செயற்கையாமன்றி இயற்கையாகாமையானும், அவ்வாறு கூறுதற்கு ஒரு விதியின்மையானும், அவை பொருந்தா என்க. (௩௪)

மரபு வழுவாமற் காத்தலும் வழுவமைதியும்

சஅ௫. காரண முதலா ஆக்கம் பெற்றும்
காரணம் இன்றி ஆக்கம் பெற்றும்
ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும்
இருமையும் இன்றியும் இயலுஞ் செயும்பொருள்.

**எ - னின். மரபு வழுவற்கவெனக் காத்தலும் மரபு வழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.**

---

1. மரபென்பவர் மயிலைநாதர்; இச்சூத்திரத்திற்கு அவர் எழுதும் கருத்தைப் பார்க்க.

2. உதாரணங்காட்டுபவர் மயிலைநாதர். சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும் இவ்வாறே காட்டியுள்ளார்கள்; (தொல். கிளவி. சூ. கக. உரை.) இ. வி. உரையாசிரியரும் இக்கொள்கையினரே; (சூ. ௩௧௩.)

(இ - ள்.) முதல் துணை நிமித்தங்களாற் செய்யும் பொருளாகிய செயற்கைப்பொருளைக் கூறுங்கால், காரணச் சொல் முன்வர ஆக்கச்சொற் பின்வரப்பெற்றும், காரணச் சொல் தொக்கு நிற்ப ஆக்கச்சொல் வரப்பெற்றும், இவ் விருவகைச் சொல்லுந் தொக்கு நிற்கவும் நடக்கும் எ - று.

காரணச்சொல்லும் ஆக்கச்சொல்லும் யாண்டு வரினும், அந் நிலைக்களத்துத் தந்து பொருளுரைக்கப்படுதலிற் 'காரண முதலா' என்றார்.

வ - று: கடுவுங் கைபிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின, எருப்பெய்து இளங்களைகட்டு நீர்கால் யாத்தமை யாற் பயிர் நல்லவாயின எனவும்; மயிர் நல்லவாயின, பயிர் நல்ல வாயின எனவும்; கடுவுங் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல, எருப் பெய்திளங்களை கட்டு நீர்கால் யாத்தமையாற் பயிர் நல்ல எனவும்; மயிர் நல்ல, பயிர் நல்ல எனவும் வரும்.

[1] 'பல்லார்தோ டோய்ந்து வருதலாற் பாய்புன
னல்வய லூரநின் றார்புலால்—புல்லெருக்க
மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற்
காதற்றாய் நாறு மெமக்கு'

எனப் பரத்தையிற் பிரிந்த தலைவனைப் புலந்தும் அவன்செய்த தீங்கினைத் தன் இனிய முகத்தால் தணிக்கும் புதல்வனை உவந்தும் ஒன்றொன்றாகாதனவற்றை ஆயினபோற் கூறும்வழி ஆக்கச்சொல் தொகவருதலும் அதன்பாற் படுத்துக. பிறவும் அன்ன.

காரணமுதலா ஆக்கம் பெறுதலொன்றும் வழுவற்கவெனக் காத்தலும் ஏனைய மூன்றும் வழுவமைதியுமாமென்க. (௫௪)

## மரபு வழுவாமற் காத்தல்

௪௦௬. தம்பால் இல்லது இல்லெனின் இனன்ஆய்
உள்ளது கூறி மாற்றியும் உள்ளது
சுட்டியும் உரைப்பர் சொற்சுருங் குதற்கே.

எ - னின். மரபு வழுவற்கவெனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

1. தொல். கிளவி. ௫. ௩௬. ந. மேற்.

(இ - ள்.) ஒருவன் வினவியது தம்பக்கல் இல்லையா யின் அதனை இல்லையென்னுது அவன் வினவியதற்கு இனமாய்த் தம்பக்கல் உள்ளதனைக் கூறி அக்கூற்றானே அதனை இல்லையென்றும், உள்ளதாயின் இத்துணை உண் டென்றுங் கூறுவர் புலவர், வினவுதலுஞ்செப்புதலுமாகிய சொற்கள் சுருங்குதற்பொருட்டு எ - று.

குன்றக்கூறல் முதலிய குற்றங்கள் நீக்கிச் சுருங்கச்சொல்லல் முதலிய அழகோடு கூறுதல் வழக்கிற்கும் வேண்டுமென்பார் சொற்சுருங்குதற்கே என்றார்.

வ - று: பயறுண்டோ வணிகீரே என்றார்க்கு அஃதின் றென்பார் உழுந்துண்டு உழுந்துந் துவரையும் உண்டென்க. இவ்வினமொழிகள் பயறில்லை யென்னும் இறை பயந்து நிற்றலின் இனனுயுள்ளது கூறி மாற்றியுமென்றார். அஃதுண்டென்பார் இத்துணையுண்டென்க. நூறுவிற்கும் பட்டாடை உண்டோ என்றார்க்கு அஃதின்றென்பார் ஐம்பது விற்குங் கோசிகம் உண் டென்க. அஃதுண்டென்பார் என்பது விற்பதுண்டென்க. பிறவும் அன்ன.

இவ்வாறன்றி [1]"உழுந்தல்லதில்லை, இத்துணைப்பயறுள" என உதாரணங் காட்டுவாருமுளர். அவை சொற்சுருங்குதற்கே என் பதனேடு மாறுபட்டு மிகைபடக் கூறல் என்னுங் குற்றமாம் என்க. (௬௬)

௪௦௭. ஈதா கொடுஎனும் மூன்றும் முறையே
இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோன் மாட்டு இரக்குஞ் சொல்லாம்; தா என்பது ஒப்போன் ஒப் போன்மாட்டு இரக்குஞ் சொல்லாம்; கொடு என்பது உயர்ந் தோன் இழிந்தோன் மாட்டு இரக்குஞ் சொல்லாம் எ - று.

வ - று: தந்தைஈ, தோழ தா, மைந்த கொடு என வரும். பிறவழிவரும் ஒப்பு உயர்வு தாழ்வினும் இவ்வாறே ஒட்டுக. வழங்கு வீசு நல்கு என்றற்றொடக்கத்து இரப்புரைகள் போலாது ஈவோர்க்கும் ஏற்போர்க்கும் ஒப்புயர்வு தாழ்வுகளை ஈ தா கொடு

1. உழுந்தல்லதில்லை; இத்துணைப்பயறுள என உதாரணங் காட்டுவர் மயிலைநாதர்.

என்ற துணையானே உணர்த்திநிற்றலின், இவற்றைஇனைத்தென்று அறிபொருளவாகக் கூறினார். அருள் அளி என்னும் இரப்புரைகள் ஈவோர்க்கு உயர்வும் ஏற்போர்க்கு இழிவும் உணர்த்தினவாலோ வெனின் :—அவை கருணைக்குரிய சொற்குறிப்பினான் இரத்தற் பொருளை உணர்த்தி நின்றனவன்றி இரப்புரையல்லவென்க.

இம்மரபு மயங்கி வருவனவுளவேல் 'புதியன புகுதலும் வழுவல' என்றதன்பாற்படுத்துக. (௩௬)

மரபு வழுவமைதி

௪௦௮. [1]முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே.

எ - னின். மரபுவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெளிப்படையானன்றிக் குறிப்பாற்பொருளுணரப்படுஞ் சொற்களுஞ் சிலவுளவாம் எ - று.

அவையாவன ஒன்றொழி பொதுச்சொல் முதற் சொல்லுவான் குறிப்பீறாக விதந்தன முதலியவாம்.

செவியெல்லாஞ் சாலச் செம்பொன் அணியுஞ்செல்வத்தினர் என்பார் செஞ்செவியர் என்றும், குற்றமற்ற மரபினரென்பார் [2]வெள்ளொக்கலர் என்றும், பெருவாழ்க்கையினர் என்பார் குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர் என்றுங் கூறுஞ் சொல்லுவான் குறிப்பொன்றுமே [3]உதாரணங் காட்டுவாருமுளர். அங்ஙனமாயின் ஏனைய குறிப்பிற் பொருள்தருமொழி அல்லவாமென்க.

கேட்போர் இடர்ப்படாது வெளிப்படையிற் கூறுதல் மரபாதலின் இது வழுவமைதியாயிற்று. (௩௭)

1. "முன்னத்தி னுணருங் கிளவியு முளவே, இன்ன வென்னுஞ் சொன்முறையான" (எச்ச. சூ. ௫௬) என்பது தொல்காப்பியச் சூத்திரம்.

2. வெள்ளொக்கல ரென்பதற்கு, வெளியதுடுத்த சுற்றமென்பது குறிப்பானுணரப்பட்ட பொருளென்பர் சேனாவரையர், (தொல். எச்ச : ௫௬. உரை.)

3. உதாரணங் காட்டுபவர் மயிலைநாதர் ; இளம்பூரணர், சேனாவரையர் என்னுமிருவரும் இங்ஙனமே காட்டுவர், (தொல். எச்ச. சூ. ௫௬. உரை) ; இ. வி. உரையாசிரியர் கொள்கையும் இதுவே ; (சூ. ௩௬௪. உரை.)

௪0௯. [1]கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப் படுமே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) கேளாதனவற்றைக் கேட்குவன போலவும் சொல்லாதனவற்றைச் சொல்லுவனபோலவும் நடவாதனவற்றை நடப்பன போலவும் இத்தொழில்களல்லன பிற செய்யாதனவற்றைச் செய்வனபோலவும் அஃறிணையிடத்துஞ் சொல்லப்படும் எ - று.

முன்னையபோல விதவாது இறுதிக்கண் இயற்றுநவெனப் பொதுப்படக் கூறினமையின் இத்தொழில்களல்லன பிறவென்னுஞ் சொல் எஞ்சி நின்றன.

வ - று: [2]"நன்னீரை வாழி யனிச்சமே," [3]"இரவெலா நின்றுயா லீர்ங்கதிர்த் திங்காள்" எனவும்; [4]"பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்,"

[5]"மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலுந்
தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்"

எனவும், இவ்வழி அவ்வூர்க்குப்போம், இவ்வரசனாணை யெங்குஞ் செல்லும் எனவும்,

[6]"தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும்"

1. "வாரா மரபின வரக் கூறுதலும், அன்னவை யெல்லாமவற்றவற் றியலான், இன்ன வென்னுங் குறிப்புரை யாகும், (தொல். எச்ச: ௨௬) என்பது தொல்காப்பியச் சூத்திரம். அதன் உரையில் இளம்பூரணர் 'விலங்கும் மரனும் புள்ளும் உள்ளநோய் உற்றார்க்கு மனக்குறைக்கு மறுதலை மாற்றம் கூறுவன போலுங் குறிப்பினவாகப் புலப்படுதலால் இது சொல்லப்பட்டது, என இத்தகைய விதிக்குக் காரணம் கூறுவர்.

2. திருக்குறள், ௧௧௧௧.

3. தொல். களவு. ௪௨ : ந. மேற்.

4. திருக்குறள், ௭0௯.

5. சிந்தாமணி, முத்திஇலம்பகம், ௩௩௪.

6. திருக்குறள், ௨௯௩.

[1]'வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன்ன மடமை கூரத்
தண்கய நீருட்கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக்
கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீக்கிழ்ப்
பெண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றூடிற் றன்றே'

[2]'கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி
பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூவிப்—பெருவரைமேற்
றேன்றேவர்க் கீயு மலைநாட வாரலோ
வான்றேவர் கொட்கும் வழி'

எனவும், முறையே காண்க.

அஃறிணை மருங்கினும் என்ற உம்மையான் உயர்திணை மருங்கினும் இவ்வாறு சொல்லப்படுதல் புலம்பல் முதலியவற்றுட் காண்க. (௩௮)

௪௧௦. உருவக உவமையில் திணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) உருவகத்தின்கண்ணும் [3]உவமைக்கண்ணும் இருதிணை தம்முள் மயங்குதலுஞ் சினை முதல் தம்முள் மயங்குதலும் இவ்வியலுள் சொல்லாதொழிந்தனவும் போற்றிக்கொள்க எ - று.

[4]வ - று :

[5]'மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை
யன்ன நடையினார்க் காரமுதந்—துன்னும்

1. சிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம், ௬௭.

2. திணைமாலை நூற். ௧௦.

3. 'முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கும்
நுதலிய மரபி னுரியவை யுரிய' (தொல். உவம : ௬)

என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

4. இதன்பின் காட்டப்பட்டுள்ள உதாரணங்கள் சிலவற்றில் மயிலைநாதர் கொள்கை மாறுபடுகின்றது.

5. புற. வெண். ௧௮௬.

பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப் பைந்தா
ரெரிசினவேற் றானையெங் கோ'

என்பன உயர்திணை யஃறிணையோடு மயங்கின.

[1]"தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர்
தோழர்தன் றாள்களாச் சொரியு மும்மத
மாழ்கடற் சுற்றமா வழன்று சீவக
வேழுயர் போதக மினத்தொ டேற்றதே'

என்பன உயர்திணை அஃறிணையோடும் முதல்சினையோடும் மயங்கின. முகமதியென்பது சினை முதலோடு மயங்கிற்று.

[2]"அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி
புகழ்தரு மேகலை ஞாயில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகஞ்
சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே'

இஃது அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று. இவை உருவகம்.

[3]"கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாண்
மங்கலங் கூற மலிவெய்திக்—கங்கையாள்
பூம்புன லாகந் தழீஇயினான் போரடுதோள்
வேம்பார் தெரியலெம் வேந்து'

[4]"இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லாள் நகும்'

[5]"வருந்தி யீன்றாள் மறந்தொழிந்தாள்
வளர்த்தாள் சொற்கேட் டில்கடிந்தாள்
முருந்தின் காறுங் கூழையை
முனிவார் நின்னை யென்முனிவார்
பொருந்திற் றென்றா லிதுவென்னாய்
பொன்று மளித்தி யுயிரென்னாய்
திருந்து சோலைக் கருங்குயிலே
சிலம்ப விருந்து கூவுதியால்'

1. சீவக. ௭௭௫.
2. சீவக. ௧௪௪௪.
3. பு. வெ. ௨௨௪.
4. திருக்குறள், ௧0௪0.
5. சீவக. ௧௬௬௧.

என்றற்றொடக்கத்தனவும் அன்ன. [1]"மல்லன் மலையனைய மாதவரை வைதுரைகரும்' என்பது உயர்திணையோடு அஃறிணை மயங்கிற்று.

[2]"கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே' என்பது அஃறிணையோடு உயர்திணை மயங்கிற்று. கயற்கண் என்பது சினை முதலோடு மயங்கிற்று. தளிர்மேனி என்பது முதல் சினையோடு மயங்கிற்று. பிறவும் அன்ன.

[3]"தருமன் தண்ணளி யால்தன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
யருமை யாலழ கிற்கணை யைந்துடைத்
திருமகன் திரு மாநில மன்னனே'

[4]"இந்திரகு மாரன்போல விறைமக னிருந்து காண்க'

என்றற்றொடக்கத்தனவாய் மயங்காது வருதன் மரபாமாதலின் இது வழுவமைதியாயிற்று.

இனிப் பிறவும் என்றதனால், உருவக உவமைக்கண் இவன் பாரதி, இவன் பாரதியனையான் எனப் [5]பான் மயங்கக் கூறுதலும், கயலினது பிறழ்ச்சி போலுங் கண்ணினது பிறழ்ச்சி என்பார் கயற்கண் என்று சொல்லின் முடிவினப்பொருண் முடியாது எஞ்சக் கூறுதலும், பிறவற்றுள்ளும் இவ்வாறெஞ்சக் கூறுதலும், செங்கோல் கொடுங்கோல் வீரக்கழல் சினவேல் என [6]ஒருபொருட்டன்மையை மற்றொரு பொருள்மேல் வைத்துக் கூறுதலும், ஈந்தான் என்பார் அருளினான் என ஒரு வினையை மற்றொரு வினையாற் கூறுதலும்,

'அடிவண்ண மல்லா லலங்குதார்க் கோதை
முடிவண்ணங் கண்டறியா வேந்து'

1. சீவக. ௨௭௮௧. 2. சீவக. ௫௩.
3. " ௧௯௦. 4. " ௧௨௫௩.

5. 'உரிய வென்றது உரியவை என்றதனால் திணையும் பாலும் மயங்கிவரும் உவமையுங் கொள்ளப்படும்' (தொல். உவம. ௩௧. பேர்) என்பதும், "மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறு படுதலும் பாகுபா டுடைய" (தண்டி. ௩. ௩௨) என்னும் உவம வழுவமைதிக்குரிய விதியும் இங்கே அறிதற்குரியன.

6. இங்ஙனங் கூறுதல் இலக்கணையின்பாற்படும்.

[1]"துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே'

என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும், இவைபோல்வன பிறவும் வழுவமைதியாகக் கொள்க. (௫௯)

## ௯. பொருள்கோள்

### பொருள்கோளின் பெயருந் தொகையும்

௪௧௧. யாற்றுநீர் மொழிமாற்று நிரல்நிறை விற்பூண்
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் [2]பொருள்கோள் எட்டே.

எ - னின். [3]நால்வகைச் சொற்களானுஞ் செய்யுஞ் செய்யுள் கோள்ளும் பொருள்கோளின் பெயரும் தொகையும் உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) யாற்றுநீர்ப் பொருள்கோளும், மொழி மாற்றுப் பொருள்கோளும், நிரனிறைப் பொருள்கோளும், விற்பூட்டுப் பொருள்கோளும், தாப்பிசைப் பொருள் கோளும், அளைமறிபாப்புப் பொருள்கோளும், கொண்டு கூட்டுப் பொருள்கோளும், அடிமறிமாற்றுப் பொருள் கோளும் எனப் பொருள்கோள் எட்டாம் எ - று.

இவற்றுள் தாப்பிசை என்பதற்கு ஊசல்போல் இடைநின்று இருமருங்குஞ் செல்லுஞ் சொல என்பது பொருள். தாம்பு என்பது ஊசல். அஃதளைமறிபாம்பு என்பது பாப்பு என நின்றாற்போல வலிந்து நின்றது. ஏனையவுங் காரணக்குறியாதல் காண்க. (௬0)

---

1. புறநா. ௩௧.

2. பொருள்கோள் நான்கு, ஐந்து, ஒன்பது, என்னுங் கொள்கையுடை யாரும் உளர்; (நன். சூ. ௪௧0. மயிலை.)

3. "இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென், றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே" (தொல். எச்ச. ௧): 'செய்யுட் சொன்னான்கும்' (தமிழ் விடுதூது. ௨௮.)

### யாற்றுநீர்ப் பொருள்கோள்

சகஉ. மற்றைய நோக்கா தடிதோறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.

எ - னின். நிறுத்த முறையானே யாற்றுநீர்ப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) மொழிமாற்று முதலியபோற் பிறழ்ந்து செல வேண்டாது யாற்றுப் புனலொழுக்குப்போல் நெறிப் பட்டு அடிதோறும் வான்பொருள் அற்றற்றொழுகும் அப் பொருள்கோள் யாற்றுநீர்ப் பொருள்கோளாம். எ - று.

இடையறுதொழுகும் யாற்றுநீரொழுக்கு உவமையாதலின் அடிதொறும் வான்பொருள் அற்றற்றொழுகுதலாவது, மொழி மாற்று முதலியபோற் பிறழ்ந்து செல்லுஞ் செலவற்று ஆங்காங்கு அமைந்து ஒழுகுதலாமன்றி, அடிதோறும் பொருள் முடிதலன்று மென்க. அங்ஙனமாயின் ஆங்காங்கெனப் பொதுப்படக் கூறாது அடிதொறுமென்றது என்னையெனின், அவ்வாறே கூறவார் இலக்கணமேல் வைத்துக் கூறினரென்க.

வ - று:

[1] 'சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போன்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே'

என வரும். இப்பாட்டினுள் சொல்லென்னும் எழுவாயினை முதலெடுத்து அதன்றொழிலாகிய வினையெச்சங்கள் ஒன்றனை ஒன்று கொள்ள இடையே முறைநிறீஇக் காய்த்த என்னும் பயனிலையை இறுதிக்கண் தந்து முடித்தமையின் இப்பொரு ளொழுகுதல் யாற்றுநீரொழுக்குப்போறல் காண்க.

இதற்கு இவ்வாறன்றி ஏனையடிகளை நோக்காது அடிதோறும் பொருள் முடிந்து வருவது யாற்றுநீர்ப் பொருள்கோள் எனப் பொருளுரைத்து,

---

1. சிந்தாமணி, நாமகளிலம்பகம், ௨௪.

[1]'அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்'

என [2]உதாரணங் காட்டுவாருமுளர். யாற்றுநீரொழுக்குக்கு இடையறுதல் இன்மையானும், அற்றேல் அதனை ஒழுக்கென்றல் கூடாமையானும், அஃது உவமையன்றாம். ஒவ்வோரடி ஒழுகுதற்கு உவமையாயிற்றெனின், பாட்டு முழுவதும் இடையறா தொழுகிப் பயின்று வரும் பொருள்கோள் மொழிமாற்று முதலியவற்றுள் அடங்காமையிற் குன்றக்கூறலாம் இங்ஙனமாதலின் அது பொருளன்றாம். அவர் காட்டிய உதாரணம் அடிமறிமாற்றின்பாற் படுமென்க. அப் பொருள்கோளின் விகற்பம் அச் சூத்திரத்துள் தோன்றக் கூறுதும்.

இதனை வான்பொருள் என்றார், இது நெறிப்பட்டு வருதலானும், பயின்று வருதலானும், மொழிமாற்று முதலிய வந்த செய்புட்கண்ணும் விராய் வருதலானுமென்க. (௬௧)

## மொழிமாற்றுப் பொருள்கோள்

௪௧௩. ஏற்றபொருளுக் கியையு மொழிகளை
மாற்றிஓர் அடியுள் வழங்கல் மொழிமாற்றே.

எ - னின். மொழிமாற்றுப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இரண்டு மொழியும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையுமாய் வரக் கூறுவார் அந்நான்கனுள் ஏற்ற பயனிலைகட்கு இயையும் மொழிகளைத் தனித்தனி கூட்டிக் கூறாது ஏலாத பயனிலைகட்கு இயையாத மொழிகளைத் தனித்தனி கூட்டி ஓரடியுள்ளே கூறும் பொருள்கோள் மொழிமாற்றுப் பொருள்கோளாம் எ - று.

ஒன்றற்கொன்று பொருந்தியதென்பார் ஏற்ற பொருளுக்கு இயையும் மொழியென்றார்.

மொழிமாற்று என்பது தனக்குள்ளதைக் கொடுத்துப் பிறர்க்குள்ளதை வாங்கும் பண்டமாற்றுப்போறலின் இரண்டு மொழியும்

1. நான்மணிக்கடிகை, ௨௬.
2. உதாரணங் காட்டுபவர் மயிலைநாதர்.

அவை கொள்ளும் இரண்டு பயனிலையும் வந்தல்லது மொழி மாற்றுதல் கூடாமையின் அத்தொகை தந்து கூறினும்.

வ - று :

உ "சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை'[1]

என வரும். இதனுள், ஆழ என்னும் பயனிலைக்கு இயைந்த அம்மி என்னும் மொழியினை மிதப்ப என்னும் பயனிலைக்கும், மிதப்ப என்னும் பயனிலைக்கு இயைந்த சுரை என்னும் மொழியினை ஆழ என்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறும், நீத்தென்னும் பயனிலைக்கு இயைந்த முயலென்னும் மொழியினை நிலையென்னும் பயனிலைக்கும், நிலையென்னும் பயனிலைக்கு இயைந்த யானை என்னும் மொழியினை நீத்தென்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறுங் காண்க.

"ஆலத்து மேல குவளை குளத்துள
வாலி னெடிய குரங்கு'[2]

என, ஈரடி முதலியவற்றுட் கூறிற் சேய்மைக்கண்ணவாய் மொழி மாற்றென்பது தோன்றுமையின் அஃது இலக்கணமன்றென விலக்கி அண்மைக்கட் கூறுவதே மொழிமாற்றென்பார் ஓரடியு ளென்றார். ஆலத்துமேல என்பது ஓரடியுள் வாராமையிற் [3]கொண்டுகூட்டென்பாரு முளர். அது மொழிமாற்றிற்குங் கொண்டுகூட்டிற்கும் வேற்றுமையுணரார் கூற்றுமென்க. அவர் இச்சூத்திரத்திற்கு மொழிமாற்றொடு பொருந்தாது கொண்டு கூட்டொடு பொருந்தப் பொருள்கூறிச் சுரையாழ என்னும் உதாரணங் காட்டுவர்

(சுஉ)

நிரனிறைப் பொருள்கோள்

சகச. பெயரும் வினையுமாம் சொல்லையும் பொருளையும்
வேறு நிரல்நிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருளகோள் நிரனிறை நெறியே.

---

1. இதனைச் சுண்ணமொழி மாற்றுக்கு எடுத்துக்காட்டாகத் தொல்காப்பிய உரையாசிரியர்களும் பிறரும் காட்டினர்.

2. இதனை அடிமொழிமாற்றிற்கு எடுத்துக்காட்டாக யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர் காட்டினர் ; (ஒழிபு சூ. உ. உரை )

3. கொண்டு கூட்டென்பவர் ம[illegible]நாதர்.

எ - னின். [1]நிரனிறைப்பொருள்கோ ளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயரும் வினையுமாகிய சொற்களையும் அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும் வேறு வேறு நிறையாக நிறுத்தி முறையாயேனும் எதிராயேனும் இதற்கு இது பயனிலையென்பது படக் கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப் பொருள் கோளாம் எ - று.

வ - று:

[2]'கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்தமுகம் வாய்முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்'

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறை நிரனிறை.

[3]'காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய—நீதியான்
மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு
நண்ணிய வாய பொருள்'

இது வினைப்பயனிலைகளும் பெயர்ச்சொற்களுமாய் நின்ற முறை நிரனிறை.

---

1. நிரனிறைப் பொருள்கோளை ஓரணியாகவும் கொண்டார் தண்டியலங்கார ஆசிரியர்.

2 தொல். எச்சவியல். ௬. ௧. இளம். மேற். கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டைமேனி, மதிமுகம், பவளம் வாய், முத்தம் முறுவல், பிடிநடை, பிணைநோக்கு, மஞ்ஞைசாயல் என இயைத்துப் பொருள் கொள்க.

3. யாப் வி. ஒழிபு. ௬. ௨. மேற்: மண்ணைக்கா, அமிர்தத்தைத் து(உண்), மங்கையர் தோளைச்சேர், மாற்றாரைத் தாழ் (தாழ்த்தி), ஏற்றார்க்குக் குழை (இரங்கு), நண்ணியவாய பொருள் ஆய் (ஆராய்வாய்) என இயைத்துப் பொருள் கொள்க.

[1]"களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே"

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை.

[2]"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா—நீடியமால்
நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றோர் மதிற்கச்சி மாண்பு"

இது பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை. பிறவும் அன்ன.

மேலைச்சூத்திரத்துள் மொழியென்றும் இச் சூத்திரத்துள் சொல்லென்றுங் கூறிய [3]நிறுத்த சொல்லும் அது கொள்ளும் பயனிலையெனினும் பொருளெனினும் ஒக்கும். [4]குறித்து வருகிளவியுமன்றி அவ்வழிவேற்றுமை யுருபுகளும் பிற சொற்களும் உடன்வருமாலோவெனின்.—சாத்தன் வந்தான் என்றால் அவன் ஆடை அணி முதலியனவும் உடன் வருதல் கூறாதேயமைதல் போலுமென்க.

'சொற்றொறு மிற்றிதன் பெற்றி' என்பதனானே,

[5]"காமவிநி கண்முக மென்மருங்குற் செய்யவாய்
தோமிறு கடினி சொல்லயிர்தந்—தேமலர்க்

1. யாப். வி. ஒழிபு. சூ. ௨. மேற். "குன்ற வெண்மணலேறி நின்று நின், றின்னங் காணகுவம் வம்மோ தோழி" என்பது இச் செய்யுளின் முற்பகுதி. களிறுபோலக் கலனும் கந்துபோலக் கூம்பும் தோன்றுமெனக் கூட்டிப் பொருள் கொள்க.

2. யாப். வி. ஒழிபு. சூ. ௨. மேற்: இந்த வெண்பா கணிகண்ணர் பாடியதாக வைணவகுரு பரம்பரையால் தெரிய வருகின்றது. வெஃகாவிற்கிடந்தான், பாடகத்தில் இருந்தான், ஊரகத்தில் நின்றான் என இயைத்துப் பொருள் கொள்க. இம் மூன்று திருப்பதிகளும் காஞ்சிபுரத்திலுள்ளன.

3, 4. "நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவி யென், றாயி ரியல புணர்நிலைச் சுட்டே" (தொல். புணரியல்: ரு.)

5. யாப். வி. ஒழிபு. சூ. ௨. மேற்: முன் இரண்டடிகளிலுள்ள வற்றை, காவிகண், மதிமுகம், மென்மருங்குல், தோமில் துடி, செய்ய வாய் கனி என இயைத்துப் பொருள்கொள்க.

காந்தள் குரும்பை கனக மடவாள்கை
யேந்திளங் கொங்கை யெழில்'

என வரும் எழுத்து நிரனிறையும்,

[1]'வெண்பா முதலாக வேதிய ராதியா
மண்பால் வகுத்த வருணமா—மொண்பா
வினங்கட்கு மிவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூன்
மனந்திட்பக் கற்றோர் மகிழ்ந்து'

எனத் தொகுத்துக்கூறு நிரனிறை முதலியவுங் கொள்க.

[2]'அம்ம பவள்வரி நெடுங்கண் ணஞ்சிக்
கொம்ம பவள்கொடி மருங்குல் கோங்கி
னரும்ம பவண்முலை யொக்குமே யொக்குங்
கரும்ம பவள்வாயிற் சொல்'

என்னும் யாற்றுநீர்ப் பொருள்கோளை மயகக நிரனிறையென்பாரு முளர். இது சொல்லையும் பொருளையுந் தனித்தனி நிறீஇக் கூறிய தன்றி நிரனிறையாக நிறீஇக் கூறாமையின் நிரனிறையன் றென் பார் நெறியே என்றூர். (சுகூ)

## பூட்டுவிற் பொருள்கோள்

சகரு. எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள்
பொருள்நோக் குடையது பூட்டுவில் ஆகும்.

எ - னின். [3]பூட்டுவிற் பொருள்கோ ளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்கண் முதலினும் ஈற்றினும் நிற்கும் மொழிகள் தம்முட் பொருள் நோக்கமுடைய பொருள் கோள் பூட்டுவிற்பொருள்கோளாம் எ - று.

---

1. இதனை இருமுதல் நிரல்நிறைக்கு எடுத்துக்காட்டாக யாப்பருங்கல உரையாசிரியர் காட்டினார்.

2. 'மயக்கநிரல்நிறையென்று காட்டினர் யாப்பருங்கலம் உடையார்' என இச்செய்யுளையும் வேறு சிலவற்றையும் எடுத்துக் காட்டிக் கூறுவர் மயிலைநாதர்.

3. இதனை ஓரணியாகக் கொண்டார் மாறனலங்கார ஆசிரியர்.

செய்யுட்கெல்லா முதலினுமீற்றினு மென்னுமையின் அத னகத்து எங்ஙனம் இவ்வாறு வரினுமாமென்க.

வ - று:

[1]"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாதர்
இறந்துபடிற் பெரிதா மேத—முறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு."

என வரும். பிறவும் அன்ன. (௬௪)

தாப்பிசைப் பொருள்கோள்

௪௧௫. இடைநிலை மொழியே ஏனை யீடத்தும்
நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை.

எ - னின். [2]தாப்பிசைப் பொருள்கோ ளாமாறு உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) இடை நிற்கு மொழி ஒழிந்த முதலினும் ஈற்றினுஞ் சென்று பொருளைக் கூடும் பொருள்கோள் தாப்பிசைப் பொருள்கோளாம் எ - று.

வ - று:

[3]"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு"

என வரும். (௬௫)

அளைமறிபாப்புப் பொருள்கோள்

௪௧௭. செய்யுள் இறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோள் அளைமறி பாப்பே.

1. முத்தொள்ளாயிரம், கதவு திறந்திடுமின் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

2. இப்பொருள்கோள் அணியிலக்கணவகையில் இடை நிலைத் தீவகத்தின்பாற்படும்.

3. திருக்குறள், உ௫௫. ஊன் என்பதை உண்ணாமை என்ப தனோடுஞ் சேர்த்து ஊனுண்ணாமை எனக் கூட்டிப் பொருள் கொள்க.

எ-னின். அளைமறிபாப்புப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) [1]செய்யுட்கள் ஈற்றில் நின்றசொல் இடையினும் முதலினுஞ் சென்ற பொருள்கோள் அளைமறிபாப்புப் பொருள்கோளாம் எ-று.

வ-று:

[2]'தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூன்றிக் தளர்வார்தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமு
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே
முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து
நெறிமுன்னி முயலாதாரே'

என வரும்.

சிவஞானமுனிவர் விளக்கம்

இருமருங்கினையும் இறுதி யென அமையுமாதலின், 'வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதாரே' என்னுஞ் சொற்களை அம்மருங்கு வைத்துச் செய்யுளாக்கினும் இப்பொருள் கோளாமென்க. (௯௯)

கொண்டுகூட்டுப் பொருள்கோள்

௪௧௪. யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி இசைப்பது கொண்டு கூட்டே.

எ-னின். கொண்டுகூட்டுப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) செய்யுளடி பலவினும் இயல்பாகிய யாற்றுநீர்ப் பொருளுக்கு ஏலாது கோத்துக்கிடந்த மொழிகளை

1. முதலிலுள்ள சொல்லை இடையிலும் இறுதியிலும் கூட்டிப் பொருள் முடித்தலை அளைமறிபாப்புப் பொருள்கோளெனக் கொள்வர் சேனாவரையர்; சொல். ௪௦௮. உரை.

2. யாப். வி. ஒழிபு. ௬. உ. மேற்.

எடுத்து அப்பொருளுக்கு ஏற்றவிடத்துக் கூட்டும் பொருள்கோள் கொண்டு கூட்டுப் பொருள்கோளாம் எ - று.

இயல்பாகிய யாற்றுநீர்ப் பொருள்கோளிற் பிறழ்ந்து வருவனவற்றை மொழிமாற்று முதலியவாகப் பகுத்தமையின் அப்பொருளுக்கு ஏற்ற விடத்தென்றும்.

வ - று:

[1] 'தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்'

என வரும். இதனுள் வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத் தன்ன பைங்கூந்தலை யுடையாண் மாமேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழி வெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாமெனக் கொண்டு கூட்டுக.

உருவக உவமையில் திணை சினை முதல்கள் என்பதனை முதல் சினையென முறை நிரீஇப் பொருள்கொள்வதும் அது. (கூஎ)

## அடிமறிமாற்றுப் பொருள்கோள்

சகக. ஏற்புழி எடுத்துடன் கூட்டுறும் அடியவும்
யாப்பீ றிடைமுதல் ஆக்கினும் பொருள் இசை
மாட்சியு மாறா அடியவும் அடிமறி.

எ - னின். அடிமறிமாற்றுப் பொருள்கோ ளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளுக்கு ஏற்குமிடத்து எடுத்து நீங்காது கூட்டும் அடியினையுடையவும் யாதானுமோர் அடியை எடுத்து அச்செய்யுட்கண் முத லிடை ஈறுகளின் யாதானுமோர் இடத்துக் கூட்டினும் பொருளோடு ஓசை மாட்சியும் ஓசையொழியப் பொருள்மாட்சியும் வேறுபடாத அடியினையுடையவுமாகிய பொருள்கோள் அடிமறிமாற்றுப் பொருள்கோளாம் எ - று.

---

1. யா. வி. ஒழிபு. சூ. உ. மேற்கோள். இதனை மொழிமாற்றிற்கு உதாரணங் காட்டுவர் நேமிநாத உரையாசிரியர்.

மாட்சி நெறிப்பட்டொழுகுதல்.

ஏற்புழியெடுத்துக் கூட்டுதல் [1]இருவகையடிமறிமாற்றிற்கும் பொருந்துமாயினும் அவ்வடிகள் மாற்றுதற்கு அமைந்து நீங்கும் இவ்வடிகள் நீங்காவென்பார் உடனென்றும், ஓசையொழியப் பொருள்மாட்சி மாத்திரையும் மாறா அடியவும் என்பார் பொருளிசைமாட்சியுமென உம்மை தந்துங் கூறினார்.

வ - று :

> [2]'நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
> கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டி
> மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
> விடுக்கும் வினையுலந்தக் கால்.'

என்பதனுள் கொடுத்துத் தான் றுய்ப்பினும் ஈண்டுங்கா லீண்டும் விடுக்கும் வினையுலந்தக்கால் இடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம் இஃதறியார் நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார் என அடிகளை ஏற்புழி எடுத்துக் கூட்டுக.

> [3]'மாறாக் காதலர் மலைமறந் தனரே
> யாறாக் கட்பனி வரலா னாவே
> வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
> கூறாய் தோழியான் வாழு மாறே.'

என்பதனுள் யாதானு மோரடியை யெடுத்து யாதானுமோர் இடத்துக் கூட்டி உச்சரித்துப் பொருளும் ஓசையும் வேறு படாமை காண்க.

> [4]'அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
> விலைப்பாலிற் கொண்டுன் மிசைதலுங் குற்றம்
> சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
> கொலைப்பாலுங் குற்றமே யாம்.'

என்பதனுள் ஈற்றடி யொழிந்த மூன்றடியுள் யாதானும் ஒன்றை எடுத்து யாதானுமோர் இடத்துக் கூட்டி உச்சரித்துப் பொருளும் ஓசையும் வேறுபடாமையும், ஈற்றடியை எடுத்து யாதானுமோர்

---

1. இவ்விரண்டும் தொல்காப்பியத்தில் எச்சவியல்: கக, கஉ-ஆம் சூத்திரங்களிற் கூறப்பட்டன.
2. நாலடி. ௬௫.
3. தொல். எச்ச. சூ. கக: நச். மேற்.
4. நான்மணி. ௨௯.

இடத்துக் கூட்டி உச்சரித்து ஓசை வேறுபட்டுப் பொருள் வேறு படாமையுங் காண்க.

செய்யுளடி பலவினையுந் தொகுத்துக் கூறாது மூன்றும் ஒன்றுமாகப் பிரித்தது என்னையெனின்:—எண்வகைப்பட்ட பொருள்கோளும் அவற்றின் விகற்பங்களுமாய பொருள்கோள்களுள் ஒன்றொரு செய்யுள் முழுவதூஉம அமைந்து கிடக்கவேண்டுமென்னும் யாப்புறவின்றி ஒன்றும் பலவும் அமைந்து கிடத்தலினென்க. அவ்வாறு அமைந்து கிடத்தல் அவ்வப்பொருள்கோட்குக் காட்டிய செய்யுட்கண்ணும் பிற செய்யுட்கண்ணுங் கண்டுகொள்க. அடிமறித்தலன்றி மாற்றுதல் எற்புழியெடுத்துடன் கூட்டுறும் அடியவும் என்றதற்கின்றும். அங்ஙனமாக அதனையும் அடிமறிமாற்றென்றது என்னையெனின், மறித்தற்குரிய கொண்டு கூட்டோடும் மறித்தற்கும் மாற்றுதற்குமுரிய அடிமறிமாற்றோடுஞ் சார அதனை முதற்கண்கூறி, அடியாக மறித்தலுடைமையின் அடிமறிமாற்றின்பாற்படுத்துச், [1]சிலவுறுப்புக் குறைந்தாரையும் மக்களென்றாற்போல, அதற்கும் அடிமறிமாற்றெனப் பெயர் தந்து கூறினாரென்க.

செய்யுட்குரிய [2]பொருள்கோளை ஈண்டுக் கூறியதென்னையெனின் —செய்யுட்குந் [3]தொடர் என்னுங் காரணக்குறி போந்தது மொழிதொடர்ந்ததா லன்றே, அங்ஙனமாதலின் இது தொடர்மொழி இலக்கணமேயாம் என்க. (௧௮)

## பொதுவியல் முற்றிற்று.

1. என முப்பத்திரண்டு உறுப்பொடும் புணர்ந்தது மக்கட் சட்டகம்; (யா. வி. சூ. க, உரை) என்பதனால் மக்களென்றல் முப்பத்திரண்டுறுப்பும் உடையாரை என்பது போதரும்.

2. இங்கே கூறிய பொருள்கோளுள், பூட்டுவிற் பொருள்கோளும் அளைமறிபாப்புப் பொருள்கோளும் தாப்பிசைப்பொருள்கோளும் கொண்டுகூட்டுப் பொருள்கோளும் மாட்டென்னும் செய்யுளுறுப்பின்கண் அடங்குமென்பர் நச்சினார்க்கினியர்; (தொல். எச்ச. சூ. கரு, உரை.)

3. தொடர், தொடர்பென்பன செய்யுளின் பரியாயப் பெயர்.

# ௪. இடையியல்

## இடைச்சொல்லின் பொதுவிலக்கணம்

௪௨௦. வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள இசைநிறை அசைநிலை
குறிப்பெனெண் பகுதியில் தனித்தியல் இன்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்.

எ - னின். 'இடையுரி யடுத்து நான்குமாம்' என நிறுத்த முறையானே இடைச்சொல் இலக்கணம் இவ்வியலான் உணர்த்து வான்தொடங்கி அவை இத்துணைய, இவ்வியல்பின என, அவற் றின் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எழுவாயுருபு முதலிய எட்டு வேற்றுமை உருபுகளுள் பெயரும் பெயரது விகாரமுமாகிய எழுவாயும் விளியும் ஒழிந்த ஒழிந்த ஐம்முதலிய ஆறுருபுகளும், பகுதி விகுதி இடைநிலை என்னுந் தெரிநிலையுங் குறிப்பு மாகிய வினையுருபுகளுள் முதனிலைத் தனிவினைப் பெயரும் பொருளாதி அறுவகைப் பெயருமாகிய பகுதியொழித்து ஒழிந்த விகுதிமுதலிய வினையுருபுகளும், அன் ஆன் முத லிய சாரியை உருபுகளும், போலப் புரைய முதலிய உவம வுருபுகளும், பிறவாறு தத்தமக்குரிய பொருளை உணர்த்தி வருவனவும், வேறுபொருளின்றிச் செய்யுளிசை நிறைத் தலே பொருளாக வருவனவும், அசைத்தலே பொருளாக நிற்பனவும், வெளிப்படையின் வரும் இவை போலாது குறிப்பின் வருவனவும் என்னும் எட்டுவகையினை உடைய வாய்த் தனித்து நடத்தலின்றிப் பெயரினகத்தும் வினையின கத்தும் அவற்றின் புறமாகிய பின்னும் முன்னும் இவ்வி டங்கள் ஆறனுள் ஓரிடத்தொன்றேனும் பலவேனும் வந்து அப்பெயர் வினைகட்கு அகத்துறுப்பாயும், புறத்துறுப் பாயும் ஒன்றுபட்டு நடக்குந்தன்மையது இடைச்சொல் லாம் எ - று.

தெரிநிலைவினை இடைநிலைபோல ஏனை இடைநிலை சாரியை கட்கு வேறு பொருளின்றேனும், பெயர் வினைகட்கு இன்றி யமையாது வருதலே பெரும்பால வாதலின் அவற்றின் பொருளே பொருளென்பது கருதி, இசைநிறை அசைநிலைகளைச் சார வையாது முதற்கண் வைத்தாரென்க.

'பெயரினும் வினையினும்' என்ற உம்மையைப் பின்முன் என்பனவற்றோடுங் கூட்டுக.

## சிவஞானமுனிவர் விளக்கம்

இச்சொற்கள், முதற்கூறிய பெயர்ச்சொல் வினைச்சொற்களு மாகாது அவற்றின் வேறுமாகாது இடைநிகரனவாய் நிற்ற லின் இடைச்சொல் எனக் காரணக்குறி பெற்றன. இது பாலைத்திணை, நடுவுநிலைத்திணை எனப் பெயர்பெற்றது போலுமென்க.

அற்றேல், பாலைத்திணை, நடுவுநிலைத்திணை என்றாயவாறு என்னை யெனின் :—ஆசிரியர் தொல்காப்பியர்,

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே."

எனக் கூறியவழி அங்ஙனம் நடுவுநிலைத்திணை என்னுஞ் சொல்லே தன் காரணம் இனிது விளக்கி நிற்றலான், அது நடுவுநிற்றல் காரணத்தாற் பெற்ற பெயரென்பது பெற்றாம்.

இன்னும் அவ்வாசிரியர் ஏனை நாற்றிணையும் முறையானே கூறி இறுதிக்கண் ஓதுதலான் இஃது அவற்றின் வேறென்பது விளங்குதலானும் எஞ்ச நின்றது பாலையேயாகலானும்,

"நடுவணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே."

என நிலம் பகுத்தோதுங்கால் நடுவணதெனக் குறியிட்டமை யானும் அங்ஙனம் பகுக்கப்படும் நிலங்களுமாகாது அவற்றின் வேறுமாகாது தனக்குரிய நிலம் நடுநிகர்த்ததாய் நிற்றல்பற்றி நடுவுநிலைத்திணை எனக் குறியீடு பெற்றதெனக் கொள்க. இங்ஙனம் இதன்திறம் விரிக்கிற் பெருகும். அது நிற்க.

இனி இடைநிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் எனக் காரணக் குறி போந்ததூஉமன்றித் தனித்து நடத்தலின்றிப் பெயர் வினைகளிடமாக நடத்தலின், இடைச்சொல் எனக் காரணக்

குறி போந்ததெனினும் அமையும். அது முதனூலின் வழியாக நடக்கும் நூலை அங்ஙனங் கூறாது வழிநூல் என்றாற் போலப் பெயர்வினைகளிடமாக நடக்குஞ் சொல்லை அங்ஙனங் கூறாது இடைச்சொல் எனப்பட்டது. அங்ஙனமாயின் இட மென இயற்சொல்லாற் கூறாது இடையெனத் திரிசொல் லாற் கூறியது என்னையெனின்:—இயற்சொல்லாற் கூறின் இடப்பொருளை உணர்த்துஞ் சொல்லெனப் பொருள்படு மாதலின் அதனோடு இதற்கு வேற்றுமை தோன்றற்கென்க. எண்வகையுள் தோன்றாதொழிந்தன வருஞ் சூத்திரங்களான்

வ - று: நம்பியை நம்பியால் நம்பிக்கு என்புழிப் பெயரின் புறத்துறுப்பாய் ஐயுருபு முதலிய இடைச்சொல் ஒன்று வந்தன தச்சன் தச்சச்சி முடியினன் என்புழிப் பெயரின் அகத்துறுப்பாய் விகுதி இடைநிலை சாரியை இடைச் சொற்கள் பல வந்தன. வினைக்குறிப்பின் அகத்துறுப்பாய்ப் பல வருவனவும் அன்ன. நடந்தான் நடந்தன என்புழித் தெரிநிலைவினையின் அகத்துறுப்பாய் விகுதி இடைநிலை சாரியை இடைச்சொற்கள் பல வந்தன. அவன் எவன் ஏனோன் ஏனையோன் எனவும்; போல புரைய எனவும்; சாத்தன் என்பான் சாத்தன் ஆயினன் எனவும்; இடைச் சொல்லடியாகப் பிறந்த பெயராயும் வினையாயும் வினையிலக் கணையாயும் நிற்றலின் இவற்றின் பகுதி விகுதி முதலியவும் அன்ன. அதுமன் அதுமற்றம்ம எனவும்; [1]'கொன்னூர்', [2]'ஒஓ வுவம னுறழ்வின்றி' எனவும்; பெயரின் புறத்துறுப் பாய்ப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. வருகதில், வருகதில்லம்ம எனவும்; ஓஒ தந்தார் 'எனயம்பன் மொழிந் தனள் யாயே' எனவும்; தெரிநிலைவினையின் புறத்துறுப் பாய்ப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும வந்தன. பிறவும்

இவற்றுள் சில ஒரோவழி விகாரப்பட்டு மன் கொன் என்பாலன மன்னை கொன்னை என வருவனவும் உள; அவையெல்லாம் 'புதியன புகுதலும் வழுவல' என்பதன்பாற்படுத்துக. (௧)

## இடைச்சொற் பொருள்கள்

௪௨௧. தேரிநிலை தேற்றம் ஐயமுற் றெண்சிறப்
பெதிர்மறை எச்சம் வினாவிழை வொழியிசை
பிரிப்புக் கழிவாக்கம் இன்னன இடைப்பொருள்

1. குறுந் ௧௩௮  2. கலவழி. ௩௯.

எ - னின். மேல் 'தத்தம் பொருள' என்றார் அப்பொரு ளாவன இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெரிநிலை முதலாக விதந்த பதினொன்றும் இவைபோல்வன பிறவும் மேல் 'தத்தம்பொருள' என்ற இடைச்சொற் பொருள்களாம் எ - று.

இன்னன என்றதனாற் சில வருமாறு: அக்கொற்றன் எக் கொற்றன் என்பன சுட்டுப்பொருளும் வினாப்பொருளுந் தந்தன. [1]நக்கீரர் நப்பாலத்தனார் என்புழி நகர இடைச்சொல் சிறப்புப் பொருள் தந்தது. [2]'அஆ விழந்தானென் றெண்ணப்படும்', [3]'ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோடு,' [4]'அந்தோ விசையை பட்டனள்.'

[5]'அரக்காம்ப னாறும்வா யம்மருங்குற் கன்னோ
பரற்கான மாற்றின கொல்லோ'

என்புழி அஆ ஆ அந்தோ அன்னோ என்னும் இடைச்சொற்கள் இரங்குதற்பொருள் தந்தன. இவற்றிற்கு [6]அதிசயப் பொருளும் உள.

[7]'அறிதோ றறியாமை கண்டற்றால்,' [8]'செறிதொறி செல்வத்தியற்கையே' என்புழித் [9]தோறு தொறு என்னும் இடைச்சொற்கள் இடப்பன்மைப் பொருள் தந்தன. இனிச் செய்வான் இனி எம்மெல்லை என்புழி [10]இனி என்னும் இடைச் சொல் காலப்பொருளும் இடப்பொருளும் முறையே தந்தது.

---

1. நக்கீரர், நப்பாலத்தனார் என்னும் இருவரும் கடைச் சங்கப் புலவர்களாவர். 'ந' சிறப்புப்பொருள் உணர்த்துவதோர் இடைசசொல்; (சீவக: ௪௮௨. நச்.)

2. நாலடி. ௯. 3. யாப். வி மேற்.

4. சீவக. ௩௧௨. 5. நாலடி: ௩௯௯.

6 'ஆ என்பது வியப்புள் வழியும்...பொருளுணர்த்தலும்... கொள்க' (தொல் இடை. ரு. ௪௮. நச்.)

7. திருக்குறள், ௧௧௧0. 8. சீவக. ௧௨௯.

9 'தொறு, தோறு என்பன தாம் புணர்ந்த மொழிப் பொருண்மையினை; பலவாக்கி ஆங்காங்கென்பது பட நிற்கும்' என்பர் மயிலைநாதர்.

10. 'இனி என்பது காலத்தின்மேலும் இடத்தின்மேலும் முன் என்பது பட வரும்' என்பர் மயிலைநாதர். இனி என்பது இப்பொழுது என்னும் காலப்பொருளினும் வரும்.

பிறவும் இவ்வாறு தனித்து நடக்கும் பெயர்வினையாகாது வருவன வெல்லாங் கொள்க. (உ)

ஏகார இடைச்சொல்

௪உஉ. பிரிநிலை வினாஎண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை எனஆ றேகா ரம்மே.

எ - ன். வேற்றுமையுருபு முதலிய நான்கும் [1]மேலே சொல்லப்பட்டமையின் அவற்றை யொழித்து ஏனையவற்றை உணர்த்துவான் தொடங்கி அவற்றுள் ஏகார இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெரிநிலைமுதலிய பதினொன்றும் அவை போல்வன பிறவுமாகிய பொருள்களுள்ளும் இசைநிறைத்தல் அசைத்தல் குறிப்பென்னும் மூன்று பொருள்களுள்ளும் பிரிநிலை முதலிய ஆறுபொருளையுந் தரும் ஏகார இடைச்சொல் எ - று.

வ - று: அவனே கொண்டான் என்பது ஒரு குழுவினின் றும் ஒருவனைப் பிரித்து நிற்றலிற் பிரிநிலை. இவ்வேகாரம் அவனோ கொண்டான் என்னும் பொருள்பட வினவி நிற்பின் வினா. நிலனே நீரே தீயே வளியே என்பது நிலனு நீருந் தீயும் வளியும் என்னும் பொருள்பட எண்ணி நிற்றலின் எண். [2]'கடல் போற் றோன்றல காடிறந் தோரே' என்பது சொல்லி[redacted]கண் அசைத்தற் பொருள் தருதலின் ஈற்றசை. இவ்வேகாரவசைநிலை முதற்கண் வாராதென்பார் ஈற்றசை என்றார். அவனே கொண் டான் என்பது துணிதற்பொருள்தரின் தேற்றம். இத் தேற்றப் பொருள் பிரிநிலைக்கண்ணே உளதாதலின் இப்பொருளை வேறெடுத்துக் கூறுதல் ஏனையபோற் சிறப்புடைத்தன்றென்பார் இதனைப் பொருட்சிறப்பில்லா ஈற்றசைக்கு இசைநிறைக்கும் இடையே கூறினர். [3]'ஏஎ இவளொருத்தி பேடியோ வென்றார்' என்பது இசைநிறைத்தற் பொருள்தருதலின் இசைநிறை. அவனே கொண்டான் என்பது ஒரோவழி அவன் கொள்கில னென [4]எதிர்மறைப் பொருள்தரின் அது செம்பொருளன்றி

---

1. வேற்றுமையுருபு பெயரியலிலும், வினையுருபு பதவியலிலும் வினையியலிலும், சாரியையுருபு உருபுபுணரியலிலும், உவம வுருபு பொதுவியலிலும் கூறப்பட்டன.

2 அகநா க. 3. சீவக. ௬௫உ.

4. ஏகாரம் எதிர்மறைப்பொருள் தருதல், 'மாறுகோள் எச்சமும்' (தொல் உயிர் மயங். சூ. எ௩) என்பதனாற் பெறப் படும்.

வலிந்து கொளப்படுதலிற் 'புதியன புகுதலும் வழுவல' என்பதன் பாற்படுத்துக. (௩)

### ஓகார இடைச்சொல்

௪௨௩. ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனஎட் டோவே.

எ - னின். ஓகார இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒழியிசை முதலிய எட்டுப்பொருளையுந் தரும் ஓகார இடைச்சொல் எ - று.

வ - று: கொளலோ கொண்டான் என்பது கொண்டுய்யப் போயினானல்லன் என்றற்றொடக்கத்து ஒழிந்த சொற்களைத் தருதலின் ஒழியிசை. குற்றியோ மகனோ என்பது வினா. சிறப்பு உயர்வுசிறப்பு இழிவுசிறப்பு என இருவகைத்து. ஓஒ பெரியன் என்பது உயர்வு சிறப்பு. ஓஒகொடியன் என்பது இழிவுசிறப்பு. அவனோ கொண்டான் என்பது கொண்டிலன் என்னும் பொருள் தந்தவழி எதிர்மறை. அலியை நோக்கி ஆணோ அதுவுமன்று; பெண்ணோ அதுவுமன்று என்பது அத்தன்மையின்மை தெரிந்த வழி நிற்றலின் தெரிநிலை. உறுதியுணராது கெட்டாரை 'ஓஒ தமக்கோ ருறுதியுணராரோ' என்பது கழிவிரக்கப் பொருள் தருதலிற் கழிவு. 'காணிய வம்மினோ கங்குலது நிலையே' என்பது அசைநிலை. அவனோ கொண்டான் என்பது பலருள் நின்றும் ஒருவனைப் பிரித்தமை கருதியவழிப் பிரிநிலை. இப்பொருள் எதிர்மறைக்கண்ணே உளதாதலின் அசைநிலையின் பின் வைத்தார். (௪)

### என, என்று இடைச்சொற்கள்

௪௨௪. வினைபெயர் குறிப்பிசை எண்பண் பாறினும்
எனவெனும் மொழிவரும் என்றும் அற்றே.

எ - னின். என எனவும் என்று எனவும் வரும் இடைச் சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினைப்பொருள் முதலிய ஆறுபொருளினும் என என்னும் இடைச்சொல் வரும்; என்று என்னும் இடைச்சொல்லும் அவ்வாறு வரும் எ - று.

வ - று : கொள்ளெனக் கொண்டான், மைந்தன் பிறந்தானெனத் தந்தை உவந்தான் என்பது வினை. ஊரெனப்படுவது உறையூர். [1]'அழுக்காறென வொருபாவி' என்பது பெயர். விண்ணென விசைத்தது, [2]'பொள்ளென வாங்கே புறம்வேரார்' என்பது குறிப்பு. ஒல்லென ஒலித்தது, [3]'கிலையருங் குட்டந்துத் துடுமெனப் பாய்ந்து' என்பது இசை. நிலனென நீரெனத் தீயென வளியென வரும் பூதநான்கும் உருவம் என்பது எண். வெள்ளென விளர்த்தது, மெல்லென நடந்தது என்பது பண்பு. இங்ஙனம் எண்ணுப்பொருட்குக் காட்டிய பெயர்கள் தனித்து நில்லாது எண்ணி அளவைப் பண்புப்பொருளுணர்த்தலின் அப் பொருள் முதற்கண் நிறீஇய பெயர்ப்பொருளன்றென்க. என்று என்பதனையுங் கொள்ளென்று கொண்டான் என முறையே இயையுமாறு ஒட்டுக.

சுட்டுப்பெயர் வினாப்பெயர்கட்குத் தமக்கென ஒரு பொருளின்றிச் சுட்டவும் வினவவும்படும் பொருளாதி ஆறு பெயர்ப் பொருளே பொருளாக வருதல்போல இவ்விரண்டு இடைச்சொற் குந் தமக்கென ஒரு பொருளின்றி வினைமுதலியவாய் இங்ஙனம் விதந்தவற்றின் பொருளே பொருளாக வரும் என்பார் ஆறு பொருளையுந் தரும் என்னுது ஆறினும் வரும் என்றார். (ரு)

### உம்மை இடைச்சொல்

சஉரு. எதிர்மறை சிறப்பையம் எச்சமுற் றளவை
தெரிநிலை ஆக்கமோ டும்மை எட்டே.

எ - னின். உம்மை இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எதிர்மறை முதலிய எட்டுப்பொருளையுந் தரும் உம்மை இடைச்சொல் எ - று.

வ - று : கொற்றன் வருதற்கும் உரியன் என்பது எதிர் மறை. [4]'குறவரு மருளுங் குன்று,' இவ்வூர்ப்பூசையும் புலால் தின்னுது என்பது உயர்வுசிறப்பு. பார்ப்பானுங் கள்ளுண்டான், [5]'புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை' என்பது இ.சி.

1. திருக்குறள், கசுஅ. 2. திருக்குறள், சஅஎ.
3. புறநா. உசரு. 4. மலைபடு. உஎரு.
5. அரிச்சந்திர. மயான. கஉஅ.

சிறப்பு. பூசையும் புலால் தின்னாது என்பதனை [1]இழிவுசிறப்பென் பாருமுளர். அங்ஙனமாயின் ஒரு பொருளினது உயர்வைச்சிறப் பித்தல் இழிவைச் சிறப்பித்தல் எனப் பொருள்படாது உயர்ந்த பொருளான் மற்றொன்றைச் சிறப்பித்தல் எனப் பொருள்படும். அவ்வாறு பொருள்படின் ஓகாரப்பொருளாய் வரும் உயர்வு சிறப் பிற்கும் இழிவு சிறப்பிற்கும் ஆகாமையின் அது பொருந்தா தென்க. இனி இவ்வும்மைப் பொருளைக் குன்று முதலியவற்றிற் கொள்ளாது குறவர் முதலியவற்றிற்கொண்டு பூசையும் என்ப தனை இழிவு சிறப்பும்மை எனக் கோடலும் ஒன்று. இங்ஙனம் இழிவு சிறப்பு என்பதற்கு இழிவினுட் சிறந்த இழிவு எனப் பொருள் கூறுக. உயர்வு சிறப்பும் அது. பூசைக்குப் புலால் தின்னுதல் இழிபுந் தின்னாமை சிறப்புமாகப் பொருள்கொளிற் குறவர்க்கு மருளுதல் சிறப்பாகவேண்டுமாதலின் அது பொருந்தா தென்க பத்தாயினும் எட்டாயினுங் கொடு என்பது ஐயம். சாத் தனும் வந்தான் என்பது கொற்றன் வந்ததன்றி எனப் பொருள் படின் இறந்ததுதழீய எச்சவும்மை. கொற்றனும் வருவான் எனப் பொருள்படின் எதிரதுதழீஇய எச்சவும்மை. தமிழ்நாட்டு மூவேந் தரும் வந்தார், எல்லாரும் வந்தார் என்பது முற்றும்மை சாத்த னுங் கொற்றனுந் தேவனும் பூதனும் வந்தார் என்ப. ணும்மை. ஆணும் அன்று பெண்ணும் அன்று என்பது தெரிநிலை யும்மை. தெரிநிலை ஓகாரம்போற் பொருளுரைத்துக்கொள்க. நெடியனும் ஆயினான், பாலும் ஆயிற்று என்புழி அவனே வலிய னும் ஆயினான் அதுவே மருந்தும் ஆயிற்று எனப் பொருள்படின் ஆக்கவும்மை. (௬)

முற்றும்மைக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

௪௨௬. முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்.

எ - னின். முற்றும்மைக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முற்றும்மை எச்சவும் மையுமாம் எ - று.

[1]: ஆறுந் தருவது வினையே என்புழி ஐந்துந் தருவது வினையே என்றும், எல்லாரும் இது செய்யார் என்புழிச் சிலர் இது செய்வாரென்றும், முற்றும்மைப்பொருளும் எச்சவும்மைப் பொரு ளும் ஒருங்கு தருதல் காண்க. இங்ஙனந் தருதலின் எச்சமுமென இறந்ததுதழீஇய எச்சவும்மையாற் கூறினார். (எ)

---

1. இழிவு சிறப்பென்பவர் நச்சினார்க்கினியரும் (தொல். இடை. சூ. எ. உரை) இ. வி. உரையாசிரியரும், (சூ. உ௬௬.)

எச்சவும்மைக்காவதோர் விதி

௪௨௭. செவ்வெண் ஈற்றதாம் எச்ச உம்மை.

எ - னின். எச்சவும்மைக்கு ஆவதோரு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) எச்சவும்மை செவ்வெண்ணின்கண் வருமாயின் ஈற்றின்கண் வரும் எ - று.

வ - று:

'செய்பவன் கருவி நிலஞ்செயல் காலஞ்
செய்பொரு ளாந்தருந் திறத்தது வினையே'

என்புழி இவற்றுட் சிலவுந் தருந் திறத்தது வினையே எனவும் கல்வி செல்வம் ஒழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர் என்புழி இவற்றுட் சில பெறுவாருமுளர் எனவும் பொருள்படுதல் காண்க. (அ)

சில எண்ணிடைச் சொற்களுக்காவதோர் இலக்கணம்

௪௨௮. பெயர்ச்செவ் வெண்ணே என்று எனாஎண்
நான்குந் தொகைபெறும் உம்மையென் றெனவோ
டிந்நான் கெண்ணும்அஃ தின்றியும் இயலும்.

எ - னின். முன்னர் எடுத்து விதந்தும் விதவாதும் வருஞ் சில எண்ணிடைச் சொற்கட்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர்களினிடையே எண்ணிடைச்சொல் தொக்கு நிற்ப வருஞ் செவ்வெண்ணும் பெயரோடு தொகாது வரும் ஏகாரவெண்ணும் என்றுவெண்ணும் எனா வெண்ணுமாகிய நான்குந் தொகை பெற்று நடக்கும்; உம்மை எண்ணும் என்றெண்ணும் எனவெண்ணும் ஒடெண்ணுமாகிய இந்நான்கெண்ணுந் தொகை பெற்றும் பெறாதும் நடக்கும் எ - று.

பெயரெண் என்னாது செவ்வெண் என்றதனால், அஃது எண்ணிடைச்சொல் தொக்க தொகைநிலை என்பதூஉம், அங்ஙனமாதலின் அதனையும் ஏகாரம் முதலிய எண்ணிடைச் சொற்களோடு உடன் கூறப்பட்டதென்பதூஉம் பெற்றாம்.

வ - று: சாத்தன் கொற்றன் தேவன் பூதன் நால்வரும் வந்தார், சாத்தனே கொற்றனே தேவனே பூதனே நால்வரும் வந்தார், சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று நால்வரும் வந்தார், சாத்தனெனக் கொற்றனெனத் தேவனெனப் பூதனென நால்வரும் வந்தார் இவை தொகை பெற்றே வந்தன. பெயர்ச் செவ்வெண் தொகை பெறுதற்கு இச் சூத்திரத்தைக் காட்டினும் அமையும். இவை வழக்கிடத்து ஒரோவழித் தொகை பெறாதுவரின், இசையெச்சமாகவும், செய்யுட்கண் தொகை பெறாதுவரின் [1]தொகுக்கும்வழித் தொகுத்தலாய் அமையின் அவ்விகாரமாகவும், அன்றேல் இசையெச்சமாகவும் கொள்க. சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனும் நால்வரும் வந்தார், சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று நால்வருளர், சாத்தனெனக் கொற்றனெனத் தேவனெனப் பூதனென நால்வருளர், சாத்தனொடு கொற்றனொடு தேவனொடு பூதனொடு நால்வரிவன் மைந்தர் எனவும்; சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனும் வந்தார், நிலனென்று நீரென்று தீயென்று காற்றென்று அளவறுகாயமென்று ஆகிய உலகம், நிலனென நீரெனத் தீயெனக் காற்றென அளவறுகாயமென ஆகியவுலகம், நிலனொடு நீரோடு தீயோடு காற்றோடு அளவறுகாயமோடாகிய பூதம் எனவும்; இவை தொகைபெற்றும் பெறாதும் வந்தன. (௧)

சில எண்ணிடைச் சொற்களுக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

௪௨௯. என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருள்தொறும் நேரும்.

எ - னின். எண்ணிடைச் சொல்லுள் சிலவற்றிற்கு எய்திய தன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றெண்ணும் எண்ணும் பொருடோறும் நிற்றலேயன்றி ஓரிடத்து நின்றும் பிரிந்து எண்ணும் பொருடோறும் பொருந்தும் எ - று.

வ - று:

[2]'வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.'

1. தொகுக்கும் வழித் தொகுத்தல் - தொகுத்தல் விகாரம்; (தொல். எச்ச. சூ. எ.)

2. திருக்குறள், ௬எ௪.

[1] 'பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான்கண்.'

[2] 'பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்.'

என வரும்.

எண்ணும் பொருடோறுந் தனித்தனி நிற்றலினும் ஒரோவழி நின்று பிரிதல் இம்மூன்றெண்ணிற்கும் அமைந்து கிடந்தனவாதலின் ஈண்டுங் கூறப்பட்டன: எனவே ஏனை எண்கட்கு எண்ணும் பொருடோறும் நிற்கும் நிலையே சிறந்தன என்பதூஉம் ஒரோவழி நின்று பிரிதல் வலிந்து கொளற்பாலன என்பதூஉம் அவை ஈண்டமையாது [3]தீவகமென்னும் அணியிலக்கணத்தின் பாற்படும் என்பதூஉம் பெற்றாம். (௪O)

**பெயரொடு வரும் இடைச்சொற்கள் வினையொடும் வருமாறு**

**சஙO. வினையோடு வரினும்எண் இனைய ஏற்பன.**

**எ-னின். மேற்பெயரோடு வந்த எண்ணிடைச் சொற்கள் வினையோடும் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

(இ-ள்.) எண்ணிடைச் சொற்கள் வினையோடு வரினும் மேற் பெயரோடு வந்தாற்போலும் ஏற்பன எ-று.

ஏற்பனவெனவே வினையோடு எலா எண் வருதலுந் தொகை பெறுதலும் இல்லையென்க.

**வ-று:**

'மண்டில மழுங்க மலைநிறங் கிளர
வண்டின மலர்பாய்ந் தூத மிசையே
கண்டற் கானங் குருகின மொலிப்ப'

என்பது செவ்வெண். கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தான் என்பது உம்மையெண். உண்ணவென்று உடுக்கவென்று பூசவென்று முடிக்கவென்று வந்தான் என்பது என்று எண்.

1. திருக்குறள், ௯௪௪. 2. திருக்குறள், ௬௭௫.

3. தீவகம் - செய்யுளில் ஒரு சொல் ஓரிடத்தில் நின்று பலவிடத்து நின்ற சொற்களோடும் சென்றியைவது; (தண்டி. சூ. ௩அ.)

உண்ணவென உடுக்கவெனப் பூசவென முடிக்கவென வந்தான் என்பது என எண். உண்ண உடுக்கப் பூச முடிக்கவென்று வந்தான், உண்ணவுடுக்கப் பூசமுடிக்கவென வந்தான்,

'நன்னிதி பெருக நாடொறும் வாழ்கவென்
றுன்னுமிவ் வேட்கை யொழிந்தன ரிலரே.'

என்பன என்றும் எனவும் ஒரோவழி நின்றும் பிரிந்தன. பிறவற்றுள்ளும் ஏற்பன வந்தவழிக் காண்க.

சாத்தன் வந்தான் கொற்றன வந்தான இருவரும் வந்தமையாற் கலியாணம் பொலிந்தது என வினைச் செவ்வெண் தொகை பெற்றது [1]என்பாருமுளர். தொகைச்சொற் பெயராதலின் அறுவகைப்பெயர்களோடு பொருந்தி இருபெயரொட்டாமன்றி வினையொடு பொருந்தாமையானும், ஆங்ஙனம் இருவர் என்னுந் தொகை சாத்தன் கொற்றனாகிய இருவரெனப் பெயர்த்தொகையாதலானும், அது பொருந்தாதென்க. (கக)

தில் இடைச்சொல்

சஙக. விழைவே காலம் ஒழியிசை தில்லே.

எ - னின். தில் என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்று பொருளையுந் தருந் தில் என்னும் இடைச் சொல் எ - று.

வ - று: [2]'வார்ந்தி லங்குவை யெயிற்றுச் சின்மொழி யரிவையைப் பெறுகதில் லம்ம யானே' என்பது பெறுதல் வேட்கையை உணர்த்தலின் விழைவு. [3]'பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே' என்பது பெற்றகாலத்து அறிக எனக் காலத்தை உணர்த்தலிற் காலம். [4]'வருகதில் லம்மவெஞ் சேரிசேர' என்பது வந்தால் ஒன்று செய்வல் என்னுஞ் சொல்லொழிந்து நிற்றலின் ஒழியிசை. (கஉ)

1. என்பவர் மயிலைநாதர்; இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும், தெய்வச் சிலையாரும் இக் கொள்கையினரே; சேனாவரையர் இதனை மறுத்துக் கூறுவர், (தொல். இடை. சூ. சகூ உரை.)

2, 3. குறுந். கச. 4. அகநா. உஎசு.

## மன் இடைச்சொல்

சங௨. மன்னே அசைநிலை ஒழியிசை ஆக்கங்
கழிவு மிகுதி நிலைபே றுகும்.

எ-னின். மன் என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இவ் வாறு பொருளையுந் தரும் மன் என்னும் இடைச்சொல் எ-று.

வ-று: 'அதுமற் கொண்கன் தேரே' என்பது அசைநிலை. [1]'கூரியதோர் வாண்மன்' என்புழி அதனாற் கருந்தாது அரத்துணித்தது என்னுஞ்சொல் ஒழிய நின்றமையின் ஒழியிசை. நெடியன் மன் என்புழி அவனே வலியனுமாயினான் எனப் பொருள் தருதலின் ஆக்கம். [2]'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே' என்புழி இப்பொழுது அவன் இறத்தலின் எமக்கீதல் கழிந்தது எனப் பொருள் தருதலிற் கழிதல். 'எந்தை யெமக் கருளுமன்' என்புழி மிகுதியும் அருளுமெனப் பொருள் தருதலின் மிகுதி. [3]'மன்னு வுலகத்து மன்னியது புரிமே' என்புழி இவ் விடைச் சொல்லடியாகப் பிறந்த வினையுள் மன் என்பது நிலையினை உணர்த்தினமையின் நிலைபேறு. (கங)

## மற்றென்னும் இடைச்சொல்

சஙச. வினைமாற் றசைநிலை பிறிதெனும் மற்றே.

எ-னின். மற்று என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இம்மூன்று பொருளையுந் தரும் மற்று என்னும் இடைச்சொல் எ-று.

வ-று: [4]'மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது' என்பது விரைந்தறிவாம் என்னும் வினையை ஒழித்து விரையாது அறிவாம் என்னும் வினையைத் தந்து நின்றமையின் வினைமாற்று. [5]'மற்றடிகள் கண்டருளிச் செய்ய மலரடிக்கீழ்' என்பது அசைநிலை.

1. தொல். இடை. ரு. ச. இளம். மேற்.
2. புறநா. உஙரு.
3. கள. ருச.
4. நாலடி. கக.
5. சீவக. கஅஎங.

[1]'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.'

என்பது ஊழல்லதொன்று என்னும் பொருட்டன்மையிற் பிறிது.

## முன்னதற்கோர் புறனடை

சநூச மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.

எ - னின். மேலதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய மற்று என்னும் இடைச்சொற் பொருள் மூன்றனுள், மற்றையதென்னும் பொருளாகிய வினைமாற்றும் பிறிதும் அங்ஙனங் கருதியதற்கு இனமாகிய வினைமாற்றும் இனமாகிய பிறிதுமாமன்றி வேறு வினைமாற்றும் வேறு பிறிதும் அல்லவாம் எ - று.

மேற்காட்டிய உதாரணத்துள், நல்வினையை விரைந்தறிவாம் எனக் கருதியதற்கு விரையாதறிவாம் எனவும், ஊழொன்றெனக் கருதியதற்கு ஊழல்லதொன்றெனவும், இனம் வந்தவாறு காண்க.

வேறு பிறிதாவது என்னையெனின் :—இரண்டு மணியுள் வழி ஒன்றே கண்டான் மற்றொன்று காணவேண்டும் என்றானுகின் மற்றொன்று என்பதற்கு இனமாகியதொரு மணியெனப் பொருள் கொள்ளாது ஆடை அணி எனப் பொருள்கோடலென்க. வினைமாற்றும் இவ்வாறே காண்க. மேலைச் சூத்திரத்துள் வினைமாற்றெனவும் பிறிதெனவும் பொதுப்படக் கூறினமையின் இச்சூத்திரத்தாற் புறனடை கொடுத்துக் காத்தாரென்க.

இச்சூத்திரத்திற்கு, இவ்வாறன்றி, மற்றையதென்பதனை ஓர் இடைச்சொல்லாக வைத்து அச்சொல் அங்ஙனங் கருதிய பொருட்கு இனமாகிய பொருளைத் தருமெனப் [2]பொருள் கூறுவாருமுளர். மற்றையதென்பது இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரும் வினைக்குறிப்புமாம் ஆதலானும், விகுதி கூறினரேனும் பகுதிப்பட்ட [3]மற்றையென்னும் ஐகாரவீற்றிடைச் சொற்கு

1. திருக்குறள், நூஅO.

2. பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

3. மற்றை என்னும் ஐகாரவீற்றிடைச் சொல் என்று சேனுவரையரும் நச்சினார்க்கினியரும் கூறினர்; (தொல். இடை. சூ. கக. உரை)

இப்பொருள் கூறினரெனின் மன் மன்னை கொன் கொன்னை என நின்றாற்போல மற்று மற்றை என இறுதி விகாரமாய் நின்றதன்றி இதற்கென வேறு பொருளின்மையானும், அதனோடு இதற்கு வேற்றுமை இஃதினத்தையே தருதல் எனப் பொருள் கொளின் மற்று என்பது இனத்தையும் இனமல்லதையுந் தருமெனப பொருள்படும் ஆதலானும், எல்லாவற்றானும் இனமாயுள்ளதே வினைமாற்றும் பிறிதுமாய் வருமன்றி இனமல்லது ஒருவாற்றானும் வாராமையானும், அது பொருந்தாதென்க. (௧௫)

## கொல் இடைச்சொல்

**௨௬௫. கோல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.**

**எ - னின். கோல் என்னும் இடைச்சோல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) கொல் என்பது இவ்விரண்டு பொருளை யுந் தருஞ் சொல்லாம் எ - று.

**வ - று:** இவ்வுருக் குற்றிகொல் மகன்கொல் என்பது குற்றியோ மகனோ என்னும் பொருள்பட வருதலின் ஐயம்.

[1]'பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வழங்கிழாய்.'

என்பது அசைநிலை. (௧௬)

## ஒடு, தெய்ய

**௨௬௬. ஒடுவும் தெய்யவும் இசைநிறை மொழியே.**

**எ-னின். ஒடு எனவுந் தெய்ய எனவும் வரும் இடைச்சோல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.**

(இ - ள்.) இவ்விரண்டும் இசைநிறைத்தற் பொருளைத் தருஞ் சொற்களாம் எ - று.

**வ - று:**

[2]'முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்
விதைக்குறு வட்டிற் போதொடு பொதுள.'

எனவும், [3]'சொல்லேன் றெய்ய நின்னொடு பெயர்த்தே'
எனவும் வரும். (௧௭)

---

1. கலி. ௧௧ 2. குறுந். ௧௫௫.
3. தொல். இடை. கு. ௨௮, சே. ந. மேற்.

## அந்தில், ஆங்கு

சருஎ. அந்தில்ஆங் கசைநிலை இடப்பொரு ளவ்வே.

எ - னின். அந்தில் எனவும் ஆங்கு எனவும் வரும் இடைச் சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டு இடைச்சொல்லும் அசை நிலைப்பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும் எ - று.

வ - று: [1]'அந்திற் கழலினன் கச்சினன்' என்பது அசைநிலை. [2]'வருமே—சேயிழை யந்திற் கொழுநற் காணிய' என்பது அவ்விடத்தென்னும் பொருட்டாதலின் இடம். [3]'ஆங்கத் திறனல்ல யாங்கழற' என்பது அசைநிலை. இதனுள் ஆங்கெனனும் அசைநிலை [4]ஆங்கவென இறுதி விகாரமாய் நின்றது. [5]'ஆங்காங்காயினு மாக' என்பது இடம். (கஅ)

## அம்ம இடைச்சொல்

சருஅ. அம்ம உரையசை கேண்மினென் றாகும்.

எ - னின். அம்ம என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அம்ம என்பது உரையசைப் பொருள தாயும் ஒன்று சொல்வன் கேண்மின் என்னும் ஏவற்பொரு ளதாயும் வரும் எ - று.

வ - று: 'அதுமற் றம்ம' என்பது [6]உரையசை. இது செய்யுட்கண் வரினும் அச்செய்யுளின் பொருட்டன்றித் தான் அடைந்த சொல்லின்பொருட்டு வருதலின் உரையசை ஆயிற்று.

---

1. அகநா. எஅ. 2. குறுந். உகரு.

3. கலி. அகூ.

4. ஆங்க என்பதையே ஓர் அசையாகக்கொண்டார் தொல்காப்பியர்; (தொல். இடை. சூ. உக.)

5. முருகு. உ௪௦.

6. சிறிது பொருள் உணர்த்துவனவற்றை உரையசை என்றும், பொருள் உணர்த்தாது சொற்களை அசைத்து நிற்பனவற்றை அசைநிலை என்றும் கூறுதல் தொல்காப்பியருடைய கருத்து என்பர் நச்சினார்க்கினியர்; (தொல். இடை. சூ. உகூ, உரை.)

[1]"அம்ம வாழி தோழி' என்பது ஒன்று சொல்வன் கேள் என்னும் ஏவற்பொருள் தந்தது. (கக)

வியங்கோளசை

சஙக. மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

எ - னின். மா என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மா என்னுஞ் சொல் வியங்கோளின்கண் வரும் அசைச் சொல்லாம் எ - று.

வ - று : [2]'மாயக்கடவுட் குயர்கமா வலனே' [3]'உப்பின்று புற்கை யுண்கமா கொற்கை யோனே' என வரும். (உ0)

முன்னிலையசைச்சொல்

சச0. மியாஇக மோமதி அத்தை இத்தை
வாழிய மாளவீ யாழமுன் னிலைஅசை.

எ - னின். மியா முதலிய இடைச்சொற்களின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனங் கூறிய பத்து இடைச்சொற்களும் முன்னிலைக்கண் வரும் அசைநிலைகளாம் எ - று.

வ - று :

'சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்று
மலையகலான் வாடி வரும்'

எனவும், 'தண்டுறையூர காணிக வெனவே' எனவும், [4]"காமஞ் செப்பாது கண்டது மொழிமோ' எனவும், [5]'சென்மதி பெரும' எனவும்; [6]" மெல்லியற் குறுமக ளுள்ளிச்செல் வத்தை' எனவும்; [7]"வேய்நரல் விடரக நீயொன்று பாடித்தை' எனவும்; 'காணிய

1. நற்றிணை, கஙஅ.
2. தொல். இடை. சூ. உகு, இளம். மேற்.
3. தொல். இடை. சூ. உகு, சேனா. கச. மேற்.
4. குறுந். உ.
5. தொல். இடை. சூ. உக, இளம். மேற்.
6. புறநா. ககசு. 7. கலி. ச0.

வாவா ழியமலைச் சாரல்' எனவும்; [1]'சிறிது—தவிர்ந்தீக மாளநின் பரிசில ருய்ம்மார்' எனவும்; [2]'சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே' எனவும்; [3]'நீயே—செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழ' எனவும் முறையே காண்க. (உக)

எல்லாவிடத்தும் வரும் அசைச்சொல்

சசக. யாகா பிறபிறக் கரோபோ மாதிகும்
சின்குரை ஓரும் போலும் இருந்திட்
டன்றுந் தாந்தான் கின்றுநின் றசைமொழி.

எ - னின். யா முதலிய இடைச்சொற்களின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருபது இடைச்சொல்லும் முன்னைய போலாது எல்லாவிடத்தினும் [4]எல்லாச் சொல்லினும் வரும் அசைச்சொல்லாம் எ - று.

விதவாமையின் எல்லாவிடத்தினும் எல்லாச் சொல்லினும் வருமென்பது பெற்றாம்.

வ - று :

[5]'வாழ்கநின் கழலடி மைந்த வென்னவே
தோழியா சுவாகதம் போத வீங்கிதென்.'

எனவும்,

[6]'அறநிழ லெனக்கொண்டாய் நின்குடை யக்குடைப்
புறநிழற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் காண்டிகா'

எனவும்,

1. தொல். இடை. சூ. சஅ. சேனா. நச். மேற்.
2. அகநா. கூச. 3. குறுந். உ.
4. 'இகுமும்,' 'சின்னும்' பெரும்பான்மை முன்னிலை அசைச் சொல்லாகவும் சிறுபான்மை ஏனையிடத்தும் வினைக்கண் வருமென்று தொல். இடை. சூ. உகூ-எ ஆம் சூத்திரங்களால் தெரிய வருகின்றது. 'இசின்' என்னும் ஓரசைச்சொல் உண்டென்பர் நச்சினார்க்கினியர்; (தொல் இடை. சூ. சஅ. உரை.)
5. சீவக. க0உக. 6. கலி. கக.

[1]'மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோ
ராயனை யல்ல பிற'

எனவும், [2]'பிறக்கிதனுட் செல்லான் பெருந்தவம் பட்டான்' எனவும்; [3]'நோதக விருங்குயி லாலுமரோ' எனவும்,

[4]' எரியி னன்ன செந்தலை யன்றில்
பிரியின் வாழா தென்போ'

எனவும். [5]'விளிந்தன்று மாதோ தெளிந்தவெங் கண்ணே' எனவும்; [6]'காண்டிகு மல்லமோ கொண்க' எனவும்; [7]'தீங்கா கியவா லென்றிசின்' எனவும்; [8]'அது பெறலருங் குரைத்தே' எனவும்; [9]'அஞ்சுவ தோரு மறனே' எனவும்; 'வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்' எனவும்,

[10]' ஓராற்றா லென்கண் ணிமைபொருந்த வந்நிலையே
கூரார்வேன் மாறனென் கைப்பற்ற—வோரா
நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன் றில்லேன்
கனவு மிழந்தொழிந்த வாறு'

எனவும்; [11]'நெஞ்சம் பிளந்திட்டு' எனவும்; [12]'தேவாதி தேவ னவன் சேவடி சேர்து மன்றே' எனவும்;

[13]' பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து'

எனவும்; நீர்தாம் எனவும்; நீதான் எனவும்; 'யான்பிற் னளி யன் வாழ்வா ஞசைப்பட் டிருக்கின்றேன்' [என்புழி ஆசைப்பட் டேன் என்பது பொருளாதலிற் கின்று என்பது நிகழ்கால இடை நிலையன்று] எனவும்;

[14]' அழலடைந்த மன்றத் தரந்தையராய் நின்றார்
நிழலடைந்தே நின்னையென் றேத்த'

எனவும்; முறையே காண்க. பிறவும் அன்ன. (உஉ)

இடையியல் முற்றிற்று.

---

1. கலி. கOஅ.
2. நன்னூல், சூ. சசO. மயிலை. உரை பார்க்க.
3. கலி. ௩௩.
4. தொல். இடை. சூ. ௩க. சே. ௩. மேற்
5. நற். கஎஅ.
6. ஐங்குறு கஉக-அ.
7. ,, ௫௫.
8. புறநா. ௫.
9. திருக். ௩௬௬.
10. முத்தொள்ளாயிரம்,
11. கலி. கOக.
12. சீவக. க.
13. திருக். கஎஅ.
14. பு. வெ. சஉ.

# ௩. உரியியல்

உரிச்சொல்லின் பொதுவிலக்கணம்

சசஉ. பல்வகைப் பண்பும் பகர்பெயர் ஆகி
ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன உரிச்சொல்.

எ-னின். நிறுத்த முறையானே உரிச்சொல் இலக்கணம் இவ்வியலான் உணர்த்துவான்றொடங்கி அவற்றின் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) *பண்புகள் குணப்பண்புந் தொழிற்பண்புமாகிய இரண்டனுள் அடங்குமாயினும் இசை குறிப்புப் பண்பெனப் பல வேறுவகைப்படுதலின் பல வேறுவகைப் பட்ட பண்புகளையும் உணர்த்தும் பெயராகி அங்ஙனம் உணர்த்துழி ஒரு சொல் ஒரு குணத்தை உணர்த்துவனவும் பல குணத்தை உணர்த்துவனவுமாய் ஏனைப் பெயர்வினைகளை விட்டு நீங்காவாய்ச் செய்யுட்கு உரியனவாய்ப் பொருட்கு உரிமை பூண்டு வருவன உரிச்சொல்லாம் எ-று.*

*இவ்வாறு வருதல் மேற்காட்டும் உதாரணங்களுட் காண்க.*

*இவையும் பண்புப்பெயராயினும் ஏனைப் பெயர்வினைகளை விட்டு நீங்காமையின் வேறோதப்பட்டன என்பதூஉம், [1]செய்யுட்கு உரியனவாய்ப் பொருட்கு உரிமை பூண்டனவாதலின் இவற்றிற்கு உரிச்சொல்லெனக் காரணக்குறி போந்தது என்பதூஉம், இவற்றின் இலக்கணங் கூறிய முகத்தான் உணர்த்தியவாறு காண்க.*

---

1. 'இசைக்குறிப்புப் பண்பென்னும் பொருட்குத் தாமே உரியவாதலின் உரிச்சொல்லாயின' என்பர் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும்; 'உரிச்சொல் என்பது யாதோவெனின் ஒருவாய்பாட்டாற் சொல்லப்படும் பொருட்குத் தானும் உரித்தாகி வருவது...எழுத்ததிகாரத்துள் இதனைக் குறைச்சொற்கிளவி யென்று ஓதினமையால் வடநூலாசிரியர் தாது என்று குறியிட்ட சொற்களே இவை என்று கொள்ளப்படும்' என்பர் தெய்வச்சிலையார்; (தொல். உரி. சூ. க. உரைகள்.)

## சிவஞானமுனிவர் விளக்கம்

இசை - ஓசை. குறிப்பு - மனத்தாற் குறித்துணரப்படுவது. பண்பு - பொறியாலுணரப்படுங் குணம். இவற்றை அடக்கி நின்ற குணமுந் தொழிலும் பொருளெனவும் படுமாதலின் இவற்றை உணர்த்தும் உரிச்சொல்லும் பெயர்ச்சொல் லெனப்படுமாதலின் பல்வகைப் பண்பும் பகர் பெயராகி என்றார். (க)

### பண்பிது வென்பது

சசரு. உயிருயிர் அல்லதாம் பொருட்குணம் பண்பே.

எ - னின். மேல் பண்பு என்றார் அஃது இஃதென உணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) உயிராகிய பொருளும் உயிரல்லாத பொரு ளுமென இருவகையுள் அடங்கும் உலகத்துப் பொருள் களின் குணங்கள் பண்பாம் எ - று.

கடவுட்பொருளை ஒழித்தார் அதற்கு ஒரு குணம் இன்மை யானும் உண்டேற் சுட்டப்பட்டு உலகப்பொருளாம் ஆதலானு மென்க. (உ)

### உயிர்ப்பொருள்

சசசு. மெய்ந்நா மூக்கு நாட்டம் செவிகளின்
ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமேல் உணர்தலின்
ஓர்அறி வாதியா உயிர் ஐந்தாகும்.

எ - னின். மேல் உயிராகிய பொருளென்றார் அவை இவை எனத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் மெய் முதலாகக் கூறிய ஐம் பொறிகளாலும் பரிசம் இரதங் கந்தம் உருவஞ் சத்தம் என்னும் ஐம்புலனையும் உணருங்கால் மெய்யாற் பரிசத்தை உணரும் உணர்ச்சியொன்று முதலாகக் கீழ்ப்போன உணர்ச்சியுங்கொண்டு மேல் வரும் புலன்களை ஒன்றே

டொன்றாக உணர்தலின் [1]ஓரறிவுயிர் முதலாக ஐந்தாம் அவ்வுயிர் எ - று. (ரு)

ஓரறிவுயிர்

சசரு புல்மரம் முதலஉற் றறியும்ஓர் அறிவுயிர்.

எ - னின். மேற் கூறிய உயிர் ஐந்தனுள் ஓரறிவுயிர் இவை யென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) புல்லும் மரமும் முதலியன மெய்யாற் பரிசித்துப் பரிசத்தை அறியும் [2]ஓரறிவுயிர்களாம் எ - று.

ஈரறிவுயிர்

சசசு. முரள்நந் தாதிநா வறிவோடீ ரறிவுயிர்.

எ - னின். ஈரறிவுயிர் இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பியுஞ் சங்கும் முதலியன கீழ்ப்போன மெய்யறிவேயன்றி நாவால் இரதத்தை அறியும் அறிவோடு [3]ஈரறிவுயிர்களாம் எ - று. (சு)

மூவறிவுயிர்

சசஎ. சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்.

எ-னின். மூவறிவுயிர் இவையென உணர்த்துதல் நுதலிற்று.

---

1. "ஆறறி வதுவே அவற்றொடு மனனே மக்க டாமே யாறறி வுயிரே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" (மரபு. சூ உஎ, ஙங) எனத் தொல்காப்பியம் ஆறுவது அறிவும் அதனையுடைய உயிரும் உண்டென்று கூறும்; 'அவர், மனத்தையும ஒரு பொறியாக்கி அதனன் உணரும மக்களையும விலங்கினுள் ஒரு சாரனவற்றை யும் ஆறறிவுயிரென்றார்; இவர், அம் மனக்காரிய மிகுதி குறைவா லுள்ள வாசியல்லது அஃது எல்லாவுயிர்க்கும் உண்டென்பார் மதம் பற்றி இவ்வாறு சொன்னாரென்க' என்பர் மயிலைநாதர்; (நன். சூ. சசஅ. உரை.)

2. 'பயிலத் தொடுங்காற் புலருமாகலின் ஓரறிவுடைய வென வழக்கு நோக்கிக் கூறினன்' (தொல். மரபு. சூ. உஅ. பேர்.)

3. இரை சுவைக்கோடலும் பிறிதொன்று தாக்கிய வழி அறிதலுமுடைமையின் மெய்யுணர்வோடு நாவுணர்வுமுடையன; (தொல். மரபு. உஉ. பேர்.)

(இ - ள்.) கறையானும் எறும்பும் முதலியன கீழ்ப் போன இரண்டறிவுகளேயன்றி மூக்கால் கந்தத்தையும் அறியும் அறிவினோடு [1]மூவறிவுயிர்களாம் எ - று.

மேல் ஒடுவை ஈண்டும் வருவித்துக்கொள்க. (௬)

நாலறிவுயிர்

சசஅ. [2]தும்பிவண் டாதிகண் அறிவின்நா லறிவுயிர்.

எ - னின். நாலறிவுயிர் இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தும்பியும் வண்டும் முதலியன கீழ்ப்போன மூன்றறிவேயன்றிக் கண்ணால் உருவத்தை அறியும் அறிவினோடு நாலறிவு உயிர்களாம் எ - று. (எ)

ஐயறிவுயிர்

சசகூ. வானவர் மக்கள் நரகர் விலங்குபுள்
ஆதிசெவி அறிவோ டையறி வுயிரே.

எ-னின். ஐயறிவுயிர் இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வானவரும் மக்களும் நரகரும் விலங்கும் புள்ளும் முதலியன கீழ்ப்போன நாலறிவேயன்றிச் செவியாற் சத்தத்தை அறியும் அறிவினோடு ஐயறிவுயிர்களாம் எ - று

---

1. இவை உற்றுணர்ந்து மீள்தலும் நாச்சுவை கோடலும் நெய்யுள்வழி மோந்தறிதலுமென மூன்றறிவினையுடையவாறு கண்டு கொள்க. இவற்றுக்குக் கண்ணுஞ் செவியுமின்மை எற்றான் அறிதுமெனின், 'ஒன்று தாக்கிய வழியன்றி அறியாமையிற் கண்ணில வென்பதறிதும்; உரப்பிய வழி ஓடாமையிற் செவியில வென்பதறிதும்' என்பர் பேராசிரியர்; (தொல். மரபு. சூ. ௯0. உரை)

2. "நண்டுந் தும்பியும் நான்கறி வினவே" (மரபு. சூ. ௯௧) என்பது தொல்காப்பியச் சூத்திரம்; தும்பி - வண்டுகளில் முதன்மையானதொரு சாதி; தும்பியும் வண்டும் செவியறிவும் உடையனவென்பர் நச்சினார்க்கினியர்; (சீவக. அகூஉ - ௯. உரை.)

சித்துப்பொருள் சடப்பொருளென்பார் உயிருயிரல்லதாம் பொருளெனக் கூறியவாறும், சித்தாகிய உயிரறிவு சடமாகிய உடலோடு கூடிய வழியன்றி நிகழாமையானும் அந் நிகழ்ச்சி கண்டல்லது உயிருண்டென்பதூஉம் அதற்கோர் அறிவுண்டென்பதூஉந் தோன்றாமையானும் உயிரைப் பிரித்தோதாது உடலொடு கூட்டிப் 'புல்மர முதல்'என முறையே கூறியவாறும், அவ்வுயிரறிவு உடலோடு கூடி நிகழ்வழி ஐம்பொறியானும் ஐந்தாய் நிகழ்தலின் ஐயறிவெனக் கூறியவாறும், இவ்வைம்பொறியும் எல்லாவுடற்கண்ணும் ஒருங்கு நில்லாது இங்ஙனங் கூறிய முறையே நின்று அறிவை நிகழ்த்தலின் உயிர்கள் பலவாயினும் அறியும் வகையான் உயிர் ஐந்தெனக் கூறியவாறுங் காண்க.

## சிவஞான முனிவர் விளக்கம்

ஆசிரியர் தொல்காப்பியர் "மக்க டாமே யாறறி வுயிரே" எனக் கூறியிருக்க மக்கள் முதலியோரை ஐயறிவுயிரெனக் கூறல் மாறுகொளக் கூறலாம் பிறவெனின் :—மக்கள் முதலியோர் மனவறிவோடு ஆறறிவுயிரென்பது நோக்கியன்றே முன்னர் 'மக்க டேவர் நரக ருயர்திணை' எனக் கூறிப் போந்ததூஉம் ஆதலின் இங்ஙனம் ஐம்புலன் மாத்திரையே நுகரும் அறிவுடைய மக்கள் முதலியோரை விலங்கு முதலியவற்றோடு எண்ணி ஐயறிவுயிரெனக் கூறினரென உய்த்துணர்ந்து கொள்க. (அ)

## உயிரல்லாத பொருள்

சரு0. உணர்விய லாம்உயிர் ஒன்றும் ஒழித்த
உடல்முத லனைத்தும் [1]உயிரல் பொருளே.

எ-னின். உயிரல் பொருளாவன இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) அறிவு மயமாம் உயிரொன்றுமேயன்றி அவ்வுடம்பு முதலிய உலகத்துப் பொருள்களெல்லாம் உயிரல்லாத பொருள்களாம் எ - று.

முன்னர் உயிர் மாத்திரையே கூறுவார் உடம்பொடு கூட்டிக் கூறினரன்றி உடம்பையும் உளப்படுத்தி உயிர்ப்பொருளென்றார் அல்லரென்பது இதனான் உணர்க. (க)

---

1. (பாடம்) உயிரில்.

### முன்னதற்கு ஒரு புறனடை

சஙக. ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றினும்
வேற்றுமை நயத்தின் வேறே உடல்உயிர்.

எ - னின். மேலதந்த ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *பசுவுடம்பு எடுத்துழித் தன் கன்றினுக்கு இரங்கி நன்கிழைத்த உயிர் அவ்வுடம்பு நீங்கிப் புலியுடம்பு எடுத்துழி இரங்காது அக் கன்றினுக்கே தீங்கிழைக்குமாதலின், எவ்வுயிர் எவ்வுடம்பு எடுத்ததோ அவ்வுடம்பின் மயமாய் நிற்கும் ஒற்றுமைநயங் கருதியவழி ஒன்றுபோல் தோன்றுமாயினும் உயிர் சித்தாயும் உடம்பு சடமாயும் நிற்கும் வேற்றுமைநயமாகிய உண்மை கருதியவழி அவ்விரண்டுந் தம்முள் வேறுமாதலின், உயிரோகூடிடு நின்ற காலத்தும் அவ்வுடம்பினை உயிரல்பொருளென்றும் எ - று.* (கo)

### உயிர்ப்பொருள்களின் குணப்பண்பு

சஙஉ. அறிவருள் ஆசை அச்ச மானம்
நிறைபொறை ஓர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பேளிமை எய்த்தல்
துன்பம் இன்பம் இளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமதம்
மறவி இனைய உடல்கோள் உயிர்கதுணம்.

எ - னின். உயிரின் துணம் என்றார் அவை இவை என உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *அறிவு முதலிய* [1]*முப்பத்திரண்டும் இவை போல்வன பிறவும் உடலோடு கூடிய உயிர்க்குணங்களாம் எ - று.*

---

1. *இம் முப்பத்திரண்டினுக்கும் உதாரணங் காட்டுவர் மயிலைநாதர்.*

உடலோடு கூடாவழி உயிர்க்குணங்கள் தோன்றாவென்பார் உடல்கொள் உயிர்க்குணமென்றார். பின் வருவதும் அது. (௧௧)

உயிர்ப்பொருள்களின் தொழிற்பண்பு

௪௫௩. துய்த்தல் துஞ்சல் தொழுதல் அணிதல்
[1]உய்த்தல் ஆதி உடலுயிர்த் தொழிற்குணம்.

எ - னின். உயிரின் தொழிற்குணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐம்புலனையும் நுகர்தல் முதலிய இவ்வைந்தும் இவை போல்வன பிறவும் உடலோடு கூடிய உயிரின் தொழிற்குணங்களாம் எ - று. (௧௨)

உயிரல் பொருள்களின் குணப்பண்பு

௪௫௪. பல்வகை வடிவிரு நாற்றம்ஐ வண்ணம்
அறுசுவை ஊறெட் டுயிரல் பொருட்குணம்.

எ - னின். உயிரல்லாத பொருள்களின் குணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வட்டம் இருகோணம் முக்கோணம் சதுரம் முதலிய பலவகை [2]வடிவும், நற்கந்தம் துர்க்கந்தம் என்னும் இருநாற்றமும், வெண்மை செம்மை கருமை பொன்மை பசுமை என்னும் ஐந்து வண்ணமும், கைப்புப் புளிப்புத் துவர்ப்பு உவர்ப்புக் கார்ப்பு இனிப்பு என்னும் ஆறு இரதமும், வெம்மை தண்மை மென்மை வன்மை நொய்மை சீர்மை இழுமெனல் சருச்சரை என்னும் எட்டு ஊறும், உயிரல்லாத பொருள்களின் குணங்களாம் எ - று.

இருபொருள்களுக்கும் பொதுவாகிய தொழிற்பண்பு

௪௫௫. தோன்றல் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்கல் அடைதல் நடுங்கல் இசைத்தல்
ஈதல் இன்னன இருபொருள் தொழிற்குணம்.

1. உய்த்தலென்பதற்கு மடைத்தொழில் உழவு வாணிகம் கல்வி எழுத்து சிற்பமென்னும் ஆறுதொழில்களையும் முயறலெனப் பொருள் கூறுவர் மயிலைநாதர்.

2. வடிவு முப்பத்திரண்டு வகை யென்பர், (தொல். சிறப்புப். நூன்மரபு. சூ. ௧. நச்.)

எ - னின். உயிரல்பொருட்கேயுரிய தொழிற்குணம் அருகிக் கிடத்தலின் அதனை ஒழித்து அவ்விருபொருட்கும் பொதுவான தொழிற்குணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தோன்றல் முதலிய ஒன்பதும் இவை போல்வன பிறவும் உயிர்ப்பொருள் உயிரல்பொருளென்னும் இரண்டற்கும் பொதுவான தொழிற்குணங்களாம் எ - று.

வ - று: உயிர் தோன்றி மறைந்தது, உடல் தோன்றி மறைந்தது, நெருப்புத் தோன்றி மறைந்தது என, இத்தொடக்கத்தனவெல்லாம் இருபொருட்கும் பொதுவாகிய தொழிற்குணமாதல் காண்க. (கச)

## ஒருகுணந் தழுவிய உரிச்சொல்

சஙரு. சால உறுதவ நனிகூர் கழிமிகல்.

எ - னின். 'பல்வகைப் பண்பு' என்றார், அவை இவை என இதுகாறு முணர்த்தி அப்பண்புகளுள் ஒருகுணம் பலகுணந்தழுவி வருமேன்னும் உரிச்சோற்கள் இவை என உணர்த்துவான் தொடங்கி அவற்றுள் ஒரு குணந் தழுவிய உரிச்சொல்லுள் சில உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சால என்பது முதற் கழி என்பது ஈறாகக் கூறிய ஆறு உரிச் சொல்லும் மிகுதியாகிய ஒரு குணத்தை உணர்த்துஞ் சொற்களாம் எ - று.

வ - று: [1]'பருவந்து சாலப் பலகொலென் றெண்ணி' [2]'உறுவளி தூக்கு முயர்சினை மாவின்' [3]'தவச்சேய் நாட்டா ராயினும்' [4]'நனிப்ப தையே நயனில் கூற்றம்' [5]'பொறைநில்லா நோய்கூரப் புல்லென் றிசினே' [6]'காமங் கழிகண் ணோட்டம்' என முறையே காண்க. இவற்றுட் சால என்பது சால் என்னும் உரிப்பெயரடியாகப் பிறந்த வினையெச்சக் குறிப்பு. சாலப்பல்வாம் என ஆம் என்னும் வினைப்பயனிலை தொக்குநின்றது.

இப்பண்படிகளை நோக்கிப் 'பல்வகைப் பண்பும் பகர்பெயராகி' என்றார்.

1. வளையாபதி. 2. கலி. அச.
3. நற். ககஙு. 4. புறநா. உஉஎ.
5. கலி. ந. 6. பதிற். உஉ.

சால் எனப் பண்படியாகச் சூத்திரஞ் செய்யாது சால என வினையெச்சக் குறிப்பாகச் சூத்திரஞ் செய்தல் அவ்வுரிப்பெயரடியாக வினைவிகற்பங்களெல்லாம் பிறக்கும் என்பது தோன்ற உடம்பொடுபுணர்த்தலாமென்க. அவையெல்லாம் வந்தவழிக் காண்க. (௧௫)

பலகுணந் தழுவிய உரிச்சொல்

௪௪௭. கடிஎன் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்கம் அச்சம் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை ஆர்த்தல்
வரைவே மன்றல் கரிப்பின் ஆகும்.

எ - னின். பலகுணந் தழுவிய உரிச்சொல்லுள் ஒன்று உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கடியென்னும் உரிச்சொல் காப்பு முதலிய பதின்மூன்று குணத்தையும் உணர்த்தும் எ - று.

வ - று: [1]'ஒண்சுடர் நல்லிருங் கடிநீவி' என்றது காப்பு. [2]'கடிநுனைப் பகழி' என்றது கூர்மை. [3]'கடிமாலைசூடி' என்றது நாற்றம். [4]'கண்ணுடை யன்ன கடிமார்பன்' என்றது விளக்கம். 'கடியர தெளிர்க்கே கைவிளக் காகி' என்றது அச்சம். 'கடிமா மிசைப்பூத்துக் கம்புளோ டன்ன மார்க்கும்' என்றது சிறப்பு. [5]'எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின்' என்றது விரைவு. [6]'கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்' என்றது மிகுதி. 'இது புதிதுண் கடவுள் என்றுமாம். 'கடிமுரசு' என்றது ஆர்த்தல். [7]'கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி' என்றது வரைவு. 'கடிவினை முடுகினி' என்றது மன்றல். [8]'கடிமிளகு தின்ற கல்லா மந்தி' என்றது கரிப்பு. (௧௬)

ஒருகுணந் தழுவிய உரிச்சொல்

௪௫௮. மாற்றம் நுவற்சிசேப் புரைகரை நொடிஇசை
கூற்றுப் புகறன் மொழிகிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி இயம்பல் சொல்லே.

1. அகநா: எ. 2. தொல். உரி. சூ. அஎ, சே. ந. மேற்.
3. சீவக: கடுஎச. 4. சீவக: உ௩உஎ.
5. புறநா: க. 6. குறுந்: ௧0௫.
7. நாலடி: கடுக. 8. தொல். உரி. சூ. அஎ. இளம். மேற்

எ - னின். இதுவும் ஒருகுணந் தழுவிய உரிச்சொல்லுள் சில உணர்த்துதல் நுதலிற்று.

'சாலவுறுதவ' என்பதனைச் சார வையாது ஈண்டுக் கூறினார், இவை ஒலிப்பண்பை உணர்த்தி ஏனைப் பெயர் வினைகளை ஒருவாது நடத்தலின், அத்துணைச் சிறப்பினவன்றி ஒரோவழி ஒருவியும் நடக்கும் என்பது தோன்றற்கென்க.

(இ - ள்.) *மாற்றம் முதல் இயம்பல் ஈறாகக் கூறிய பதினாறுஞ் சொல்லென்னும் ஒரு குணத்தை உணர்த்தும் உரிச்சொற்களாம் எ - று.*

வ - று: [1] *'கோவலர்வாய் மாற்ற முணர்ந்து'* [2] *'இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல'* [3] *'தெருண்டாரவை செப்பலுற் றேன்'* [4] *'உரைப்பா ருரைப்பவை யெல்லாம்'* [5] *'அறங்கரை நாவி னான்மறை முற்றிய'* [6] *'அஞ்சொற் பெரும்பணைத்தோ ளாயிழையா டானொடியும்'* [7] *'நசையுநர்க் கடையா நன்பெரு வாயி—லிசையெனப் புக்கு' 'உற்றது நாக்கள் கூற வுணர்ந்தனை' 'புகன்ற வன்றியும் பூமி கவருமே'* [8] *'காமஞ்செப்பாது கண்டது மொழிமோ' 'கிளக்கும் பாண கேளினி' 'மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்' 'அறிவன தடிதொழு தறைகுவ னெண்ணே'* [9] *'ஒருவன் செய்ந்நன்றி கொன்றோர்க்—குய்தியில்லென வறம்பா டிற்றே' 'வார்த்தை பகர்குற்றேன்'* [10] *'இடிபோல வியம்பினானே' என முறையே காண்க.* (கஎ)

சருக. முழக்கிரட் டொலிகலி இசைதுவை பிளிறிரை
இரக்கழுங் கியம்பல் இமிழ்குளி றதிர்குரை
கனைசிலை சும்மை கௌவை கம்பலை
அரவம் ஆர்ப்போ டின்னன ஓசை.

எ - னின். இதுவும் அது.

(இ - ள்.) *முழக்கு முதலிய இருபத்திரண்டும் இவை போல்வன பிறவும் ஓசை என்னும் ஒரு குணத்தை யுணர்த் தும் உரிச்சொற்களாம் எ - று.*

---

1. சீவக : சரு௨. 2. முருகு : கஅ௨.
3. சீவக : கூ 4. குறள் : உரு௨.
5. தொல். பாயிரம். 6. பு. வெ. ருரு௫.
7. பொருந : கூ௬-எ. 8. குறுந் : உ.
9. புறநா : ருச . 10. சீவக : சரு௨.

வ - று: [1]'முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇ' 'குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை' [2]'ஒல்லெனு வொலிக்கு மொலிபுன லூரற்கு' [3]'கலிகெழு மூதூர்' [4]'பறையிசை யருவி' [5]'தோறு வைத்தல்' [6]'பிளிறுவார் முரசம்' [7]'இரைக்குமஞ் சிறைப் பறவைகள்' [8]'இரங்கு முரசினம்' [9]'இரும்பிழி மாரி யழுங்கின மூதூர்' [10]'கலிலை முரசம் இயம்ப' [11]'இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கை' [12]'குளிறு முரசங் குணில்பாய' [13]'களிறு களித்த திருங் கார்' [14]'குரைபுனற் கன்னி' [15]'கனைகடற் சேர்ப்ப' [16]'சிலைத் தார் முரசங் கறங்க' [17]'தள்ளாத சும்மைமிகு தக்கிண நாடு நண்ணி' [18]'கௌவை நீர்வேலி' [19]'விளைக்கம்பலை மனைச்சிலம்பவும்' [20]'அறைகட லரவத்தானை' [21]'ஆர்த்தபல்லியக்குழாம்' என முறையே காண்க. (கஅ)

## இவ்வியலுக்குப் புறனடை

சசுO. இன்ன தின்னுழி இன்னணம் இயலும்
என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே.

எ - னின். இவ்வியலுக்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர் வினை இடை உரி என்னும் நால்வகைச் சொல்லுள் இன்னசொல் தன்மைமுன்னிலை

1. புறநா: கஅ.
2. ஐங். ஐம். உஅ.
3. புறநா: ருஉ.
4. புறநா: கஉகூ.
5. புறநா: ச.
6. சீவக: கசுகஎ.
7. சூளா. கல்யாண. ருக.
8. புறநா: கஙஎ.
9. அகநா: கஉஉ
10. சிலப். ஆய்ச்சியர்.
11. புறநா: கக.
12. பு. வெ. சஅ.
13. பு. வெ. ஙஎ.
14. சீவக: ஙக.
15. நாலடி: கஙஅ.
16. புறநா: ஙசு.
17. சீவக: உ0.
18. பு. வெ. அங.
19. யா. வி. மேற்.
20. சூளா. சீயவதை. க0அ.
21. சூளா. தூது. சரு.

படர்க்கை என்னும் மூன்றிடத்துள்ளும் வழக்குச் செய்யு ளென்னும் இரண்டிடத்துள்ளும் இவ்விடத்து இவ் விலக் கணத்ததாய் நடக்குமென்று சொல்லக்கடவதாகிய இந் நூலுள் அவ்விலக்கணங் காட்டுதற்கு வேண்டிய மாத்தி ரையே கூறுவதன்றி உரிச்சொல்லாகிய குணப்பெயரையும் ஏனைக் குணிப்பெயரையும் நிகண்டினுள் கூறினாற்போல விரித்துக் கூறக்கடவமல்லம், விரிக்கின் மற்றொன்று விரித் தல் என்னுங் குற்றம் வருமாதலின், அவற்றினைக் கண் டறிய வேண்டினார் இவ்விலக்கணம் அறிதற்கு முன்னரே பிங்கலர் முதலாகிய ஏனைப் புலவரால் கூறப்பட்ட [1]பிங்கலந் திவாகரஞ் சூடாமணி முதலிய நூல்களுள் வகுக் கும் உரிச்சொற் றொகுதியுள் விரும்பிக் கொள்க எ - று.

இவ்விலக்கணம் அறிதற்கு முன்னரே நிகண்டு அறிகவென் றூம், அறியுமுறை அதுவாதலான்.

இவ்வியலுள் சால என்பது முதல் ஆர்ப்பு என்பது ஈறாக நாற்பத்தைந்து உரிச்சொல் எடுத்துச் சுருங்கச் சொல்லுதல், சொல்லியலுணர்த்தும் நூலுட் சொற்றொகுதிகளை விரிக்கின் மற்றொன்று விரித்தலாமென உணரார் குன்றக் கூறலாம் என்ப ராதலின், அது பரிகரித்தற்கு இச் சூத்திரத்தால் புறனடை கூறினார். இங்ஙனங் கூறவே, பெயரியலுள் பெயர்த் தொகுதி யினையும் வினையியலுள் வினைத்தொகுதியினையும் இடையியலுள் இடைத்தொகுதியினையும் விரியாது அவ்விலக்கணங் காட்டுதற்கு வேண்டிய மாத்திரையே கூறுதற்கும் இதுவே புறனடையா மென்க.

பெயரியல் என்பது பெயரிலக்கணம். பெயர்த்தொகுதி என்பது பெயர்க்கூட்டம். ஏனையவும் அன்ன. நிகண்டு எனினும் ஒக்கும்.

இலக்கணங் கூறும் நூலுள் நிகண்டினையும் உடன் கூறாது அதனை வேறொரு நூலாகக் கூறுதல் தமிழுள்ளேயன்றி ஆரிய முதலிய வற்றுள்ளுங் காண்க. (கக)

---

1. பிங்கலத்தை மட்டும் மயிலைநாதர் கூறினார். சூடா மணியை இங்கே கூறியது உரையாசிரியர் கருத்தாகக் கொள்க. நூலாசிரியர் காலத்திற்கு அந்நூல் பிற்பட்டதாதலின்.

இவ்வதிகாரத்திற்குப் புறனடை

சசுக. சொற்றொறும் இற்றிதன் பெற்றியென் றனைத்தும்
முற்ற மொழிகுறின் முடிவில ஆதலின்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்
தெற்றென உணர்தல் தெள்ளியோர் திறனே

எ - னின். இவ்வதிகாரத்திற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சொற்றொறும் இத்தன்மைத்து இதன் இலக்கணமென்று முற்ற மொழியப்புகின் வரம்பிலவாமாத லின், எடுத்துக் கூறிய சொற்களின் இலக்கணங்களைக் கொண்டு சொல்லாதனவற்றின் இலக்கணங்களையும் ஒப்புமை கருதி இதுவும் அதுவென முற்ற விளங்க உணர்தல் நூலோதித் தெளிதற்குரிய மாணாக்கர் திறனும் எ - று.

இவற்றிற்கு உதாரணம் முன்னரே வந்துழி வந்துழிக் காட்டினும்: ஆங்காங்கு உணர்க (உ0)

இந்நூலிற்குப் புறனடை

சசுஉ. பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே.

எ - னின். இந்நூலிற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்.) முற்காலத்துள்ள இலக்கணங்களுள் சில பிற்காலத்திறத்தலும் முற்காலத்து இல்லன சில பிற்காலத்து இலக்கணமாய் வருதலுங் குற்றமல்லவாங் காலவேற்றுமை அதுவாகலான் எ - று.

இவற்றிற்கு உதாரணம் முன்னர் வந்துழி வந்துழிக் காட்டினும், ஆங்காங்கு உணர்க. (உக)

உரியியல் முற்றிற்று.

சொல்லதிகாரம் முற்றுப்பெற்றது

நன்னூல் சங்கரநமச்சிவாயர் விருத்தியுரை முற்றும்.

## சொல்லதிகாரப் பொருளடைவு

### கட்டளைக் கலித்துறை

இருதிணை மூவிட நான்மொழி யைம்பா லறுதொகையேழ்
அருவழு வெட்டுரு பொன்பான் ஞெகாரிலை யாய்ந்த வெச்சம்
ஒருபது கோளெட்டு முப்பொழு தீரிட மோரியல்பாய்
வருமொழி மூன்று முணரச்சொல் வண்மை வருந்திருவே.

## எழுத்ததிகார இயல்களின் நூற்பாத் தொகை

### வெண்பா

[1]எழுபான் இரண்டெழுத்தின் எற்றபதத் தைஞ்ஞான்
கொடுமூன் றுயிரீரைம் பான்மூன் றருமெய்யீறு
ஆறு றுருபியல்மூ வாறும் எழுத்துரை நூற்
பாவிருநூற் றோரிரண்டாப் பார்.

## சொல்லதிகார இயல்களின் நூற்பாத் தொகை

### வெண்பா

[2]பேரறு பத்திரண்டு பின்வினையெண் ணான்குபொது
ஓரறுபத் தெட்டிடை மூவேழின் மேலொன்று
உரியிருபத் தொன்றாகச் சொற்சூத் திரத்தின்
விரியிருநூற் றோரைந்தா வேண்டு.

1. இத்தொகையில் பொதுப்பாயிர நூற்பாக்கள் சேர்க்கப் பெறவில்லை. இவ்வெண்பாவில் கூறப்படும் வகையாவது: (க) எழுத்தியல் நூற்பா: எஉ; (உ) பதவியல்: உங; (ங) உயிரீற்றுப் புணரியல்: ருங; (ச) மெய்யீற்றுப் புணரியல்: ஙசு; (ரு) உருப புணரியல்: கஅ. ஆக நூற்பாக்கள்: உ0உ.

2. இவ்வெண்பாவில் கூறப்படும் வகையாவது: (க) பெயரியல்: சுஉ: (உ) வினையியல்: ஙஉ; (ங) பொதுவியல்: சுஅ; (ச) இடையியல்: உஉ; (ரு) உரியியல்: உக. ஆக நூற்பாக்கள் உ0ரு.

# சூத்திர முதற்குறிப்பு அகரவரிசை

# அருஞ்சொற்பொருள் அகரவரிசை

[எண், சூத்திர எண்களைக் குறிக்கும்]

அஃகுதல் - சுருங்குதல், ௬0
அங்கனை - பெண்பாற் பொதுப் பெயர், ௨௭௭
அச்சன் - தந்தை, ௨௭௩
அச்சு - உயிரெழுத்து, வண்டியின் அச்சு, ௧௧௮, ௧௪௬
அஞ்செவி - செவியகம், ௨௨௨
அடிசில் - உண்பன முதலியவற்றை உணர்த்தும் பொதுச் சொல், ௨௬0
அநுவதித்தல் - வழிமொழிதல், ௧௨0
அபாவம் - இன்மை, ௩௨0
அருத்தாபத்தி - சொல்லியது கொண்டு சொல்லப்படாத பொருளைப் பெறுதல், ௧00
அரைக்காணி - ஒன்றில் நூற்றறுபதாகிய ஒரு பங்கு, இரண்டு முந்திரி, ௩௬௮
அரைமா - ஒன்றில் நாற்பதாகிய ஒரு பங்கு, ௩௬௮
அலவா - சந்திரனே, வண்டே, ௩௧௧
அவிகாரி - விகாரமில்லாதது, ௨௯௫
அழன் - பிணம், ௨௧௮
அழுங்கு - ஓசை, ௪௫௯
அளபு - அளபெடை; மாத்திரை, ௯௧
அளறு - சேறு; நரகம், ௧௬௨
அறிவது - ஞாபகம்
அறுபதம் - வண்டு, ௨௯0
ஆசிரியற்க - ஆசிரியனுக்கு, ௩௧௮
ஆடாமோ - ஆடுவாமோ, ௩௪௧
ஆடி - கண்ணாடி, ௧௮
ஆடூஉ அறிசொல் - ஆண்பாலைத் தெரிவிக்கும் சொல், ௧௨௨
ஆதிரையான் - சிவபெருமான், ௨௭௬
ஆமா - காட்டுப்பசு, ௧௭௧
ஆமிலம் - புளியமரம், ௧௪௯
ஆய் - ஆராய்வாய், ௧௬௧
ஆரிடம் - இருடிகளாற் செய்யப்பட்ட நூல், ௬௯
ஆரியம் - வடமொழி, ௧௨௮
ஆர்ங்கோடு - ஆத்திமரத்தின் கிளை, ௧௧௬
ஆவுரிஞ்சு தறி - தினவுள்ள பசுக்கள் அதைத் தீர்க்க நட்டு வைத்துள்ள கல்தூண், ௩௬௪
ஆறை - ஆற்றூர், ௨௩௯
இகம் - இவ்வுலகம். பாயிரவுரை.
இகுளை - தோழி, ௨௭௭
இடக்கரடக்கல் - வெளிப்படையாகச் சொல்லத் தகாத சொல்லை மறைத்து வேறொன்றால் சொல்லுதல், ௧௭௮
இடம் பூணி - இடத்திற் பூட்டப்பட்ட காளை, ௩௭௫
இடி - மா, ௩௮௯
இயைபு - புணர்ச்சி, ௯௭
இரலை - ஒருவகைமான், ௫௨
இலத்தி - யானை, குதிரை, கழுதை இவற்றின் மலம், ௩௭௫
இழுமெனல் - வழுவழுப்பாயிருத்தல், ௪௫௪
இறை - விடை, ௩௮௬
ஈடு - பெருமை, ஒப்பு, ௧0௨
ஈட்டம் - கூட்டம், ௩00
ஈண்டைக்கு - இவ்விடத்துக்கு, ௧௩௭

ஈம் - சுடுகாடு, ௨௨௩
உணவெண்-உணவிற்குரிய எள், ௨௧௧
உண்கு - உண்பேன், ௧௪௫
உண்டி - உண்டாய், ௧௯௧
உதுக்காண் - உவ்விடத்தே பார
உமண் - உப்பு வணிகர், ௨௧௧
உரம் - நெஞ்சு, மார்பு, ௨௫, ௭௪
உரி - அரைநாழி, ௧௭௪
உரும் - இடி, ௨௨௩
உரையளவை - ஆகமப் பிரமாணம், ௩௮௪
உழப்பு - முயற்சி, ௮௮
உள் பொருள் - இருக்கின்ற பொருள், ௨௫௯
உள்ளல் - உள்ளான் பறவை, ௩௭௩
ஊரகம் - திருமாலின் திருப்பதிகளில் ஒன்று, ௪௧௪
எகின் - அன்னம், பறவை, புளி, ௧௨௯, ௨௧௫
எட்டு - எட்டு என்னும் இலக்கம், எள்ளை உண்பாய் ௨௯௦
எதிர்மறைமுகம் - வியதிரேகம், ௧௮௪
எய்த்தல் - இளைத்தல், ௪௫௨
எலுவன் - தோழன், ௨௭௩
எல்லாள் - தோழி, ௩௦௮
எழுத்துப் பெருக்கம் - ஒரு வகைச் சொல்லணி, ௨௯௯
எற்று - எத்தன்மைத்து, ௩௨௮
என்னேன் - எத்தன்மையினன், ௪௨௦
ஐது - அழகிய பொருள், நுண்ணியது; ௫௫
ஒருகுறி - ஒருகால், ௪௨
ஒருதலை - துணிவு, ௧௭௩
ஒருதானாகி - தானே ஒருமுதல் வனாகி, நூற்சிறப்புப் பாயிரம்
ஓதி - ஓணான், கூந்தல், ௧௦௨
கஃசு - கார்பலம், ௯௦
கச்சி - காஞ்சிபுரம், ௪௧௪
கடவுட் சொல் - தேவமொழி; ஆரியம், ௨௭௦
கடி - பேய், ௩௭௩
கடு - முள்ளிச் செடி, முதலை ௧௦௭
கடைக்கணித்த - கடைக் கண்ணாற் பார்த்த, ௧௯௭
கட்டு-கண்ணையுடையது, ௩௨௮
கம் - கம்மத் தொழில், ௨௨௩
கரிப்பு - உறைப்பு, ௪௫௭
கருந்தாது - இரும்பு, ௪௩௨
கரை - சொல், ௪௫௮
கவடு - பிரிவு, (நூற்சிறப்புப்)
கவுட்டு - காதுத் தொளையுடையது, ௩௨௧
கழஞ்சு - இருபது மஞ்சாடி கொண்ட நிறுத்தலளவை ௩௯௮
கழலை - உடலில் தோன்றும் புண்ணாகாத கட்டி, ௩௯௯
கற்பூரம் - பச்சைக் கற்பூரம், ௩௮௯
கன் - சிறு தராசுத்தட்டு, ௨௧௭
காயம் - ஆகாயம், ௪௨௮
காரிகை - அழகினையுடையாள், ௨௭௫
காலேகம் - கலவைச் சந்தனம், ௩௯௭
கூடத்தை ஒத்தான் - சுதந்திரமின்றி ஒழுகினான், ௨௯௬
குட்டம் - ஆழம், ௧௨௨
குணாது - கிழக்கின் கண்ணுள்ளது, ௨௩௯
குண்டிகை - குடுக்கை, ௩௪
குறை - அலுவல், ௩௮௪
குழிசி - பானை, ௩௭௦
கோட்டு - மண்வெட்டி, ௨௯௦
கோசர்-ஒருவகை வீரர், ௩௫௬

கோட்டது நூறு - சங்கினது பொடி, சுண்ணம்பு; கூ௦௦
சகம் - தோன்றுதல், ஒடுங்குதல்,
சட்டகம் - உடம்பு, உ௫எ
சருச்சரை - சுரசுரப்பு, கசஎ
சலவாதி - ஒரு கருத்துப்பற்றி ஒருவன் கூறிய மொழிக்கு வேறுபொருள் கற்பித்துக் கொண்டு பொருள் கூறுபவன், கசஎ
சாட்கோல் - சாணளவான கோல், உகக
சாதனம் - கருவி, உசுக
சாத்தியம் - பேறு, உசுக
சித்துப்பொருள் - அறிவுடைப் பொருள், உ௫க
சீர்மை - கனம், சு௫ச
செய்வது - காரகம்,
செவிடு - ஆழாக்கில் ஐந்தில் ஒரு பங்கு, கூசுஅ
செவ்வனிறை-நேர்விடை கூஅகூ
சென்னி-சோழன் கிள்ளி, உஎகூ
சேந்தன் - ஓர் உபகாரி, கூகூச
சோன்றிக்குழிசி - சோற்றுப் பானை, கசு௫
ஞான்றது - தொங்கிற்று, ககசு
துடி-ஒரு நீட்டலளவைப் பெயர், உசு௦
தருபாக்கு - வருதற்கு, கூசச
தள்ளை - தாய், உஎகூ
தனிநிலை - ஆய்தம், சு௦
தாமரை - தாவுகின்ற மரை; மான்; ஒரு நீர்ப்பூக்கொடி, உசு௦
தாணிகள் - இடத்திலுள்ள பொருள்கள், உகூ௦
திட்டை - மேடு, கூஅச
திட்பம் - குற்றமின்மையின் அலைவற நிற்றல்,
நிகை - சக்கரம், உகூஎ
தீங்கனி - இனிமையாகிய கனி, கூசு௫
தீபகம் - செய்யுளில் ஒரு சொல் ஓரிடத்தில் நின்று பலவிடத்தும் நின்ற சொற்களோடும் சென்றியைவது, சஉக
தேவகுலம் - கோயில், உகூஎ
தோடி - ஒருபலம், கூஎ௫
தொட்டான் - தோண்டினன், கச௫
நம்பி - ஆடவர்களிற் சிறந்தவன், உஎசு
நாடுரி - நாழியுரி, கஎச
நாற்கதி - தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி, நரககதி, சகஎ
நூறு - சுண்ணம்பு, கூ௦௦
நேர்தல் - ஒன்று படுதல், கசு
நொடி - ஒலித்தல், கைந் நொடித்தல், க௦௦
நொய்ம்மை - கனமின்மை, சு௫ச
பகழி - அம்பு, கூ௫க
பசல் - சிறுபிள்ளை, கஉகூ
படர்ச்சி - நடை, சசு
படிறன் - வஞ்சகன், கூக
பந்தம் - தளை, கூகூக
பரிகரித்தற்கு-நீக்குதற்கு, சசு௦
பரிஇ - நீக்கி, பருகி, கூசச, கூசசு
பனுவல் - நூல், உச
பன் - ஒருவகைப் புல், உகஎ
பாசடை - பசுமையான இலை, ககூசு
பால் - பகுதி. உ௫க
பாளிதம் - குழம்பு, கஎ௫
புரம் - உடமபு, உ௫
புலிவிற்கெண்டை - இது தமிழ் நாட்டு முடிமன்னர்களாகிய சோழ, சேர, பாண்டியர்

# அருந்தொடர்ப் பொருள்விளக்க அகரவரிசை

எண் - சூத்திர எண்

அருத்தாபத்தி - அளவைகளுள் ஒன்று. அஃதாவது பகலுண்ணுன் பருத்திருப்பான் ஒன்ருல் உண்ணுதவன் பருத்திருத்தல் கூடாமையின் என உணர்வது. க00

அரைக்காணி - ஒன்றில் நூற்றறுபதாகிய ஒரு பங்கு; இரண்டு முந்திரி. ஙகூஅ

அவாய் நிலை - ஒருசொல் மற்ெருரு சொல்லை வேண்டி நிற்பது. கசஎ

அறுவகைச் சொல் - பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல், திசைச்சொல், வடசொல். கருஅ

அற்றைக் கூலி - அன்றன்று பெறும் நாட் கூலி. கஅரு

அன்றில் - நெய்தல் திணைக்குரிய பறவை; பனையின் கண் வாழும் தன்மையுடையது. ங0க

ஆசீவகப்பள்ளி - ஆசீவகருடைய கோயில். கருக

இடம் பூணி - இடத்திற் பூட்டப்பட்ட காளை. ஙஎரு

இருதிணை இருகூற்று - உயர்திணையில் வரும் பலர்பாலும் அஃறிணையில் வரும் பலவின் பாலும். உஅஎ

இருதிணைமுக்கூற்று ஒருமை - உயர்திணை ஆண்பாலும் பெண்பாலும் அஃறிணை ஒன்றன் பாலும். உஅஎ

உலாப்புறம் - இது ஒருவகை நூல். தலைமகன் புறத்தே உலாவி வருவதைக் கூறுவது: உலா எனவும் வழங்கும். உகூஎ

எட்டிப்பூ - வணிகர் பெறுதற்குரிய அரசராற்கொடுக்கப்படும் பொற் பூ. ககூரு

எண்குணம் - இறைவனுக்குரிய எட்டுக்குணங்கள்: தன்வயத்தனுதல், தூயவுடம்பினனுதல் இயற்கையுணர்வினனுதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில் ஆற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை. ககூங

எழுத்துச் சந்தி - ணகரம் றகரமாகத்திரிதல். ௩எ

எழுத்துப்பெருக்கம் - ஒருவகைச் சொல்லணி, எழுத்து வருத்தனம் என்றும் வழங்கப்படும். உ௬௩

எழுத்துரை நூற்பா - எழுத்தினைக் குறித்துச் சொல்லும் நூற்பா. ௫அ

என்மனார் - என்பர் என்னும் முற்றுச் சொல். கச௫

ஐம்பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி. க௬உ

ஐயம்பு - ஐந்து வகை அம்புகள்: தாமரை, மா அசோகு, முல்லை, நீலோற்பல மலர்கள் க௬உ

ஐவ்வண்ணம் - வெண்மை, கருமை, பசுமை, பொன்மை செம்மை. க௬உ

கதிர் - இது மிகக் கூரியதோர் இருப்புக் கருவி நூற்றற்குரியது. உச

கம்பன் - கல்வியிற் சிறந்த கம்பன்; பண்டைக் காலத்தில் காளி முதலிய தெய்வங்களை வழிபடும் சாதியான். கக௫

கவண் கால் - கவணினது இரண்டு பக்கத்துக் கயிறு. உகக

கருதலளவை - அனுமானேத்தி. உ௫எ

கழஞ்சு - இருபது மஞ்சாடி எடை கொண்டது.

காவிதிப்பூ - அரசன் வரி தண்டும் அரசியல் தலைவருக்குக் கொடுக்கும் பொற்பூ. க௬௫

குமரகோட்டம் - முருகக் கடவுளுடைய கோயில். க௫க

கோட்டது நூறு - சங்கினது சுண்ணம்; சங்குச் சுண்ணம்பு. ௩00

சருச்சரை - சுரசுரப்பு: எண்வகைப் பரிசத்துள் ஒன்று. கசஎ

சலவாதி - ஒரு கருத்துப் பற்றி ஒருவன் கூறிய மொழிக்கு வேறு பொருள் கற்பித்துக் கொண்டு பொருள் கூறுபவன். கசஎ

தாவடி போயினார் - தாண்டிப் போயினார். ௩௫உ

தீபகம் - செய்யுளில் ஒரு சொல் ஓரிடத்தில் நின்று பலவிடத்து நின்ற சொற்களோடும் சென்றியைவது. சஉ௩

| | |
|---|---|
| துலாபாரந்தூக்கல் | - தானவகையுள் ஒன்று. ஒருதலைவன் தன் நிறை அளவாகிய பொன்னைத் தக்கான் ஒருவனுக்குக் கொடுப்பது. ௨௯௰ |
| தூணி | - நான்கு மரக்கால் அளவு. ௧௬௨ |
| நம்பிப்பூ | - நம்பிப் பட்டத்திற் குரிய பூ. ௧௬௫ |
| நால்வகை யாப்பு | - தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்ப்பு. (நூற் சிறப்பு) |
| நாவல் | - கடாவிடும்போது எருதுகளை ஓட்டும் சொல். ௧௰௧ |
| நாற்கணம் | - வன்கணம், மென்கணம், இடைக்கணம், உயிர்க்கணம். ௧௭௭ |
| நான்மணி | - பதுமராகம், நீலகாந்தி, குருவிந்தம், கோவாங்கு. ௧௬௧ |
| நிறைகோல் | - கழச்சுக்கோல், கயிற்றுக் கோல், துலாக் கோல். ௨௬ |
| நெட்டணை | - நெடுமையான பஞ்சு மெத்தை. ௧௩௬ |
| பண்டமாற்று | - பண்டங்களை விற்றல் ௧௰௧ |
| பாரிசேடம் | - எஞ்சியது; பிரமாணங்களில் ஒன்று. ௧௩௪ |
| | - பகைவருடன் போர் புரிதற்காக வீரரை அழைத்தற்குக் கொட்டும் பறை. ௩௮௰ |
| புளிங்கறி | - புளிக்கறி ; நெகிழ்கறியமுது ௧௭௪ |
| பேடு | - அழிதூஉ, அலி, மகண்மா, என்பன ஒரு பொருட்கிளவி. ௨௬௪ |
| பொற்சுணங்கு | - பொன்னினது நிறத்தைப் போன்ற நிறத்தையுடைய பசலை. ௩௬௬ |
| மஞ்சாடி | - பெருங்குன்றிமணி மரம்; இதன் முத்து இரண்டு குன்றி மணியின் எடையுள்ளது. ௧௬௪ |
| மருவூர் | - மாயூரத்தின் கிழக்கேயுள்ளது. காவிரிப் பூம் பட்டினத்தின் பகுதியாகிய மருவூர்ப் பாக்கம் என்பதனாற் சுட்டப்படும் ஊர். ௨௭௬ |
| மன்றம் | - ஊருக்கு நடுவாய் எல்லாரும் இருக்கும் மரத்தினடி. ௫௩ |

முக்குடை - சந்திராதித்தம், நித்திய விநோதம், சகல பாசனம். (இவை அருக தேவனுக்குரிய குடைகள்) உ௫௮

மூந்திரிகை - ஒரு சிற்றெண். ஒன்றில் முந்நூற்றிருப தாகிய ஒருபங்கு; முந்திரி. ௩௯௮

முப்பால் - அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பகுதிகள். (உரைச் சிறப்புப்பாயிரம்)

முருடு - இருப்பை முதலிய மரங்களின் அடியி லுள்ள உருண்டை வடிவமுள்ள உறுப் பைப் போல்வது. க௮௩

மூவகைப் பெயரெச்சக்
- பெயர் இடை உரி அடியாகப் பிறந்தவை. க௯௭

மூன்று சந்தி - தோன்றல், திரிதல், கெடுதல். ௧௩௩

மெய்க்கீர்த்தி - தமிழ் நூல் தொகுதிகளுள் ஒன்று; ஒரு தலைவனுடைய மெய்ப்புகழ் முதலிய வற்றைக் கூறுதல். உஉ௪
- வருமொழியோடு தொடர்தலின்றி வேறு பட்டு ஒலித்தலையுடையது. க௫௮
- எடுத்துச் சொல்லப்படாதன. க௯௫

விரவுப் பெயர் - இணைப்பொதுப் பெயர். உ௫௫

ழப்பு - போர் செய்தபோது மார்பிலும், முகத் திலும் படும் புண். (நூற் சிறப்புப்பாயிரம்)

வெள்ளேறக் காவிதி - காவிதி என்னும் பட்டம் பெற்ற வெள் [illegible] என்பவன். க௯௩

# வினாக்கள்

[வளைவுக்குறிக்குள் இருப்பது சூத்திர எண்

## க. பாயிரம்

க. பவணந்தி முனிவர் வரலாறு, காலம், நன்னூலுக்கு உரை எழுதியவர்களின் காலம், பெயர்கள், முதலியவற்றைக் குறிக்க. (முன்னுரை)

உ. பவணந்தியார் ஐந்திலக்கணங்களும் செய்துள்ளார் என்பதற்குச் சான்று தருக. (முன்னுரை)

ங. நன்னூலாரது சமயத்தையும் காலத்தையும் ஆய்க. (முன்னுரை)

ச. முன்னோர் மொழியை நன்னூலார் பொன்னே போற் போற்றினர் என்பதற்கு இரண்டு உதாரணம் தருக. (க)

ரு. குறிச் சூத்திரம் செய்கைச் சூத்திரம் என்றால் என்ன? (உ0)

சு. சூத்திரம் எத்தனை வகைப்படும்? ஏதாவதிரண்டை எடுத்துக்காட்டுடன் விளக்குக. (உ0)

எ. நூல் என்பதன் பெயர்க் காரணங் கூறுக. (உச, உரு)

அ. பவணந்தி முனிவர் நல்லாசிரியர் இயல்பை எவ்வெவ்வாறு விளக்குகின்றார்? (உசு)

கூ. நூற்கு எவ்வெவ்வாற்றால் பெயரிடப்படும்? (சக) இல்லிக்குடம், ஆடு, எருமை, அன்னார் எவர்? எவ்வாறு? விளக்குக. (ஙஅ)

கo. காண்டிகை யுரையின் இயல்பு யாது? இதினின்றும் விருத்தியுரை எவ்வகையில் வேறுபடுகிறது?

## உ. எழுத்தியல்

க. நன்னூலாசிரியர் வைப்புமுறை பிசகாது சூத்திரஞ் செய்யும் ஆற்றலுடையவர் என்பதை வரலாறு காட்டி நிறுவுக. (ருஎ)

"இடுகுறி காரணப்பெயர் பொதுச் சிறப்பின" இதன் இரு பொருள்களையும் உதாரணங்களுடன் விளக்குக. (சஉ)

"முள்ளி" என்னும் பெயர் எவ்வகையிலடங்கும், விளக்கி எழுதுக. (சஉ)

ந. நாக்கின் முதலிடை கடைகள் அண்ணத்தின் முதலிடை கடைகளைத் தொடுங்கால் பிறக்கும் எழுத்துக்கள் எவை? (எக)

ச. ச (எக), ற (அக), ந (அ0), ழ (அட) என்பவற்றின் பிறப்பை விளக்குக.

ரு. அளபெடைகளாலுண்டாகும் நலம் என்னை? அவை எழுத்தியலிற் கூறப்பட்டமைக்குக் காரணம் யாது? (கக)

சு. "மடங்கு கலந்த.....வேண்டு" என்பதன் பொருள் என்னை? இஃது எதற்கு வரலாறாகும்? (கஉ)

எ. அளபெடை எத்தனை வகை? "ஒற்றளபாறேழு" எங்ஙனம்? (கஉ)

அ. ஒற்றளபெடை நாற்பத்திரண்டாதலும், குற்றிய லுகரம் முப்பத்தாறுதலும் யாங்ஙனம்? விளக்குமும் வேண்டும். (கஉ, கச)

மகரக் குறுக்கத்தை யுணர்த்துஞ் சூத்திரம் உய்த்துணர வைப்பதாவது எங்ஙனம்? (கக)

க0. எழுத்துக்கள் எவ்வெவ் விடங்களிலே எவ்வளவு மாத்திரை மிக்கொலிக்கும்? சூத்திரத்துடன் எழுதுக. (கக)

கக. எழுத்துக்கள் அளவிறந்தொலிக்கும் இடங்கள் எவை? சூத்திரம் தருக (க0க)

கஉ. எச்சூத்திரம் எதனால் "தவளைப் பாய்த்து"க்கு வரலாறாகும்? (க0க)

கந. இடைநிலை மயக்கம் எத்தனை வகைப்படும்? விளக்குக. (கக0)

கச. "அம்மு னிகரம்" என்று தொடங்கும் சூத்திரத்தில், சொற்கள் அமைந்துள்ளபடி (அதற்குப்) பொருள் கூறுக. (கஉரு)

கரு. சந்தியக்கரங்கள் எவை? கான் சாரியை பெறும் எழுத்துக்கள் எவை? (கஉசு)

கசு. இன எழுத்துக்கள் இன்னவென்பதைக் காரணத்துடன் விளக்குக.

## ௩. பதவியல்

௧. பெயர்ப் பகுபதம், தெரிநிலைவினைமுற்றுப் பகுபதம், தெரிநிலை வினையாலணையும் பெயர்ப் பகுபதம் இவற்றின் வேறுபாடுகளைக் கூறுக. (௧௩௨)

௨. தடித்த எழுத்துக்களிலுள்ள வற்றிற்கு உரையாசிரியர் கூறும் விளக்கம் யாவை?

"இன்னவும் பண்பிற் பகாநிலைப்பதம்" (௧௩௫)

"இடைநிலையாம் இவை சில வில" (௧௪௪)

௩. பண்புச் சொற்களுக்குக் கூறப்பெற்ற விதிகளை உதாரணத்துடன் விளக்குக. (௧௩௬)

௪. விளம்பிய பகுதி வேறாதலும் விதியே என்பதன் பொருளை ஆராய்ந்து வரலாற்றோடு விளக்குக. (௧௩௬)

௫. அல்லன் என்னும் பதத்தை முடித்துக் காட்டுக (௧௪௫)

௬. தற்பவம் எனப்படும் மொழி யாது? உதாரணத்துடன் எழுதுக. (௧௪௬)

௭. "ஈறுபோதல் இடையுகரமிய்யாதல்
ஆதிநீடல் அடியகரம் ஐயாதல்,
தன்னொற்றிரட்டல், முன்னின்ற மெய்திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே."
எடுத்துக் காட்டுடன் விளக்குக.

## ௪. புணரியல்

௧. "உயிர்வரி னுக்குறள் மெய்விட் டோடும்" என்டுக் 'கெடும்' என்னாது ஓடும் என்று கூறிய தேன்? விளக்குக. (௧௬௪)

௨. எருத்துமாடு என்பதில் இரட்டிய ஒற்று யாது? அதற்கு விதி யாது? (௧அ௩)

௩. திசைப் பெயர்கட்குக் கூறப்பெற்ற புணர்ச்சி விதிகளை எடுத்துக் காட்டுடன் விளக்குக. (௧அ௬)

௪. எண்களை இரட்டித்துச் சொல்லுமிடத்து எவ்வெவ்வெழுத்து இடையே தோன்றும்? சூத்திரத்துடன் விளக்குக. (௧அ௯—௧௯௩)

௫. பனைமுன் அட்டுவரின் எவ்வாறாம்? (௨0௩)

௬. எவ்விடங்களில் மகரமெய் உயிரும் இடையினமும் வல்லினமும் வரக் கெடும்? (உக௬)

௭. லகர ளகரங்களின் முன் தகரம் வரின் எவ்வாறும்? (உ௨௭—உ௩0)

௮. 'எல்லாம் என்னும்' பொதுப் பெயருடன் உருபுகள் புணருமாற்றை உதாரணங்களுடன் விளக்குக. (உ௪௫)

௯. மேல் வருவனவற்றுள் யாவேனும் ஏழுக்குப் புணர்ச்சி விதி கூறுக. மான்குளம்பு (உ௪௮), நங்கை (உ௨க), நும்மணி (உ0௫), அங்கை (உ௨௨), அஞ்ஞானம் (க௬௩), வேடமை (உ௨௬), காற்றுணை, தெம்முனை (உ௩௪), நோயானை (உ0௬), அஃகடிய (உ௩௫)

க0. வான்சிறப்பு (உக௮), உருபு புணரியல் (க௮க), உறிக் கட்டயிர், சிலப்பதிகாரம், பதிற்றுப்பத்து, ஆதி பகவன், பனுட்டு, நாடுரி,—மேற்கண்டவைகளில் புணர்ச்சிவிதி கூறுக. ஐந்திற்கு மட்டும்.

கக. குண்டுகட்டு, நாடுரி, எஃகுகடுமை, வழுதுணங்காய், கஃறீது, தெவ்வுக்கடிது, முன்றின், மகத்துக்கை—எவையேனும் ஆறினைப் பிரித்துப் புணர்ச்சிவிதி தருக.

## ௫. பெயரியல்

க. சொல் தன்னையும் பொருளையும் உணர்த்துதற்கண் கருவியாய் நிற்கும் என்பதற்கு எடுத்துக் காட்டிய உவமை யாது? (உ௫௮)

உ. இலக்கணப் போலி, மரூஉ, இடக்கரடக்கல் என்பவற்றின் பொருள் என்னை? வழக்கின் வகைகளைக் கூறி உதாரணம் தந்து விளக்குக. (உ௬௭)

௩. எவ்வெச் சொற்கள் குறிப்பாகப் பொருள்கள் தரும்? (உ௬௬)

௪. தள்ளை, பாழி, இருளை, பாண்டில், கொண்டு,—இவை எவ்வெந் நாட்டு மொழிகளாம்? (உ௭௩)

௫. "ஆண்மை, பெண்மை" என்ற தொடக்கத்துச் சூத்திரத்தில் உள்ள 'ஆம்' என்பதைப் பயனிலையாக் கொண்டால் எவை எழுவாய்களாகும்? (உ௮௩)

௬. அடையடுத்த ஆகுபெயர், இருமடியாகு பெயர், காரியவாகுபெயர் என்பவற்றிற்கு இவ்விரண்டு வரலாறு காட்டுக. (உ௯0)

௭. இருபெயரொட் டாகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் உள்ள வேறுபாடும், வெற்றிலை முதலிய வற்றை அன்மொழித்தொகை எனச் சொல்லாமைக் குக் காரணமும் எழுதுக. (௨௯௦)

௮. செயப்படுபொருள் எத்தனை வகைத்து? அஃது அகநிலை யாகவும், தானே கருத்தாவாகவும் வருதல் எங்ஙனம்? "மனைவி"யைத் துறந்தான் என்பதில் யாது யாங்ஙனம் செய் பொருளாகும்? நாவலர் கூறியவாறெழுதுக. (௨௯௯)

௯. கிழமைப் பொருள் எந்த வேற்றுமைக்குரியது? அது எத்தனை வகைப்படும்? (௩௦௦) வகைக்கு ஒவ்வொரு உதாரணம் எழுதுக. (௩௦௧)

௧௦. விளியுரு பேலாப் பெயர்கள் எவை? (௩௧௪)

௧௧. செய்யுளிடத்துத் திரியும் வேற்றுமையுருபுகள் எவை? எங்ஙனம் திரியும்? சூத்திரமும் உதாரணமும் எழுதுக. (௩௧௭)

௧௨. வேறுபாடு கூறுக:—அடையடுத்த ஆகுபெயர், அன் மொழித் தொகைப் பெயர். (௩௯௯)

௧௩. குறிப்பு, வெளிப்படை இவற்றின் இயல்புகளை உதா ரணங் காட்டி விளக்குக.

௧௪. ஆகுபெயரின் இலக்கணமுணர்த்தி, அதன் வகைகளைத் தந்து விளக்குக.

௧௫. மூன்றுவதன் உருபுகளைத் தெரிவித்து, அவற்றின் பொருள்களையும் வரைக.

## ௬. வினையியல்

௧. "ஆறும் தருவது வினையே." ஆறுவன யாவை? உம்மை யின் பொருள்களை உதாரணங்களுடன் விளக்குக. (௩௨௦)

௨. தெரிநிலை வினைச்சொல் தரும் பொருள் எத்தனை? உதாரணத்துடன் எழுதுக. (௩௨௩)

௩. வியங்கோள் விகுதிகள் எவை? கூறிய விகுதிகளன்றி வியங்கோட்கு வேறு விகுதிகளும் உண்டா? அவை யாவை? உதாரணத்துடன் எழுதுக. (௩௩௪)

௪. எதிர்கால வினையெச்ச வாய்பாடுகள் எவை? (௩௪௦)

ரு. "அவற்றுள் முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும் வினைமுதல் கொள்ளும் பிறவு மேற்கும் பிற" இந் நூற் பாவுக்கு உரையும் உதாரணமும் வேண்டும். (ருசச)

சு. செய்யும் என்னும் முற்று செல்லாத இடங்கள் எவை? (ருசஅ)

எ. ஈரெச்சமும் முற்றுங் குறிக்கும் வினைமுற்று யாவை? (ருஙக)

அ. வியங்கோள், ஏவல்—இவையிரண்டினையும் வேறுபாடு தோன்ற விளக்கி உதாரணமுந் தருக.

## எ. பொதுவியல்

க. "பெயர் வினையும்மை"யென்று தொடங்குஞ் சூத்தி ரத்தைப் பிழையற வரைந்து, எதிர்மறை யெச்சத் திற்கு மாத்திரம் வரலாறு காட்டுக. (ருசுပ)

உ. இடத்தொகை பெயர்த் தொகைகட்கு வேறுபாடு அறிவது எங்ஙனம்? (ருஎக)

ங. எழுவழு, எண்ணிறை எவை? (ருஎரு)

ச. தொகைப் பொருள் சிறக்கும் இடங்கள் எத்தனை? ஏதாவது இரண்டை உதாரணத்துடன் எழுதுக. (ருஎங)

ரு. எவ்வெவ்விடங்களில் பால் திணை இழுக்கி வரும்? சூத் திரமும் உதாரணமும் எழுதுக. (ருஎகூ)

சு. முக்காலங்கள் எவ்வெக் காரணங்களால் எவ்வெவ்வாறு மயங்கும்? (ருஅங)

எ. எழுத்துக்கள் வேறுபடாது பலபொருள் தரும் புணர் மொழிக்கு விதி யாது? (ருகூக)

அ. பொருள்கோள் எத்தனை வகைப்படும்? (சகக)
நின்றான் இருந்தான் கிடந்தான் என்னும் வினைச் சொற்கள் கொண்டு முடியும் பெயர்ச்சொற்கள் யாவை? அங்ஙனம் முடிவதற்கு விதி யாது? (சகச)

கூ. கொண்டு கூட்டுப் பொருள்கோளுக்குரிய சூத்திரமும் வரலாறும் தருக. (சகஅ)

கਿ. இசையெச்சம், குறிப்பெச்சம், எதிர்மறையெச்சம் இவற்றை உதாரணங்களால் விளக்குக.

## அ. இடையியல்

க. இடைச் சொற்களினுடைய பொருள்கள் யாவை? (சஉக)

உ. ஏகார இடைச்சொல் அல்லது ஓகார இடைச்சொல்லின் பொருள்களை விளக்குக. (சஉஉ, சஉங)

ங. உம்மை எத்தனை வகைப்படும்? அவற்றுள் எதற் காவது சிறப்புவிதி உண்டா? உதாரணத்துடன் எழுதுக. (சஉ௫, சஉ௬, சஉஎ)

ச. செவ்வெண் (சஉஅ) வினைமாற்று (சஙங) நிலைபேறு என்பன காரணக் குறியாதலை ஆராய்ந்தெழுதுக.

௫. முன்னிலை யசைச்சொற்கள் யாவை? சில வற்றிற்கு உதாரணமும் எழுதுக. (சச0)

## கூ. உரியியல்

க. உடல் கொள் உயிர்க்குணம், அல்லது உயிரல் பொருட் குணங்கள் எவை? (ச௫உ, ச௫ச)

உ. உயிர்ப்பொருள் உயிரல் பொருள் என்னும் இரண்டற் கும் பொதுவாகிய தொழிற் பண்புகள் எவை? (ச௫ங)

ங. இருபொருட் டொழிற் குணம், உடல்கொ ளுயிர்க் குணம் எனப்படுவன யாவை? (ச௫௫)

ச. பழையன கழிதலுக்கும் புதியன புகுதலுக்கும் நன் னூலினின்றும் ஒவ்வொரு வரலாறு காட்டுக. (ச௬உ)

௫. இருபொருட் டொழிற்குணங்கள் பற்றிய சொற்கள் யாவை?

## க0. பொதுப்பட்டவை

க. பாந்தம் (கச௫), வினைப்பெயர், மும்மை (கச௫), ஐவருக்கும் (உ௬க), இருமை, உணைவெண், இடையன, இவை (பதவியல், புணரியல்களில்) உணர்த்தும் பொருள் என்னை?

உ. ஒப்பிலொப்புப் பொருள், ஒற்றுமைப்பொருள், வினை யில் பொருள் என்பவற்றை நன்கு விளக்குக.

ங. காண்டிகை யுரையிற் குறிக்கப்படும் புலவர்களுள் இருவர் பெயரை எழுதுக. (பவணந்தி முனிவர் வர லாற்றில்)

ச. இவ்வீடு எனது; எனது போயிற்று—தடித்தவை என்ன சொற்கள் ?

ரு. நன்னூலார் பல பொருளொடு சொற்குப் புணர்ச்சி விதி கூறுங்கால் அச்சொல்லை நன்கு விளங்க எடுத்தோதுவார் என்பதற்குச் சான்றுகள் தந்து நிறுவுக.

சு. ஏற்புழிக் கோடல், வெருக்குக்கண், வேதின வெரிநினோதி, திசையறி மீகான், சொன்றிக்குழிசி, புளிம்பாளிதம், சுருப்பு நாண், அட்டுண்டுழனி, அஞ்சிறைத்தும்பி, பாடன் மார், என்பவற்றுள் ஐந்திற்குப் பொருள் கூறுக.

எ. எய்தாத தெய்து வித்தல், எய்தியது விலக்கல், எய்தியதிகந்து படாமைக் காத்தல் என்றால் என்னை ? பிறர்தம் மதமேற் கொண்டு களைவு, இரட்டுற மொழிதல், இறந்தது விலக்கல், அருத்தாபத்தி இவைகள் வந்துள்ள இடஞ்சுட்டி விளக்குக. (கச)

அ. புக்கான், என்றிசினோர், நடவாநின்றான், வாழி உண்கும், சேறி, உண்மார், வெள்ளாட்டி,—எவையேனும் ஆறு சொற்களுக்குப் பகுபத உறுப்புத் தந்து முடித்துக் காட்டுக

